உ

கடவுள்துணை.



# மங்களேஸ்வரீயம்.

முதலாவது

## பாயிரப் படலம்.

### விநாயகர் துதி.

திருமருவு புவியதனி லுறைசீவர் தங்களிலும் சிறந்தோர்மக்கள்
உருவமது வொன்றாயுங் குணங்குறிகள் வேறுபடு முண்மைகாண
பருதிமதி சேய்மால்பொன் புகர்சனியு முதயமொடு பகணத்தாலும்
உருதியொடு பலனுரைக்க கணபதியின் பதமலரை யுச்சிவைப்பாம். 1

### சுப்பிரமணியர் துதி.

அறுமுகமும் நவமணியின் முடியிலக மயிலதனி லமருந்தேவா
அறுமுனிக்குப் பலகலையும் மறைமுடியும் பிரணவமுங் கூறுநாதா
பெறுமுலகில் மனிதருக்குச் சுபமசுப மாயுணிலை யிணியரிட்டங்
கருமபல மறிந்துரைக்க வரமருளுஞ் சரவணனே கார்த்திகேயா. 2

### அம்பிகை துதி.

தாரணியி லன்பருக்கு வருளளிக்குங் கற்பகமே தவத்தோர்போற்றும்
நாரணிசங் கரிகவுரி வாராகி திரிபுரையே நன்மையீயுங்
காரணிமுக் கண்ணிதிரி சூலியபி ராமியருட் கடலேஞான
பூரணியுன் னடிபணியு மெந்தனுக்குக் கல்வியருட் புகழைத்தாராய். 3

### கலைவாணி துதி.

பன்னகத்திற் றுயில்மாயன் றிருமகனா யவதரித்த பங்கயத்தோன்
தன்னுடைய தேவியுமாய் நவிவாணர் தங்களுக்குத் தாயுமான
மின்னொளியே தூயநிற முத்தாரந் தனைப்பூண்ட வேதவல்லி
என்னுடைய நாவிருக்கக் கலைவாணி பாரதியுன் னிருதாள்போற்றி. 4

### தக்ஷிணாமூர்த்தி துதி.

மதிகதிருஞ் சுடர்விழியும் பணியாலை தனைப்பூண்டும் வன்னியேந்தி
நதியரவுஞ் சடையுடனே பகமேரில் கல்லாலின் னடியமர்ந்து
பதிபசுவும் பாசமதை சனகாதி முனிவருக்குப் பகர்ந்தநாதா
விதியறியுஞ் சோதிடநூ லுரைத்திடவே வரமருளும் வேதமூர்த்தி. 5

## வித்தியாதரு துதி.

நீர்பரவும் வாவிபல வுடையதிரு மலைநகரில் நிலைமைபெற்றோன்
பேர்புகழ திருமாலி னடிபணிவன் கவரைகுலம் பிறந்தசீலன்
பார்புகழு மிங்க்லீஷு தெலுங்குடனே தமிழ்பாஷை பலவுந்தேர்ந்த
சீர்மருவு தேசிகனுஞ் சீனிவாசன் மலர்த்தாள் சென்னிவைப்பாம். 6

## முதனூல் வழி.

தாரணிநற் றிருமுகமா மதிவிலகுந் திலதமெனச் சாற்றுமிக்கச்
சீரமருவு மவந்திநகர் புறமான காபித்தஞ் சிறந்துவாழ்வோன்
பேரறிவுஞ் சீலமுள னாதித்த தாசரென்னும் பெரியோன்செய்த
பாரதவப் பலனதினா லுலகமதி லுதித்திடுநற் பாலன்றானே. 7

## இதுவுமது.

ஓரையதின் சாத்திரமுங் கணிதமுத லாகமமு முணர்ந்தவல்லோன்
தேருமதி யுத்தமனு யுண்மையுரை யாசாரன் றீஞ்சொல்நாவான்
தேரவநற் பதம்பணிவ ராகமிகி ராச்சாரி திரட்டித்தந்தான்
பாரதனிற் றெளிவுறவே பிருகச்சா தகமென்னும் பனுவறன்னை. 8

## நூல் செய்ததற்குக் காரணம்.

தண்ணதியின் வளஞ்சிறந்த வாரிதிசூழ் தரணியதி லெவருந்தேற
எண்ணருநற் பெரியோருஞ் சோதிடருந் தமிழதனி லியற்றுகென்ன
வண்மையொடு வடமொழியைப் பிறழாது முறையோடு வுதவுஞ்செய்யுள்
வண்மை தருவிருத்தப்பா கலிவஞ்சி துறைவெண்பா வழுத்தலுற்றேன். 9

## சோதிடர் லக்ஷணம்.

கதிரவ னுதிக்கு முன்னமே துயிலை கடிந்துதன் னித்திய கருமம்
விதிதவ றாது முடித்து பின்னாக விண்மணி யோன்திசை நோக்காய்
மதிதர தெய்வ வணக்கமுஞ் செய்து வன்புலி யாதனத் திருந்தே
பதிதனி லுள்ள மானிடர் தமக்குப் பலன்களை யுறைத்தலும் விதியே. 10

## இதுவுமது.

சத்திய மொழியுந்தயை பொறைவாய்மை சாந்தமாதிகள் முதலனைத்தும்
ஒத்துநற் குணமு முயர்தருங்கல்வி யொப்பிலா சாரநன்னீதி
பத்திடு மீகை தேவதா பத்தி பற்றிலர் பான்மிகு பக்ஷம்
நத்திடு மிரக்க மேற்றுவாழ் பவனே நற்கலையுரைக்குஞ் சோதிடனே. 11

## சோதிடம் சொல்லாதகாலம்.

படுக்கையிலிருந்து மாங்கதிற் படுத்தும் பற்றலக்கா முனும்வழியில்
நடக்கையி லேனும் நிற்கையிலேனும் நற்பசியோடு மன்னியர்கள்
தடுக்கையிலேனும் தைலமிட்டிருந்தும் சௌசமார் போதும்பூவலரி
விடுக்கையிலேனு மிருளதிலிருந்தும் வெகுளியின் காலமுமாகா. 12

இன்னாருக்கு சோதிடம் சொல்லப் படாதென்பது.

திருமகளருளைப் பெற்றிடாதவற்குந் தெய்வத்தை பணிந்திடாதவற்கும்
தருமனைபோலும் நளினமாயுரைத்துத் தாம்பூலதட் சணையின்றி
வறுமையை யுரைத்துவந்து கேட்பவதற்கும் வஞ்சகர்லோபியர் தமக்கும்
சுருதியைநம்பா தர்க்கவாதியற்கும் சோதிடமுரைப்பதே தோஷம். 13

நூற்பயன்.

இந்நூலின் பயனதுகள் கல்விதனஞ் சீவனமி ராசயோகம்
தந்நாளின் பலனறிதல் சோதிரமுங் களத்திரமுஞ் சந்தானங்கள்
எந்நாளில் மாதுர்பிதுர் வாழ்நாளும் பகைபிணியு மிடருந்தெண்டம்
அந்நாளி லயனமைப்பு மறிந்திடுதல் நலமாகு மவனியோர்க்கே. 14

அவையடக்கத்திற்கு விபரம்.

இன்னூற்கு முதநூலிலவை யடக்கமியற் றாது யிருந்ததாலே
அன்னூற்கு வடமொழியி லிவ்விதியு மில்லையென வறிந்துகொண்டு
என்னூற்கு மவையடக்கங்கூறாது நலமென்று வெண்ணில் முன்னோர்
சொன்னூற்கு மவையடக்கமுரைப்பது தகாதெனவுஞ்சொன்னோம்யாமே.

இதுவுமது.

கோதுறுநூல்தனக்குமே யவையடக்க முரைத்ததாலே குறைவுபோச்சோ
கோதறுநூல் தனக்குமே யவையடக்கங் கூறியதால் குறைவதாச்சோ
கோதுறுநூல் தனக்குமே யறிவாள ரெக்காலுங் குறைகள்கூறார்
கோதறுநூல் தனக்குமே யறிவில்லா ரெக்காலுங் குறைகூறுவரே. 16

அவையடக்கத்திற்கு உதாரணம்.—விவேகசிந்தாமணி.

சலதாரைவிழுநீரெல்லாம் சாகரந்தன்னைச்சார்ந்தால்
குலமென்னகொள்வதல்லால் குறைகடல்வெறுத்ததுண்டோ
புலவரின்சபையில்கூறப் புன்கவியதனைச்சொன்னால்
நலமெனக்கொள்வதல்லால் நவில்வரோபெரியோர்குற்றம்.

ஔவை.

நல்லார் பிறர்குற்றங் காண்பரோ நலமறிந்து
கல்லார் பிறர்குற்றங் காண்பரோ-அல்லாது
என்போல்வா ரென்னை யிகழ்வரோ யென்கவிக்கு
பின்பார்தான் சொல்வார் பிழை.

சிறப்புப்பாயிரம்.

கடலதுசூழ் புவியிலுள மனிதாது சுபமசுபங் காணவெண்ணி
திடமுடனே மங்களேஸ்வரீய மெனுநூலதனைச் செய்யுள்செய்தான்
படிபுகழுந் திருமலையிநகர் விசுவகுலமணியாய்ப் பலநூல்தேர்ந்தேன்
நெடியபுக ழுறுவயித்தியலிங்க சோதிடனென்னு நிபுணன்தானே. 17

பாயிரப்படல முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# மங்களேஸ்வரீயம்.

## நான்முகம்.

இரண்டாவது

## இராசிப்படலம்.

### பிர்மதுதி.

சீர்மருவு புவியதனிற் றோற்றமேழிற்
  றிகழுமதி மேன்மையெனச் செப்புகின்ற
பார்மருவு மனிதருக் கின்பதுன்பப்
  பலனறிய சோதிடநூ லாதியாகும்
ஏர்மருவு மிராசியது வீராறு
  மிரவிமுத லெழுகோளாற் கண்டுகொள்ள
பேர்மருவு மங்களேஸ்வரீய நூலை
  பேருலகி லுரைப்பதற்கு சோதிகாப்பே.

### 1-சுலோகம், சூரியதுதி.

ஆசிரிய விருத்தம்.

ஈசரதுமூர்த்தமெட்டதினிலொன்றாயோகி யெழிற்சீவமுத்தருக்கு
மிறைசச்சிதானந்தரூபியாயாத்மனா யென்னுசோமாஜியாகத்
தேசுதருமெக்ஜனாயாகூடியது வேற்றுதிகழுபலகிரணமுளனாய்
தேவருடுகிரகாதிதலைவனாய்ப்பேரு பெறுதிரிலோகபிரகாசியாய்
மாசிலாபூர்ப்பவராதியுலகத்தோற்ற மாய்வுரக்ஷிப்பதற்கும்
மன்னுவாய்வேதாதியாதிநடுவந்தமாய் மகமேருகிரியைதினமும்
வீசுகதிரொளிபரவவலமாக செல்கின்றவேந்தனேயடியனேற்கு
வெற்றிபெறுசோதிடமுரைத்திடவாக்கருள்வேந்தநின்றாள் சரணமே

(2-3) சுலோகம் நூற்சிறப்பு சொல்லப்பட்டது.

## 4-சுலோகம் இராசி நக்ஷத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| பூரட்டாதி-$\frac{1}{4}$<br>உத்திரட்டாதி-1<br>ரேவதி-1<br>மீனம் | அசுபதி-1<br>பரணி-1<br>கார்த்திகை-$\frac{1}{4}$<br>மேஷம் | கார்த்திகை-$\frac{3}{4}$<br>ரோகணி-1<br>மிருகசீரிடம்-$\frac{1}{2}$<br>ரிஷபம் | மிருகசீரிடம்-$\frac{1}{2}$<br>திருவாதிரை-1<br>புனர்ப்பூசம்-$\frac{3}{4}$<br>மிதுனம் |
| அவிட்டம்-$\frac{1}{2}$<br>சதயம்-1<br>பூரட்டாதி-$\frac{3}{4}$<br>கும்பம் | இருபத்தேழு நக்ஷத்திரமும்<br>பன்னிரண்டு இராசியில்<br>அடங்கிய விபரம். | | புனர்ப்பூசம்-$\frac{1}{4}$<br>பூசம்-1<br>ஆயிலியம்-1<br>கடகம் |
| உத்திராடம்-$\frac{3}{4}$<br>திருவோணம்-1<br>அவிட்டம்-$\frac{1}{2}$<br>மகரம் | | | மகம்-1<br>பூரம்-1<br>உத்திரம்-$\frac{1}{4}$<br>சிங்கம் |
| மூலம்-1<br>பூராடம்-1<br>உத்திராடம்-$\frac{1}{4}$<br>தனுசு | விசாகம்-$\frac{1}{4}$<br>அனுஷம்-1<br>கேட்டை-1<br>விருச்சிகம் | சித்திரை-$\frac{1}{2}$<br>சுவாதி-1<br>விசாகம்-$\frac{3}{4}$<br>துலாம் | உத்திரம்-$\frac{3}{4}$<br>அஸ்தம்-1<br>சித்திரை-$\frac{1}{2}$<br>கன்னி |

### 4-சுலோகம். இராசி அங்கம்.

தகிர்தலையிடஞ் சாற்றியமுகமாம் தண்டதுமார் குளிரிதயம்
இகலரிவையர்பெண் கடிப்பிரதேசமேற்றகோலிலிங்க மத்தியமாம்
பகருதேளிலிங்கம் தனுவிருதுடையாம் பாய்சுறுவிருமுழங்காலாம்
புகழ்குடங்கணுக்கால் மீனமேபாதம் புகல்வது ராசிதன்னங்கம்.

இ-ள். மேஷம் அசுவனியாதி யிரண்டேகால் நக்ஷத்திரங்கூடிய மேஷா திராசிகால புருஷனுடைய அவயவங்களாகும். அஃதெப்படியென்றால், அசுபதி பரணி கார்த்திகை கால் மேஷம். இவ்விதமாக இருபத்தேழு நக்ஷத்திரங்கள் பன்னிரண்டிராசியி லடங்கும். மேஷமானது காலபுருஷனுக்கு சிரசு-ரிஷபம், முகம்-மிதுனம், மார்பு-கடகம், இருதயம் - சிம்மம், வயறு-கன்னி கடிப்பிரதேசம், துலாம்-நாபி, இலிங்கம்-மத்தியபிரதேசம், விருச்சிகம்-இலிங்கம், தனுசு-இரண்டுதொடை, மகரம்-இரண்டுமுழங்கால்,கும்பம்-இரண்டு கணுக்கால், மீனம் இரண்டு பாதங்களா மென்பதாம். 3

### 4-சுலோகம். இராசி அங்கபலன்.

காலமாம்புருடன் தனக்குமேயங்கம் கருதிடுராசியீராறும்
ஞாலமீதுதிக்கும் சாதகர்தமக்கு நாட்டிடு மிராசியங்கத்தில்
சீலமாம் சுபக்கோ ளிருந்திடுமிராசி திகழ்வலிபருமனுமாகும்
சாலவேதீக்கோ ளுறைந்திடுமிராசி தன்வலிகுறைவுடன்மெலிவே.

இ-ள். காலபுருஷனுக்கு அங்கம் பன்னிரண்டிராசியானதால் உலகில் ஜெனனமான யாவர்களுக்கும் சுபக்கிரகமிருந்த இராசியின் அங்கம் வலிதாயும் புஷ்டியாயுமிருக்கும் பாபக்கிரகமிருந்த ராசியின் அங்கம் வலியில்லாமலும் மெலிவாகவுமிருக்குமென்பதாம். 4

5-சுலோகம். இராசி சொரூபம்.

செப்பிடுமேடமெருதொடுநண்டு தேளரிகன்னிமீன்கலகம்
ஒப்பிடுராசியவரவர் வடிவேயுரைதருமிதுன மாண்பெண்ணும்
தப்பிலாதொருவனிறைபிடிப்பதுபோல் தனுபுடித்தவனுடல்பரியா
துப்புறதனுசுமகரமான்றலையுந் துகளறுமுடலமீன் சொல்லே.

இ-ள். மேஷம் ஆடாகும். ரிஷபம் எருதாகும். மிதுனம் ஆணும்பெண்ணும்கூடி யிருப்பதாம். கடகம் நண்டாம் சிங்கம் சிங்கமாம். கன்னி பெண்ணாகும். துலாம் தராசுபிடித்திருப்பதுபோலாகும். விருச்சிகம் தேளாகும். தனுசு வில்லுதரித்தபுருடன் அரையின்கீழ் குதிரையுருவாம். மகரம் மான் தலையும்,மீன் உடலுமாம். கும்பம் குடம்போலாம். மீனம் இரண்டுமீன்வால் தலையுமாக மாறியிருப்பதாம். உதாரணம் யவனேஸ்வரர் சொல்லியிருக்கிறாரென்பதாம். 5

5-சுலோகம். இராசிகள் சேருமிடம்.

மேடமுமெருதுநண்டொடுசிங்கம் விருச்சிகமாகரமவைபோல்
நாடிடுமற்றராசிகடமக்கு நகரமாதிகளதுவெனலாம்
ஆடதுமுதலாய்சஞ்சரித்திடுமா மவ்வகைசோரமாம்பொருளுங்
கூடுமவ்விடத்திலிருப்பதுவறிதல் கொறிமுதற்கொண்டுதானென்.

இ-ள் மேஷம் மேஷகாரமாம். ரிஷபம் ரிஷபகாரமாம். கடகம் கற்கடாகாரமாம். சிங்கம் சிங்காகாரமாம். விருச்சிகம் விருச்சிகாகாரமாம், மேஷாதி சமஸ்தராசிகளும் தங்கள் தங்களுக்கு சஞ்சரிக்கக்கூடிய விடத்தில் சஞ்சரிப்பார்கள். இதற்கு பிரயோசன மென்னவெனில் சோரம்போன திரவியமிருக்கும் தானம் இந்த இராசிகள் சஞ்சரிக்கும் விடமென்பதாம். உதாரணம் சீவசர்மாவினால் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம் 6

6-சுலோகம். இராசியதிபதிகள்.

ஆடுதேள்தனக்குசேயவ னதிபனும்விடைகோலிற்குபுகராம்
பாடியாழ்கன்னிக்கதிபதிமாலாம் பகர்குளிரதிபதிதிங்கள்
நாடுகோற்சிங்கத்ததிபதிவெய்யோன் நற்குடமானுக்குநீலன்
நீடுகோற்றனுமீனதிபதியானே னிருபனுயுரைத்திடலாமே.

இ-ள். மேஷத்திற்கும் விருச்சிகத்திற்கும் செவ்வாய் அதிபதியாம். இடபம் துலாத்திற்கு சுக்கிரன் அதிபதியாகும் மிதுனம் கன்னிக்கு புதன் அதி

பதியாம். கடகத்திற்கு சந்திரன் அதிபதியாம். சிம்மத்திற்கு சூரியன் அதி பதியாம். மகரம் கும்பத்திற்கு சனி அதிபதியாம். தனுசு மீனத்திற்கு குரு அதிபதியாம். இந்தவிதமாக ராசியதிபதியைச் சொல்லப்பட்டதாம். 7

6 சுலோகம். லக்னநவாமிச ராசிக்கு விபரம்.

ஆடுடன்புலிவில்சென்மலக்கின மேலாடதுவாதியாயமிசம்
மாடுடன்பெண்மான்சென்ம லக்கினமேல்மான்முதலாதியாமமிசம்
பாடிடும்யாழ்கோல்கும்பமுமாகில் பகர்வதுதுலைமுதலமிசம்
ஓடுநண்டெர்டுதேள்மீனமுமானு லுரைப்பதுகடகவங்கிசமே.

இ-ள். மேஷம் சிம்மம் தனுசு சென்மலக்னமானல் அந்தந்த இராசியை விநாடியாக்கி ஒன்பதுகூறு செய்தால் எந்தகூறு சென்மலக்கினத்தில் வருமோ அந்தகூறை மேஷமுதலாக வெண்ண எந்த கூறில் வருமோ அதுவே நவாமிச விலக்கினமாம்-இந்தவிதமாக-ரிஷப கன்னி மகரத்திற்கு மகரமாதியாகவும் மிதுனதுலாம் கும்பத்திற்கு துலாமாதியாகவும் கடகவிருச்சிக மீனத்திற்கு கடகமாதியாகவுமெண்ணி நவாங்கிச லக்கினமறிய வேண்டியது திரிகோண இராசிகளுக்கு சரராசியாதியாகத்தான் நவாமிசராசியென்பதாம். 8

6-சுலோகம். துவாதசாம்சலக்ன விபரம்.

பன்னிரண்டமிசமிராசிகள்தனை பாகையாம்பங்கிடுங்காலில்
உன்னிடுமேடந்தன்னிலே முற்கூறுதயமேவாடதுவாகும்
பின்னதுகடைக்கூறுமீனமுமென்று பேசுவோமற்றவிராசிகட்கும்
முன்வழிபோலும்துவாதச வமிசமுணர்ந்திடல்குறிப்பிதுதானே.

இ-ள். துவாதசாமிலக்கின விபரம் மேஷராசியையபாகையாக்கி பன்னிரண்டுபாகம்செய்தால் ஒரு பாகத்திற்கிரண்டரை பாகையாகும் முதலிரண்டரை பாகைமேடம் இரண்டாவ திரண்டரைபாகை ரிஷபம் மூன்ருவதிரண்டரைபாகை மிதுனம்-நாலாவ திரண்டரைபாகைகடகம் ஐந்தாவதிரண்டரைபாகை சிம்மம் ஆருவதிரண்டரைபாகை கன்னி ஏழாவ திரண்டரை பாகை துலாம் எட்டாவதிரண்டரைபாகை விருச்சிகம் ஒன்பதாவது யிரண்டரைபாகை தனுசு பத்தாவதிரண்டரைபாகை மகரம் பதினோராவது இரண்டரைபாகை கும்பம் பன்னிரண்டாவது இரண்டரைபாகை மீனம் இந்தவிதமாகவே மற்ற இராசிகட்கும் யூகிக்கவேண்டிய தென்பதாம். 9

7-வது சுலோகம். திரிம்சாதிபதி.

திரிம்சவாங்கிசத்தின்விபரமே தென்னில்சீருளபுருடராசிகட்கு
வரும்மதிற்பாகைமுப்பதுதனக்கு முதிரனுர்தனக்குமேவைந்து
கருஞ்சனிக்காகும்பாகையுமைந்து கனகனுக்கோரெட்டதாகும்
அறிஞனுக்கேழுபுகருக்குவைந்து வறிந்திடலொற்றைராசிகட்கே.

இ-ள். திரிம்சாதிபதியின் பிரிவாவன புருஷராசியென்னப்பட்டதும். ஒற்றை இராசி யென்னப்பட்டதுமான மேஷ-மிதுனம் சிம்மம்-துலாம்-தனுசு கும்பம் இந்த இராசிகளைபாகைமுப்பதாக்கிக்கொண்டுசெவ்வாய்க்கு ஐந்துபாகை, சனிக்கு ஐந்துபாகை, குருவுக்கு எட்டுபாகை, புதனுக்கு ஏழு பாகை, சுக்ரனுக்குஐந்துபாகை இவ்விதமாக அறியவேண்டியதென்பதாம்.

7-வது சுலோகம். திரிம்சாதிபதி.

விடையெனுமிரட்டைராசியைமுப்பான்வெள்ளிக்குப்பாகையுமைந்
திடமுறுபுலவன்றனக்குமேயேழுசெம்பொனுக்கெட்டதாம்பாகை
நடையிலாற்கைந்துகுசனுக்குமைந்துநவின்றநன்முறைதனையுணர்ப்
படிமிசைவராகமிகிரவர்தானும் பகர்ந்தனநுலகினர்தமக்கே.

இ-ள். இரட்டை இராசியென்றும் ஸ்திரீ இராசியென்றும் சொல்லப்பட்ட ரிஷபம்-கடக-கன்னி-விருச்சிகம்-மகரம் மீனம் இந்த இராசிகளை முப்பது பாகையாக்கி முதல் சுக்கிரனுக்கு ஐந்துபாகையும் புதனுக்கு ஏழு பாகையும் குருவுக்கு எட்டுப்பாகையும் சனிக்கு ஐந்துபாகையும் செவ்வாய்க்கு ஐந்துபாகையும்இந்தவிதமாக திரிம்சாதிபதியறிய (வராகமிகிராச்சாரியாரால்) சொல்லப்பட்டது மிஃதே என்பதாம். 11

7-வது சுலோகம். கண்டாந்தம்.

கடகராசியதினந்தியவமிசம் கண்டதினந்தமள்யந்தம்
துடருருமணியில்கடைநவாங்கிசமும் சொற்பெயர்ஜஷந்தமதாகும்
திடமுள மீனத்ததின்கடைகூறு செப்பினூர்றுக்ஷசந்தியதாய்
படிமிசையிதனை தாரகைகண்டப் பதியெனவுரைத்திடல்விதியே

இ-ள். கர்கடக இராசி யந்தியநவாமிசம் அள்யந்தம், விர்ச்சிக இராசி அந்திய நவாம்சமும் ஜஷாந்தம், மீன அந்தியநவாம்சம்-றுக்ஷசந்தி இராசி சந்தியுள்ளதும் நக்ஷத்திரசந்தியுள்ளதுகளாகும் எப்படியென்றால் கர்க்கடக அந்தமும் ஆயிலிய அந்தமும் விர்ச்சிகாந்தமும் கேட்டை அந்தமும்மீனஅந்தமும் ரேவதி அந்தியமும் நக்ஷத்திரசந்திகள் இந்தராசியாந்த நக்ஷத்திரங்களும் முன் இராசியாதி நக்ஷத்திரமும் கண்டாந்தமென்னப்படும் இதர்க்கு உதாரணம் நாரதீய வசனமும் லகுசாதகவசனமாம் என்பதாம். 12

8-சுலோகம் இராசியின்பெயர் சொல்லியதை நீக்கப்பட்டது.

9-வது சுலோகம். இராசியர்தி ஷட்வர்க்கம்.

உண்டுநற்சென்மராசி ஓரைக்கிரண்டுகூறும்
பண்டுநவாங்கிசையொன்பான் பகர்திரேகாணம்மூன்றாய்
கொண்டும்திரிசாம்சைமுப்பான் குலவுத்வாதசமீராறு
விண்டராசியினிற்கோளு மேவுவவ்வர்க்கங்காணே.

இ-ள். சென்மமென்பதே இராசியாகும் ஒரையென்பது ஒரு இராசியை யிரண்டுகூறுசெய்தது, நவாம்லசை என்பது ஒரு இராசியை ஒன்பது கூறு செய்தது, திரேக்காணமென்பது ஒரு இராசியை மூன்றுகூறுசெய்தது, திரிம்சாமிசையென்பது ஒரு இராசியை முப்பதுகூறுசெய்தது, துவாதசாமிசையென்பது ஒரு இராசியை பன்னிரண்டு கூறுசெய்தது இப்படிஇராசிகளைக்கொண்டு சட்வர்க்கம் சொல்லப்பட்டது, கிரகங்கள் சுபருடைய வீட்டிலிருந்தால் வர்க்கோத்தமம என்று சொல்லப்பட்டது என்பதாம். 13

10-வது சுலோகம். சிரவுதயம் பிருஷ்டவுதயம் உபயோதயம்.

திடமுளவரிகோல்கும்பம் தேள்யாழ்பெண்டலையுதிக்கும்
கடகம்வில்தகரேர்மானுங் காலதுவுதிக்கும்ராசி
துடருமீனுபயந்தோன்றும் சொன்னதுபகல்ராச்சந்தி
படருமிக்காலந்தன்னில் பகர்ந்தனர்வலிதாமென்றே.

இ-ள். சிங்கம் துலாம் கும்பம் விருச்சிகம் மிதுனம் கன்னி இந்த ஆறு இராசியும் சிரவுதய இராசியாம். கடகம் தனுசு மேஷம் ரிஷபம்மகரம்இந்த ஐந்து இராசியும் காலுதயம்வாலுதயமாகும்-மீனம் உபயோதய விராசியாம். சிரோதய இராசி பகலில்வலிது கால்வாலுதய இராசிகள் இரவில்வலி துள்ளன மீனம் இரவுபகல் அல்லாத சந்திகளில் வலிதாமென்றறிவதாம். 14

11-வது சுலோகம். ஸ்திரீபுருஷ இராசி.

மறியொடுமிதுனம்சிங்கம் மகிழ்துலைதனுசுகும்பம்
பெரியதுவொற்றைராசி பெற்றிடப்பிறந்தான்குரூரன்
அரிவையர்தேள்மான்மீனு மலவனும்விடயிரட்டை
யுரியவிவ்வோரைதன்னி லுதித்தவன்சௌம்யனாமே.

இ-ள். மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இவைகள் ஒற்றை இராசியென்றும் புருஷ இராசியென்றும் சொல்லப்படும். இந்த புருஷ இராசி சென்மலக்கினமாக பிறந்தவன் குரூரனாகவிருப்பான். ரிஷபம் கடகம் கன்னி விரிச்சிகம் மகரம் மீனம் இந்த ஆறு இராசியும் இரட்டை இராசியென்றும் ஸ்திரீ இராசியென்றும் சொல்லப்படும். இந்த ஸ்திரீராசி சென்மலக்னமாகப் பிறந்தவன் சௌம்மியகுண முள்ளவனாக இருப்பானென்பதாம். உதாரணம் (சத்யாசாரியும்) சுலோகம்சொல்லி இருக்கிறார். 15

11-வது சுலோகம். இராசிகளில் பிறந்தார்குணம்.

புருடராசியதேசென்மம் புக்கிடவுதித்தோரெல்லாம்
வுரியதுர்க்குணன்குரூர னுயரழகதனையுள்ளோன்
அரிவையினிராசிதன்னில் அவனியிலுதித்தோர்தம்மை
தரணியோர்போற்றுவார்கள் சற்குணனழகில்லானே.

இ-ள். புருஷ இராசி சென்மலக்கினமாகப் பிறந்தவன் குரூரனுயினும் அழகுள்ளவனுக விருப்பான். ஸ்திரீராசி சென்மலக்கினமாக இருக்கப் பிறந்தவன் உலகில் நல்லவனென்று சொல்லக்கூடியவனும் அழகில்லாதவனுயுமிருப்பானென்பதாம். 16

11-வது சுலோகம். இராசியின் சரதிரவுபயம்.

ஆசிரியச்சந்த விருத்தம்.

ஆடுடன்ஞெண்டுதுலாமகரம் அறிவதுசரமாம்ராசியதே
நீடிய்விடையரிதேள்கும்பம் நேருமிந்நான்குந்திரமாகும்
பாடியயாழ்பெண்வில்மீனம் பகர்வதுராசியுபயமெனும்
நாடிடுசென்மராசிநிகர் நவில்வோஞ்செனனமகவுக்கே.

இ-ள். மேஷம் கடகம் துலாம் மகரம் சரராசியாம். ரிஷபம் சிம்மம் விருச்சிகம் கும்பம் ஸ்திரராசியாம். மிதுனம் கன்னி தனுசு மீனம் உபயராசியாம். எந்த இராசி சென்மலக்கினமாகப் பிறந்தானே அந்த இராசி சுபாவமுள்ளவனு யிருப்பானென்பதாம். உதாரணம் சத்தியாசாரிசொல்லி இருப்பது மிஃதே. 17

11-வது சுலோகம். இராசியின் திக்கு.

அரிதனுமேஷராசிக் கமைவதுகிழக்கதாகுந்
தெரிவையரிடபம்மானும் செப்பிடுமியமன்திக்கு
சரிநிறைகுடம்யாழ்மேற்கு தானம்மீன்தேளுடன்ஞண்டு
நெரியொடுவடக்கதாக நிகழ்த்தினர்வராகமிகி.

இ-ள். மேஷம் சிம்மம் தனுசு இந்த மூன்றிராசியும் கிழக்கு, ரிஷபம் கன்னி மகரம் இந்தமூன்று இராசியும் தெற்கு, மிதுனம் துலாம் கும்பம் இந்த மூன்றிராசியும் மேற்கு, கடகம் விருச்சிகம் மீனம் இந்த மூன்றிராசியும் வடக்கு இந்த விதமாக இராசிகளின் திக்குவராக மிகிராச்சாரியுரைத்தாரென்பதாம். 18

11-வது சுலோகம். இராசியின் ஒரை.

எந்தராசியதானுலும் இரண்டதாய்ப்பிரிக்கவேண்டும்
வந்ததுஆண்ராசிக்கு மார்த்தாண்டன்முன்பின்திங்கள்
அந்தமாய்ப்பெண்ராசிக்கு அம்புலிமுன்பின்வெய்யோன்
இந்தவாரோரைகாண வியம்பினர்வராகமிகி

இ-ள். எந்த இராசி உதயமோ அந்த இராசியை இரண்டு கூறுய்ச்செய்து கொண்டால் முன்பாதியும் பின்பாதியுமாகும். புருட இராசிக்கு முன்பாதி சூரிய ஓரையாயும் பின்பாதி சந்திர ஓரையாயும் கண்டுகொள்ளவும். ஸ்திரீ இராசியில் முதல் ஒரை சந்திர ஒரையும் இரண்டாவது சூரிய ஓரையாகவும் (வராகமிகிராச்சாரி) யுரைத்தாரென்பதாம். 19

## 11-வது சுலோகம். இராசியின் திரிகோணதிபதி.

அரிந்திடமேடந்தன்னி லாரனுஞ்சுடரும்பொன்னன்
பெரும்விடைபுகர்மால்நீலன் பேசுயாழ்மால்கவீசன்
சரிகுளிர்மதிசேய்பொன்னன் சாற்றரிரவிபொன்பூமன்
அரிவைமால்சுன்னும்வெள்ளி யாம்நிறைபுகர்சுன்மாலே.

இ-ள். மேஷத்தின் முதல் திரேகாணம் செவ்வாய் *இரண்டாவது திரே காணத்திற்கு ஐந்தாமிராசிக் கதிபதியான சூரியன் மூன்ருவது திரேகாண த்திற்கு ஒன்பதாமிடத்திற்கு அதிபதியான குருவாம். இவ்விதமாக மற்ற இராசிகட்கும் அறிந்து கொள்ளவேண்டியது. ரிஷபத்திற்குத் திரிகோ ணதிபதி சுக்ரன், புதன் சனி. மிதுனத்திற்குத்திரிகோணதிபதி சந்திரன் செவ்வாய், குரு. சிம்மத்திற்குத் திரிகோணபதி சூரியன், குரு, செவ்வாய். கன்னிக்குத் திரிகோணதிபதி புதன், சனி, வெள்ளி. துலாத்திற்குத் திரி கோணதிபதி சுக்ரன் சனி புதன் என்பதாம். 20

இதுவுமது.

புகலருதேள்செய்பொன்னன் பூரணமதியுமாகும்
இகலுருவில்பொன்செவ்வாய் இரவியுங்கடைக்கூருகும்
மகரசுன்புகரும்மாலும் மகிழ்குடஞ்சுன்மால்வெள்ளி
பகருமீன்குருவுந்திங்கள் பார்மகனந்தமாமே.

இ-ள். விருச்சிகத்திற்கு திரிகோணதிபதி செவ்வாய், குரு, சந்திரன். தனுசுக்கு திரிகோணதிபதி குரு, செவ்வாய், சூரியன். மகரத்திற்கு திரி கோணதிபதி சனி, புதன். கும்பத்திற்கு திரிகோணதிபதி சனி, புதன், சுக்கிரன். மீனத்திற்கு திரிகோணதிபதி குரு, சந்திரன், செவ்வாய். இந்த விதமாக திரிகோணதிபதியை சொல்லப்பட்டது தன் சுயதிரேகாணத்தி லிருக்கப்பட்ட கிரகம் பலமுள்ளவராகுமென்றறியவேண்டியதென்பதாம்.

## 12-வது சுலோகம். வசனம்.

மதாந்தத்தில் ஹோரை திரேகாணதிபதியைச் சொல்லுகிருர் யவ ணதி முதலான சிலர்கள் முதல் ஓரைக்கு ராசியாதிபதியின் ஓரையாகவும் இரண்டாவது ஓரை இலாபாதிபதியின் ஓரையென்றும் சொல்லுகிருர். ஆகையினல் மேஷலக்கினத்திற்கு முதல் ஓரை செவ்வாய். இரண்டாவது கும்பாதிபதியான சனீஸ்வரர் அதிபதியென்றுஞ் சொல்லுகிருர். இந்தப் பிரகாரமாகவே மற்ற இராசிகளுக்கும் பார்த்துக்கொள்ள வேண்டியது. இராசியாதிபதிக்கு பிரதமதிரேகாணமும் லாபாதிபதிக்கு திரிதியதிரே காணமும் இந்தப் பிரகாரமாய் திரேகாணசக்கரத்தையுஞ்சொல்லி இருக்கிருர். யவனேஸ்வரர் வராகமிகிராச்சாரியார் சம்மதித்துச் சொன்னது இல்தல்ல வென்பதாம். 22

13-வது சுலோகம். இராசியில் உச்சம் நீசம்.

பரிதியாடிந்தேருரல் பகர்மான்மால்பெண்பொன்நண்டாம்
பிருகுமீன்சனிகோலுச்சம் பின்னுமேநீசஞ்சொல்வோம்
இரவிகோல்சசிதேள்சேய்நண் டியல்மால்மீன்பொன்மானுகும்
மரிசுன்னும்பெண்ணில்வெள்ளி வலிதில்லேநீசந்தானே.

இ-ள். சூரியனுக்கு மேடமும், சந்திரனுக்கு ரிஷபமும், செவ்வாய்க்கு மகரமும், புதனுக்குக் கன்னியும், குருவுக்குக் கடகமும், சுக்கிரனுக்கு மீனமும், சனிக்குத்துலாமும் உச்சம், சூரியனுக்குத் துலாமும், சந்திரனுக்கு விர்ச்சிகமும், செவ்வாய்க்குக்கடகமும், புதனுக்குமீனமும், குருவுக்கு மகரமும், சுக்கிரனுக்குக் கன்னியும், சனிக்கு மேடமும் நீசமென்பதாம். 23

13-வது சுலோகம். இராசியில் அதியுச்சம்.

பானுவும்மேடந்தனிற்பத்து பாகைபால்மதிவிடையதில்மூன்று
மானினிற்சேய்க்கிருபத்தெட்டு மாலவன்கன்னிமூவைந்து
கோனவன்ஞெண்டில்பாகையமைந்துகுளிர்கவிமீனுமூவொன்பான்
னூனவனிறையிலிருபதுபாகை யுரைத்தனரதியுச்சமெனவே. [கா

இ-ள். சூரியனுக்குமேஷத்தில் பத்துபாகை அதியுச்சமாம், சந்திரனுக்கு ரிஷபத்தில் மூன்றுபாகை அதியுச்சமாம், செவ்வாய்க்கு மகரத்தில் இருபத்தெட்டுபாகை அதியுச்சமாம். புதனுககுக் கன்னியில் பதினைந்துபாகை அதியுச்சமாம், குருவுக்கும் கடகத்தில் ஐந்துபாகை அதியுச்சமாம், சுக்ரனுக்கு மீனத்தில் இருபத்தேழுபாகை அதியுச்சமாம், சனிக்கு துலாத்தில் இருபதுபாகை அதியுச்சமாகுமென்பதாம். 24

13-வது சுலோகம். இராசியில் அதிநீசம்.

பரிதிக்குநிறைவில்பாகையுமைந்துபனிமதி விட்டனில்மூன்று
குருதிக்குநண்டில்பாகைநாலேழுகுளிர்கவி பெண்ணில்மூவொன்பா
குருவுக்குமானில்பாகையுமைந்து கொம்பியுமிருபதுகொறியில் [ன்
அறிஞற்குமீனில்பாகைமூவைந்துமதிலதி நீசமாமறியோ.

இ-ள். சூரியனுக்கு துலாத்தில் இருபதுபாகை அதிநீசம, சந்திரனுக்கு விர்ச்சிகத்தில் மூன்றுபாகை அதிநீசம், செவ்வாய்க்கு கடகத்தில் இருபத்தெட்டுபாகை அதிநீசம், புதனுக்கு மீனத்தில் பதினைந்துபாகை அதிநீசம், குருவுக்கு மகரத்தில் ஐந்துபாகை அதிநீசம், சுக்கிரனுக்கு கன்னியில் இருபத்தேழுபாகை அதிநீசம், சனிக்கு மேஷத்தில் இருபதுபாகை அதிநீசமாகுமென்பதாம். 25

14-வது சுலோகம். இராசிவர்க்கோத்தமம்.

சரராசிதனிலேமுன்னாய் சாற்றிடுமமிசம்நன்று
திரராசிநடுவாமைந்துசேர் நவாமிசமும்நன்றும்
வருமுபயத்திலொன்பான் மகிழ்நவாமிசமுமெத்த
பெரும்வர்க்கவுத்தமந்தான் பேசினார்வராகமிஹிரி.

இ-ள். சரராசியாகிய மேஷம் கடகம் துலாம் மகரம் இந்த ராசிகளில் முதலாவது அமிசம் வர்க்கோத்தமமாகும் ஸ்திரராசியாகிய ரிஷபம் சிம்மம் விருச்சிகம் கும்பம் இந்த ராசிகளில் மத்திமமாகிய ஐந்தாவது அமிசம், வர்க்கவுத்தமமாகும். உபயராசியாகிய மிதுனம் கன்னி தனுசு மீனம் இந்த ராசியில் அந்தியமான ஒன்பதாவது அமிசம் வர்க்க வுத்தமமாகும் இந்தவர்க்க வுத்தமம் சுபபலப் பிரீதியாமென்று சொல்லப்படும். 26

14-வது சுலோகம். இராசிகளுக்கு மூலத்ரிகோணம்.

உலகதுதனிலேகதிரவன்சிங்க முறைந்திடில்மூலத்ரிகோணம்
நிலவதுவிடையில்நிலமகன்மறியில் நின்றிடில்மூலத்ரிகோணம்
புலவனும்பெண்ணில்பொன்னவன்றனுசுபுகர்நிறைமூலத்ரிகோணம்
கலசமுஞ்சனிக்குமூலத்ரிகோணம் கருத்துடனறிவதுவிதியே.

இ-ள். சிங்கராசியில் சூரியனுக்கு மூலத்ரிகோணம். ரிஷபராசியில் சந்திரனுக்கு மூலத்ரிகோணமாம். மேஷராசியில் செவ்வாய்க்கு மூலத்திரிகோணமாம், கன்னியில் புதனுக்குமூலத்ரிகோணமாம். தனுசில் குருவுக்கு மூலத்ரிகோணமாம். துலாத்தில் சுக்ரனுக்கு மூலத்ரிகோணமாம். கும்பத்தில் சனிக்கு மூலத்ரிகோணமா மென்பதாம். 27

14-வது சுலோகம். இராசிபாகையில் மூலத்ரிகோணம்.

கதிர்சிங்கமிருபான்மூலத்ரிகோணங் கருதுபின்பத்துசொக்ஷேத்ரம்
மதிவிடைமூன்றுபாகையுமுச்சமாகுமூவொன்பதுங்கோணம்
உதிரனுந்தகரில்பதினெட்டுகோணமுரைக்குபன்னிரண்டதுவாக்ஷி
மதிமகன்பெண்மூவைந்துமே யுச்சமைந்துகோணம்பத்துமாக்ஷி.

இ-ள். சூரியனுக்கு சிங்கராசியில்முன் இருபதுபாகை மூலத்ரிகோணம், பின்பத்துபாகை-சொக்ஷேத்ரமென்னப்படும். சந்திரனுக்கு ரிஷபராசியில் முன் மூன்றுபாகையுச்சம், பின்னிருபத்தேழு பாகையும் மூலத்ரிகோணமென்னப்படும். செவ்வாய்க்கு மேஷத்தில் முன்பதினெட்டுபாகை மூலத்ரிகோணம், பின்பன்னிரண்டு பாகையுசொக்ஷேத்ரமென்னப்படும் புதனுக்கு கன்னிராசியில் முன்பதினைந்து பாகையுச்சம், அடுத்த ஐந்துபாகை மூலத்ரிகோணம், அடுத்த பத்துப்பாகை சொக்ஷேத்திரமென்பதாம். 28

3

### 14-வது சுலோகம். இராசிபாகையில் மூலத்ரிகோணம்.

குருதனுபன்மூன்றதுதிரிகோணங் கூறுபன்னேழுசொக்ஷேத்ரம்
பிருகுகோற்பத்துமூலத்ரிகோணம்பின்னிருபதுவுஞ்சொக்ஷேத்ரம்
கரியவன்குடத்திலிருபதுகோணம்காணும்பின்பத்துஞ்சொக்ஷேத்ர
நெரியொடுபாகைமுன்னதுகோணம் நேரும்பின்பாகமாக்ஷியதே

இ-ள். குருவுக்கு-தனு ராசியில் பதிமூன்றுபாகை மூலத்ரிகோணம், பின்பதினேழுபாகையும் சொக்ஷேத்ரமென்னப்படும். சுக்ரனுக்கு துலா இராசியில் பத்துபாகை மூலத்ரிகோணம், பின்னிருபது பாகையும் சொக்ஷேத்ரமென்னப்படும். சனிக்கு கும்பத்தில் இருபதுபாகை மூலத்ரிகோணம், பின்பத்துபாகையுஞ் சொக்ஷேத்திரமாகும். இந்த இராசிகளில் முன்னுக மூலத்ரிகோணமும் பின்னுக சொக்ஷேத்திரமுமென்பதாம். உதாரணம் மாதவர் சொல்லியிருக்கிருர் இவ்விடத்தில் கொஞ்சம் பேதமேற்படும். 29

### 14-வது சுலோகம் உதாரண மூலத்ரிகோணம்.

குருதியாடீராறுமூலத்ரிகோணம் குறிப்பதுபதினெட்டுமாக்ஷி
குருதனுபத்தும்கோணம் பின்னுக்ஷிகோல்புகர்பதினைந்துகோண
முரையும்பின்னுக்ஷி சாராவளியிம் முறையதுமாதவவசனம்
பிருகுகோலைந்து மூலத்ரிகோணம் பின்னுமையைந்துமேயாக்ஷி.

இ-ள். செவ்வாய்க்கு மேஷ இராசியில் பன்னிரண்டுபாகை மூலத்ரிகோணம், மற்ற பதினெட்டுபாகையுஞ் சொக்ஷேத்ரம் குருவுக்கு தனுசு இராசியில் பத்துபாகை மூலத்ரிகோணம். பின்னிருபதுபாகை சொக்ஷேத்ரம். சுக்ரனுக்கு துலாராசியில் பதினைந்துபாகை மூலத்ரிகோணம், பின்பதினைந்துபாகை சொக்ஷேத்ரமென்று சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் சுக்ரனுக்கு துலா இராசியில்-ஐந்துபாகையே மூலத்ரிகோணமென்றும் பின்னிருபத்தைந்து பாகைகளும் சொக்ஷேத்திர மென்றும் மாதவ வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது மென்பதாம். 30

### 15-வது சுலோகம். துவாதச தானவிபரம்.

சென்மமேமுதலாம்விழியும்வாக்கிரண்டுசெப்புசோதிரமதுமூன்று
அன்னையேநான்கர் மக்களுமைந்து மாறதுபகையதேழ்பெண்டீர்
தன்னுயிரெட்டு தந்தையுமொன்பான் தன்னதுசீவனம்பத்து
பன்னொன்றிலாபம் விரயமீராறும் பகர்ந்ததுதானத்தினிலையே.

இ-ள். சென்ம லக்னமே முதலாகும். இரண்டாமிடம் வாக்கு, நேத்திரம் மூன்ருமிடம் சகோதரம். நாலாமிடம் மாதுர்ஸ்தானம், ஐந்தாமிடம்புத்ரன் ஆறுமிடம் பகைசத்ரு ஏழாமிடம் களத்திரம் காமம். எட்டாமிடம்

ஆயுள், ஒன்பதாமிடம் தகப்பன், குரு பத்தாமிடம் சீவனம், பதினோரா மிடம் லாபம் பன்னிரண்டாமிடம் விரயம் இந்த விதமாக துவாதச ஸ்தா னத்தை சொல்லப்பட்டதென்பதாம். 31

15-வது சுலோகம் உபசயமும் அபசயமும்.

உறைந்திடுமூன்று மாறொடுபத்து முன்னிடுபன்னொன்றுமிடமும்
நிறைந்திடுமிதனையுபசயுமெனவுநிகழ்த்தினர்மற்றுமேதென்னில்[யம்
குறைந்திடாசெனனமிரண்டுநாலைந்துகுலவுமேழெட்டோன்பான்வி
அறைந்திடுமிதனை யபசயமென்று றறிந்திட னூல்வழியிதுதானே.

இ-ள். மூன்றாமிடமும் ஆறாமிடமும் பத்தாமிடமும் பதினோராமிடமும் ஆகிய இந்த நான்கிடத்தையும் உபசயஸ்தான மென்னப்படும் மற்ற இராசி கள் சென்மம் இரண்டாமிடம் நாலாமிடம் ஐந்தாமிடம் ஏழாமிடம் எட் டாமிடம் ஒன்பதாமிடம் பன்னிரண்டாம் இந்த எட்டு ஸ்தானங்களையும் அபசய மென்னப்படு மென்பதாம். 32

16-வது சுலோகம். லக்கினதுவாதசத்தின்பேர்.

17-வது சுலோகம் துவாதச இராசியின் கண்டவலிது

ஆடரிவிடைமான் முன்தனுபின்னு மதிவலிதாகுமீரைந்திடில்
பாடுயாழரிவைதுலைகுடம்வில்முன் பகர்வது வுதயத்தில்வலிது
கீடமேழ்மான்பின் நண்டுமீனிவைகள் கீழுநீர்தானத்தில்வலிது
நாடுவராகமிகிராச்சாரிநவின்றனனூலதுவுணர்ந்தே.

இ-ள். மேஷம் சிம்மம் ரிஷபம் மகரம் முன்னும் தனுசு பின்னும் பத்தா மிடத்தில் வலிது. மிதுனம் கன்னி துலாம் கும்பம் தனுசு முன்னும் உத யத்தில் வலிது. விருச்சிகமேழில் வலிது மகரம் பின்னும் கடகம் மீனம் இவைகள் நீர்கீழென்னும் நாலாமிடத்தில் வலிது இந்த விதமாக வராகமி கிராச்சாரியாரால் சொல்லப்பட்டதென்பதாம். 33

18-வது சுலோகம். இராசிக்கு கேந்திரம் பணபரம் ஆபோக்லீபம்

துணையெனுமுதயம்நாலுமேழ்பத்தும் சுகமுளகேந்திரப்பதியாம்
இணையொடுமிரண்டைந்தெட்டுடனிலாபமிவைகளும்பணபரமாகும்
மணமுறுமூன்றுவாறொன்பதீராறு மருவுமாபோக்லீபயாகும்
கணிதர்வராகமிகிராச்சாரி கண்டுமேயுரைத்தவிவ்விதியே.

இ-ள். சென்மலக்னம்-நாலாமிடம் ஏழாமிடம் பத்தாமிடம் இந்த நாலு இடமும் கேந்திரம் இரண்டாமிடம் ஐந்தாமிடம் எட்டாமிடம் பதினோரா மிடம் இந்த நான்கிடமும் பணபரம் மூன்றாமிடம் ஆறாமிடம் ஒன்பதா மிடம் பன்னிரண்டாமிடம் இந்த நாலும் ஆபோக்லீபம் என்று வராக மிகிராச்சாரி யுரைத்தாரென்பதாம். 34

19-வது சுலோகம். இலக்ஞாதிபதிபலன் சொல்லப்பட்டது.

உதயமுமுதயநாயகனிவரை யுயர்பொன்மால்நோக்கிடவலது
பதியதிலிருக்கமற்றவர்கூடல் பார்வையுமுற்றிடவலிதாம்
அதிகுருமாலோ நோக்கமுமற்றோர் சூழுநோக்குற்றிடமத்தி
பதிதனைகோள்கள்நோக்கிலராகில் பலமில்லையந்தலக்கினமே.

இ-ள். சென்ம லக்கினத்தை யாவது சென்மாதிபதியை யாவது குரு புதன் பார்த்தாலும் அல்லது சென்மத்திலிருந்தாலும் சென்மாதிபதியை கூடியிருந்து மற்றோர் கூடியும் பார்வையுமில்லாதிருக்க அந்த லக்கினம் வலியுள்ளதாகு மென்பதாம் லக்னத்தை லக்ஞாதிபதியை குருபுதனால் பார்க்கப்பட்டு மற்ற கிரகங்கள் கூடியும் பார்க்கப்பட்டுமிருக்க அந்த லக்கினம் மத்திமபல முள்ளதாம். லக்கினத்தை லக்ஞாதிபதியை ஒரு கிரகமும் பார்க்காமலும் கூடாமலுமிருக்க அந்த லக்னம் பலவீனமுள்ளதாம் இந்த விதமாக உதாரணம் பாதராயணர் சொல்லி இருக்கிறா ரென்பதாம்.

19-வது சுலோகம். இராசி ஸ்தானாதிபதிவலிது.

சென்மமும்நாலும் ஏழுடன்பத்தில் சிறந்தவரும்பலவானும்
நன்னயமிரண்டைந்தெட்டுடன்லாப நற்பதியிற்பலன்மத்தி
என்றுமூன்றாறும் ஒன்பதீராறுமிப்பதிபலமிலாதாகும்
அன்றுவராகமிகிராச்சாரியறைந்தனர்நூலதையுணர்ந்தே.

இ-ள். சென்மலக்னம் நாலாமிடம் ஏழாமிடம் பத்தாமிடம் இவைகளிலிருந்த கிரகம் அதிக பலவானாகும். இரண்டு ஐந்து எட்டு பதினொன்று இந்த இடங்களிலிருந்தவர் மத்திமபலவானாகும். ஆறுஒன்பது பன்னிரண்டு மூன்று இந்த இடங்களிலிருந்த கிரகம் ஈன பலனுள்ளவராகும். இதற்கு உதாரணம் பாதராயணர் சொல்லியிருக்கிறார் என்பதாம். 36

19-வது சுலோகம். இராசியின் காலவலிது.

கன்னியாழ்துலையும் கும்பமிந்நான்கும் கருதியபகலதில்வலிது
மன்னியவிடைமேடமுஞ்சிங்கம் வன்சிலையிரவினில்வலிது
உன்னியகடகம் தேளுடன்மீனமுயர்சுறப்பகலிரவின்றி
துன்னிடுசந்திகாலத்தில் வலிதாய்ச்சொல்லினர்வராகமீகி.

இ-ள். இருகால் இராசியாகிய கன்னி மிதுனம் துலாம் கும்பம் இவைகள் பகலில்வலிது, நாற்கால் இராசியாகிய ரிஷபம்-மேஷம் சிம்மம்-தனுசு இரவில் வலிது கடகம்-விருச்சிகம் மீனம்-மகரம் இரவும் பகலுமல்லாத சந்திகாலத்தில் வலிதுள்ளவைகளா மென்று வராகமிகிராச்சாரியாரால் சொல்லப்பட்ட தென்பதாம். 37

19-வது சுலோகம் சிலவசனம் சொல்லப்பட்டது.

சக்ரபூர்வார்த்ததில் மேஷாதி ஆறு இராசிக்குள் ஐந்து முதலாகும் ஆனல் 5 6-7-8-9-10-இந்த சக்ரை நாலில் குணிக்கப்பட்டவை-மானம்-மேஷாதி ஆறு இராசிகளுடைய அதிக குறைவுகளாகும் அதெப்படி என்றால் மேஷம் 200-ரிஷபம்-240-மிதுனம்-280-கடகம்- 320-சிம்மம்-360-கன்னி 400-இந்த சக்ரையை-பத்திறல் குணிக்க விஞடியாம். அந்த மேஷாதிகளுக்கு சொல்லப்பட்ட சங்கியாஷ்டமே வித்தியாசமானது. துலாதி மீனந்தத்திர்க்கு விஞடியாகும். இப்படி குணிக்க மீனமேஷத்திற்கு 200-ரிஷப கும்பத்திற்கு-240-மகர மிதுனத்திற்கு-280-தனுசுகடகத்திற்கு-320-சிம்ம விருச்சிகத்திற்கு 360-துலாங் கன்னிக்கு-400-இதை-60-ஞல் பாகிக்க வருவது கடிகையாகும். இவைகளின் பிரயோசன மென்ன வெனில், காலபுருஷனுடைய அங்கத்தில் லக்கினமுதலெண்ண தீர்க்கஇராசியுள்ள அங்கம் தீர்க்கமும் குறைவுள்ள இராசியிலிருந்த அங்கம் குறைவும் சமராசியிலிருந்த அங்கம் சமமும் ஆகும் என்றறியவும், சோர பிரஸ்னேயில் சோரன்போன மார்க்கத்தின் தூரம் தெரியலாம். உதாரணம் யவனேஸ்வரர் சொல்லியிருக்கிறர். என்பதாம். 38

20-வது சுலோகம். இராசியின் நிறம்.

இடபமுந்துலேமீன்நிறமதுவெண்மை யேக்திழைகருநிறமாகும்
கடகமுங்குடமும்செந்நிறவெண்மை காடுறைமேடமேசிவப்பு
திடமுளசிங்கம்புகைநிறவெண்மை தேள்தங்கம்யாழதுபச்சை
அடருமானசுக்லகபிலேனிலமா மருந்தனுகபிலேசெந்நிறமே.

இ-ள். ரிஷபம் துலாம் மீனம் வெண்மைநிறமாகும். கன்னி கருப்புநிறமாம் கடகம் கும்பம் சிவப்புகலந்த வெண்மை. மேஷம்-சிவப்பு, சிங்கம் புகைபோன்ற நிறமாம். விருச்சிகம் தங்கத்தைப்போலு மஞ்சள் சாயலான நிறமாம். மிதுனம் பச்சைநிறமாம் மகரம்-சுக்ல கபில கலந்த கரிசலான வெண்மை. தனுசு கபில சிவப்புகலந்த நிறமாம். க்ன்னிக்கு பஞ்ச வர்ண மென்றும் சொல்லப்படுமாம். 39

20-வது சுலோகம். கிரக இராசி திக்கு.

ஆடுதேட்கதிபன்குருதியாமவர்க்கு வறைந்ததுதென்றிசையாகும்
பாடுயாழ்பெண்ணுக்கதிபதிமாலோன் பற்றிடுதிசையதுவடக்கு
ஓடுமேறுதுலேக்குவதிபனும்வெள்ளி யுறைவதுவன்னியின்திசையே
நாடுமீன்தனுவுக்கதிபதிகுருவாம் நாட்டியதிசையுமீசான்யம்.

இ-ள். மேஷவிருச்சிகத்துக்கு அதிபதி செவ்வாயானபடியால் அந்த செவ்வாய்க்கு தெற்குதிசையாகும். மிதுன கன்னிக்கு அதிபதி புதனைதால் அந்த புதனுக்கு வடக்கு திசையாகும். ரிஷப துலாத்திர்க்கு அதிபதி

சுக்ரனுனதால் அந்த சுக்ரனுக்கு அக்கினிதிசையாகும். தனுசு மீனத்திர்க்கு அதிபதி குருவானதால் அந்த குருவுக்கு ஈசான்னிய திசையாகும். 40

20வ-து சுலோகம். இராசியதிபதி திசை.

துங்கமாநண்டுக்கதிபதிநிலவாம் தோய்திசையதுவுமாருதியாம்
தங்குமாமறிக்குவதிபதிகதிரோன் தன்திசைகிழக்கதுவாகும்
அங்குமான்குடங்கர்க்கதிபதிநீலன் னவர்திசைமேற்கதுவாகும்
இங்கிதன்பலனும்நட்டமாம்பொருள்களிருக்கிறதிசையெனவறியே

இ-ள். கடகத்திற்கு அதிபதி சந்திரனுனபடியால் அந்த சந்திரனுக்கு வாயுதிசையாம் சிங்கத்திற்கு அதிபதி சூரியனுனதால் அந்த சூரியனுக்கு கிழக்குதிசையாகும் மகரகும்பத்திற்கு அதிபதி சனியானபடியால் அந்த சனிக்கு மேற்குத்திசையாம். இவைகளுக்கு பிரயோசனம் வலிதுள்ள கிரகத்தினுல் சோரம்போன பொருளிருக்கும் திசையறிவதாகும். 41

20-வது சுலோகம். சிலவசனம்.

சூரியனிருந்த ராசிக்கி இரண்டா மிடம் வேசிதான மென்னப்படும். இது வேசியோகங்கள் பிரயோஜனம் உதாரணம் யாத்திரா பிரகரணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. துவாதசவிராசி ஸ்தானத்துக்கும் பேர் சொல்லப்பட்டிருக்கிறது. கேந்திர பணபர ஆபோக்லீபம் முதலாக சொல்லப்பட்டிருக்கின்றன. 42

20-வது சுலோகம். இராசிஸ்தானபலன்.

உதயமேதனதுசுகமுமாரோக்யமுரைக்குமிரண்டதுதனதுகுடும்பம்
நிதியதும்மூன்றுல்துணைவர்விக்கிரமம் நிகழ்த்திடுநாலெனும்பதியால்
துதிபெறுபந்துசுகமதுகிரகம் தூயவைந்தால்மதிமக்கள்
சதியுறுமாறுல்சத்துருவிரணம் தானமேழ்மனையவள்காமம்.

இ-ள். உதயமென்னப்பட்ட சென்மலக்கினத்தினுல் தனக்கு தேகசவுக்கியசுகம் இவைகளைச் சொல்லவேண்டியது இரண்டாமிடத்தினுல் தனம் குடும்பம் புராதனநிதிகளைச் சொல்லவேண்டியது. மூன்றுமிடத்தினுல் சகோதரம் விக்கிரமம் இவைகளைச் சொல்லவேண்டியது. நான்காமிடத்தினுல் பந்துக்கள் சுகம் வீடு பூமி முதலியவைகளைச் சொல்லவேண்டியது. ஐந்தாமிடத்தினுல் புத்தி புத்திரர்களைச் சொல்லவேண்டியது. ஆறுமிடத்தினுல் துன்பம் சத்துரு விரணம் இவைகளைச் சொல்லவேண்டியது. ஏழாமிடத்தினுல் காமம் மனையாள் இவைகளைச் சொல்லவேண்டியது என்பதாம். 43

20-வது சுலோகம். இராசிஸ்தானபலன்.

எட்டினல்மரணம்ஒன்பதுவிரத மெழில்தவங்குருதந்தைதாய்க்கும்
திட்டமாம்பத்தால்சீவனம்ஆக்ஞை செப்புபன்னொன்றினல்லாபம்
சட்டமாய்வித்தைசம்பத்துவரத்து சாற்றிடுவிரயத்தால்வியரம்
மட்டுளவுபசயத்தினல்விருத்தி வலிவுளபலனெலாமுரைத்தல்.

இ-ள். எட்டாமிடத்தினல் ஆயுள்நிலை மரணம் சொல்லவேண்டியது, ஒன்பதாமிடத்தால் விரதம் தவம் குரு தாய் தகப்பன் இப்பலன் சொல்ல வேண்டியது. பத்தாமிடத்தால் சீவனம் தொழில் உத்யோகம் அதிகாரம் சொல்லவேண்டியதென்றும், பதினேராமிடத்தால் வித்தை லாபம் சம்பத்து வருவாய்களைச் சொல்லவேண்டியது. பன்னிரண்டா மிடத்தால் விரயம் சொல்லவேண்டியது. உபசயஸ்தானத்தினல் அபிவிர்த்திகளானதால் இதைக்கொண்டு பலன்கள் விசேஷமாக சொல்லவேண்டிய தென்பதாம்.

படலச்செய்யுட்டொகை.

ராசியின்படலத்தோடு நவின்றபாயிரமுங்கூட்டி
மாசிலாத்தமிழினலே வகுத்தனன்செய்யுளாகத்
தேசிகரடியைப்போற்றி திருமலைநகரம்வாழ்நன்
நேசனும்வயித்தியலிங்கம் நிகழ்த்தினனறுபத்தொன்றே.

இராசிப்படலம்

முற்றிற்று.

---

உ

கடவுள்துணை

# மங்களேஸ்வரீயம்.

மூன்றாவது

## கிரகப்படலம்.

### விநாயகர் துதி.

அறுசீர்க்கழில் நேடிலாசிரிய விருத்தம்.

அமரர்குழா மதுதனக்கு முதல்வனை
வைங்கரனே யானைமுக ரரனுக்கும்
உமையவட்கும் புதல்வனை யுற்பவித்து
ஊமையொடும் பிரணவத்துக் கதிபனை
நிமலனே நிகர்க்குணனே நிறைந்தசோதி
நீணிலத்தில் கிரகமதின் படலங்கூற
குமாரனெந்தன் நெஞ்சமதைத் திடப்படுத்தி
குலவுதமி ழுரைக்கவர மீவாய்தேவே.

1-வதுசுலோகம். இராசியாதிபதியானகிரகங்கள் காலபுருஷனுக்கு
ஆத்மா முதலாகுமானதால் செகத்திலுள்ளயாவர்க்
கும் குஜனுதி கிரகமவ்விதமானதா லதைச்
சொல்லப்படும்.

கதிரவனன்மாகளங்கனேமனது காசினிமைந்தனும்பலனும்
மதிமகன்வாக்காம்மன்னவன் ஞானமருட்சுகம்வெள்ளியேகாமம்
சதியுருநீலன்றுக்கமாமென்றும் சாதகனுதித்திடும்போதில்
அதிவலிதுற்றாலவைவலிதாகுமர்ப்பமேலவ்விதமறியே.

இ-ள். சூரியன்-ஆத்மா சந்திரன்-மனது. செவ்வாய்-சரீரபலன். புதன்-வாக்கு. குரு-ஞானசுகம். சுக்கிரன்-காமம். சனி-துக்கம். இப்போதுசொல்லப்பட்டது காலபுருஷனுக் கானபடியால் சகலமான ஜகத்துக்கும் சொன்னவிதமே. சென்மகாலத்தில் ஆத்மாமுதலாய்ச் சொல்லப்பட்டவைகளுக்கு அந்தந்த கிரகம் வலிதாக விருந்தால் அந்த குணம் வலிதாயிருக்கும். மத்திமவலிதாயிருந்தால் அதுவுமத்திமம். ஈனமாயிருந்தாலவையு மீனமாயிருக்குமென்பதாம்.

1-வது சுலோகம். கிரகாதிபதிகள்.

அரிமதியிருபேர்நரபதியாகு மாரலேசேனைக்குவதிபன்
அறிஞனுந்தனதுகுமரனுய்க்கூறு மந்தணன்புகரிருபேரும்
அறிவுளர்வேந்தர்க்கமைச்சனு மாவானருஞ்சனிதாசனேயாகும்
அறிவதுவுலகினுதித்திடும்பேர்க்கு மவ்விதத்தொடர்பதுகாணே.

இ-ள். சூரியன் சந்திரனிருவரும் இராஜாவாம்; செவ்வாய் சேனாதிபதி புதன் தன்னுடைய மக்கள் குரு சுக்கிரன் யூகமுள்ள மந்திரியாகும். சனி கீழ்ப்படிபவன் வேலைக்காரனும். சென்மகாலத்திலாவது பிரஸ்னகாலத்திலாவது இராசியாதி முதலான சூர்யாதி கிரகங்கள் பலமுள்ளவராயிருந்தால் தங்கள் தங்கள் சக்கைகளுக்குத் தகுந்தபடி காரியசாதனமாகும் பலவீனராயிருந்தால் காரியஹானியுண்டாக்கி வைப்பரென்றறியவும். 2

2-3-வது சுலோகம். கிரகப்பேரானபடியாலதை நீக்கப்பட்டது.

4-வது சுலோகம். கிரகநிறம்.

தொடர்கதிர்க்கருமைசிவப்பதுகலந்து துலங்கிடுசெம்பதிநிறமாம்
உடுபதிவெண்மையுதிரனேசிவப்பு வுற்றமால்பச்சிலைநிறமே
திடமுறுகனகன்பொன்னிறமாகுஞ் சிதனுமேசித்திரவெண்மை
நடையிலான்கருப்புஇவ்விதிதானும் நட்டமாம்பிரசினைதனக்கே.

இ-ள். சூரியன் கருப்பும் சிவப்புங்கலந்து செம்புபோலொத்த நிறம். சந்திரன்-வெண்மை, செவ்வாய்-சிவப்பு, புதன்-பச்சை இலைபோலே நிறம். குரு-தங்கம் பொன்போல் நிறமாம். சுக்கிரன் பரிசுத்தமான வெண்மை, சனி-கருப்பு இவைகளுக்கு பிரயோசனம் சென்மகாலத்தில் எந்த கிரகம் வலிதாகவிருக்குமோ அந்த கிரகத்திற்கு உள்ள நிறம் உடையவனாக சாதகனிருப்பானென்றறியவும். நட்டாதி பிரசனைக்கு சோரர்கள் பலவந்தகிரக வர்ண முடையவர்களென்று தெரியவேண்டியதென்பதாம். 3

5-வது சுலோகம். கிரகநிறம்முந்திசொன்னதுபோலவே
இந்த சுலோகத்திலும் சொல்லப்பட்டதால் அதை இதில்
சொல்லாது நீக்கிவிட்டது கிரக அதிதேவதைகள்.

உத்தபாற்கரனுமக்கினி தேவனுமுடுபதிநீரதுசெவ்வாய்
பத்திடுமாரசாமியுமாகும் பண்டிதன்கேசவனாகும்
வித்தகப்பொன்னிந்திரனாகும் வெள்ளியேசசியெனுந்தேவி
சுத்தமாஞ்சனிகன்பிரமனுமாகச் சொல்லினர்கிரகதேவதையே.

இ-ள். சூரியனுக்கு-அக்கினிதேவனும், சந்திரனுக்கு-ஜலமும், செவ்வாய்க்கு-சுப்பிரமணியரும், புதனுக்கு விஷ்ணுவும், குருவுக்கு-தேவேந்திர

னும் சுக்ரனுக்குச் - சசிதேவியும், சனிக்கு-பிரமனுமாம், பிரயோஜனம் நவக்கிரகபூஜைகளுக்கு இந்தப் பிரகாரமாக சாராவளியில் சொல்லப்பட்டதென்பதாம். 4

5-வது சுலோகம். கிரகதிசையறிய.

உஷ்ரதருகதிரோன்கீழ்த்திசைமதிக்கு வுயர்வளிகுருதியேதெற்கு
குறைவருபுலவன்வடதிசைபொன்னுக் குரைப்பதுவீசனும்வெள்ளி
விரவியவன்னிசனியவன்மேற்கு விளங்குபாம்பதற்குமேநிருதி
யுறைதிசையாகும்வலிவுளோர்திசையிலுதித்தவர்செநனவாசலுமே

இ-ள். சூரியனுக்குக்-கிழக்கு, சந்திரனுக்கு-வாயு, செவ்வாய்க்குத் - தெற்கு, புதனுக்கு-வடக்கு, குருவுக்கு-ஈசானியம், சுக்ரனுக்கு-அக்கினி, சனிக்கு-மேற்கு, ராகுவுக்கு-நிருதியாகுமாம், இதற்கு பிரயோஜனம் கேந்திரத்திலெந்தக் கிரகமிருக்குமோ அந்தக் கிரகத்துக்குச் சொல்லப்பட்டதிசை பிரசவத்தின் வீட்டுவாசலாகும்- அன்றியும் நட்டம் சோரப்பிரசனைகளுக்குமா மென்பதாம். 5

5-வது சுலோகம். கிரகத்தில் சுபர் பாபி.

கதிரவனொடுசேய்நீலன் கலையிலாமதியுந்தீயர்
மதிபுதன்புகரோன்பொன்னன் வளர்மதிசுபனேயாகும்
சதியுருபாபரோடு சார்ந்திடும்புலவன்பாபி
மதியும்பூரணமதாகில் வலியுளசுபராமென்னே.

இ-ள். சூரியன்-செவ்வாய், சனி-அமரபக்ஷ, சந்திரன்-பாவி, புதன்-குரு-சுக்கிரன்-வளர்மதி, சுபக்கிரகமாகும், பாபருடன் கூடின புதனும் பாபியாம், பூர்ணசந்திரனுகில் வலிதுள்ள சுபக்கிரகமாகுமென்பதாம், 6

5-வது சுலோகம். சந்திரன் சுபாசுபம்.

தானவர்பூர்வதசமிமட்டிலுமே சாற்றுவோமத்திமனென்று
மானநற்பூர்வமைந்துநாளமர மைந்திலும்பூரணச்சுபனும்
ஈனமுங்கொண்டவமரபக்கத்தி லிருந்திடபத்துநாள்சுபன்
ஆனநற்கோளின்நோக்கமுமிருக்கி லதிசுபனுவனெக்காலும்.

இ-ள். சந்திரன் பூர்வபக்ஷ பிரதமைமுதல் தசமிவரையில் மத்திமன், பூர்வபக்ஷ ஏகாதசி முதல் பௌர்ணை ஐந்துநாளும் அமரபக்ஷம், பிரதமை முதல் பஞ்சமிவரையில் நிறைந்த சுபனுகும், அமரபக்ஷ சஷ்டிமுதல் அமாவாசை வரையில் சந்திரன் பாபியாம், சந்திரனுக்கு சுபக்கிரக நோக்கிருக்க எப்போதும் சுபனுகும் பலவந்தனுமாவான், இதற்கு பிரயோஜனம் ஜென்னகாலத்தில் பாபக்கிரகம் வலிதுபெற்றிருக்கில் பாபகர்மசிந்தையுடையவனும், சுபக்கிரகம் வலிது பெற்றிருக்கில் சுபகர்ம சிந்தையுள்ளவனுஞ் சௌமியனுமிருப்பனென்பதாம், 7

6-வது சுலோகம். கிரகங்களுக்கு ஸ்திரீபுருஷகணிதம்.

மதியொடுபுகரோன்பெண்ணெனலாகு மால்சனியிருந்தவர்கள்தாமு
பதியதில்அலியாய்ப்பகர்வதுமுன்னோர் பார்மகன்சுரகுருவவருப்
கதிரவன்மூவராணுருவென்றோம் காசினியதனிலேமகவு
உதயமாம்பொழுதுவலிவுளோர் குறிகளுற்றதாமிவ்விதியறியே.

இ-ள். சந்திரன் சுக்கிரன் பெண் கிரகமாம், புதன் சனி அலிக்கிரகமாம், சூரியன் செவ்வாய் குரு இவர்கள் ஆண்கிரகமாம், இதற்கு பிரயோஜனம் ஜென்மகாலத்தில் வலிதுள்ள கிரகத்துக்குள்ளே சொரூபம் அடைந்திருப் பானென்றறியவேண்டிய தென்பதாம். 8

6-வது சுலோகம். கிரகபஞ்சபூதம்.

விளங்கிடவுரைப்பேன்பஞ்சபூதியங்கள் மேதையேபூமியின்கிரகம்
களங்கனும்புகரும்நீரதின்கிரகம் கதிரவன்சேயுமேகனலாம்
வளம்பெறுசனியன்வாயுவின்கிரகம் வானவர்கோனெனுங்கனகன்
தளங்களிந்நான்குபூதியமதர்க்கும் தாயெனும்விண்ணதாமறியே.

இ-ள். கிரகங்களில் புதன் பிருதிவி கிரகம், சந்திரன் சுக்ரன் அப்பு கிர கம், செவ்வாய் சூரியன் தேயுகிரகம், சனி வாயு கிரகம், இந்த நாலுபூதத் திற்கும் தாயாகிய ஆகாசம் குருவாகும், இதற்கு பிரயோசனம் திசாபலத் தில் சொல்லப்படும் என்பதாம். 9

7-வது சுலோகம். கிரகத்தின்குலம்.

விண்ணுறையெழுகோள்தங்களின்மரபுவிபரமாயுரைத்திடவெங்கில்
விண்மணிகுசனும்வேந்தரின்மர வேதியன்புகருமேமறையோன்
தண்ணவன்வணிகன்குலமதுவாகும் சாமனேசூத்திரகுலமாம்
எண்ணியசனியன்சங்கரசாதியெனுஞ் சண்டாளனேயாகும்.

இ-ள். சூரியன் செவ்வாய் க்ஷத்திரியகுலம். குரு சுக்ரன் பிரமகுலம் சந் திரன் வைசியகுலம், புதன் சூத்ரகுலம், சனி சங்கரசாதிகளான சண்டா ளன் முதலியவர்களுக்கு அதிபதியாம், இந்த கிரகவசத்தால் சோரராதி களுடைய வர்ணசாரங்கள் கண்டுகொள்வ தென்பதாம். 10

7-வது சுலோகம். கிரகதிரிகுணம்.

நிலவொடுபொன்னனிரவியிம்மூவர் நெறியுளர்சத்துவகுணமே
புலவனும்புகருமிருவர்தங்குளமே புகல்வதுராசதமாகும்
நிலமகன்சவுரிதாமதரெனவே நிகழ்ந்தினர்தேவகீர்த்தியரும்
குலமதில்மக்கள்செனனகாலத்தில் கோள்வலிகுணமுடையவரே.

இ-ள். சூரியன், சந்திரன், குரு இவர்கள் சத்துவகுணமுள்ளவர்கள். புதன், சுக்ரனிவர்கள் ராசதகுணமுள்ளவர்கள். செவ்வாய், சனி, தாமத குணமுடையவர்களாம். செனனகாலத்தில் வலிதுள்ள கிரகத்தின் சுபாவ குணம் உடையவனு யிருப்பானென்பதாம். யவனேஸ்வரர் சில உதாரணம் மாறுதலாகவும் சொல்லியிருக்கிறுர். சத்யாச்சாரியும் சொல்லியிருக்கிறுர் என்பதாம். 11

8-வது சுலோகம். சூர்யசொரூபம்.

பிங்களமென்னுந்தேனிகருருவம் பெறுவிழியவ்விதமாகும்
தங்கும்நாற்கோணம்புயவலியுடனே தலையதிலற்பமாங்கேசம்
அங்குமேபித்தமாதிகள்நோயு மடைந்திடுப ஙனிவனுகும்
செங்கதிர்சொருபமிவ்விதமென்றே செப்பினர்வராகமிகியே.

இ-ள். சூரியனுக்கு பிங்களமென்னும் தேன்போல வர்னமான கண்ணு ள்ளவன் நாற்கோணவடிவும் வலிவானபுயமும் சரீரமுள்ளவன் பித்தாதி க்க சுபாவமுள்ளவன் அற்பமான தலைமயிருள்ளவனென்று சூரியசொரூபம் சொன்னுர் வராகமிகிராச்சாரி யென்பதாம். 12

8-வது சுலோகம். சந்திரசொரூபம்.

கரசமதெனவும்வலிவதுவுடைய காளையுஞ்சிலேஷ்மவாதங்கள்
விரவுமிஸ்சிரமாஞ்சற்குணனுயும் விழியதுநோக்கமூசன்றும்
பரவுமிவ்வுலகிலுகியாகுவனும் பகர்வதுமதுரமாம்வாக்கு
திரமுடனுரைப்பதிங்களின்சொரூபம் செப்பினர்வராகமிகியே.

இ-ள். சந்திரன் சொரூபமாவது யானைபோல வலிதானதேகமும், அதிக வாதசிலேஷ்மம் மிஸ்ரமானதேகமும், சற்குணனுயும் சுபநோக்க முள்ள வன் யூகியாம். மதுரமான வாக்குள்ளவனுகவுமிருப்பான். சந்திரன் சொரூ பம் என்று சொன்னுர் வராகமிகிராச்சாரி யென்பதாம். 13

9-வது சுலோகம். செவ்வாய்சொரூபம்.

நித்தியமானவெவ்வனதேகம் நிலையுறுசஞ்சலசித்தம்
உத்ததன்னிடையுமெலிவதுவுளனு முலகதில்நற்கொடையாளன்
பித்தமதுடையனென்றுமேயுரைப்பார் பிருகுசாதகமெனுநூலில்
வித்தகச்செவ்வாய்சொருபமீதாக விளம்பினர்வராகமிகியரே.

இ-ள். செவ்வாய் சொரூபம் நித்ய எவ்வன சரீரமும் சஞ்சலமுள்ளவன் மெலிந்த இடுப்புள்ளவன். ஈகையுள்ளவனுகும், பித்தசுபாவமுள்ளவனென் றும், செவ்வாயின்சொரூபம் பிருகஜ்ஜாதகத்தில் வராகமிகிராச் சாரியா ரால் சொல்லப்பட்ட தென்பதாம். 14

9-வது சுலோகம். புதன் சொரூபம்.

மதுரநல்வாக்கும்மனிதர்களிடத்து வாஞ்சையுமிகுபரிகாசம்
நிதமுமேயுரைக்கவிச்சையுள்ளவனு நேர்பித்தவாதசேட்டுமங்க
ளதுகளுங்கூடியிருந்திடுந்தேக னவனியில்சவுமியன்தனது
துதிபெறுசொருபமிவைகளாமென்றே சொல்லினர்வராகமிகியரே.

இ-ள். மதுரமாயும், சாதுர்யமான வாக்கும், ஜனங்களினிடத்தில் விசுவாசமும், பித்தவாத சிலேஷ்மங்களைக் கூடியிருப்பவன். சற்குண வந்தனுயும் இருப்பன், இவைகள் புதன்சொரூபமென்று வராகமிகிராச்சாரியாரால் சொல்லப்பட்ட தென்பதாம். 15

10-வது சுலோகம். பிரகஸ்பதிசொரூபம்,

தூலமாந்தேகன்சற்குணனுயுஞ் சுந்தரபொன்னதுநிகராய்
பாலனின்விழியும்தலைமயிருடனும் சாற்றிடுந்தருமசிந்தனையும்
சீலமதில்லாசேஷ்டுமதோஷம் சிறந்திடுயூகவானுகும்
தாலமீதிந்தசொரூபம்பொன்னனுக்கே சாற்றினவர்வராகமிகியரே.

இ-ள். பெருத்தசரீரமும் சற்குணமும் அழகுடைய தங்கம்போல கண்கள் தலைமயிரும் அங்கமுமுடையவனுயும் தர்மசிந்தனையும் சிலேஷ்ம சுபாவமும் யூகமுமுடையவன், பிரகஸ்பதி சொரூபமென்று வராகமிகிராச்சாரியார் சொன்னரென்பதாம். 16

10-வது சுலோகம். சுக்ரசொரூபம்.

பெருசுகம்நிதமேயடைந்திடநினைவும் பிலனுடுவழகுளதேகம்
இருவிழிநோக்கம்நன்மையுமாகு மிருளெனவேமயிர்கருத்து
மிருதுவாய்சுருண்டுவழகுடனிருக்கும் பேசிடும்வாதசிலேஷ்மத்தா
உரியதுசொரூபம்மிதுவெனவறிய வுரைத்தவராகமிகியரே. [ன்

இ-ள். நித்தியசுகமுடையவன் அழகும் வலிதுள்ளதேகம் நல்ல பார்வையுங்கருத்து மெல்லினமாய்சுருண்ட தலைமயிரும் வாதசிலேஷ்ம சுபாவமுமுடையவன் சுக்கிர சொரூபமென்று வராகிமிகிராச்சாரியால் சொல்லப்பட்டதென்பதாம். 17

11-வது சுலோகம். சனிசொரூபம்.

பருத்ததன்பல்லும்முள்ளதுபோன்றும்பழிப்புறுகேசமதுடையான்
கடுருத்திம்கரியைப்போலதுவாய்ந்த கனமுறுதேகமுமுயர்வும்
விருத்திதன்கருமந்தன்னிலாலஸ்யம் மெய்யதுவாதப்பிரகிருதி
திருத்தமாஞ்சனியன்சொரூபமதெனவே செப்பினர்வராகமிகியரே.

இ-ள். பெருத்தபல்லும் முள்ளுகளைப்போல கடினமாயு மழகில்லாததுமான தலைமயிரும் யானைபோன்று வுயர்ந்ததேகமும் செய்காரியங்களில் சோம்பலுடையவனும் வாதப்பிரகிருதியுடையவன் சனிசொரூபமென்று வராகமிகிராச்சாரியரால் சொல்லப்பட்டது என்பதாம். 18

11-வது சுலோகம். கிரகங்களின் தாதுசாரமாவன.

கதிரவனுடலில்அஸ்திக்குநாதன் காரியுநரம்பெனலாகும்
மதியவனிரத்தம்மழையவன்ரேதஸ் மன்னவன்மச்சையுமாகும்
மதிமகன்சருமம்சேயவனெலும்புள்மறைந்திடுதாதுவேயாகும்[யே
இதுகளால்நோயின்பிரசனைதனக்கு வெண்ணியேயுரைத்திடல் விதி

இ-ள். சூரியனுக் கெலும்பு, சந்திரனுக்கு இரத்தமும், செவ்வாய்க்கு எலும்புக் குள்ளிருக்கும் தாது, புதனுக்கு தோல், குருவுக்கு மச்சை சுக்ரனுக்கு இந்திரியம், சனிக்கு நரம்பு, இந்த விதமாக கிரகதாது சாரமறியவும் என்பதாம் 19

இதற்கு பிரயோஜனம்.

சென்மகாலத்தில் எந்த கிரகம் பலவந்தனா யிருப்பனோ அந்த கிரக சொரூபமும் அந்த கிரகதாது சாரமும் சாதகனுக்குண்டாகுமாம். நட்ட பிரசனை சோரர்பலவந்த கிரகசொரூபமுள்ளவனாயிருப்பான். வியாதி பிரசனைக்கு லக்னாதி நவாம்சாதிகளில் பலவந்தனான பேருக்குள்ள வாதபித்தாதி தோஷவியாதி பீடிதமென் றறியவென்பதாம். 19

12-வது சுலோகம். கிரகங்களுக்கு ஸ்தானம்.

சூர்யனும்தேவபூசைசெய்தலமாம் தூய்மதிநீரருகாகும்
ஆரனும்சமையல்செய்திடுதலமா மறிஞற்குசித்திரவீடாம்
தேருபொன்பொக்ஷசாலையதாகும் சிதனுமேகிரீடையினகமாம்
காரியும்பூமிக்குள்ளுறைதலமெனக் கணித்தனர்வராகமிகியரே.

இ-ள். சூரியனுக்கு தேவஸ்தானமும் பூசைசெய்யுமிடமும், சந்திரனுக்கு சலம் சமீபமும், செவ்வாய்க்கு சமையல்செய்திடும் பாகசாலையாம், சுக்ரனுக்கு ஸ்திரீ புருஷாள்கூடி சயனிக்கும் பள்ளியறையாம். புதனுக்கு சித்திரங்களா லலங்கரிக்கப்பட்ட விடமாம் குருவுக்கு தங்கநாணயங்களிருக்கப்பட்ட பொக்கிஷசாலையாம். சனிக்கு பூமிக்குள மறைவாயிருக்கப்பட்ட இடமாம். இவ்விதம் வராகமிகிராசாரி யுரைத்தாரென்பதாம். 20

இதற்கு பிரயோஜனம் வசனம்.

சென்மகாலத்தில் பலவந்தமுள்ளகிரகத்துக்கு சொல்லப்பட்ட ஸ்தானத்தில் பிரசவமென்றும் நஷ்டாதி பிரஸ்னைகளுக்கு சோரனாவது சோரன் அபகரித்த திரவியமாவது பலவந்த கிரகஸ்தானத்தி லிருக்குமென் றறியவும். 20

12-வது சுலோகம். கிரகவஸ்திரமாவன.

ஆதவன்தனக்குவுரத்தவஸ்திரமா மாரலேதீப்பட்டதெனலாம்
சீதளமதிக்குபுதியவஸ்திரமாஞ் செம்பொனுநடுவயதுளது
சீதனுங்கெட்டிமானூலொதுக்கம் சீரிலாதீரமும்வலேயே
பாதியும்பலவாய்க்கிழிந்திடுமாடை பங்கெனுஞ்சனியவன்றனக்கே.

இ-ள். சூரியனுக்கு வலிதாயும் உரத்தவஸ்திரமும், சந்திரனுக்கு புதிய வஸ்திரமும், செவ்வாய்க்கு தீப்பட்டவஸ்திரமும் புதனுக்குநூலொதுங்கிய வஸ்திரமென்றும் வலேபோலவுள்ளதென்றும், நீரில்நனேந்ததென்றும் சொல்லப்படும், குருவுக்கு புதியதுமல்ல பழயதுமல்ல நடுநிலேமையிலுள்ள வஸ்திரமாம், சுக்ரனுக்கு திடமுள்ளவஸ்திரமாம், சனிக்கு பழயவஸ்திரங் கிழிந்ததாகுமாம், இதற்கு பிரயோஜனம் பலவந்த கிரகத்தினல் பிரசூதிவஸ்திரமும் நட்டசிந்தனேக்கு சோரர்கள் வஸ்திரக்குறிப்புமறிக வென்பதாம் 21

12-வது சுலோகம். கிரகங்களின் உலகங்களாவன.

செம்புசூரியனுக்காகும் திங்களே மணியுமாகும்
செம்பொனுஞ்செவ்வாய்க்காகும் தராவுவெண்கலமாலாகும்
செம்பொன்னுதனக்கேவெள்ளி சிதனுக்குமுத்துமாகும்
கொம்பிக்குவிரும்புமீயம் குருவாக்ஷிகனகமாமே

இ-ள். சூரியனுக்கு செம்பும், சந்திரக்கு மணிகளென்னப்பட்ட இரத்தினங்களும், செவ்வாய்க்கு பொன்னும், புதனுக்கு தராவெண்கலமாம், குருவுக்கு வெள்ளியும், சுக்ரனுக்கு முத்தும், சனிக்கு இரும்பு ஈயமும் ஆகும், குரு தனுசு மீனத்தில் சுபக்ஷேத்திரத்திலிருக்க தங்கம் என்று சொல்லப்படும், இதற்கு உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டது, இந்தவிதமாகவே பாதராயணரும் சொல்லி இருக்கிறரென்பதாம். 22

இதற்கு பிரயோஜனம் வசனம்.

பலவந்தகிரகவசத்தினல் பிரசவித்திருக்கப்பட்ட வீட்டின் தீபம் சனங்களின் தொகையும் நஷ்டபிரஸ்னேக்குசோர ரபகரித்த திரவியங்களேயும் சென்மகாலத்தில் எந்தகிரகம் பலவந்தனுயிருக்குமோ அந்தகிரகதிசையில் திரவியதாபமும் ஈனபலக்கிரகதிசையில்திரவியநஷ்டமும் இந்தவிதங்களாகுமென்பதாம். 22

12-வது சுலோகம். கிரகங்களுக்கு ருதுவு.

உதயத்திலிருந்தகோளவர்தமக்கு வுரையதுருதுவேயர்கும்
உதயத்தில்கோளுமில்லேயேபாயி லுதயதிரேகாணதிபதியாம்
உதயத்தில்பலகோளிருந்திடுங் காலுயர்வலிவுற்றவர்தமது
உதயத்தின்ருதுவும்மாதமுமறிய வுரைத்தனர்வராகமீகியரே.

இ-ள். உதய இராசியில் கோள்களிருந்தால் அவர்களுக்கு உள்ள ருதுவாகும், உதய இராசியில் கோள்களிலாதபோது உதயதிரேகாணாதிபதியின் ருதுவாகும், உதயத்தில் பலகிரகமிருந்தால் வலியுள்ள கிரகத்திற்கு உள்ள ருதுவென்றறியவென்பதாம். 23

12-வது சுலோகம். கிரகங்களுக்கு ருதுவு.

நிலவதுமுதயராசியிலிருக்க நிகழ்த்திடுவருஷருதுவாம்
நிலமகன்கிரீஷ்மம்பொன்னனேமந்தம் நீலனுஞ்சசிருதுவாகும்
புலவனார்தமக்குசரருதுவாகும்புகரதன்தனக்குமேவசந்தம்
குலவுமிவ்வகையாய்நஷ்ட சாதகத்தின்குறியதுவுணர்ந்திடலாமே.

இ-ள். உதய இராசியில் சந்திரனிருக்க வருஷருதுவாகும்,செவ்வாய்க்கு கிரீஷ்மருதுவாகும், புதனுக்கு சரருதுவாகும், குருவுக்குஎமந்தருதுவாகும் சுக்கிரனுக்கு வசந்தருதுவாகும், சனிக்கு சசிருதுவாகும், இதற்குப்பிரயோஜனம் நஷ்டசாதகத்தின் ருது நிச்சயிக்கவும் பிரஸ்னேயில் பலாபல ஜெய அபஜெயத்தின் பரிக்ஞானம் என்பதாம். 24

12-வது சுலோகம். கிரகங்களுக்குசாகை.

நாலுவேதங்கடன்னை நவிலுவோங்கிரகத்திற்கு
மாலுமேய்தர்வணந்தான் மன்னவனிருக்குவேதம்
ஞாலமைந்தருக்குசாமம் நற்புகரெசுர்வேதந்தான்
சீலமால்வலிதறிந்து செப்பினார்வராகமிகி.

இ-ள். கிரகங்களில் குருவுக்கு இருக்குவேதமும், சுக்ரனுக்கு எசுர்வேதமும், செவ்வாய்க்கு சாமவேதமும், புதனுக்கு அதர்வணவேதமுமாம், இதற்கு லகுசாதகம் உதாரணம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 25

இதற்கு பிரயோஜனம் வசனம்.

பிராமணர்செனனகாலத்தில் எந்த கிரகம் பலவந்தமாயிருக்குமோ அந்த கிரகத்துக்குள்ளே வேதமுணர்ந்து சீலனுயிருப்பான், கிரகம் அனிஷ்டஸ்தானமடைந்திருக்கில் தக்க கிரகோத்தசாகாமந்திரத்தினால் தத்கிரகசாந்தி செய்வதற்காக இவ்வளவு சொல்லப்பட்டதென்பதாம். 25

12-வது சுலோகம். கிரகங்களின்பார்வை.

ஒன்பதுமைந்தநாத னுற்றவர்பார்வைகாலாம்
இன்புறுநாலுமெட்டோர்க் கேற்றதுநோக்குமுக்கால்
சென்மமுமேழில்நின்றோர் திரட்டிபூரணமேயாகும்
ஒன்னுமீரைந்துமூன்றுற் குள்ளதுபார்வைகாலே.



இ-ள். ஒன்பதாமிடம் ஐந்தாமிடத்திலிருந்த கோட்களுக்கும் அந்தத் தானதிபதிக்கும் பார்வை ½, நாலாமிடம் எட்டாமிடம் இருந்த கிரகத்திற்கும் அந்த ஸ்தானதிபதிக்கும் பார்வை-¾ மூன்றாமிடம் பத்தாமிடம் மூன்றாமிடத்திலுள்ள கிரகத்துக்கும் அந்த தானதிபதிக்கும் பார்வை-¼, எழாமிடத்திலிருந்தவரும் அந் தானதிபதிக்கும் பார்வை பூரணமாகும். இதற்கு பிரயோசனம் எவ்வளவு பார்வையுடையவர்களோ அவ்வளவு பலனைத்தருவார்க ளென்பதாம், உதாரணம் லகுசாதகத்திலும் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம் சாராவளியிலும் புவனேஸ்வரரும் சொல்லப்பட்டதுமிதுவே.

13-வது சுலோகம் கிரகங்களின் தானவலிது.

மதிரவிபுகரோன்மாலும் மானிரன்தலத்திற்சிரேஷ்டர்
உதிரனுமெட்டுநாலி லூற்றிடவலிதுள்ளோனும்
முதுமகன்மூன்றுபத்தில் முனியவனேந்தொன்பானிப்
பதியதிலிருப்பாராகில் பலனதுமுழுதுமீவார்.

இ-ள். சூரியன் சந்திரன் புதன் சுக்கிரன் இவர் எழாமிடமிருந்தால் சம்பூர்ணதிருஷ்டியாய் பார்ப்பார்கள். குஜன் நாலு எட்டிலிருக்கும் சனி மூன்றாமிடம் பத்தாமிடத்திலிருக்கினுங் குரு ஐந்தாமிடம் ஒன்பதாமிடமிருக்கிலும் பூரணதிருஷ்டியுள்ளவர்கள் ஆனதால் பலனும் அதுபோலாகுமென்று முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு உதாரணம் சாராவளியிலும் மாதவாசாரியும் சொல்லியிருக்கிறார். மறுபடியும் கார்க்கியும்சொல்லி இருக்கிறார். 27

13-வது சுலோகம். கிரகதிஷ்டிவலிது.

இரவியும்மதியும்மாலவன்புகரோ னேழினில்பூரணதிஷ்டி
திருமுளர் மற்றோர் தங்களேயிருக்க திஷ்டிபூரணமதாகும்
பிருகுடன்மாலோன்திங்களுங்கதிரும் பிரபலபலனதுதருவார்
கரியவன்குருசேய்நோக்கதின்விதமே காலத்தில்பலன்தருபவராம்.

இ-ள். சகல கிரகங்களுக்கும் எழாமிடப்பார்வை முழுப்பார்வையாகும் அதில் சூரியன் சந்திரன் புதன் சுக்கிரன் இந்த நால்வரும் எழாமிடப்பார்வை முழுப்பார்வையில் மற்ற கிரகத்தைப்பார்க்கிலும் அதிக பலவான்களாம். சனி குரு செவ்வாய் இவர்கள் எழாமிடப் பார்வையில் விசேஷமுள்ளவர்களல்லவென் றறியவேண்டியதென்பதாம். 28

13-வது சுலோகம் கிரகதிஷ்டிவலிது.

கரியவன்தானுங்காற்பலனீவார் கனகனும்பலனதுமறையாம்
தரணியின்மகனின்மூன்றில்காற்பலனை தானதுவீய்ப்பவராகும்
இரவியும்மதியும்மாலொடுபுகரோ னிவர்களேபூரணபலனும்
விரவியதானப்பலனதுகொண்டே விர்த்தியுந்திருஷ்டியுமுணரே

இ-ள். சனி காற்பலனென்னப்பட்டதில் அதிகபலவான். குரு அரைப் பலனில் அதிகபலவான். செவ்வாய் முக்காற்பலனில் அதிக பலவான் சூரியன் சந்திரன் புதன் சுக்கிரன் இவர்கள் பூரண திருஷ்டியுள்ளவர்களாம். இது கிரகங்களுக்கு சாதாரணமான திருஷ்டிப்பலன். அந்த ஸ்தானாதிபலத்தைக்கொண்டே விசேஷ திருஷ்டிப்பலன்கள் யூகிக்கவேண்டியதென்று சொல்வார்களென்பதாம். 29

14-வது சுலோகம் கிரகங்களுக்கு வருஷாதிகாலகணிதம்.

இரவிக்குமாதமாறு இந்துவுமுகூர்த்தமொன்று
தரைமகன்தினமுமொன்று சவுமியற்கிரண்டேமாதம்
சுரகுருமாதமொன்று சுக்கிரன்நாள்மூவைந்து
கரியவன்தனக்குவாண்டு காலங்களிதுவாமென்னே.

இ-ள். சூரியனுக்கு மாதம் ஆறுஆகும், சந்திரனுக்கு மூன்றே முக்கால் நாழிகை செவ்வாய்க்கு ஒருநாள் புதனுக்கு மாதமிரண்டு குருவுக்கு ஒரு மாதம், சுக்கிரனுக்கு பதினைந்துநாள், சனிக்கு ஒருவருஷமாம், இந்தவிதமாகவே காலமறியவேண்டியதாம். இதற்கு பிரயோசனம் பிரஸ்ன லக்கினத்தில் எந்த கிரகசம்பந்த நவாமிசம் உதயமாகுமோ அந்த கிரகத்துக்கு எவ்வளவு காலம் சொல்லப்பட்டதோ அந்த காலத்துக்குமேல் சுபாசுபங்கள் சொல்லவேண்டியதென்றறியவும். சிலர் லக்கினத்தில் எவ்வளவு மாத்ர சங்கையுடைய நவாமிசம் உதிக்குமோ அவ்வளவு சங்கையுள்ள அயனாதிகாலமும் அம்சபதியைக்கொண்டும் சொல்லவேண்டியதென்றும் சொல்வார்கள் இதற்கு உதாரணம் மணித்தர் சொல்லியிருக்கிறார். 30

14-வது சுலோகம் கிரகங்களுக்கு ரசங்களாவன.

ஆதித்தன்கார்ப்புமாகு மம்புலிலவணமாகும்
நீதிசேய்கசப்பதாகும் நிருபனுமதுரமாகும்
மேதையேபலரசங்கள் மின்புகர்புளிபபதாகும்
நீதறுசனிதுவர்ப்பாய் செப்பினேங்கோள்தனக்கே.

இ-ள். சூரியனுக்கு காரமாகிய உறப்பாம், சந்திரக்கு உப்பாம், செவ்வாய்க்கு கசப்பு, புதனுக்கு சட்ரசங்கள் கூடியது, குருவுக்கு இனிப்பு, சுக்ரனுக்கு புளிப்பு, சனிக்கு-துவர்ப்பு இவைகளாம். இதற்கு பிரயோசனம் போஜனவிஷய பிரஸ்னைக்கு பிரஸ்னலக்னமடைந்த கிரகத்திற்காவது தன்னவாம்சாதிபதிக்காவது சொல்லப்பட்ட ரசங்களோடு கூடினபோஜனமென்றறியவேண்டியதென்பதாம். 31

15-வது சுலோகம் கிரகசத்ருமித்ருக்கள்.

கதிரவர்குறவுபொன்னனும்பகைவர் கவிசனிசேயுமால்திங்கள்
மதியவற்குறவுபொன்னன்மால்பகைவர் மங்கலனபுகர்சனியிரவி
உதிரனுக்குறவுமால்புகர்பகைவ ருதயனுமதிகுருசனியே
மதிமகற்குறவுமதிபொன்சேயிவர்கள் மாற்றலரிரவிபதாமே

இ-ள். சூரியனுக்கு குருநட்பு சந்திரன் செவ்வாய் புதன் சுக்கிரன் சனி இந்த ஐவரும் பகை, சந்திரனுக்கு குரு, புதன் நட்பு, செவ்வாய் சூரியன் சுக்ரன், சனி இந்த நால்வரும் பகை, செவ்வாய்க்கு புதன் சுக்ரன் நட்பு, சூரியன் சந்திரன் குரு சனி இந்த நால்வரும் பகை, புதனுக்கு சந்திரன் குரு செவ்வாய் சுக்கிரன் சனி நட்பாகும் சூரியனாகிய ஒரு கிரகம் பகையென்பதாம் நட்பென்பது மித்துரு உறவு என்னப்படும். 32

15-வது சுலோகம் கிரகமித்ரு

பொன்னனுர்க்குறவுறவு மதிமாலோன்புகர்சனி பகைஞனுஞ்சேயே
துன்னுசுக்ரர்க்குமதிரவிசத்ரு தூதன்சேய்சனியுறவே
மன்னிடுமிரவிசந்திரஞ்சேயு மாற்றலரிவர்களாமறியே
சன்னவற்குறவுமால்குருபுகரோன்சொல்லிடும்பகைவராரெனிலோ

இ-ள். குருவுக்கு சூரியன் சந்திரன் புதன் சுக்கிரன் சனி நட்பாம் செவ்வாய் ஒருவனும் பகை சுக்ரனுக்கு! சூரியன் சந்திரன் பகையாம் புதன் செவ்வாய் குரு சனி இந்நால்வரும் நட்பாம் சனிக்கு புதன் குரு சுக்ரன் இவர்கள் நட்பு சூரியன் சந்திரன் செவ்வாய் இந்த மூவரும் பகைவராம் என்பதாம் இந்தப்பிரகாரம் இது சிலர் மதம் ஆனுல் சொல்லப்பட்ட மித்ரு சத்ருத்தவம் யவனேஸ்வராதிகளுக்கும் சிலருக்கும் சம்மதமே தவிர வெகு கிரந்தகர்த்தாக்களுடைய சம்மதமல்லவென்றும் யவனேஸ்வரர் உதாரணம் சொல்லப்பட்டது மித்துரு சத்துருவே தவிர சமத்வம்சொல்லவில்லை. 33

15-வது சுலோகம் வசனம்.

சத்யாசாரி யோக்தமாகிய ஓராசாஸ்திரத்தில் கிரகங்களுக்கு தன் சம்பந்தமான மூலத்ரிகோண ராசிமுதற்கொண்டு துதியதுவாதசபஞ்சம நவமாதிபதிகளும் ஸ்வகீயோச்ச ராசியாதிபதியும் ஆயுள் ஸ்தானுதிபதியாகிய அஷ்டமாதிபதியும் சுகஸ்தானுதிபதியென்னும் சதுர்த்தாதிபதியும் இப்படி சொல்லப்பட்ட ஸ்தானுதிபதிகள் மித்திரராம்.

இப்படி சொல்லப்பட்ட மித்ர லக்ஷணவிதிக்கு விரோத மாகும்படியான உத்தவியதிரிந்த கிரகங்கள் மித்திரரல்ல இது இந்தப்பிரகாரமாய் சொல்லப்பட்டது ஆனுல் எந்த ஸ்தானுதிபதிகளுக்கு மித்ருத்வம் சொல்

லப்பட்டதோ அந்த ஸ்தானாதிபதிகள் மித்துருக்கு அல்லவென்று தாற்பரியம் இந்த விதமாகவே சத்ய சாரியும் சொல்லியிருக்கிறார்.

சதுர்த்த ஸ்தானம் இவ்விடத்தில் இரண்டு இராசியுடையவர்கள் மித்திரராம் ஒரு ராசியுடையவர் சமனும் அனுக்த இராசியாதிபதிகள் சத்துருவென்று தெரியவேண்டியது இந்தப்பிரகாரமே பவக்ஷ்யமான கிரந்தத்திலும் விளக்கமாகவுள்ளதாம் ஏகராசியாதிபதி சமனென்று சொல்வதால் சூரிய சந்திரர் நீங்கலான விஷயம் சூரிய சந்திரருக்கு ராசி இரண்டிலாதபடியினாலும் அவர் ஒரு இராசியாதிபரானதாலும் சக்ஞை இல்லை யென்றறியவும்.

இரண்டு இராசியுடைய அதிபதி உச்ச இராசியாதி பத்யத்தில் மூன்று இராசியாதிபத்யம் அடைந்தாலும் அவர் இரண்டு இராசியாதிபதிபோல மித்ரசக்ஞையடையும் இப்படி சொல்லப்பட்ட அர்த்தம் பாலபோதார்த்தத்தில் விளக்கமாக சொல்லப்பட்டிருக்கிறதாம் அதெப்படி யென்றால் சூரியனுக்கு சிம்மம் மூலத்திரிகோணம் அதற்கு பனிரண்டா மிராசி கடகம் அதற்கதிபதி சந்திரன் அந்த சந்திரனும் ஏகராசியாதிபதியானதாலும் இராசி அந்த ராசி பத்திய மில்லாதவனானபடியினால் சூரியனுக்கு மித்திருவாம். சிம்மத்திற்கு நாலாமிராசி விர்ச்சிகம் ஒன்பதா மிராசி மேஷம் சூரியனுக்கு உச்சஸ்தானமான மேஷம் குஜன் இந்த உச்தஸ்தான மூன்றிற்கும் அதிபதியானாலும் மேஷ இராசி ஒன்றே தவிர இரண்டு இராசியாதி பதியான சூரியனுக்கு மித்திரனுவன்.

சிம்மத்திற்கு பஞ்சம் அட்டமமென்னப்பட்ட தனுர் மீனங்கள் அதிர்க்கதிபதி குரு, அந்த குரு உக்த இராசி த்வயாதியானதாலும் சூரியனுக்கு மித்ருவாகும்.

சிம்மத்திற்கு துதிய ஏகாதசங்களானது கன்யாமிதுனமாம் அதர்க்கதிபதி புதனும் அதில் துதியம் உக்தஸ்தானமாம் ஏகாதசம் உக்தஸ்தானமல்ல வானதால் உத்கைக இராசியாதிபதியான புதன் சூரியனுக்குச் சமன்.

சிம்மத்திற்கு சஷ்டமம் சப்தமங்கள் மகர கும்பம் அது உக்தஸ்தானமானதாலும் அந்த தானாதிபதியான சனி சூரியனுக்கு சத்துருவாம்.

சிம்மத்திற்கு தசமதிரிதியங்கள் ரிஷபதுலா மென்னப்பட்ட ஸ்தானமானதால் அதற்கதிபதி சுக்ரனும், அந்த சுக்ரன் சூரியனுக்கு சத்ரு இப்படி சூரியனுக்கு மித்ரு சத்ரு சமத்வம் விவரமாக சொல்லப்பட்டது.

15-வது சுலோகம் கிரக சத்ருமித்ருசமன்.

சந்திரனுக்கு ரிஷபம் திரிகோணம் அதர்க்கு நாலாமிராசி சிம்மம் அந்த ஸ்தானாதிபதி சூரியன், ஏக இராசியாதிபதியானதாலும் இராசி அந்தராதி பத்யம் இல்லாததினால் மித்துருவாம்.

ரிஷபத்திற்கு துதியம் மிதுனம் பஞ்சமம் கன்னி இந்த உம்தஸ்தானம் துதியத்திற்கும் அதிபதியாவதாலும் புதன் சந்திரனுக்கு மித்திரனும்.

ரிஷபத்திற்கு சப்தமம் விருச்சிகம் துவாதசம்மேஷம் இதர்க்கு அதிபதி செவ்வாய் அதில் சப்தமம் அனுக்தஸ்தானம் துவாதசம்| உக்தஸ்தானமானதாலும் உத்கைக இராசியாதிபதியான குஜன் சந்திரனுக்குச் சமன்.

ரிஷபத்திற்கு அஷ்டம் ஏகாதசம் தனுர்மீனமாம் அந்த தானுதிபதி குரு அதில் துஷ்டமமாத்ரமே உக்தஸ்தானமானதால் உத்கைக இராசியாதிபதி குரு சந்திரனுக்குச் சமன்.

சந்திரனுக்கு ரிஷபம் உச்சஸ்தானம் ரிஷபத்திற்கு ஆறுமிராசி துலாம் இந்த ஸ்தானத்திர்க்கதிபதி சுக்ரன் அதில் ஆறுமிராசி அனுக்தஸ்தானம் உச்சம் உக்தஸ்தானமானதால் படிதைக இராசியாதிபதியான சுக்ரன் சந்திரனுக்குச் சமன்.

ரிஷபத்திற்கு நவம் தசமம் மகர கும்பங்கள் அந்த தானுதிபதி சனி சுக்ரன் அதில் தசமம் அனுக்தஸ்தானமானதாலும் படிதைக இராசியாதிபதியாம் சனி சந்திரனுக்குச் சமன்.

இந்தவிதமாகவே மற்ற கிரகங்களுக்கும் மித்ரு சத்ரு சமத்வங்கள் யூகிக்கவும் என்பதாம். 34

16-வது சுலோகம். வராகமிகிராசாரியார் பூர்வசுலோககோத்த சத்பாசாரிமதமே தனக்கு சம்மதமானதால் தன்மதானுசாரமாக ஏற்பட்ட மித்துரு சத்துருத்வம் விவரிக்கப்படும்.

கதிர்சமன்புந்திசத்துருகவிசுன் கருதுமித்திரன்கலைபொன்சேய்
மதிசமன்சேய்பொன்சத்துருவற்றேன் மால்கவிரவிசனிமித்திரன்
உதிரனின்சமனும்புகாசனிபகைமா லுறுநட்புபொன்மதிரவியே
மதியகன்சமனும்பொன்சுன்சேய்மித்ரன் மறைரவிசத்துருமதியே.

இ-ள். சூரியனுக்கு சமம் புதன் சத்ரு சுக்ரன் சனியாம் குரு சந்திரன் செவ்வாய் இந்த மூவரும் மித்துருவாம் சந்திரனுக்கு சமம் செவ்வாய் குருவாம் புதன் சுக்ரன் சனி சூரியன் இந்த நால்வரும் மித்ரராகும் செவ்வாய்க்கு சமன் சுக்ரன் சனியாம் சத்துரு புதனும் குரு சந்திரன் சூரியன் இந்த மூவரும் மித்திரராகும் புதனுக்கு சமன் குரு சனிசெவ்வாயாம் சுக்ரன் சூரியன மித்ரன் சந்திரன் சத்துருவாம் என்பதாம். 35

17-வது சுலோகம் கிரகசத்ரு மித்ருசமம்.

பொன்சமன்சனியன்சத்துருபுகர்மால் பூமனும்ரவிமதியுறவு
மின்புகர்சமனும்சேயவன்குருவும் மித்திரன்மால்சனிசத்ரு

மன்னிரெவிமால்சுன்சமன்பொன்னன் மதிரவிசேயவன்சத்ரு
உன்னிதபுகர்மால்மித்துருவென்றே; வுரைத்தனர்வராகமிகியரே.

இ-ள். குருவுக்கு சமம் சனியாம் புதன்சுக்கிரன் சத்துருவாம் செவ்வாய் சூரியன் சந்திரன் மித்திரனும் சுக்ரனுக்கு சமம் செவ்வாய்க்குருவாம் புதன் சனி மித்துருவாம் சூரியன் புதன் சத்துருவாம் சனிக்கு சமம் குருவாம் சூரியன் சந்திரன் செவ்வாய் சத்துருவாம் புதன் சுக்ரன் மித்துருவாம் எந்த கிரகங்கள் நம்மால் சொல்லப்பட்டது என்று இத்தியாதி கிரந்தங்களால் ஸ்வதிரிகோண இராசியாதிகளால் சம சத்ரு மித்துருக்களை சொல்லப்பட்டதோ அந்தந்த கிரகத்தில் விவரிக்கப்படு மென்பதாம். 36

18-வது சுலோகம் இந்தப்பிரகாரமாய் நைசர்க்கிக மித்திர சத்துரு சமபாவும் சொல்லி இப்போதுதான் தக்காலமித்ரு சத்துரு சம்பாவம் சொல்லப்படும்.

கிரகமதிக்குமிராசிகடனுக்குக் கேடிலாதிரண்டுநால்மூன்றும்
விரயமுலாபங்கருமத்திலிருக்க விளங்குதற்காலமித்திரனும்
மருவுகோள்தனக்குவுச்சவீடதனில் வந்துறைகோளதுமித்ரன்
தரணியிற்சென்மம்யாத்ரைவிவாகம் தனக்குமேமித்திரராவார்.

இ-ள். எந்த கிரகமாவது தானிருந்த இராசிக்கு 2-3 4-12-11-10-இந்த ஆறு இடத்திலு மிருந்த கிரகம் தற்காலம் ஜென்மம் விவாகம் யாத்திரை காலங்களுக்கு மித்திரராவார் எவனேஸ்வரர் முதலாக சிலர் எந்த கிரகத்தினுடைய வுச்சஸ்தானத்தில் எந்த கிரகமிருந்ததோ அந்த இரண்டு கிரகமும் அன்னியோன்ய மித்ரராவார்களென்பதாம் உதாரணம் லகுசாதகமும் சொல்லப்பட்டிருக்கிறது. 37

அப்படி லகுசாதகத்தில் சொல்லப்பட்டிருப்பதினாலும் உக்த வியதிரிக்தகிரகங்கள் ஆனால் ஏக இராசியில் பஞ்சம சஷ்டம சப்தம அஷ்டம நவம ஸ்தானங்களிலுள்ள கிரகங்கள் தற்காலசத்துருவாவார்கள் பூர்வோக்த பிரகாரமாய் இரண்டு இராசிகளுடைய கிரகமும், ஒரு இராசியையுடைய கிரகமும் அனுகத இராசியாதிபர்களுக்குமுன் (16) வது சுலோக த்வியோத்த பிரகாரமாய் மித்ர சமசத்ருக்களை தெரிந்துகொண்டு மித்ரு சத்ருக்களை தெரிந்துகொண்டு மறுபடியும் அந்த கிரணங்களாலே அதிமித்ர மித்ராதி சக்ஞங்களை கூடினவர்களாகும் அதெப்படி யென்றால் நசர்க்கிக மித்ரன் தற்கால மித்ரனானால் அதிமித்ரனும் நைசர்க்கிக சத்ரு தற்கால சத்துருவானால் அதிசத்துருவாம் ஒருவிதத்தில் சத்ருவும் மற்றொரு விதத்தில் மித்ரனானால் சமன் ஒருவிதம் சத்ருவும் மற்றொருவிதம் சமனுமிருந்தால் சத்ருவேயாகும் இப்படி கிரந்தாந்தரவசனம் என்பதாம். 37

19-வது சுலோகம் கிரகங்களுக்கு ஸ்தானாதிசேஷ்டாகாலனைசர்க்கிகபலன்கள் ஐந்துபலமாம் அதில் ஸ்தானாதிக்பலம் சொல்லுகிறார்.

எந்தகோள் தங்களுக்கு மேற்படும்வலிதுவைந்தில்
சொந்தமூலத்ரிகோணம் சொக்ஷத்ரம்சுயநவாம்சை
அந்தமாய்நட்புமுச்ச மடைந்திடவலிதுள்ளோராம்
இந்தவாற்றானங்கொண்டு இவர்களின்வலிவைக்காணே.

இ-ள். கிரகங்கள் உச்சம் பெற்றிருக்கில் வலியராம் நட்பு பெற்றிருக்கிலும் வலியராம் மூலத்ரிகோணம் பெற்றிருக்கிலும் வலியராம் சொக்ஷேத்ரம் பெற்றிருக்கும் வலியராம் சுயநவாமிசை யடைந்திருக்கிலும் வலியராம் இந்த விதமாக தானாதிபலன் அறியவேண்டிய தென்பதாம். 38

19-வது சுலோகம் கிரகம் ஆக்ஷிமூலத்ரிகோணம்.

கதிரவன் சிம்மக்கோணமுமாக்ஷி கலைவிடையுச்சமுங்கோணம்
உதிரனும்மறியில்கோணமுமாக்ஷி ஒங்குசுன்குடமாக்ஷிகோணம்
துதிகுருதனுசில்கோணமுமாக்ஷி சுக்கிரன் துலைகோணமாக்ஷி
மதிமகன்பெண்ணில்கோணமுமுச்சம் மற்றும்சொக்ஷேத்திரமாமே

இ-ள். சூரியனுக்கு சிம்மராசியில் மூலத்ரிகோணம் சொக்ஷேத்திரமுமாம் சந்திரனுக்கு ரிஷபராசியில் உச்சமும் மூலத்ரிகோணமுமாம் செவ்வாய்க்கு மேஷத்தில் மூலத்ரிகோணமும் சொக்ஷேத்திரமாம் புதனுக்கு கன்னியாராசியில் மூலத்ரிகோணமும் உச்சமும்சொக்ஷேத்திரமுமாம் குருவுக்கு தனுசுராசியில் மூலத்ரிகோணம் சொக்ஷேத்திரமுமாம் சுக்கிரனுக்கு துலாராசியில் மூலத்திரிகோணமும் சொக்ஷேத்திரமுமாம் சனிக்கு கும்பராசியில் மூலத்ரிகோணமும் சொக்ஷேத்திரமுமாம் இதின் அமிச வியாபகம் இந்தவிடத்தில் சொல்லவில்லையானதால் முந்திய இராசிப்படலத்தில் 14-வது சுலோகவுரையில் உதாரணத்துடன் சொல்லப்பட்டிருக்கிறதென்று தெரிந்துக்கொள்ளக்கடவாய். 39

19-வது சுலோகம் கிரகதிக்கின்வலியும் ஸ்தானவலிவும்.

புந்திபொன்கிழக்காய்ச்சென்னம் புக்கிடில்வலிதுளோராம்
செந்தியெல்தெற்கீரைந்தாய்ச் சென்றிடவதுமாகும்
மந்தனும்மேற்குவேழாய் வந்திடிற்பலவானாகும்
இந்துவும்புகர்வடக்கா யிருக்கநால்வலிதாங்காணே.

இ-ள். கிழக்குதிசையில் புதன் குரு லக்கினமாயதிலிருக்க பலவர்தன் தென்திசையில் குஜனோ சூரியன் பத்தாமிடமா யதிலிருக்க பலவர்தன்

மேற்றிசையில் சனிசப்தமஸ்தானமாயதிலிருக்க பலவந்தன் வடதிசையில் சந்திரன் சுக்ரன்நாலாமிடமாயதிலிருக்க பலவந்தன் இந்தவிதமாக ஸ்தான திசை யறியவேண்டிய தென்பதாம். 40

19-வது சுலோகம். கிரகதிக்கின் வலிது

வலிதுளவிடத்திலிருக்கில் வலிவுளாரதற்கேழ்நிற்கில்
வலிவதுஅற்பமத்தி வந்திடில்வலிதுமத்யம்
வலிவதுமிகுத்தவுச்சம் வருவதுநீசத்திக்கின்
வலிவதுபரிபாஷையாய் வகுத்தனர்வராகமிகி.

இ-ள் எந்தக்கிரகம் எந்த தானத்தில் பலவந்தனென்று சொல்லப்பட்டதோ அதிலிருக்க பலவந்தராம் அந்ததானத்திற்கு ஏழாமிடமிருக்கவீனராம் மத்திமத்திலிருக்க மத்திமராம் இவை கிரகங்களின் உச்சநீசவியாபகமும் இராசிகளின் திக்கு பல, வியாபகமும் பரிபாஷையென்றறியவும் இந்தப்பிரகாரம் உதாரணம் யவனேஸ்வரர் சொல்லியிருக்கிறாரென்பதாம் 41

20-வது சுலோகம். கிரக அஸ்தமானம் யுத்தம சமாகம்.

பணிபெறுமகரங்கும்பமீன்மேஷம் பாண்டில்யாழ்திலமதியிரவி
துணிவொடுவிருக்கவதிபலவானும் தூதுவன்சேய்புகர்சனிபொன்
அணிபெறுமதியைக்கூடில்சமாகம் அலரியைச்சேர்ந்திடமறைவு
நணிபெறுபவுமனுதிமற்றோரை நலமுடன்கூடினல்யுக்தம்.

இ-ள். உத்தராயணமான மகரம் கும்பம் மீனம் மேஷம் ரிஷபம் மிதுனம் இந்த ஆறு இராசியிலும் சூரிய சந்திரரிருக்க பலமுள்ளவர்கள் குஜன் புதன் குரு சுக்ரன் சனி இவர்கள் சந்திரனைக்கூடில் சமமாம் இவர்களே சூரியனைக்கூட அத்தமானமென்னும் மறைவு அடைவார்கள் குஜாதி பஞ்சக்கிரகமும் ஒருவரையொருவர்கூட யுக்தமாம் இதற்குஉதாரணம் விஷ்ணு சந்திரர் சொல்லி இருக்கிறாரென்பதாம். 42

வசனம்.

விஸ்தீர்ணமான கிரணமுடையவர் பலவானுகும் இந்த விஸ்தீர்ண கிரணத்வம் சிக்ரகேந்திரத்திலும் துதிய திருதிய பாதங்களிலிருந்தபோது கிரகங்களுக்கு உண்டாகும் கிரதயுத்தத்தில் பின்புறத்திலுள்ள கிரகம் பலவந்தராமென்று சொல்லப்பட்டது ஜயாவபஜெய லக்ஷணர்த்தமாகுமாம் கிரகயுத்தத்தில் செயமடைந்த கிரகம் பலவந்தராம் ஜெயாபஜெயலக்ஷணமாம் தக்ஷணதிக்கில் இருந்தபோதுகூட ஜெயம் சுக்ரனுக்கு உண்டாகும் மற்ற கிரகத்துக்கு உண்டாகாதென்று உதாரணம் புலிசாச்சாரிவாக்கியம் இந்தப்பிரகாரமாக இருந்த கிரகத்துக்கு சேஷ்டாபல யுக்தமென்று கற்பிக்கவும் இது சேஷ்டாபல மென்பதாம். 42

21-வது சுலோகம் கிரககாலவலிது.

கூடியநிலவும்சேய்சனிமூவர்க் குரைப்பதுநிசியதில்வலியர்
நீடியவிரவிபொன்னனுஞ்சுங்க னிருவருக்குவலிபதுபகலாம்
பாடியபுலவன்நிசியிலும்பகலும் பலமுளரென்றிடலாகும்
நாடியகிரகவலியதுவுரைத்தார் நளமுளவராகமிகியரே.

இ-ள். சந்திரன் செவ்வாய் சனி இந்த மூவரும் இராத்திரி காலத்தில் வலிவுள்ளராம் சூரியன் குரு சுக்ரனிந்த மூவரும் பகலில் வலிவுள்ளவராம் புதன் ராப்பகல் சந்திகாலங்களிலும் வலிவுள்ளவனும் இப்படி வராகமிகிராச்சாரியுரைத்தா ரென்பதாம். 43

21-வது சுலோகம் கிரககாலவலிது.

பூருவபக்கந்தன்னில் புகர்மதிபொன்னன்மாலும்
தேரிடும்வலிதுள்ளோராம் செப்பிடுமமரபக்கம்
சூரியன்செவ்வாய்நீலன் சொல்லுமிப்பாவகோள்கள்
தீரராம்வலிதுள்ளோராய் செப்பினர்வராகமிகி.

இ-ள். வளர்பிறையாகிய சுக்கிலபக்ஷத்தில் சுபக்கிரகமாகிய சந்திரன் புதன் குரு சுக்ரன் வலிதுள்ளவராம் தேய்பிறையாகிய அமரபக்ஷத்தில் சூரியன் செவ்வாய் சனியாகிய இந்த பாப கிரகங்கள் வலிதுள்ளவர்களென்று வராகமிகிராச்சர்ரி யுரைத்தாரென்பதாம். 44

வசனம். ஆனல் சம்வச்சராதிபதி வராதிபதி ஒராதிபதி மாசாதிபதி இந்த நால்வரும் பலவந்தனென்று தாற்பரியம். 44

21-வது சுலோகம் கிரகத்திற்கு வலிது.

மாலவன்தனக்குசேய்வலியவராம் மங்கலனறனக்குமேல்சனியே
நீலனார்தனக்குமறையவன்வலிது நிருபர்க்குவலியாம்வெள்ளி
சீலமாம்புகரோன்தனக்குமேல்திங்கள் செழுமதிதனக்குமேலிரவி
ஞாலமீதிந்தவழியதுவுரைத்தார் நாலவர்வராகமிகியே.

இ-ள். புதனுக்கு வலிது செவ்வாய், செவ்வாய்க்கு வலிது சனி, சனிக்கு வலிது குரு, குருவுக்கு வலிது சுக்ரன், சுக்ரனுக்கு வலிது சந்திரன், சந்திரனுக்கு வலிது சூரியன், இந்தவிதம் ஒருவர்க்கொருவர் வலிவுள்ளவரென்று வராகமிகிராச்சாரி யுரைத்தாரென்பதாம் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 45

வசனம். இந்தப்பிரகாரமாய் ஸ்தானுதிச் சேஷ்ட்டாகால நைசர்க்கிக பலன்கள் முன் 13-சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது அப்பலமுடன் இந்தப் பலமும் சொல்லப்பட்டது. 45

படலச்செய்யுள்தொகை.

ஏழுகிரகங்களுக்கிடம்நிறம் குலங்கள்மற்றும்
மொழிதருமாட்சிநட்பு முதலிந்தபடலந்தன்னில்
பழுதறவசனங்கூட்டி பாவதாவன்பதாக
வழுவறயானுரைத்தேன் வயித்தியலிங்கந்தானே.

கிரகப்படலம் முற்றிற்று.

# மங்களேஸ்வரீயம்.

நான்காவது

## வியோனி ஜன்மப்படலம்.

### விநாயகர் துதி.

அறுசீர்க்கழில் நெடி லாசிரிய விருத்தம்.

திரிபுரன் றனக்குவர மதுவளித்த தேவனே சித்திபுத்தி யரை
மருவியதோளா விமையவர் முதல்வா வாரண முகவனே யன்னுள்
அறுமுக வனுக்கா யடவியில் கரியா யவதரித்திடு செகந்நாதா
மருமலரடி யைப்பணிந் திடுமெனக்கு மானிலந் தனிலருள் புரியே.

1-வது சுலோகம். வசனம்.

வியோனிசென்மங்களானால் நானுவிதமான உற்பத்திதானங்களாம். விருச்சிகம் பக்ஷி மிருகம் குதிரை எருமை, ரிஷபம் நாய் பூனை தாபர முதலானதுகளுடைய உற்பத்திகள் தெய்வபரிக்ஷார்த்தமானதால் உற்பத்தி செந்துக்ஷேமாதி முதலானதும் எவராகிலும் பிரசனே செய்வார்களானதால் அதைக் கொண்டும் பிரசனே செய்வாரைக்கொண்டும் சென்மகாலந் தெரிந்து லக்ஷியமான கிரமத்தை விசாரம் செய்யவே வியோனி சென்ம நிச்சயஞானமுண்டாகும் ஆனதால் அந்த விஷயம் இந்த படலத்தில் சொல்லப்படும் என்பதாம். 1

1-வது சுலோகம். சந்திரதுவாதசாம்சை வியோனி.

சரமொடுவசரசிவபேதங்கள் சார்ந்திடும்பிரசனைதனக்குத்
திரமுறுத்வாதசாங்கிசைநிலவும் சேருடன்தங்கஜெந்துகளும்

தரணியிலுதிக்கும்விதமதுதனையான் சந்திரன்றன்னைவேகொண்டு
விரவுடனுரைப்பேன்வூகமாயுணர்வாய்வ்யோனிரென்மங்களைதானே

இ-ள். சராசரங்கள் பேதமும் பிரசனையைகொண்டு சொல்லும் விதமாவது எந்த இராசியிலாவது சந்திரனின்ற துவாதசாமிசையை கொண்டு பல சீவபேதங்கள் உற்பத்தியாகும் விதங்களை வியோனிசென்மமாக இந்த படலத்தில் சொல்லப்படு மென்பதாம். 2

1-வது சுலோகம் சந்திரதுவாதசாமிசை.

உற்றிடுமதியுமேடத்வாதசத்தி லுதிப்பதுஆடுடன்குதிரை
பற்றியவிடையில்மாடெருமைகளும் பலவிதநாலுகாற்சீவன்
வெற்றியாங்கடகத்துவாதசாங்கிசையில் வெண்மதியுரைத்திடில்நண்டு
மற்றதுசிங்கம்சார்த்தூலசிம்மம் மாபுலிபூனைநாய்நரியே.

இ-ள். சந்திரன் எந்த இராசியிலிருந்தாலும் மேஷதுவாத சாங்கிசையிலிருக்க ஆடு குதிரை முதலானது செனனம். ரிஷபதுவாத சாங்கிசையிலிருக்க மாடு எருமை முதலான செந்துக்களும். கடகத்வாத சாங்கிசையில் சந்திரனிருக்க நண்டுசெனனமாம். சிங்கத்துவாத சாங்கிசையில் சந்திரனிருக்க சார்த்தூலம் சிம்மம் புலி நரி நாய் பூனை முதலியதும் காலில்வளைந்த நகமுடைய செந்துக்கள் செனனமாகும் என்பதாம். 3

1-வது சுலோகம். இதுவுமது சந்திரதுவாதசாம்சை.

மருவியதேளின்த்வாதசாங்கிசையில் மதியுறிற்பாம்பொடுதேளாம்
பெருதனுவதனில்பின்னரைகுதிரை பேசுவோம்கழுதையுமாகும்
உருவிருமகரமும்முன்னரைமிருக முரைப்பதுபின்சலசெந்து
வருவதுமீனேல்சலமதில்பலவாய் வாழ்பலசீவர்தோன்றிடவே.

இ-ள். சந்திரன் விருச்சிகத்வாத சாங்கிசையிலிருக்க பாம்புதேள் செனனம். சந்திரன் தனுசு பின்னரையின் த்வாதசாங்கிசையிலிருக்க குதிரை கழுதை செனனம். சந்திரன் மகரத்வாதசாங்கிசை முன்னரையிலிருக்க மிருகம் செனனம். பின்னரையில் சந்திரனிருக்க சகலசெந்து செனனம். சந்திரன் மீனத்வாதசாங்கிசையிலிருக்க சலத்தில்வாழும் பலசீவசெந்துக்கள் செனனமென்றறியவு மென்பதாம். 4

1-வது சுலோகம். வியோனிசென்மம்.

திடமுளகதிரோன்சேயொடுசனியு தேய்மதிபாபிசேர்மாலோன்
அடருயாவலிதாயிழிந்திடுபோதி லருஞ்சுபர்வலிகுன்றியிருக்க
நடயிலான்புதனும்கேந்திரமேற நவில்வதுவெவ்விதமென்னில்
படருமாவுலகில்பற்பலசீவன் பண்புடன்பிறந்திடும்விதமே.

இ-ள். பாபக்கிரகங்களாகிய சூரியன் செவ்வாய் சனி அமரபக்ஷசந்திரன் பாபியுடன்சேர்ந்த புதன் பலவந்தர்களாயிருக்க சுபக்கிரகங்கள் வலிகுறைந்திருக்க சனி புதன் கேந்திரஸ்தான மென்னப்பட்ட சென்மம் நாலாமிடம் ஏழாமிடம் பத்தாமிடம் இவைகளில் எதிலாவதிருக்க பலவந்தமான வியோனிசென்மங்கள் செனனமாகுமென்பதாம். 5

1-வது சுலோகம். வியோனி சென்மம்.

பிறைபவன்முன்னமுரைத்திடும்விதமாய் பெற்றுமவ்வோரையிலமர
விரவுருதீக்கோள்வலிவுடனிருக்க வேந்தன்மால்புகர்நிறைமதியும்
குறைவதுபெற்றுஇருந்திடுகாலில் சொம்பிமாலுதயத்தைக்காண
தரணியிற்பலவாய்யோனிசென்மங்கள் தானதுவாகவேசெனனம்.

இ-ள். சந்திரன்முன் சொல்லியவிதமாக நாற்காலிராசி பலசாலிராசி சிறகுக்கால் இராசிகளிலிருந்தாலும் அல்லது அந்ததுவாதசாங்கிசையில் இருக்க, பாபக்கிரகம் வலிதுபெற்றிருக்க, சுபக்கிரகமாகிய குரு புதன் சுக்கிரன் பூர்வபக்ஷசந்திரன் ஈனபலமுள்ளவராகவிருக்க, சென்மலக்கினத்தை சனியாவது புதனாவது பார்க்க வியோனிசென்மங்கள் செனிக்குமென்பதாம். 6

1-வது சுலோகம் மனிதசென்மம்.

சென்மலக்கினமேமக்களிராசியதாய் சீருருத்வாதசாங்கிசையு
முன்னிடுமிருகாலிராசியுமாகி லுடுபதியவ்விடத்தமர
மன்னிடுமக்கள்செனனமாமென்று மதித்திடுஞ்சோதிடமதனி
பின்னமில்லாமலுரைத்திடவித்தை பிரபலமுடனேநீகூறே.

இ-ள். சென்மலக்னம் மிதுனங் கன்னி துலாங் கும்பம் இந்த நாலு இராசியிலொரு இராசியாகி துவாதசாமிசையும் இருகால் இராசியாயிருக்க அந்த இராசியில் சந்திரனிருக்க மனித செனனமே செனனமாகு மென்பதாம். 7

2-வது சுலோகம். வியோனி சென்மவிதம்.

கூறியபாபரதிபலவானய்க் குலவியதன்னவாங்கிசையில்
தேறியேவிருக்கசௌமியர்தானுஞ் சென்றிடப்பாநவாங்கிசையில்
சீரதுகுறைந்துஇருந்திடுபோதில் சென்மமுமுதயத்தினலே
பாரதிலுதிக்குமோனியுமதியோன் பற்றியவிடமதுபோல.

இ-ள். பாபர்கள் தன்சுயநவாமிசையில் வலிதுடனிருக்க சுபர்கள்பரநவசாமியில் வலிதில்லாதிருக்க வுதய லக்கினத்தைப்போலும் நவாமிசைபோலும்சந்திரனிருந்த நவாமிசைபோலும் வியோனிசென்மங்கள் செனிக்கு மென்பதாம். 8

3-வது சுலோகம் வியோனி அங்கராசி.

ஆகிடுநாற்கால்விலங்கதுகளுக்கு அவயவராசிகளுரைப்போ
மேகிடுமேடஞ்சிரசதுவாகு மேர்முகம்யாழ்புஜகண்டம்
மாகிடுங்கடகம்முதுகெனலாகு மரியதுவிருதயமார்பாம்
தோகையாங்கன்னிபக்கபாரிசமாய்த்தொகுப்பதுமங்கமாய்புகலே

இ-ள். நாற்கால் விலங்குகளுக்கு அவயவங்களின் இராசியாவது மேஷம் சிரசு ரிஷபம் மிதுனம் முன்கால் புஜகண்டம் கடகம் முதுகு சிம்மம் இருதயம் நெஞ்சுமார்பாகும் கன்னி இரண்டுபக்க பாரிசமாகுமென்பதாம்.

4-வது சுலோகம் வியோனி அங்கராசி.

புகன்றிடுநிறையும்வயிறுடனுந்தி பொன்னிறதேளும்பானம்
இகலுருதுரகம்மிருதுடையாகு மெழிற்கலைபீசமுமண்டம்
பகர்குடம்பிருதுகபலதுவாலாம் பக்ஷிக்குமவ்விதமாக
செகந்தனிலிராசியங்கத்திநிறங்கள்செப்பிடலகோளதைகொண்டே.

இ-ள் துலாம் வயிறும் இந்தியாம் விருச்சிகம் அபானமென்னப்பட்ட குதப்பிரதேசம் தனுசு இரண்டு துடைகளாம். மகரம்லிங்கமென்னப்பட்ட ஆண்குறிபீசமும் அண்டமென்னப்பட்ட இரண்டுவிரைகளும்கும்பம்பிருது வாகும். மீனம் வால்யென்னும்தோகையாம். இந்தவிதமாக பக்ஷிகளுக்கும் சொல்லப்பட்டது. இராசியினுடைய அங்கத்தில் வர்னங்கள் அமைந்திருக்கும் விதமறிய வென்பதாம். 10

4-வது சுலோகம் விலங்குநிறமறிய.

செப்பியசென்மலக்கினமதிலே சேருமக்கோளதின்வர்ணம்
ஒப்பியநாற்கால்விலங்கதுநிறமா யுற்றசென்மத்தினிற்கிரகம்
அப்படியிலரேல்நோக்கினகோளுக் கமைந்திடுநிறமுளசென்மம்
துப்புறவாககோளிலராகில் தூய்நவாங்கிசையதுபோல.

இ-ள். சென்மலக்கினத்தில் இருந்த கோள்நிறம் விலங்கு பிறக்கும். சென்மலக்கினத்தில் கோளில்லாமலிருந்தால் சென்மலக்கினத்தைப் பார்த்த கோள்நிறமாக விலங்கு செனிக்கும் சென்மலக்கினத்தில் கோளில்லாமலும் கோள்நோக்காமலிருக்கில் அந்த நவாமிச ராசியினிறமே விலங்கு செனிக்கு மென்பதாம். 11

4-வது சுலோகம். விலங்குநிறம்.

ஒரயிற்பலகோளுற்றிடுமாகி லோங்கியவலிவுருகோட்கு
கூரியநிறமும்வலிகுறைந்தோருக் குரைத்திடும்நிறமதும்கூடி

மாரியவர்ணமுதயத்தைநோக்கு மற்றயகோளநிறமே
தேரிடும்சென்மசயநவாங்கிசையை சென்மனுநோக்கவன்னிறமே.

இ-ள். சென்மலக்கினத்தில் பலகிரகமிருந்தால் அவர்களில் வலிது பெற்ற கிரகத்தின் நிறமும் வலிதில்லாத கிரகத்தின்நிறமுங்கலந்திருக்கும் உதயத்தை நோக்கின கோள் நிறமாகவு மிருக்கும் சென்மசய நவாங்கிசையை சென்மாதிபதிநோக்க அந்த நிறமாகவு மிருக்கும். 12

4-வது சுலோகம் விலங்கின் மகூம் ரேகை.

சென்மமூரம்விலங்கினங்கராசியினிற் சீருடன்தங்கினகோட்கு
வுன்னிடுநிறமுவந்தவங்கத்தி லுற்றிடுமவ்விலங்குகட்கே
என்னிடுசென்மமதர்க்குமேயேழி லிருந்தசேர்தங்களாற்பிருஷடம்
மன்னிடுரேகையுண்டெனவறிவாய் மருவியவிலங்குகடமக்கே.

இ-ள். வியோனி செந்துவினுடைய எந்த அங்கத்தில் எந்த கிரகம் இருக்குமோ அந்த அங்கத்தில் அந்த கிரகவர்ணத்தைசொல்லவேண்டியது சப்தமதானத்தைப்போலும் சப்தமஸ்தானமிருந்த கிரகத்தைப் போலவும் பிருஷ்ட மென்னப்பட்ட முதுகிலும் ரேகைகளைச் சொல்லவேண்டியது உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 13

5-வது சுலோகம் பக்ஷிதிரேகாணம்.

கலிவிருத்தம்.

பாடும்யாழில் பகருமிரண்டதுந்
தேடுகோலிரண் டேயரியின்முதல்
நாடுங்கும்ப நவின்றமுதலையுங்
கூடும்பட்சி குறித்ததிரேகாணமே.

இ-ள். மிதுனம் நடுத்திரேகாணமும் துலாத்தில் நடுத்திரேகாணமும், சிங்கத்தில் முதல் திரேகாணமும், கும்பத்தில் முதல் திரேகாணமும் இந்த நான்கு திரேகாணங்களையும் பக்ஷிதிரேகாண மென்னப்படு மென்பதாம். 14

5-வது சுலோகம் பட்சிசெனனம்.

மருவிபறவைத்ரேகாணமதனில் மந்தனேயிருந்திடவலது
கரியவநோக்கமுற்றிடும்போது கானகம்மேடுறைபுள்ளாம்
வருமதிபரவைத்ரேகாணமதனில் வந்திடவல்லதுநோக்கில்
அருவிகளருகில்வாழ்ந்திடும்பறவை யங்குதானுதிப்பதுதொடர்பே

இ-ன். பக்ஷிதிரேகாணத்தில் சனியிருக்கிலும் அல்லது நோக்கமுற்றாலும் காடுகளிலும் மேடுகளிலும் சஞ்சரிக்கும் பக்ஷிசெனனமாம், பக்ஷிதிரே

காணத்தில் சந்திரனிருக்கவல்லது நோக்கமுற்றாலும் சலக்கரை சலசமீப த்தில் வாழக்கூடிய பக்ஷி செனனமாமென்பதாம். 15

5-வது சுலோகப் பட்சிசெனனம்.

தொடர்வலியுடையகோளுடன்கூடும் சுகசாராசிகளலது
அடர்சரவிராசிநவாங்கிசமதனை அம்புலிவிழியகால்நோக்க
படர்சலமதனில்வாழும்புள்செனிக்கும் பங்குமேயத்தலங்காணில்
சுடர்வெளியடையும்பட்சிகளுதிக்கும்துணிவொடுவறிந்துரைபலனே

இ-ள். வலிதுபெற்ற கிரகம் சரராசியிலிருந்தாலும் அல்லது சரராசி நவாங்கிசையிலிருந்தாலும் அந்த இராசியையும் அந்த கோளையும் சந்திரன் பார்க்க சலசஞ்சாரஞ் செய்யும் பக்ஷிகள் செனிக்கும் அப்படி சரராசியை யும் வலிதுபெற்ற கோளையும் சனிபார்க்க காடுமேடுகளில் சஞ்சரிக்கும் பக்ஷிசெனிக்கு மென்பதாம். 16

5-வது சுலோகம் பட்சி செனனம்.

அறிவதுசெனனமரிவைதண்டாக அந்தநவாங்கிசையதனில்
நெறியொடுவலிதுபெற்றகோளிருக்க நீலனுமவர்களைநோக்க
விரிபுவியதனில்மேடுறைபறவை வெண்மதிநோக்கிடும்போதில்
அருவிகள்சூழுமிடத்தருகதனி லவதரித்திடுமவனியிலே.

இ-ள். சென்மலக்கினம் மிதுனங் கன்னியாயிருந்தாலும் அல்லது மிதுனங் கன்னி நவாமிசமாகிலுமிருக்க அந்த இடத்தில் வலிதுபெற்ற கிர கங்களில் யாராவதிருக்க அவர்களைச் சனிபார்க்க காடுமேடுகளில் சஞ்சரிக் கும் பறவைகள் செனனமாம் சந்திரன்பார்க்க சலக்கரை சமீபத்தில் சஞ்ச ரிக்கும் பக்ஷிசெனனமாம் இந்த மூன்றுயோகமும் சனி சந்திரர்கள் நோக் கத்தினுல் உண்டாகுமென்றறியவும். இதற்கு உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 17

6-வது சுலோகம் ஜலசமீபத்தில் விருக்ஷசெனனம்.

அவனியிற்றோன்றும்விருக்ஷமாதிகட்கு அம்புலிபொன்னனுமருக்க
னிவர்வலுக்குறைந்தும்பிரசனைகால மியற்றிடுவிதமதுவிருக்ஷம்
நுவன்றிடுகன்னிமீனமுங்கடகம் நுண்ணியமகரம்பின்னரையும்
கவனமாமுதயராசியேல்சலத்தின் கரையுறைமரமதுவாகும்.

இ-ள். உலகத்தில் சென்மலக்கினமும் சந்திரனும் குருவும் சூரியனும் பலன்குறைந்திருக்க பிரஸ்னை கேழ்ப்பார்களாகுல் சொல்லவேண்டிய விபரமெப்படியெனில், விருக்ஷம் செனனமாம் ஜலப்பிராயதேசமாவது நீர் ஜலப்பிரதேசமாவது பேதங்களுண்டாவது நவாம்சத்தினுல் தெரியவே

ண்டியது அதெப்படி யென்றால் லக்கினமானது சலராசியாகிய கடகம் கன்னிமகரம் பின்னரையும் மீனம் இவைகளிலொன்று நவாமிசராசியாய் உதயமாகிடில் ஜலசமீபமாம் உற்பத்தியாகு மென்பதாம். 18

6-வது சுலோகம் காடுமேடுறை விருக்ஷசெனனம்

ஆகியமற்றஇராசிகளுதிக்கி லடவியில்மேடுறைசெடியாம்
ஏகுமாமுதயவதிபதிதானு மிலக்கினமுதலந்தவதிபன்
போகியவோரையெத்தனையாமோ புகவாயத்தனைசெடியே
வாகுடனந்தவிடமதில்முளைக்கும் மதித்திடுயூகமாய்த்தானே.

இ-ள். முன்கவியில் சொல்லிய ஜலராசி நீக்கி மற்ற இராசிகள் உதயமானால் காடுமேடுகளில் முளைக்கும் மரம்செடிகளாம் லக்கினமுதல் கொண்டு லக்னாதிபதியிருந்த இராசி எத்தனையாவது இராசியோ அத்தனை தொகை புள்ளமரம் செடி அங்கே முளைத்திருக்குமாம் இவைகளை ஜலராசி ஸ்தல ராசியின் நவாம்ச இராசியின் அனுசாரமாகச் சொல்லவேண்டியதாம். 19

வசனம். இவ்விடத்தில் நாவம்சாதி வசத்தினால் லக்ஷியமானதற்கு ஆயுர்த்தாயவிதானத்தைக்கொண்டு த்விகுணம் த்ரிகுணத்வம் சொல்லப்பட்டன இந்தப் பிரகாரம் சாராவளியில் சொல்லப்பட்டு மிருக்கிறது. 19

7-வது சுலோகம் கிரகத்தின் விருக்ஷம்.

தானமாமுதயநவாமிசன்ரவியேல் சாற்றியமலைமரவயிரம்
தானவன்பாலாந்தரைமகன்முள்ளு சவுமியன்ற மாம்செடிகள்
மானிலம்புகழ்பொன்பெருமரமாகும்மழையவன்மலருருஞ்செடியே
யீனமாமரங்கள்சீரிலதாகு மேற்றிடுஞ்சனியவன்காணே.

இ-ள். உதய நவாமிசாதிபதி சூரியனானால் மலைகளிலிருக்கப்பட்ட மரங்களும் வயிரமரங்களுமாம் சந்திரனானால் பால்மரங்களாம். செவ்வாயானால் முள்மரமாம். குருவானால் பெருமரங்களுமாம் சுக்ரனானால் புஷ்பச்செடிகளாம் சனியானால் சிறப்பிலாத மரங்களாமென்பதாம். 20

7-வது சுலோகம் கிரகத்தின் விருக்ஷம்.

காணவேநிலவுநவாமிசம்பாலாங் கருதியதேவதாரங்கள்
வேணதுமுளைக்கும்விபரங்களாகும் விளக்கமாயறிவதுஇன்னம்
பூணவேசெவ்வாய்முள்ளுளச்செடிகள் புகழிலாவிருக்ஷமுமாகும்
தோணவேகூறுவோம் பிரசனைதனக்கு சுருதிபோல்கூறுகுறியே.

இ-ள். சந்திரன் நவாமிசாதிபதியாகி யதிலிருக்க பாலுள்ளமரம் தேவதாரம் முதலியமரங்களாம் செவ்வாயாகில் முள்ளுகளுள்ளதும் சிறப்பில்

லாததென்று சொல்லப்படும் பிரஸ்னைகளுக் கென்பதாம் இந்த விஷயம் உதாரணம் கிரந்தாந்தரத்தில் சொல்லப்பட்டது என்பதாம். 21

8-வது சுலோகம் நந்தவனம் மரவிருக்ஷம்.

குறித்தநல்லக்கினநவாங்கிசைதானுங் குலவிடுஜலதலராசி
யுருமதிபதியோன்சுபர்களுமாகி யுயர்வறுபாபரில்லமரில்
தருவதுமனதுரம்மியமான தாபரம்சுபமாந்தலங்க
ளுருமசானத்தேமுளைத்திடுவிதமே யூகமாயறிவதுகுறியே.

இ-ள். லக்கினநவாம்சராசி ஜலராசி அல்லது ஸ்தலராசியாகிலும் அந்த இராசியதிபதி சுபக்கிரகமாகி அவர்கள் பாயராசியில் இருக்க மனோரம்மிய மான விருக்ஷங்கள் அசுபதலத்திலும் மசானமுதலிய விடத்திலும் முளைப் பதாம் இதை நன்றா யூகித்தறியவேண்டிய தென்பதாம். 22

8-வது சுலோகம் நந்தவனத்தில் நலமிலா தருக்கள்.

குறியுளநவமாமங்கிசாதிபதினுங் கொடியவராகியேயிருந்து
நெறியுறுசுபக்கோளிராசியிலிருக்க நீள்புவியுத்தியானவனத்தில்
உரிமையாய்முளைத்தநலமிலா தருவு மோங்கியமுள்ளுளசெடியு
விரிவுடன்றேன்றும்விதமதையுணர்ந்துவிளம்புவால்பிரசனைதனக்கே

இ-ள். உதயராசி நவாமிசாதிபதி பாபக்கிரகமாகவிருந்து அந்தபாபக் கிரகம் சுபக்கிரக இராசியில் இருந்தால் நந்தவனம் சிங்காரதோட்டங்க ளில் முள்ளுள்ளதும் சிறப்பில்லாத மரம்செடிகள் முளைத்திருக்கிறதாக பிரசனைக்கு சொல்லவேண்டியதாமென்பதாம். 23

8-வது சுலோகம் இதுவுமது.

பிரசனைதனக்குநவாங்கிசவதிபன் பிரபலசவுமியராகித்
திரமொடுநல்லோர்க்ஷேத்திரமிருக்க சீருளமரமுநல்லிடத்தில்
விரவுநவாம்சாதீயராய்வரும் வினையுருபாபரில்லமர
குறைவுளதானமீமத்தில்மிக்க கொடியதாயுதித்திடுமுலகில்.

இ-ள். பிரஸ்னகாலத்தில் உதயவிராசி நவாமிசத்துக்கு அதிபதியான கிரகம் சுபராகவிருந்து சுபர் க்ஷேத்ரமிருக்க நல்லமரங்கள் நல்ல விடத்தி லே முளைக்கும் நல்லவிடமென்பது சிங்காரமான வுத்தியான வனங்களாம் உதயராசி நவாமிசாதிபதி பாபக்கிரகமாய் பாபர்க்ஷேத்திரத்திலிருக்கதாழ் மையான விடங்களிலும் மசானங்களிலும் முள்ளுள்ளதும் சிறப்பில்லாத மரங்கள் முளைத்திருக்கு மென்பதாம். 24

8-வது சுலோகம் விருக்ஷத்தின் தொகை

உலகதில்ராசிநவாங்கிசாதிபனு உள்ளதன்னமிசையைவிட்டு
குலவுமற்ரோர்தம்நவாங்கிசமுறினும் கொண்டவெண்தொகையதுபோல
தலமதும்மற்றும்சலமதுவாகில் தானுமேயுரைத்தவெண்போல
நலமுடன்கோள்தன்வகையதையறிந்து நாட்டிடுவுதயமாமரமே.

இ-ள். உதய இராசி நவாமிசாதிபதி தன் சுயநவாமிசையைவிட்டு பரநவாமிசை ஏறியிருந்தானுனல் அந்த நவாமிசம் எத்தனையாகுமென்றெண்ணி அந்தத் தொகையுள்ள விருக்ஷம் காடுமேடுகளி லுள்ளதென்றும் சலசமீபமுள்ளதென்று மறிந்து யூகமாய்ச் சொல்லவேண்டியதென்பதாம் மரங்கள் அந்தந்த கிரகத்துக்கு 23 வது செய்யுளில் சொல்லிய விபரப்படி மரங்கள் செடிகளும் அந்தத் தொகையும் கூட்டிச் சொல்வதாம். 25

8-வது சுலோகம் விருட்சத்தொகை.

வினவியபோதுநவாமிசவதிபன் மேவுவெக்கோள்களாயிடினும்
நினைவுடன்செனனமுதலதுவாக நேருசென்மாதியுஞ்சென்ற
இனமுறுராசிதொகையதுபோல விருந்திடுமரமதினெண்ணும்
மனமதுதிடமாய்ப்பிரசனையதற்கு மகிழொடுகூறுதலாமே.

இ-ள். பிரசனை கேழ்க்க வந்தபோது உதயராசி நவாமிசாதிபதியெவராகவிருந்தாலும் அந்த உதயமுதலாக உதயாதிபதி சென்றிருக்கும் இராசி எண்ணிக்கையின் தொகை யெத்தனையோ அத்தனை விருக்ஷமென்று சொல்லுவதாகு மென்பதாம். 26

படலச்செய்யுள் தொகை.

விலங்கினம்பறவைவிருட்சமாதிகளும்விளங்கவியோனிசென்மங்கள்
சலந்தனிலுறையும்புள்மரதோற்றம் சாற்றினர்வடமொழியுணர்ந்து
நலந்தரவதனையிருபத்தியொன்பான் நற்கவியதுதமிழாலே
பலனதையறிந்துவயித்தியலிங்கம் பாடினேன்குருவடிபணிந்தே.

வியோனி ஜன்மப்படலம் முற்றிற்று.

---

க

# மங்களேஸ்வரீயம்.

ஐந்தாவது

## கர்ப்பாதானப்படலம்.

### விநாயகர் துதி.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அய்யரெனுமீசரது தவத்துதித்து யானைமுகமைந்துகர முள்ள தேவா, வய்யகத்தில் புலவர்களு முனைப்பணிந்து வரம்பெற்று மூத் தமிழ்நாற் கவியுரைத்தார், மெய்யுடையா ருள்ளமதிலமருநாதா விளங்குமிந்த சோதிடத்து குதவிநீரும், செய்யவுனதடியணியு மெ ந்தனுக்கு சீர்தருமாசெல்வகண பதியேபோற்றி.

1-வது சுலோகம். பெண்கள் ருதுவாகும் காலம்.

பாரதிற்கருப்பாதானம் பண்ணிடுங்காலிற்றோன்றும்
தீரமுஞ்சுகதுக்கங்கள் சேடியர்தங்களுக்குத்
தூரமும்மாதமாதஞ் சுரோணிதந்தனக்குநாதன்
ஆரலும்மதியைக்காண வரிவையுமிருதுவாவாள்.

இ-ள். உலகத்திலுள்ள ஸ்திரீகள் யாவர்களுக்கும் கருப்பாதானஞ் செய்வதினால் உண்டாகும் சுகதுக்கங்களுக்கு ருதுவாவது ஆதாரமாகிய தாம் ஸ்திரீகளுக்கு மாதமாதம் உண்டாகும் ப்ரவிடைகளுக்கு அதிபதி சந் திரனை செவ்வாய்பார்க்க ஸ்திரீகள் ருதுவாவார்க ளென்பதாம். 1

1-வது சுலோகம். கருப்ப உற்பத்திக்காலம்.

இருதிலாப்பெண்களுக்கு மியம்பிடுமுதியோருக்கும்
அரிவையில்மலடிநீக்கி யழகுறுமங்கைக்கீராறு
மறுசென்மமிரண்டுநாலு மைந்துமேழெட்டொன்பானில்
உறுமதிதனைசேய்நோக்க வுற்பத்திசூலின்காலம்.

இ-ள். ருதுவாகாத பெண்களுக்கும் வயது கடந்தவர்களுக்கும் மலடிகள் இவர்களை நீக்கி மற்ற ஸ்திரீகளுக்கு அனுபஜெயஸ்தானமென்னப்பட்ட சென்மம் 2-4-5-7-8-9-12-இந்த ஸ்தானங்கள் எட்டில் ஒரு இடத்தில் சந்தி

ரன் வந்திருக்க அந்தச் சந்திரனை செவ்வாய் பார்க்குங்காலத்தில் கருப்ப உற்பத்திக்கேதுவான காலமென்று தார்ப்பரியமென்பதாம், பாதராயண வசனமும் சாராவளியும் சொல்லப்பட்டிருக்கின்றன. 2

1-வது சுலோகம். ஸ்ரீதி புருஷ சங்கமம்.

காலத்தில்புருடனுக்கே கருதிடுமுபஜெயத்தில்
பாலொத்தநிலவேநிற்க பசும்பொன்னன்மதியைக்கான
சேலொத்தவிழியாள்தானும் சேருவாள்புருடன்தன்னைத்
தாலத்தில்மாறுபட்டால் சம்போகமிருபேர்க்கில்லை.

இ-ள். சந்திரன் புருடனுடைய இராசிக்கு உபஜெயமென்னப்பட்ட 3-6-10-11 இந்த நாலுஸ்தானங்களினி லொன்றில் சந்திரனிருக்க அந்தச் சந்திரனை குருபார்க்க ஸ்திரீபுருஷாளுடைய சம்போக சங்கமுண்டாகும் இதர்க்கு வித்தியாசப்பட்டால் ஸ்திரீ புருஷ சங்கமும் உண்டாகாதென்ப தாம் இதற்கு பாதராயணவசனமும்சாராவளியும் சொல்லப்பட்டது. இந்த விசாரணை ருதுஸ்னானந்தரகாலத்திலே சொல்லப்படும். மணித்தர் உதார ணம் சொல்லியிருக்கிறரென்பதாம். 3

2-வது சுலோகம். கிரீடைபிரகாரம்.

பேர்பெருவாதானத்தும் பிரசனையுதயலக்னம்
தேர்வதுமூன்றினுக்கும் செப்பிடுமேழாம்ராசி
சேர்முறையதுபோலாக சேருவாராணும்பெண்ணும்
பார்தனில்மிதுனமாகில் பலவிதசுரதலீலை.

இ-ள். ஆதானலக்னம் பிரஸ்னலக்னம் உதயலக்னம் இந்த இராசிகளுக் கேழாம் இராசி கிரீடைசெய்வதுபோல ஸ்திரீ புருஷாள் சேர்வார்கள். ஏழாம்ராசி மிதுனமானல் பலவிதமாகிய லீலைகள் செய்வார்கள் என்ப தாம். அதெப்படி யென்றால் மேஷமானல் மேஷத்தைபோலவும் ரிஷப மானல் ரிஷபத்தைபோலவும் கிரீடைசெய்வார்கள். இருகால் இராசி நாற் கால், இராசிகளனுசாரப்படி ஸ்திரீ புருஷாள் கிரீடை செய்வார்களென்ப தாம். 4

2-வது சுலோகம். கிரீடை செய்விதம்.

விதமுடனுற்கால்பல்கால் மேவியமகரமீனம்
மதமுறுமேழதாக வந்திடுங்காலந்தன்னில்
அதுகளுக்கேற்றவாறு வவர்களுங்காமக்கிரீடை
இதமொடுதோய்வரென் றியம்பினேந்திடமாய்த்தானே.

இ-ள். முன்சொன்னபடி ஏழாம் இராசி நாற்கால் இராசிபலகால் இராசி மகரமீனம் இந்த இராசிகள் அவைகளுக்கு காமக்கிரீடை செய்வதெப் படியோ அப்படி செய்வார்கள் என்பதாம். 5

2-வது சுலோகம். கிரீடைவிதம்.

திடமுளதீயரேழில் சென்றிடவலதுநோக்க
துடருருங்கலகத்தோடு சுரதமேயிவர்கட்காகும்
இடரருஞ்சுபக்கோளேழி லிருந்திடவலதுநோக்க
தடமதிற்பரிகாசங்கள் சந்தோஷம்பலவாம்லீலை.

இ-ள். ஏழாமிடத்தில் பாபர்களிருக்க அல்லது பாபர்நோக்க ஸ்திரீ புருஷர்கள் கலகத்துடன் காமலீலை செய்வார்கள். சுபக்கிரகம் ஏழாமிடமிருக்க அல்லது நோக்க ஸ்திரீ புருஷர்கள் சந்தோஷத்துடனே பலவிதமான காமலீலை செய்வார்க ளென்பதாம். 6

2-வது சுலோகம். கிரீடைசெய்யும் விதம்.

பலமுறுந்தீயர்நல்லோர் பரிவொடுகூடியேழில்
நலமுடனிருக்கவற்பம் நலமுடன்கலகலீலை
இலகிடுமேழில்கோள்தா னில்லாதுநோக்கமற்றால்
சலனமுஞ்சுகமுமற்று தானிருபேர்கள்சேர்வார்.

இ-ள். ஏழாமிடத்தில் சுபரும் பாபருங்கூடி இருக்க கொஞ்சம் கலகமுண்டாகி சந்தோஷத்துடனும் கூடுவார். சந்தோஷத்துடன் கூடி பிறகு கலகமுண்டாக்கிக் கொள்வார்கள் ஏழாமிடத்தில் கோள்களில்லாமலும் கோள் நோக்கமில்லாமலுமிருந்தால் சுகம் துக்கம் கலகம் சந்தோஷமில்லாமல் ஸ்திரீ புருஷாள் சேருவார்கள் என்பதாம் இதற்கு உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறது. 7

3-வது சுலோகம் கருப்ப சம்பவகாலம்.

சேருமாதானகாலந் திகழ்பிரசனைகாலத்தில்
கூருமாதவனுந்திங்கள் குசனேடுபுகரோன்றானும்
தேருதன்சுவநவாங்கிசம் சென்றிருப்பாரேயாகில்
சீருடன்கர்ப்போற்பத்தி செப்பியகாலந்தானே.

இ-ள். ஆதானகாலம் பிரஸ்னகாலங்களில் சூரியன் சந்திரன் செவ்வாய் சுக்ரன் இவர்கள் தன் சுயநவாங்கிசமிருக்கில் கர்ப்பவுற்பத்தியாகுங்காலமென்று சொல்லப்படும் உதாரணம் லகுசாதகம் சொல்லியிருக்கிற தென்பதாம். 8

3-வது சுலோகம் கருப்பசம்பட்காலம்.

செப்பிடுமிரவிதிங்கள் சேய்புகரிவர்கடாமும்
ஒப்பிடுசுயநவாங்கிச முற்றாலும்புருடனுக்கு
தப்பிலாவுபசெயத்தில் தரணியும்வெள்ளிநின்றால்
இப்புவிமடவாருக்கு எழில்கர்ப்போற்பத்திதானே.

இ-ள். இதிற்சொன்னபடி சூரியன் சந்திரன் செவ்வாய் சுக்ரனிவர்கள் சுயநவாங்கிஸையி லிருந்தாலும் புருஷனுக்கு உபசெயவிராசி யென்னப் பட்ட 3-6-10-11 இந்த ஸ்தானங்களில் சூரியன் சுக்ரனிருக்க ஸ்திரீகளுக்கு கருப்பவுற்பத்தியாகுங் காலமாகுமென்பதாம். 9

3-வது சுலோகம் கருப்பசம்பவ காலம்.

பத்தினிமடவாழிக்குப் பகருபசெயத்தில்செவ்வாய்
சுத்தநன்மதியோன்தானும் சுயநவாங்கிசையிருக்க
வித்தகிசூலுங்கொள்வாள் றேந்தனேந்தொன்பானேற
அத்தினங்கர்ப்பமாவா ளறிந்திடாயவனிமீதே.

இ-ள். ஸ்திரீகளுக் குபசெயஸ்தான மென்னப்பட்ட 3-6-11 இந்த தானங்களில் செவ்வாய் சந்திரன் இருக்க அந்த சந்திரன் செவ்வாய் சுயந வாங்கிசையில் இருந்தபோது ஸ்திரீ கர்ப்பமாவாள் குருதிரிகோணமாகிய லக்கினம் ஐந்தாமிடம் ஒன்பதாமிடத்திலிருந்தாலுங் கருப்பவுற்பத்தியாகும், இப்படி சொல்லப்பட்ட கருப்ப சம்பவயோகத்திற்கு வீரியவீனமான ஸ்திரீ புருஷர்களுக்கு சந்திரனுடைய கிரணம் அதுபோல நிஷ்பலனுனதால் இப்படிச் சொல்லப்பட்ட யோகத்திற்கும் வீரியவீனருக்கு ஸ்திரீ புருஷவிஷயமாய் பலிக்குமே தவிர கருப்பம் உண்டாகாதெனதாற்பரியம்

4-வது சுலோகம் ஆதானகாலமுதல் பிரசவகாலம் வரையிலுள்ள ஸ்திரீ புருஷர்களுக்கு சுபாசுபபலன் சொல்லப்படு மென்பதாம்.

அறியுமாதானகாலம் அலரிக்குசப்தமத்தில்
வருதிங்களிரண்டாமாதி வக்கிரனிருக்கவல்லால்
கரியவன்மாதமாறுக் கதிபனுதுவர்கள்நின்றுல்
வுறுபிணிமாதமாறி லுண்டாகும்புருஷருக்கே.

இ-ள். கருப்பாதான காலத்தின்போது சூரியனிருந்த இராசிக்கு ஏழாமிடத்தில் இரண்டாவது மாதத்திற்கு அதிபதியாகிய குஜனிருந்தாலும் அல்லது ஆறுவது மாதத்திற் கதிபதியாகிய சனி ஏழாமிடத்திலிருந்தாலும் அந்தந்த மாசாதிபதியைப்போல அந்த மாசத்தில் பிணி புருஷருக்கு வுண்டாகு மென்பதாம். 11

4-வது சுலோகம் ஸ்திரீகளுக்குப்பிணி.

புருடனுக்குரைத்தவண்ணம் பூவைக்காதானக்காலம்
வருமதிதனக்குவேழில் வக்கிரனலதுநீலன்
மருவிடவிரண்டாமாத மல்லதுவாறுமாதம்
வுருபிணியடைவனென்று வுரைத்ததுகதியிதாமே.

இ-ள். முன் சொன்னவிதமாகவே ஸ்திரீகளுக்கு கர்ப்பாதானத்தின் போது சந்திரனுக்கு ஏழாமிடத்தில் செவ்வாயிருந்தால் இரண்டாவது மாதத்தில் ஸ்திரீ பிணிபடுவாள் ஏழாமிடத்தில் சனியிருக்க ஆறுவது மாசத்திலே ஸ்திரீ பிணியடையவளென் றறியவேண்டியது. 12

### 4-வது சுலோகம் ஸ்திரீகளுக்குப்பிணி.

கதிரவற்கிரண்டீராறில் காரியல்லதுசேய்நிற்க
அதிவலியுள்ளகோட்கு அமைத்திடுமாதந்தன்னில்
சதியெனுநோய்தான்கண்டு தான்துயரடைந்துசூலி
விதியதுமுடிந்தபின்பு விண்ணுலகடைவாள்தானே.

இ-ள். கர்ப்பாதான காலத்தின்போது சூரியனுக்கு இரண்டாமிடம் பனிரண்டாமிடத்தில் சனியும் செவ்வாயுமிருக்க அந்த இரண்டுபேரில் வலிதுள்ள கிரகத்துக்குள்ள காலமாகிய மாதங்களில் ஸ்திரீ மரணமாவாளென்பதாம். 13

### 4-வது சுலோகம் ஸ்திரீகளுக்குமரணம்.

தானவற்கிரண்டுவீயம் தரைமகன்சனிபோன்தங்க
ஆனவிக்கிரகந்தன்னி லதிவலியுற்றோர்மாதம்
மானிகர்விழியாளுந்தான் வல்பிணிதன்னால்வாடி
லானவருலகுசெல்வாள் வரும்பலனிதுதானென்னே.

இ-ள். கருப்பாதான காலத்தின்போது சந்திரனுக்கு இரண்டாமிடம் பனிரண்டாமிடங்களில் செவ்வாய் சனியிருக்கில் அவர்களிரண்டுபேர்களில் வலிதுள்ளவர்களுக்கு சொல்லப்பட்ட மாதங்களில் கர்ப்பிணியாகிய ஸ்திரீ மரணமாவாளென்பதாம். 14

### 4-வது சுலோகம் புருஷமரணம்.

என்னுமாமிரவிதானு மெழில்சனியலசெவ்வாயை
மன்னியேகூடும்போதில் மங்கலனலதுநீலன்
உன்னிதகதிரைநோக்க முற்றிடவலிதுள்ளோர்க்கு
சொன்னமாதத்திலின்றேன் சோர்வுடன்சாவான்காணே.

இ-ள். கருப்பாதான காலத்தின்போது சூரியன் சனி செவ்வாய் இரண்டுபேர்களில் ஒருவருடன்கூடி ஒருவரால் பார்க்கப்பட்டால் அந்த இரண்டு கிரகத்தில் வலிதுள்ள கிரகத்துக்கு சொன்ன மாதத்தில் புருஷன் மரணமாவானென்பதாம். 15

### 4-வது சுலோகம் கருப்பிணிமரணம்.

காணவேமதியோன்றனுங் காரியையலகசவ்வாயை
ஆணவமுடனேசேர வல்லதுசனிசெய்நோக்க

தோணிடுமிவர்கடம்மில் தொடர்வலிபெற்றபேர்க்கு
ஊனுமாதங்கள்தன்னி லொண்டொடிசாவாள்நாட்டில்.

இ-ள். கருப்பாதானத்தின்போது சந்திரன் செவ்வாய் சனி இருவரி லொருவர்கூடி ஒருவரினால் பார்க்கப்பட்டால் அந்த இரண்டுபேரில் வலி துள்ளவருக்குச்சொல்லப்பட்ட மாதங்களில் கருப்பிணிமரணமாவாளென் பதாம். 16

5-வது சுலோகம் ஆதானகாலத்தைக்கொண்டு

கருப்பத்தின் பிதுர்மாதுக்களின் பலன்.

நாடியபகற்காலத்தில் நலமுடனுதித்தபேர்க்கு
மீடிலாசிடரோனாலே இயம்பிடல்பிதுரின்வர்க்கம்
தேடியமழைக்கோளாலே சீருருந்தாயின்வர்க்கம்
நீடியபுவியுள்ளோர்க்கு நெறியொடுபுகல்வர்தாதே.

இ-ள். பகல் காலத்திலே செனனமானவர்களுக்கும் ஆதானமானவர் களுக்கும் சூரியனாலே பிதுரென்னும் தகப்பன் வர்க்கத்திற்கு உள்ள பலன்களும் சுக்ரனாலே தாயின்வர்க்கபலன்களும் சொல்லவேண்டியதெ ன்பதாம். 17

5-வது சுலோகம் பிதுர்மாதர் வர்க்கபலன்.

புகலவேங்கிசிகாலத்தில் பூமியி லுதிக்கத்தானும்
தகயதில்சனிதன்னாலே தந்தையின்வருக்கங்கூறல்
மிகமதியவனால்மாதுர் மேவியவருக்கமெல்லாஞ்
சகமதில்விபரங்கண்டு சாற்றுவாய்தீரமாக.

இ-ள். இராத்ரி காலத்தில் செனனமானவர்களுக்கும் ஆதானமானவர் களுக்கு சனியினாலே தகப்பன் வர்க்கங்களின் பலனையும் சந்திரனாலே தாயுடைய சகோதரங்கள்வர்க்கபலனையும் சொல்லவேண்டியதென்பதாம்.

5-வது சுலோகம் பிதுர்மாதுர்வர்க்கபலன்.

ஆகுமாவானஞ்சென்ம மானதுஇரவுமானால்
யூகமாமிரவியாலே யுரைப்பதுதந்தைவர்க்கம்
ஏகுமாமதிதன்னாலே இவனதுமாதுர்வர்க்கம்
வாகுளசோதரங்கள் வருபலனுரைப்பதாமே.

இ-ள். ஆதானமாவது செனனமாவது இராக்காலமானால் சூரியனாலே தகப்பன் சகோதரவர்க்கபலனும் சந்திரனாலே தாய்வர்க்கபலனுஞ் சொல் லப்படுமென்பதாம். 19

5-வது சுலோகம் பிதுர்வர்க்கத்துடன் பிதாசகோதரன்.

உரைவருபகல்காலத்தி லுதித்திடவாதானங்கள்
குறைவிலாதமரும்போது கூறிடுமொற்றைராசி,
நிறைகதிரிருந்தாராகில் நிகழ்பலன்பிதுர்க்குநல்லன்
மறைநிசிபிதுரின்மூத்தோர் வருமிளையோருக்கன்பன்.

இ-ள். சூரியன் ஒற்றையிராசியாகிய மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பமிந்த ஆறு ராசிகளில் எதில் இருந்தபோதிலும் பகலில் ஆதானமானவரும் செனனமானவரும் தகப்பனுக்கு சுபகரனுவான், இராத்திரியில் செனனமானவரும் ஆதானமானவரும் தகப்பனுடன் பிறந்த பெரிய தகப்பன் சிறிய தகப்பனுக்கு சுபகரமுள்ளவனுக விருப்பானென்பதாம்.

5-வது சுலோகம் மாதுர்வர்க்கத்திற்கு சுபன்.

வருவதுவெள்ளிதாமும் வலிவொடுசமவோரையினில்
திரமுடனிருக்கும்போது தினகரன்காலந்தன்னில்
வருமவன்தாய்க்குமன்பன் மற்றுமிராதனில்வந்தோனும்
பெரியதாய்சிறியதாய்க்கும் பிரபலசுபனுவானே.

இ-ள். சுக்கிரன் இரட்டை இராசியாகிய ரிஷபம் கடகம் கன்னி விர்ச்சிகம் மகரம் மீனம் இந்த இராசிகள் ஆறில் ஒரு இராசியிலிருக்க பகல் காலத்தில் ஆதானமானவனும் செனனமானவனும் தாய்க்கு சுபகரனுவான் இராத்திரியில் செனனம் ஆதானமானவன் தாயுடன் பிறந்த பெரியதாய் சிறியதாய்க்கு சுபகரனுயிருப்பானென்பதாம். 21

5-வது தகப்பன் வர்க்கசுபன்.

திகழ்சனிபுருஷராசி சென்றிடநிசியில்வந்தான்
புகழ்தந்தைதனக்குநல்லோன் பொற்புறுபகலில்வந்தோன்
மகிழ்சிறுதந்தையர்க்கு மற்றுமேபெருந்தந்தைக்கும்
நிகழ்சுபகரனுமாவான் நீணிலங்கீர்த்தியோங்க.

இ-ள். சனி ஒற்றைராசியாகிய மேஷம் மிதுனம் சிம்மம் துலாம்தனுசு கும்பம் இந்த இராசிகளிலிருக்க இராத்திரியில் செனனமாவது ஆதானமாவது ஆனவன் தகப்பனுக்கு சுபகரனுவன் பகலில் ஆதானமாவது செனனமாவது ஆனவன் தகப்பனுடன் பிறந்த பெரிய தகப்பன் சிறிய தகப்பனுக்கும் சுபகரனுவானென்பதாம். 22

5-வது சுலோகம் மாதுர்வர்க்கத்திற்கு சுபன்.

ஓங்கியநிலவிரட்டை யோரையிலமர்ந்திருக்க
பாங்குடனிசியில்வந்தான் பகரன்னைதனக்குநல்லன்

ஆங்கவன்பகலுதித்தா லன்னைசோதரிகளுக்கே
நீங்கிடாச்சுபனுமென்று நெறியுடன்கூறினேமே.

இ-ள். சந்திரன் இரட்டைராசியாகிய ரிஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரமீனம் இந்த ஆறு இராசிகளி லெதிலாவதிருக்க இராத்திரியில் ஆதானமானவரும் செனனமானவரும் தாய்க்கு சுபனுகும் பகலில் செனனம் ஆதானமானவர் தாயுடன் பிறந்த பெரியதாய் சிறியதாய்க்கும் சுபகரனுமென்பதாம். 23

5-வது சுலோகம் பிதுர்வர்க்க அசுபலன்.

நெறிகதிரிரட்டைராசி நிற்கவாதானகாலம்
குறியுடன்பகலுமாகில் குணமிலன்பிதுர்தனக்கே
வருநிசியதனில்சேயாய் வந்தவன்பிதுர்துணைக்கு
உரியவனல்லதீய னுண்மைகண்டுரைப்பதாமே.

இ-ள். சூரியன் இரட்டை ராசியாகிய ரிஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம் மீன மிந்த இராசிகளிலிருக்க ஆதானமாவது செனமாவதுபகலிலானவன் தகப்பனுக்கு அசுபன் இராத்திரியில் ஆதானமாவது செனனமாவது ஆனவன் பிதுரின் சகோதரர்க்கு அசுபனு யிருப்பானென்பதாம்.

5-சுலோகம் மாதுர்வர்க்க அசுபன்.

கண்டிடும்பகலிற்சென்மம் கவியவனொற்றையிராசி
அண்டியேயிருக்கும்போது அன்னைக்குத்தீயனுவான்
கொண்டிடுநிசியில்வந்தான் குலவியசிறியதாய்க்கும்
பண்டுமுன்னுதித்தாய்க்கும் பாலகன்சுபனுமே.

இ-ள். ஆதானம் சென்மம் பகலிலானவற்கு சுக்கிரன் மேஷமிதுன சிம்மம் துலாம் தனுசு கும்பம் இந்த இராசியிலிருக்க தாய்க்கு அசுபன். இரவில் ஆதானம் சென்மமானுல் தாயுடன்பிறந்த சிறியதாய்க்கும் பெரியதாய்க்கும் அசுபனுமென்பதாம். 25

5-வது சுலோகம் பிதுர்வர்க்க அசுபன்.

பாலனேநிசியில்தோன்ற பங்கொன்றையிராசிநிற்கும்
காலமேபிதுர்தமக்கு கருதிடாவசுபனுகும்
சீலமாய்பகலில்வந்தான் சீருருபிதுரின்பின்னேன்
மேலதாமுன்னேனுக்கும் மிகவசுபனுமாவானே.

இ-ள். சனி மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனு கும்பம் இந்தவிராசியிலிருக்க ஆதானம் சென்மம் இரவிலானவர்கள் பிதுருக்கு அசுபன் பகலில் ஆதானம் சென்மமானவர் பிதுருக்கு இளையவராகிய சிறியதகப்பனுக்கும் பெரிய தகப்பனுக்கும் அசுபனுமென்பதாம். 26

5-வது சுலோகம் மாதுர்வர்க்க அசுபன்.

பலமுளவிஷமுமோரை பால்மதிநிற்கும்போது
நிலமதில்நிசியில்வந்தான் நேர்மையாந்தாய்க்குத்தீயன்
குலவியபகலில்வந்தான் குணமிலான்சிறியதாய்க்கும்
நலமுளபெரியதாய்க்கும் நற்சுதன்சுகமில்லானே.

இ-ள். சந்திரன் ஒற்றை ராசியாகிய மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இவைகளிலிருக்க இரவில் ஆதானம் செனனமானவன் தாய்க்கு அசுபன் பகலில் ஆதானம் செனனமானவன் தாயுடன் பிறந்த சிறியதாய் பெரியதாய்க்கும் அசுபனுமென்பதாம். 27

6-வது சுலோகம். கருப்பஸ்திரீ மரணம்.

சுகமுளவாதானத்தின் தூயலக்கினத்தைநல்லோர்
இகமதிற்பார்வையற்றே யிருந்திடவாதானத்தை
அகமுளதீயர்காணி லழகுறுங்கர்ப்பமாதர்
செகமதில்மரணமாவாள் சாற்றியபலனீதாமே.

இ-ள். சென்மமான ஆதான லக்கினத்தை சுபர்கள் பார்வையில்லாதிருக்க அந்த ஆதான லக்கினத்தை பாபிகள் பார்க்க வுலகத்தில் கருப்பமாயிருக்கப்பட்ட ஸ்திரீ மரணமாவாளென்பதாம். 28

6-வது சுலோகம். கருப்பஸ்திரீ மரணம்.

சாற்றியவாதானத்தை சவுமியர்நோக்கமற்றும்
ஏற்றிடுமீராறுபாப ரிருக்ககர்ப்பிணியுஞ்சாவாள்
மாற்றிடாதிரண்டில்தீயர் மருவிடகர்ப்பமாது
கூற்றுவனுலகுசேர்வள் குறிப்பதுவுணர்ந்திடாயே.

இ-ள். கருப்பாதான லக்கினத்தை சுபக்கிரகம் பார்க்காதிருக்க இரண்டாமிடத்தில் பாபரிருக்க பிணிமரணம் தவிர பன்னிரண்டாமிடத்தில் பாபரிருக்கினும் கருப்பிணி மரணம் இந்த இரண்டிலுமிருந்தாலும் மரணம் உதாரணம் கார்க்கிவசனம் சொல்லியிருக்கிறா ரென்பதாம். 29

6-வது சுலோகம். கருப்பஸ்திரீ மரணம்.

ஆய்ந்தநல்லுலயந்தன்னி லடைந்திடுநீலன்றன்னை
தேய்மதிநோக்கினும் சேயவன்கண்ணுற்றாலும்
தாய்தருபுவியிலுள்ள சுகமுள்ளகருப்பமாது
சேய்வயிறிருக்கும்போதே செல்லுவாளேமநாடு.

இ-ள். கருப்பாதான லக்னத்திலிருந்த சனியை அமரபக்ஷ சந்திரன் பார்த்தாலும் அல்லது செவ்வாய் பார்த்தாலும் கருப்பஸ்திரீ கருப்பத்துடனே மரணமாவா ளென்பதாம். 30

7-வது சுலோகம். கருப்பஸ்திரீ மரணம்.

நாடியகருப்பாதான நல்லலக்கினத்திற்றிங்கள்
கூடியேயிருக்கும்போது குணமிலார்வியமிரண்டெனும்
வீடதிலிருக்கால்லோர் மேவிடில்நோக்குமுற்றுல்
சேடியாங்கர்ப்பமாது செல்லுவாள்வானலோகம்.

இ-ள். கருப்பாதான லக்கினத்தில் சந்திரனிருக்க விரண்டாமிடம் பன்னிரண்டாமிடத்தில் பாபக்கிரக மிருக்கினும் அல்லது நோக்கினும் சுபர்கள்கூடியிருக்க அல்லது நோக்கமு மில்லையாயின் கருப்பஸ்திரீ மரணமாவா ளென்பதாம். 31

7-வது சுலோகம் கருப்பஸ்திரீ மரணம்.

செல்லுமாதானமொன்றுய்த் திங்களார்விடமுமொன்றுய்
சொல்லுமிவ்விரண்டோரைக்கும் தோயுமீராறிரண்டில்
அல்லலுற்றிடுதீயோர்களமர்ந்திடசுபர்நோக்கற்றுல்
நல்லவள்கர்ப்பமாது நமனுலகத்திற்சேர்வாள்.

இ-ள். கர்ப்பாதான லக்னம் ஒரு இராசியாகியும் சந்திரனிருந்த வீடு ஒரு இராசியுமாகி யிருக்க இந்த இரண்டு இராசிக்கும் இரண்டுபன்னிரண்டில் பாபர்களிருக்க சுபக்கிரகம் லக்னத்தை அல்லது சந்திரனைப்பார்க்காவிட்டால் கருப்பஸ்திரீ மரணமாவாளென்பதாம். 32

7-வது சுலோகம் கருப்பஸ்திரீ மரணம்.

கதிபெறுமுதயத்திற்குக் களங்கனுமூன்றில்நிற்க
நிதியுறுமிரண்டுநாலு நிகழ்தருமீராறுதன்னில்
சதியுறுதீயர்நிற்க சௌமியர்கண்படாக்கால்
மதியுனகருப்பமங்கை மரணமுமாவாளென்னே.

இ-ள். கருப்பாதான லக்னம் அல்லது உதயலக்னத்திற்கு மூன்றுமிடத்தில் சந்திரனிருக்க 2-4-12-இந்த மூன்றிடங்களிலும் பாபக்கிரகமாகிய சூரியன் சனி செவ்வாயிருக்க சுபக்கிரகம் லக்னத்தையாவது சந்திரனையாவது பார்க்காவிட்டால் மரணமாவா ளென்பதாம். 33

7-வது சுலோகம் கருப்பஸ்திரீ மரணம்.

என்னுமிவ்விதநிர்யாண மேற்றகோள்தனிலேமிக்க
மன்னியபலவானுக்கு வகுத்திட்டமாதந்தன்னில்

நன்னயமொழியாள்கருப்ப நாரியுமரணமென்று
இன்னிலத்துறையும்பேருக் கியம்பிடுவழியிதாமே.

இ-ள். கருப்பஸ்திரீகளுக்கு மரணத்தைச் செய்துவைக்கிற கிரகங்களில் வலிதுள்ள கிரகங்களுக்கேற்பட்ட மாதங்களில் கருப்பஸ்திரீ மரணமாவாளென்று சொல்லவேண்டிய தென்பதாம். 34

7-வது சுலோகம். கருப்பஸ்திரீ மரணமாதம்.

இயல்பிடுமுதயத்திற்கு மெழில்மதிதனக்கிரண்டில்
வியமெனுமீராறுதன்னில் விளக்கமாய்ப்பாபர்தங்க
நயந்தருசுபக்கோள்தானும் நாளரசனைசென்மத்தை
முயன்றுநன்னோக்கமுற்றால் மொய்குழல்பிணியாய்க்கூறே.

இ-ள். கர்ப்பாதான லக்னத்திற்கும் சந்திரனுக்கு மிரண்டாமிடம் பன்னிரண்டாமிடங்களில் பாபரிருக்க சுபக்கிரகங்கள் கருப்பாதானலக்கினத்தை அல்லது சந்திரனைநோக்க கருப்பஸ்திரீ பிணிபட்டு வருந்துவாள் மரணமாகமாட்டா ளென்பதாம். இதற்கு உதாரணம் கிரந்தாந்தரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. 35

8-வது சுலோகம் கருப்பஸ்திரீ மரணயோகம் இரண்டு.

கூறியமதிக்குநாலில் குணமிலாத்தீக்கோள்நிற்க
ஆரனுமெட்டில்நின்றா லரிவைகருப்பிணியுஞ்சாவாள்
தேறியசென்மத்திற்குத் திகழ்சுகமதிலோர்தீக்கோள்
நேருரசெவ்வாயெட்டினிற்க கருப்பிணியுஞ்சாவாள்.

இ-ள். சந்திரனிருந்த இராசிக்கு நாலாமிடந்தனில் பாபர்களிருக்க கருப்பிணி மரணமாவாளென்பதாம் கருப்பாதானமாகிய சென்மலக்னத்திற்கு நாலாமிடந்தீயர்களிருக்க செவ்வாயெட்டிலிருக்க கருப்பிணிமரணமாவாள் இந்த கவியிலிரண்டுவித மரணயோகங்கள் கூறப்பட்டதென்பதாம். 36

8-வது சுலோகம் கருப்பஸ்திரீ மரணம்.

நிலமதிற்சென்மத்திற்கு நீள்சுகமதிலேபாபர்
அலரியும்பன்னிரண்டி லம்புலிகுறைந்திருந்து
தலமதிலெங்குற்றாலும் சர்க்குணிகருப்பமாது
உலகத்தின்வாழ்வுநீங்கி யுயிர்தனைநீப்பாள்தானே.

இ-ள். கருப்பாதான லக்னத்திற்கு நாலாமிடத்தில் பாபர்களிருக்க சூரியன் பன்னிரண்டாமிடத்திலிருக்க அமரபக்ஷசந்திர னெந்தவிடத்திலிருந்தபோதிலும் கர்ப்பஸ்திரீ மரணமாவாளென்பதாம். 37

9-வது சுலோகம் கர்ப்பிணி ஆயுதத்தினால் மரணம்.

தானமாங்கர்ப்பந்தன்னில் தரைமகனிருக்கும்போது
வானுரைகதிரோனேழில் வலிதுடனிருந்தாராகில்
கானமானனையசூலாள் கத்தியாயுதங்களாலே
நீணிலமதனிற்சாவாள் நிச்சயங்காணவென்னே.

இ-ள். கருப்பாதான லக்னத்தில் செவ்வாயிருக்க ஏழில் சூரியன் இருக்க கர்ப்பிணி கத்திமுதலான பலவித ஆயுதங்களினாலே மரணமடைவாளென்பதாம். 38

9-வது சுலோகம் கர்ப்பிணி கஷ்டப்படுதல்.

என்னவேபவுமனாதி யிகலுற்றுஜயம்பெற்றும்
பன்னகமதனைச்சேர்ந்தும் பகலமதிதனையேபாம்பு
நன்னிடவாதானத்தின் நவின்றிடுமாசாதிக்கே
சொன்னநாள்தனிலே துயருறும்பலனதாமே.

இ-ள். குஜாதிகிரகங்கள் சேர்ந்து யுத்தமானாலும் யுத்தமாகி செயித்தாலும் இராகு கேதுவுடனேகூடினாலும் சூரியனை அல்லது சந்திரனை இராகு கேதுகூடியிருந்தாலுங் கஷ்டப்பிரசவமாகும் அந்த மாசாதிகளை இராகு கேது கூடினாலும் அந்த மாசத்தில் கஷ்டபிரசவமாகும் என்பதாம். 39

10-வது சுலோகம் கர்ப்பிணி சுகப்பிரசவம்.

மதியவனோடுநல்லோர் மருவிடவுதயந்தன்னில்
துதிபெருஞ்சுபக்கிரகங்கள் சுகம்பத்திரண்டுவேழாம்
பதிதனிற்கோணம்நல்லோர் பகர்லாபம்மூன்றிற்றீயர்
கதிரவனுதயமிந்தைக் கண்டிடசுகமாய்த்தோன்றும்.

இ-ள். சந்திரன் சுபரைக்கூடியிருக்க கர்ப்பாதானம் அல்லது சென்ம லக்னத்தில் சுபக்கிரகமிருக்க 4-1-2-7-5-9-இந்த ஸ்தானங்களிலும் சுபரிருக்க மூன்று பதினொன்றில் பாபர்களிருக்க சூரியன் லக்னத்தை யல்லது சந்திரனைக்காண சுகப்பிரசவமாகும் என்பதாம் உதாரணம் சாராவளியிலும் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம் . 40

10-வது சுலோகம் கர்ப்பிணி சுகப்பிரசவம்.

தோன்றியசென்மந்தன்னை சுதாகரன்றன்னைத்தானும்
சான்றவரென்னும்பானு சதிதனையலசென்மத்தை
ஊன்றியேநோக்குங்காலி லுயர்கருபுஷ்டியோடு
தோன்றிடுமவனிமீதில் சுகமுனமகவுந்தானே.



இ-ள். சென்மலக்னத்தையாவது சந்திரனையாவது சூரியன் பார்க்க சுகமாக பிரசவமாகி புஷ்டியோடுமெகவும் சுகமாயிருக்கும், சாராவளியிலும் சொல்லப்பட்டிருக்கிறதென்பாம். 41

11-வது சுலோகம் ஸ்திரீபுருஷ சென்மம்.

சுகமுளமதிபொன்பானு சூழும்ராசிகளுஞ்சன்மம்
பகருமாண்ராசியம்சம் பற்றிடவாண்பிறக்கும்
மிகசமராசியம்சம் வெண்மதிரவிபொன்சென்மம்
தருமதேல்மடவார்சென்மம் சாற்றுவதோரையாலே.

இ-ள். சந்திரன் குரு சூரியன் சென்மலக்னம் இவைகள் புருஷராசியானலும் புருஷக்குழந்தை செனிக்கும் புருஷராசி நவாம்சம்லக்னம் சந்திரன் சூரியன் குரு இவைகளானல் புருஷக்குழந்தை செனனமாகும் ஸ்திரீ ராசியாகில் ஸ்திரீ குழந்தையே ஜெனிக்கும் ஸ்திரீராசி அம்சமானலும் ஸ்திரீ குழந்தை செனனமாகு மென்பதாம். 42

11-வது சுலோகம் ஸ்திரீபுருஷசென்மம்.

சாற்றிடுகோள்கள்தாமும் சமவியராசிநிற்க
ஏற்றிடுமதிகமாக விருந்திடுராசிதன்னில்
தோற்றிடுமாண்பெண்ணென்று சொல்வதுமிரண்டிராசி
மாற்றிடுமொன்றதாகில் மருவுகோள்வலிபோலாமே.

இ-ள். சென்மலக்னமும் கிரகங்களும் சமராசியிலாகிலும் அல்லது வியராசியிலாகிலு மிருந்தபோதிலும் இந்த இரண்டிலுமெது அதிகமாக விருக்கிறதோ அந்த வலிதறிந்து ஆணென்று நிதானித்துச்சொல்லவேண்டியதென்பதாம். 43

11-வது சுலோகம் புருஷக்குழந்தை செனனம்

வலிவுறுமிரவிபொன்னன் மருவிடவொற்றைராசி
நலமுடனெந்தவோரை நவாங்கிசமதிலுற்றாலும்
பலனுருபுருடசென்மம் பாரதிலுதிக்குமென்று
தலமதிலுடையபேர்க்கு தானுரைத்திடுவதாகும்.

இ-ள். வலிதுபெற்ற குருவும் சூரியனும் மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இந்தராசிகளிருக்க நவாம்சத்தில் எந்த இராசியிலிருந்தபோதிலும் புருஷக்குழந்தையே செனனமாகுமென்பதாம். 44

11-வது சுலோகம் ஸ்திரீகுழந்தை செனனம்.

ஆகியபுகரோன்செவ்வா யம்புலியிந்தமூவர்
வாகுடன்வலியுள்ளோராய் மகிழ்சமராசிநிற்க

யேகியநவாங்கிசந்தா னெதுவாகவிருந்திட்டாலும்.
தோகையாள்கருப்பிணிக்குத் தோன்றிடும்புவியில்பெண்ணே

இ-ள். வலிதுபெற்று சுக்கிரன் செவ்வாய் சந்திரன் இவர்கள் சமராசியாகிய ரிஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம் மீனம் இந்த இராசியிலிருக்க இவர்கள் நவாங்கிசத்தில் மாறி யெந்த இராசியிலிருந்தபோதிலும் ஸ்திரீ சென்மம் அதாவது பெண்குழந்தை பிறக்குமென்பதாம். 45

11-வது சுலோகம் இரட்டைப்பிள்ளை செனனம்.

புவிதனிற்றுகரம்வீணை புகன்றிடுமங்கிசத்தில்
தவமுளபொன்னெல்நிற்க சாமன்வில்யாழைநோக்க
குவலயமதிலாண்பெண்ணும் கூடியேகருவிருந்து
அவனியிற்றோன்றுமென்றே யறிந்திடாய்கோள்தன்னாலே.

இ-ள். சூரியனும் குருவும் மிதுனம் நவாங்கிசம் அல்லது தனுசுநவாங்கிசத்திலிருக்க இவர்களைப் புதன்பார்க்க ஆணும்பெண்ணுமாகக்கூடிய யிரட்டை பிள்ளை பிறக்கு மென்பதாம். 46

11-வது சுலோகம் பெண்குழந்தை செனனம்.

அரிவையுமயிலையோரை யதினவாங்கிசையிலொன்றில்
குருதியுயுலவுஞ்சுங்கன் குணமுடனிருக்கும்போது
அறிஞனுமிவரைநோக்க வழகுறுமடவாராக
விரிபுவியதிலுதிக்கும் விபரங்களிதுதான்காணே.

இ-ள். கன்னி மீனராசி நவாங்கிசத்தில் செவ்வாய் சந்திரன் சுக்கிரன் இவர்களிருக்க புதன் இவர்களைப்பார்க்கப் பெண்குழந்தை பிறக்கும் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 47

11-வது சுலோகம் ஆண்குழந்தை செனனம்.

பரவியசனியவன்றான் பற்றுமாதானஞ்சென்மம்
வருமறுதன்னைவிட்டே மன்னிடபிருஷராசி
திரிதியமைதேழொன்பான் செய்யலாபங்கடன்னில்
கரியவனிருக்கவாண்சேய் காசினியதிலுதிக்கும்.

இ-ள். சனி ஆதான லக்னத்தைவிட்டு புருஷராசியிலிருக்க அந்தசனி 3-5-7-9-11-இந்த ஸ்தானங்களிலெதிலாகிலு மிருக்க ஆண்குழந்தை பிறக்கு மென்பதாம். 48

12-வது சுலோகம் கிரகராசிவலிதால் ஆண்பெண்ணறிய.

காசினிமங்கையர்க்கு கருவுண்டாம்விதங்கள்தாமும்,
நேசமாயுரைப்பதற்கு நிலையதுவறிந்தேமிக்க
தேசுருங்கிரகத்தாலே தெரிவதாண்பெண்ணென்று
பேசுவாய்தீரமாக பெரும்புவியுற்றபேர்க்கே.

இ-ள். கருப்பாதான காலத்தைக்கொண்டும் உதய லக்கினத்தைக் கொண்டும் கிரக நிலையின் வலிதைக்கொண்டு ஆண்பெண்ணென்ற விபரந் தெரிந்து உலகில் யாவருக்கும் பலாபலன் உரைக்கவேண்டியதென்பதாம்.

13-வது சுலோகம் முதலாவது அலிசெனனம்.

உற்றநன்மதியோன்றானு முயர்சமராசிதன்னிற்
பற்றிடவாதவன்றான் பகர்வியராசியேறி
நிற்றலால்மதியைப்பானு நேர்பெறநோக்கும்போது
பெற்றசேயலியாமென்று பேசுவாயுலகிற்றானே.

இ-ள். சந்திரன் இரட்டைராசியாகிய ரிஷபம் கடகம் கன்னிவிருச்சிகம் மகரம் மீனம் இந்த ராசிகளிலிருக்க சூரியன் மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இந்த ராசிகளில் எதிலாகிலுமிருந்து சந்திரனைப்பார்க்க பிறக்கிற சிசுவு அலியாகு மென்பதாம். 50

13-வது சுலோகம் இரண்டாவது அலிசெனனம்.

உலகத்திற்புருஷராசி யுற்றிடுமாலோன்றன்னை
நலமுறுமிரட்டைராசி நண்ணியசனியன்நோக்க
குலவுமிப்புவியுதித்த குழந்தையுமலியதென்றே
சலனமதற்றேகூறு தாரணிமானிடர்க்கே.

இ-ள். மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இந்தராசிகளிலிருக்கிற புதனை ரிஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம் மீனம் இவைகளிலிருந்து சனி புதனைப்பார்க்க விருக்கிற சிசுவு வலியாகுமென்பதாம்.

13-வது சுலோகம் மூன்றாவது அலிசெனனம்.

தாரணிசுதனுஞ்செவ்வாய் தங்கிடபுருஷராசி
சூரனுமிரட்டைராசி சுகமுடனிருக்கவிக்கோள்
நேரதாயொருவரைத்தான் நெறியுடனோக்கும்போது
பாரதிலலியதாகப் பாவைபெற்றெடுப்பாள்தானே.

இ-ள். செவ்வாய் மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இந்த புருஷராசிகளிலிருக்கசூரியன் ரிஷபம் கடகம்கன்னிவிருச்சிகம்மகரம் மீனம்

இந்த ஸ்திரீ ராசிகளிலிருந்தது செவ்வாயைப்பார்க்க அல்லது செவ்வாய் சூரியனைப்பார்க்க அலிசெனன மென்பதாம். 52

13-வது சுலோகம். நாலாவது அலிசென்மம்.

தானவன்செனனமொற்றை தானுறச்சேயவன்று
ளீனமில்லிரட்டைராசி யிருந்துமேமதிசென்மத்தை
தானுமேநோக்கும்போது சாற்றிடுமலியதாக
ஞானிலமறியதோன்றும் நற்பலன்கூறுநான்கே.

இ-ள். சந்திரனிருக்க இராசியும் சென்மலக்கினமும் புருஷ இராசியாகி செவ்வாய் ஸ்திரீ இராசியிலிருந்து சந்திரனையாவது சென்ம லக்னத்தையாவது பார்க்க நாலாவது அலிசெனனம் பிறக்குமென்பதாம். 53

13-வது சுலோகம். ஐந்தாவது அலிசென்மம்.

கூறியமதிபெண்ராசி குலவுமாலாணிராசி
தேறியேஇருக்கும்போது சிறப்புறுமிவர்களைத்தான்
ஆரலேகண்ணுற்றுக்கா லவனியிலுதித்தபாலன்
நேரதாமலியதென்றே நிச்சயபலன்கூறைந்தே.

இ-ள். புதன் புருஷ இராசியிலும் சந்திரன் ஸ்திரீ இராசியிலுமிருக்க இவர்களைச் செவ்வாய் எந்த ராசியிலிருந்தாவது பார்க்க ஐந்தாவது அலி சென்மம் பிறக்குமென்பதாம். 54

13-வது சுலோகம். ஆறுவது அலிஜென்மம்.

பலனுறுமதிஜன்மங்கள் பளிங்கவனெங்குற்றலும்
நலமுறுபுருஷராசி நவாங்கிசைதனிலிருக்க
தலமதில்மகவுதித்தால் தப்பாதுஅலியதென்று
பெலமுடனுல்கோருக்கு பேசநன்முறையிமாறே.

இ-ள். சந்திரனும் லக்கினமும் சுக்ரனும் இராசியில் எதிலிருந்தாலும் அமிசையில் புருஷவிராசியாயிருக்க இவர்கள் அதில் வலிதுடனிருக்க ஆறுவது அலிசெனனம் பிறக்கும் என்பதாம் இப்படி ஆறுவிதயோகமும் சொல்லப்பட்டது உதாரணம் பாதராயணர் வசனமென்பதாம். 55

14-வது சுலோகம். இரட்டைப்பிள்ளை ஜனனம்.

முறையுடனிலவும்வெள்ளி மொய்குழலிராசிநிற்க
சுரகுருமால்சேய்சென்மம் தூயவாண்ராசியாகில்
பரவியகோள்கடங்கும் பற்றூதுமிதுனம்போல
திரமுடன்பெண்ணுமாணும் சேர்ந்துமேபிறக்குஞ்செப்பே.

இ-ள். சந்திரன் சுக்கிரன் இருவரும் இரட்டை இராசியிலிருக்க குரு புதன் செவ்வாய் சென்மலக்கினம் இந்த நாலும் ஒற்றை யிராசியாயிருக்க இப்படி கிரகம் ஸ்திரீராசியிலும் புருஷராசியிலுமிருப்பதால் யிந்தவிதமாக மிதுனத்தைப்போல ஸ்திரீகுழந்தையும் புருஷக்குழந்தையும் ஜெனனமாகு மென்பதாம். 56

14-வது சுலோகம். இரட்டைப்பிள்ளைச் சனனம்.

செப்பியசென்மலக்னம் செழுமதியுறையுமில்லம்,
ஒப்பியசமவோரையா யுயர்புருஷக்கோள்தானும்
துப்புருமதியையல்லால் தூயசென்மத்தைப்பார்க்க
இப்புவியதிலாண்பெண்ணு மிரட்டையாய்ச்செனிக்குமாமே.

இ-ள். சென்மலக்கினமும் சந்திரனிருந்தவீடும் இரட்டைராசியா யிருக்க புருஷகிரகங்களாகிய செவ்வாய் சூரியன் குரு இவர்களில் யாராவது சென்ம லக்கினத்தையாவது சந்திர லக்கினத்தையாவது பார்க்க ஆண் குழந்தையும் பெண்குழந்தையுமாகக்கூடி இரட்டைப்பிள்ளையாகப் பிறக்கு மென்பதாம். 57

16-வது சுலோகம் இரட்டைப்பிள்ளைச் செனனம்.

இரட்டைராசியதேசென்ம மிரணியன்செவ்வாய்புத்தி
இரட்டைராசியிலேமிக்க வெழில்பெலவானுய்நிற்க
இரட்டையாய்ப்பெண்ணுமாணு மேந்திழைபெறுவாளென்று
இரட்டைசென்மங்கள்தன்னை யியம்பினனவனியோர்க்கே.

இ-ள். சென்மலக்னம் குரு செவ்வாய் புதன் இவர்கள் ஸ்திரீ ராசியாக அவர்களு மந்தராசியில் பலவானுயிருக்க கர்ப்பிணி ஆணும் பெண்ணுமாக இரட்டைப்பிள்ளைகளைப் பெறுவாளென்று இந்தவிதமாக இரட்டைசென் மங்கள் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 58

14-வது சுலோகம் மூன்றுசிசு செனனம்.

இயம்பிடுயாழ்நவாம்ச மிருந்திடுபுலவன்றன்னை
நயமுறுமுபயராசி நவாங்கிசமிருந்தகோள்கள்
சுயமொடுநோக்குங்காலிற் றேன்றிடுபுருஷசென்மம்
மயிலெனபெண்ணிரண்டை மங்கைபெற்றெடுப்பாளாமே.

இ-ள். மிதுனம் நவாங்கிசத்திலிருந்த புதனை உபயராசியாகிய கன்னி தனுசு மீனத்திலிருந்த கிரகம் புதனைப்பார்க்க ஆண்குழந்தை ஒன்றும் பெண்குழந்தை இரண்டுமாக மூன்று சிசுவைப்பெற்றெடுப்பாளென்பதாம்.

### 14-வது சுலோகம் மூன்று சிசு செனனம்.

மங்கைநவாம்சையுற்ற மால்தனையுபயராசி
தங்கியகிரகம்நோக்க தையலிரண்டாமொன்றாக
இங்கிதத்துடனேமூன்று கிளவலைபெறுவாளென்று
சங்கயதறவுரைத்தோம் தாரணியுறுமாந்தர்க்கே.

இ-ள். கன்னியாராசி நவாம்சையிலிருந்த புதனை மற்ற உபயராசிகளி லிருந்த கிரகங்கள் பார்க்க பெண்குழந்தை இரண்டும் ஆண் குழந்தை ஒன்றும் ஆக மூன்று சிசுக்களைப் பெறுவாளென்பதாம். 60

### 14-வது சுலோகம் மூன்று ஆண்சிசு செனனம்.

உருமியாழ்நவாங்கிசத்தி லுறைந்தபண்டிதனைத்தாமும்
துரகம்மில்லதனிலுற்ற தூயகோளெவர்களேனும்
மருவிடவலதுநோக்க மங்கையுஞ்சிசுக்கள்மூன்றை
பெருமையாயாணதாக பெறுவன்பேருலகிற்றானே.

இ-ள். மிதுன நவாங்கிசத்திலிருந்த புதனை தனுசு மிதுன மிருந்தகிர கம் நோக்கினாலும் அல்லது மிதுனராசியில்தானே யாராவது கூடியிருந்தா லும் அப்போது மூன்று ஆண் சிசுக்களைப் பெறுவாளென்பதாம். 61

### 14-வது சுலோகம் மூன்று பெண்சிசு செனனம்.

பேர்பெருங்கன்னிராசி பெருநவாங்கிசையிலுற்ற
சீர்பெரும்மாலோன்றன்னை திகழ்கயல்சேடியம்ச
மார்கிரகங்கள்தாமும் மங்கையாமிராசிதன்னை
பார்தனிலேக்கப்பெண்சேய் பகர்வதுமூன்றுதிக்கும்.

இ-ள். கன்னியாராசி நவாம்சையிலிருந்த புதனையாராவது கூடிநின்றா லும் அல்லது மீனநவாங்கிசையிலிருந்த கிரகம் யாராவது நோக்கினாலும் மூன்று பெண் சிசுக்களைப்பெறுவாள். உதாரணம் சாராவளியிலும் சொல் லப்பட்டிருக்கிறதென்பதாம். 62

### 14-வது சுலோகம் பலவிதசெந்து செனனம்.

உதயமுந்தனுவிராசி யுருங்கடைநவாங்கிசந்தான்
பதியதுசென்மங்களாக பலமுறுபுதனும்நீலன்
துதிபெறநோக்கவல்லால் துரோணத்திலிருந்தபோதும்
அதிவிதபலஜந்துக்கள் லதரித்திடுமாமென்னே.

இ-ள். தனுராசியி லக்கினமாகி அதில் அந்தியநவாம்சம் சென்மலக்ன மாக அந்த லக்கினத்தில் புதனிருந்தாலும் அல்லது சனியிருந்தாலும் பல

செந்துக்கள் செனிக்கும் இந்த செனனத்திற்கு ஜயராவேஷ்டித செனன மென்று சொல்லப்படு மென்பதாம் 63

15-வது சுலோகம் கருப்பத்திற்கு முதல் மாதாதிபதி.

என்னவேகர்ப்பினிங்கு வீரைந்துமாதத்திற்கும்
மன்னியவெழுகோள்தானும் மாசத்துக்கதிபனுவான்
உன்னிதநாதவிந்து வொன்றுனமாதத்திற்கே
துன்னியபுகரோன்றுனும் சுயவதிபதியாகும்.

இ-ள். ஸ்திரீகளுக்கு கர்ப்பாதானமுதல் பிரசவம்வரைக்கும் பத்து மாதங்களாகும் இந்த பத்துமாதங்களுக்கும் ஏழுகிரகங்கள் அதிபதியாவார் கள் அதாவது முதல்மாதத்தில் கருப்பந் தங்கியிருப்பதற்கு சுக்கிரனே அதிபதியாகுமென்பதாம். 64

16-வது சுலோகம் இரண்டாமாதம் மூன்றுமாதமதிபதி.

ஆகியவிரண்டாந்திங்க ளிரிவையின்கர்ப்பத்துள்ளாய்
வாகுடன்றடித்துமாம்சம் வளர்பிண்டநாதன்செவ்வாய்
ஏகியமூன்றுந்திங்க ளிவைகளுமுருவமாகும்
ஆகியவதற்குநாத னந்தணனுவான்காணே.

இ-ள். கருப்பத்திற்கு இரண்டாவது மாதத்தில் சுக்ல சுரோணிதம் ஒன்றாய்ச்சேர்ந்து தடித்து மாமிசமாகி வளர்வதற்கு அதிபதிசெவ்வாயா கும் மூன்றாவது மாதத்தில் தடித்தமாம்சம் திரண்டு கைகால் சிரமென் னும் அவயவமுதிக்கும் அதற்கு அதிபதி பிரகஸ்பதியாகுமென்பதாம். 65

16-வது சுலோகம் நாலாவது ஐந்தாவது ஆறுவதுமாதாதிபதி.

காணவேநாலாந்திங்கள் கடினமாமெலும்புதோன்றும்
பூணவேயதற்குநாதன் புகலுபாஸ்கரனேயாவான்
ஊணவேயைந்திற்றோலு முதிப்பதற்கதிபனுலோன்
தோணுமேயாறில்ரோமந் தோன்றிடவதிபன்நீலன்.

இ-ள். கருப்பத்திற்கு நாலாவதுமாதத்தில் மாமிசம்தடித்து அவயவக் குறியானதற்கு பின் எலும்பு உண்டாகும் அந்த மாதத்துக்கு அதிபதி சூரி யனுகும் ஐந்தாவது மாதத்தில் தோல் உண்டாகி மாமிசக்கூறான அவயவ த்தை வலுக்கச்செய்யும் அதற்கு அதிபதி சந்திரனுகும் ஆறுவதுமாதத்தில் தோல்மேல் மயிர்முளைக்கும் அந்த மாதத்திற்கு அதிபதி சனியாகு மென்ப தாம். 66

16-வது சுலோகம் ஏழாவதுசாமாதிபதி.

தோன்றியவேழாமாதம் தோத்திரம்தொக்குசட்சு
தோன்றியசிங்குவையோடு முகமுள்ளவாக்கிராணம்

தோன்றிடுமிதனைமுன்னோர் தொகுப்பதுஞானேந்திரீயம்
தோன்றிடச்செய்யுநாதன் தூதுவனுவானென்னே.

இ-ள். கருப்பத்திற்கு ஏழாவது மாதத்தில் ஞானேந்திரியமென்று சொல்லப்பட்ட தோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்ராணமாம் இவைகளையே மெய் வாய் கண் மூக்கு செவியென்று சொல்லப்படும் இவைகளுக்கு அதிபதி புதனுகுமென்பதாம். 67

16-வது சுலோகம் எட்டாவது மாசாதிபதி.

எட்டெனுந்திங்கடன்னி யெழிலொருகருப்பந்தங்கும்
சட்டமாஞ்சிசுவுதானுந் தாயவலுண்ணுகின்ற
மட்டிலாபலவாஞ்சத்தை மகவதுசுகமாயுண்ணும்
இட்டமாங்கர்ப்பாதான விலக்கினனிதற்குநாதன்.

இ-ள். கருப்பத்திற்கு எட்டாவது மாசத்தில் கர்ப்பத்தி லிருக்குஞ்சிசுவானது தாயுண்கிற ஆகாரத்தின் சத்துக்களை உந்தி கொடிவழியாகவுண்டு சிசு திர்ப்தியடையும் இந்த மாதத்திற்கு அதிபதி கருப்பாதான லக்கினதிபதி யெந்தக்கிரகமோ அவர்தான் எட்டாமாதத்திற் கதிபதி என்பதாம்.

16-வது சுலோகம் ஒன்பதாமாதம் பத்தாமாதாதிபதி.

ஒன்பதாமாதத்திற்கு வுடுபதியதிபனுகும்
இன்புறுபத்தாமாதி யெல்லவனுற்பிரசூதி
அன்பொடுசுபாசுபங்க ளாதானன்பத்தாமாதன்
தென்பொடுவிருப்பானுகிற் சேய்சுகமுடனுதிக்கும்.

இ-ள். கர்ப்பத்திற்கு ஒன்பதாமாதத்திற்கு அதிபதி சந்திரன் பத்தாமாதத்திற் கதிபதி சூரியனுகும் அவனுலே பிரசவமாகும் உதாரணம் ஹோராசாஸ்திரம் லகுசாதகம் கருப்பாதான லக்னேசனும் பத்தாமிடத்ததிபதியும் வலிதாயுமிருக்க சிசுவு சுகமாகப் பிறக்குமென்பதாம். 69

வசனம்.

யவனேஸ்வரர் பிரதம மாதாதிபதி குசனென்றும் துதிய மாதாதிபதி சுக்ரனென்றும் உதாரணம் சொல்லியிருக்கிறுரென்பதாம். 69

16-வது சுலோகம். கருப்பசிசு புஷ்டியும் ஈனமும்.

சுகமுளவெழுகோடானும் துயரரவதனைச்சேர்ந்து
மிகவலிகுறைந்திட்டாலே வீயமாமம்மாதத்தில்
பகலவனுதியோரும் பகருநின்மலராய்நின்றுல்
சகமதில்புஷ்டியோடுந் தாயிடமிருந்துதிக்கும்.

இ-ள். கருப்பாதான மாதமுதல் பிரசவமாகும் வரையிலுள்ளமாதாதிபதிகள் இராகுகேதுவினுல் யார் பீடிக்கப்பட்டார்களோ அந்த மாதத்தில் கருப்பத்திற்கு பின்னமுண்டாகும் அப்படி பீடிக்கப்படாமல் நிர்மலனுயிருப்பாராகில் கருப்பம் புஷ்டியுண்டாகி யிருக்கும். உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 70

17-வது சுலோகம். அதிக அங்கசெனனம்.

உதயமுமைந்தொன்பானி லுயர்புலவனுமேநிற்க
மதியொடுமற்றவைவர் மாலுக்குவலிவுகுன்றில்
அதிமுகம்வயறுகைகா லங்கமும்விருத்தியாகி
பதியதிலுதிப்பானென்று பகருவாய்ப்பலனைத்தானே.

இ-ள். சென்மலக்னம் ஐந்தாமிடம் ஒன்பதாமிடங்களில் புதன் நட்பு ஆக்ஷி உச்சமூலத் திரிகோணம் என்னுமிடத்தில் வலிதுடனிருக்க மற்ற கிரகங்கள் புதனைப்பார்க்கிலும் வலிகுறைந்திருக்க அதிக அங்கமாம் அதெப்படி யென்றால் கால் கை வயிறு முதலான விடங்களாகும் காலில் விரலதிகமாயும் கையில் விரலதிகமாயும் அல்லது கட்டி சதை வளர்ச்சி முதலானது மாகுமென்பதாம். 71

17-வது சுலோகம். ஊமைசெனனம்.

தானவன்விடையினிற்க சலசரநண்டுதேளி
லானவந்தியநவாங்கிச மடைந்திடுபாபக்கோளால்
ஊனவாக்குடையோனுக வுற்பவக்கர்ப்பச்சேயன்
மானிலந்தனிலுதிப்பான் மகவிதன்பலனைக்கூறே.

இ-ள். சந்திரன் ரிஷபராசியிலிருக்க கடகம் மீனம் விருச்சிகத்தின் கடைசி நவாங்கிசத்தில் பாபர்களிருந்தாராகில் அவராலே ஊமையனைகப் பிறப்பன் இதற்கடுத்த கவியிலும் இதின் தொடர்புசொல்லப்படு மென்பதாம். 72

17-வது சுலோகம். ஊமை செனனவிபரம்.

கூறுமென்னிலவைநல்லோர் குறிப்புடனேக்கில்வாக்கும்
தேறியேவசனிப்பானும் தீயரும்சுபர்தன்னேக்கம்
நேரிடில்சுபர்வலுத்தால் நிலமதில்சின்னுள்வாக்கு
சாருமாம்வலிதாய்த்தீயர் தானேக்கவூமைசொல்லே.

இ-ள். முன்கவியில் சொல்லியபிரகாரம் கிரகமிருந்து அந்த ரிஷபச்சந்திரனை சுபர்கள் நோக்க ஊமையல்ல நன்ருய்ப்பேசுவானும் சுபரும் பாபரும் பார்க்க சிலநாட்சென்று பேசுவான் பாபர்நோக்க ஊமையெனப்படும் உதாரணம் கார்க்கிவசன மென்பதாம். 73

18-வது சுலோகம். பல்லுடன்செனனம்.

சொல்லியபவுமீலன் ருேகையாழ்தன்னிலேனும்
அல்லதுயாழ்பெண்ணம்ச மதுதனில்சேயவன்ருன்
எல்லவன்மகனிருக்க விளவலுங்கருப்பந்தன்னிற்
பல்லதுமுளைத்தோனகப் பாலகன்ஜனிப்பான்ருனே.

இரட்டித்து கூறியது கௌசிகம்.

சனியொடுபுதனுங்கன்னி தண்டிராசியிலுற்ருலும்
இனியயாழ்கன்னியம்ச மிருந்திடுகாலந்தன்னில்
வனிதையர்கருப்பமுற்ற மகவுமேதந்தத்தோடு
தனியதாய்ப்பிறக்குமென்று சாற்றுவாய்த்தரணியோர்க்கே.

இ-ள். சனி செவ்வாய் இருவரும் மிதுனராசியிலாவது அல்லது கன்னி யாராசியிலாவதிருக்க பல்லுமுளைத்து குழந்தை பிறக்குமாம், சனி செவ் வாய்மிதுன நவாமிசையிலிருந்தாலும் அல்லது கன்னிநவாம்சையிலிருந்தா லும் பல்லுமுளைத்து பிறக்குமென்பதாம் இந்த கவியும் முந்தினகவியும் இரட்டித்துக் கூறியதால் இதனை கௌசிகமென்று சொல்லப்படுமென்ப தாம். 74

18-வது சுலோகம். குள்ளன் வாமனரூபன்.

சாற்றியகடகலக்னம் சந்திரனதிலேயாக்ஷி
ஏற்றியசனிநோக்கல்ல வெரிவண்ணநோக்குற்ருலும்
தோற்றிடுங்கையுங்காலுந் துண்டம்போல்குள்ளமாயு
மாற்றிடாதுலகுதன்னில் மதலையுமுதிப்பதாமே.

இ-ள். சென்மலக்னங் கடகமாய் அதில் சந்திரன் சுவக்ஷேத்திரமா யிருக்க அந்தச் சந்திரனை சனிநோக்க அல்லது செவ்வாய் நோக்கினுலும் அல்லது இருவரும் நோக்குற்ருலும் கைகால் துண்டம்போல குள்ளனகப் பிறப்பான் இதையேவாமனரூபமெனவும் குள்ளவுருவமெனவும்என்பதாம்.

18-வது சுலோகம். முடவன்செனனம்.

உதயலக்னமீனக வுடுபதிசனிபுஞ்சேயப்
பதியதியமரவல்லால் பார்த்திடுவாராலும்
விதிபெறுமகவும்பூர்வ வினையினல்முடவனக
சதியதாயுலகுதன்னில் தான்வதரிப்பனமே.

இ-ள். மீனராசியே சென்மலக்னமாகி அந்த சென்மலக்னத்தில் சந் திரன் சனி செவ்வாயிருக்க அல்லது பார்க்க முடமாக செனனமாகுமென் பதாம் அதுவும் பூர்வவினையினற்ருன் முடவனக ஜனிப்பானென்பதாம்,

18-வது சுலோகம் செவிடன் சென்னம்.

தரித்திடும்பாபக்கோள்தான் சந்திரன்றனையேசேர்ந்து
விருச்சிகம்மீனங்கொண்டல் மேவவந்தியநவாம்சம்
குறிப்புடனிருந்தபோது குவலயத்துதித்தநேசன்
உரைத்திடுஞ்செவிடனாகு முண்மையாம்விதியதாமே.

இ-ள். பாபர்கள் சந்திரனைச்சேர்ந்து விருச்சிகம் மீனம் கடகம் இந்த இராசிகளின் அந்தியமான கடைநவாங்கிசத்திலிருக்கச் செவிடனாகப் பிறப்பானென்பதாம். 77

18-வது சுலோகம் செவிட்டு சென்மம்.

விழிவழியிந்தயோகம் விளக்கமாயீயுங்கோளை
துதிபெறுஞ்சுபக்கோள்நோக்க தோன்றிடாதிந்தயோகம்
கெதியதுசுபர்கள்மத்யம் கெடுதியுநீசமாகில்
அதிபெலன்குறையுமென்றே அறிந்திடுவிதங்களாமே.

இ-ள். முன் 83-வது கவியில் சொன்னபடி இந்த யோகங்களைக்கொடுக்கும் கிரகத்தை சுபர்கள்பார்க்க இந்தயோகமுண்டாகாது அந்த சுபர்கள் ஆக்ஷியுச்சமாயிருந்தால்தான் இந்த யோகமுண்டாகாது மத்யம் மென்னப்பட்ட நட்பிலிருந்தால் மத்திபனும் பகை நீசம்பெற்ற சுபர்நோக்கினால் இந்தயோகமே உண்டாகும்பகை நீசம்பெற்ற சுபர்களுக்கு வலிதில்லையென்பதாம். 78

18-வது சுலோகம் செவிட்டு சென்னம்.

தங்கியவிந்தயோகம் தானளித்திடுகோள்தன்னை
இங்கிதசுபர்நோக்கற்ற லிப்பலன்சரியாயுண்டாம்
துங்கநற்சுபர்கள்தாமும் தூய்வலியற்றுநோக்க
அங்கதுபலன்முன்போல வடைபவராகக்கூறே.

இ-ள். முன்சொன்ன யோகங்களைக்கொடுக்கும் கிரகத்தைச் சுபர் நோக்காவிட்டால் அந்த யோகமே யுண்டாகும் அப்படி சுபர்கள் பகை நீசமாயிருந்து பார்த்தால் அந்த யோகமே யுண்டாகுமென்பதாம். 79

19-வது சுலோகம் குள்ளன் சென்னம்.

ஆகியமகரராசி யந்தியநவாமிசந்தான்
ஏகியேசெனனமாளு லிரவிசுன்மதியுநோக்க
தோகையர்கருவிலுள்ள சுதனும்வாமனரைப்போல
வாகுளகுள்ளனாக வருவனிப்புவியிற்றனே.

இ-ள். மகரராசியின் கடைசி நவாமிசமாகிய ஒன்பதாவது நவாமிசம் சென்மமாகி அந்த சென்மத்தை சூரியன் சந்திரன் நோக்க கருப்பத்தின்

விருக்கும் சிசுவுவாமனரைப்போல சிறுத்து குள்ளமாக பிறப்பானென்ப தாம். 80

### 19-வது சுலோகம் திரேகாணவிதி.

இப்புவியதிற்றிரேகாண மென்பதொன்றைந்தொன்பான்
அப்படியிரண்டதாகி லைந்திராசியின்சம்பந்தம்
ஒப்பிடுமூன்றுமாகி லொன்பதாமிராசியென்றும்
செப்பிடுமுதலேசென்மம் செயலதுவுரைத்ததாமே.

இ-ள். திரேகாணமாவது செனனகாலத்தி லெது லக்னமாகுமோ அந்த ராசியின் நாழிகையை வினாடியாக்கி மூன்றுகூறிட்டு முதல்கூறு முதல் திரேகாணம் அது சென்மலக்ன சம்பந்தமானதாகும் இரண்டாவது கூறானால் ஐந்தாமிராசியான துதிய திரேகாணமாம் மூன்றாவது கூறாகில் ஒன்பதாமிராசி சம்பந்தமான திரிதிய திரேகாணமென்று சொல்லப்படு மென்பதாம். 81

### 19-வது சுலோகம் புஜக்குறைவுள்ள செனனம்.

உரைதருங்கெர்ப்பாதானத் துறுதிரேகாணம்ரெண்டில்
தரைமகனிருக்குங்காலில் சனிமதிகதிரவன்றான்
முறையுடன்கூடவல்லால் முழுமையாநோக்கும்போது
குறைவுளபுயத்தினோடே குவலயத்துதிக்குஞ்சேயே

இ-ள். எந்தராசியில் செனனமானாலும் அந்தராசியின் நடுக்கூறான இரண்டாவது திரேகாணம் செனனமாக அதில் செவ்வாயிருக்க அந்தச் செவ்வாயுடன் சனி சந்திரன் சூரியன் கூடினாலும் அல்லது பார்த்தாலும் புஜக்குறைவுடனே சிசுபிறக்குமென்பதாம். 82

### 19-வது சுலோகம் பாதக்குறைவுள்ள செனனம்.

உதயமூன்றுந்திரேகாண மொன்பதாமிராசிசேர்ந்த
பதியதுமூன்றதான பகர்திரேகாணந்தன்னில்
உதிரனுமிருந்தகாலி லுடுபதிரவிசுன்காண
பதமதுவீனமுள்ள பாலகன்றோன்றுவானே.

இ-ள். உதய லக்னத்தில் மூன்றாவது திரேகாணம் ஒன்பதாமிராசி சம்பந்தமுள்ளதாம் அந்த திரேகாணத்தில் செவ்வாயிருக்க அந்தச் செவ்வாயை சந்திரன் சூரியன் சனிகாண பாதவீனனான சிசுபிறக்குமென்பதாம்.

### 19-வது சுலோகம் கபந்த செனனம்.

பாலகன்றனக்குச்சென்மப் பதிமுதற்றிரேகாணத்தில்
சீலமாஞ்செவ்வாய்நிற்கத் தினகரன்மதிசுன்காண
சேலொத்தவிழியாள்கர்ப்பச் சிசுவதுசிரமில்லாது
ஞாலத்தில்கபந்தமாக நாரிபெற்றெடுப்பான்பாரே.

இ-ள். சென்மலக்கினம் முதல் திரேகாணமானது லக்ன சம்பந்த முள்ளதானபடியால் அந்த முதல்திரேகாணத்தில் செவ்வாயிருக்க அந்தச் செவ்வாயை சூரியன் சந்திரன் சனி இவர்கள் நோக்க கர்ப்பத்திலிருக்கும் சிசுவின் சிரசு ஈனமுள்ளதாகி கபந்தம் பிறக்கு மென்பதாம். 84

19-வது சுலோகம் புஜம் பாதம் சிரம் ஈனம்.

பாரதிலிந்தயோகம் பகருவேனினியோர்வண்ணம்
சீரதுமூன்றதான திரேகாணமொன்றிற்சேயும்
நேரதாயிருக்கபானு நீலனுநிலவுங்காண
கூறியகைகால்சென்னி குறைவுடன்செனனமாமே.

இ-ள். இந்த வீனபோகத்திற்கு மூன்று திரேகாணத்தில் ஒன்றில் செவ்வாயிருக்க முன்சொன்னவிதமாக சூரிய சந்திர சனியிவர்கள் நோக்க முண்டாயின் புஜவீனம் பாதவீனம் சிரசீனம் இப்படியீனமுள்ள செனனம் செனிக்குமென்பதாம். 85

19-வது சுலோகம் புஜம் பாதம் கிரம் ஈனம்.

செனனத்தின்கிரமமல்லால் சிறந்ததிரேகாணமூன்று
தனிலெந்ததிரேகாணத்துள் தரைமகன்சேர்லக்னத்தை
சனிமதியிரவிநோக்க நன்புயவீனப்பாதம்
கனமுறுசிரசுவூனம் கபந்தமாய்ப்பிறக்கும்செப்பே.

இ-ள். கிரகமில்லாமல் எந்த திரேகாணத்திலாவது அடைந்திருந்த செவ்வாயைச் சனி சூரிய சந்திரன் நோக்க புஜவீனமாயும் பாதவீனமாயும் சிரசீனமாயு மிப்படி வீன அங்கசெனனங்கள் பிறக்குமென்பதாம். 86

19-வது சுலோகம் புஜவீனம்.

பிரபலமொன்றைந்தொன்பான் பெறுராசிமூன்றிலுந்தான்
வுருமுதற்றிரேகாணத்தி லுதிரனுமிருந்தபோது
பருதியுமதியுநீலன் பார்மகன்றன்னைநோக்க
மருவியபுயங்களூன மகவதுவுதிக்குமென்னே.

இ-ள். லக்னம் ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் இந்த இராசி மூன்றிலும் எந்த இராசியிலாவது முதல் திரேகாணத்திலிருந்த செவ்வாயைச் சூரியன் சனி இவர்கள் நோக்க புஜவீனமுள்ள மகவு ஜனிக்குமென்பதாம். 87

19-வது சுலோகம் பாதவீனம்.

என்னவேவொன்றைந்தொன்பா னிராசிகள்மூன்றிலுந்தான்
உன்னுதிரேகாணமிரண்டி லுதிரன்மிருந்தபோது
சுன்மதிபகலவன்றன் றொடர்ந்துமேநோக்கமுற்றால்
தன்னதுபாதமூனத் தனையனுந்தோன்றுவானே.

இ-ள். லக்னம் ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் இந்த இராசி மூன்றுக்கு ளெந்தராசியிலாவது இரண்டாந்திரேகாணத்திலிருந்த செவ்வாயைச்சூரிய சந்திரன் சனி இவர்கள் நோக்க பாதவீனமுள்ள பிள்ளை செனிக்கு மென்பதாம். 88

19-வது சுலோகம் சிரசீனம்.

தோன்றியவொன்றைந்தொன்பான் தொடர்புளராசியாகும்
மூன்றெனுங்கூறிற்சேயு முறைந்திடுகாலந்தன்னில்
சான்றவன்மதியுஞ்சுன்னும் தரைமகன்றன்னைநோக்க
தோன்றிடுங்கபந்தமாகச் சுகந்திடமில்லாதோனே.

இ-ள். லக்னம் ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் இந்தவிராசி மூன்றனுள் எந்த ராசியிலாவது மூன்ருவது கூருன கடைசி திரேகாணத்தில் செவ்வாயிருக்க அந்தச் செவ்வாயைச் சூரியன் சந்திரன் சனி இவர்கள் நோக்கில் தலையூனமான கபந்தம் சுகமும் திடமுமில்லாது செனிக்குமென்பதாம். 89

19--வது சுலோகம்.

கபந்தம் அனேக கிரந்த கர்த்தாவின் மதம் இந்தவிதம்.

திடமுளசென்மலக்னம் செப்புதிரேகாணமூன்றுள்
தொடருமொன்றதிற்சேய்நிற்கத் தூயமாமதியும்பானு
முடவனுநோக்கமுற்ருல் மொழிவதுகபந்தமாக
தடமதிலுதிக்குமென்று சாற்றியபலனீதாமே.

இ-ள். சென்ம லக்னம் எந்த விராசியானலும் அதற்கு மூன்று திரேகாணங்களில் எந்த திரேகாணத்திலாவது செவ்வாயிருக்க அந்தச் செவ்வாயைச் சூரியன் சந்திரன் சனி இவர்கள் நோக்க சிரசீனமாகிய கபந்தம் பிறக்குமென்பதாம். 90

19-வது சுலோகம்.

புஜவீனம் அனேக கிரந்தகர்த்தாவின் மதம் இந்தவிதம்.

இதமுளவைந்தாம்ராசி யினியதிரேகாணமூன்றுள்
பதியெனுமென்றிற்சேயும் பற்றிடரவிசுன்திங்கள்
உதிரனைநோக்குங்கா லுற்பவம்புயவீனம்மாய்
சுதனவனுதிப்பானென்று சொல்லுவாய்ப்பலனைத்தானே.

இ-ள். ஐந்தாமிராசி யெந்தவிராசியானலும் அதற்கு மூன்று திரேகாணங்களானதால் அதில் எந்த திரேகாணத்திலாவது செவ்வாயிருக்க அந்தச் செவ்வாயை சூரியன் சந்திரன் சனி இவர்கள் நோக்க புஜவீனமுள்ள பிள்ளை பிறக்குமென்பதாம். 91

19-வது சுலோகம். மாதுவீனம் அனேககிரந்த கர்த்தாவின் மதம் இந்த விதம்.

தானமாமொன்பான்ராசி தனிலுறுதிரேகாணங்க
ளானதிலொன்றிற்சேயு மடைந்திடவிரவிநீலன்
தானவன்சேயைநோக்க தனையனும்பாதமாகி
யூனமாய்ப்பிறப்பானென்று வுரைத்தநற்பலன்களாமே.

இ-ள். ஒன்பதாமிராசி யெந்தவிராசியானாலும் அதற்கு மூன்று திரேகாணங்களில் எந்த திரேகாணத்திலாவது செவ்வாயிருந்து அந்தச் செவ்வாயைச் சூரியன் சந்திரன் சனி இவர்கள் நோக்க பாதம் ஈனமான சிசு பிறக்கு மென்பதாம். 92

19-வது சுலோகம். யோகவலிது.

பலனுருமிந்தயோகம் பற்றுதல்சுபர்நோக்கற்றால்
நலமுளபுகர்பொன்மாலோ னண்ணிடவலதுநோக்க
குலவிடுமிந்தயோகம் சூழுவிக்குவில்லையென்று
நிலமதுவுற்றபேர்க்கு நீதியாய்ப்பகர்வதாமே.

இ-ள். இப்போது முன்னுரைத்த புஜவீன சிரசீன பாதவீனயோகம் சுபர் கூடுதலும் சுபர்பார்வையுமில்லாதிருந்தால் நிச்சயமாகவுண்டாகுமாம் சுபர்களாகிய குரு சுக்ரன் புதன் இவர்கள் கூடுதலாவது அல்லது பார்வையாவது இருக்குமானால் இந்த வீனயோகங்கள் உண்டாகமாட்டாதென்றறியவேண்டியது. உதாரணம் கார்க்கிவசனமும் சாராவளியும் சொல்லப்பட்ட தென்பதாம். 93

20-வது சுலோகம். குருட்டுசெனனம்.

பகருமாதானலக்னம் பற்றிடுமிரவியாக்ஷி
பகலவனுடனேதிங்கள் பரிவுடன்கூடிநிற்க
பகலவன்சுதனுஞ்சேயும் பாங்குடனுதயம்நோக்க
பகிருவிழியிலானைப் பாரதிலுதிக்குஞ்சேயே.

இ-ள். ஆதானலக்னம் சிங்கமாகி அதில் சூரிய சந்திரர்களிருக்க அந்த ஆதானலக்னத்தை சனி செவ்வாயினால் பார்க்கப்படுமானால் கருப்பத்திலிருக்கும் சிசுவுக்கு இரண்டுகண்களும் பார்வையில்லாததாக சிசுசெனிக்குமென்பதாம். 94

21-வது சுலோகம். வலக்கண்குருடு இடக்கண்குருடு.

உதயமாதானம்சிங்க மொளிகதிராக்ஷிசென்மப்
பதியதைசனிசேய்நோக்க பாலர்க்குவலக்கண்ணூனம்
மதியவன்சியம்நிற்க மங்கலன்சனிநோக்காகில்
விதிபேருமிடக்கண்ணூனம் விளக்கமாய்வந்தசேயே.

இ-ள். ஆதானலக்னம் சிங்கமாய் அதில் சூரியனிருக்க அந்தச்சூரியனைச் சனி செவ்வாய் பார்க்க வலதுகண் ஊனமான குழந்தை செனனமாகும். இந்தவிதமே கெர்ப்பதானலக்னம் சிங்கமாய் அதிலே சந்திரனிருக்க அந்த சந்திரனைச் சனி செவ்வாய் நோக்க இடதுகண் ஊனமுள்ள குழந்தை செனனமாகு மென்பதாம். 95

21-வது சுலோகம் பூவிழுந்தகண் செனனம்.

வந்தசிங்கத்திற்சூரன் மதியொடுகூடியிற்க
விந்தைசேர்சுபரும்பாபர் வெளியில்மதியிருவர்தம்மை
சொந்தமாய்நோக்கசென்மச் ;சுதலுமேபூவிழுந்த
அந்தயில்விழியனுக வவனியிற்பிறப்பான்றுனே.

இ-ள். ஆதானம் சென்மலக்னம் சிங்கமாக அதில் சூரிய சந்திரரும் கூடியிருக்க அந்த சிங்கராசியிலுள்ள சூரிய சந்திரர்களை சுபக்கிரகமும் பாபக்கிரகமும் நோக்க பூவிழுந்த கண்ணுடைய குழந்தை பிறக்கு மென்பதாம்.

21-வது சுலோகம். வலக்கண்பூ இடக்கண்பூ.

தானவன்சிங்கந்தன்னிற் றங்கியகாலந்தன்னில்
தீனனுஞ்சுபரும்பாபர் திஷ்டியேயிடக்கண்பூவாம்
பானவன்சிங்கம்நிற்க பாபரும்சுபரும்நோக்க
வீனமாம்வலக்கண்பூவா யியம்பிடுசாதகற்கே.

இ-ள். சந்திரன் சிங்கவிராசியிலிருக்க சுபரும்பாபரும் சந்திரனை நோக்க இடதுகண் பூவிழுந்து செனிக்கும் சூரியன் சிங்கவிராசியிலிருக்க சுபரும் பாபரும் சூரியனைநோக்க வலதுகண் பூவிழுந்த சிசுசெனனமாகு மென்பதாம். 97

21-வது சுலோகம். வலக்கண்ணூனம் இடக்கண்ணூனம்.

இயம்புமாதனமல்லா லெழில்சென்மமதற்கிராறில்
நயந்தருமதியிருக்க நாடியவிடக்கண்ணூனம்
செயந்தருமாதனத்தும் சென்மத்துக்கிராறுதன்னில்
வெயிலதுவுற்றபோதும் விளங்கிடும்வலக்கண்கேடே.

இ-ள். கருப்பாதான லக்னத்திற்காவது அல்லது சென்ம லக்கினத்திற்காவது பன்னிரண்டாமிடத்தில் சந்திரனிருக்க இடதுகண்ணூனம் இந்தவிதமே கருப்பாதான லக்னத்திற்காவது செனனலக்னத்திற்காவது பன்னிரண்டாமிடத்தில் சூரியனிருக்க வலதுகண்ணூனமாக செனனமுண்டாகும் உதாரணம் நவனீதாரிஷ்ட கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 98

21-வது சுலோகம். கண்ணூனயோகவலித்.

கண்கெடும்பலனதற்கு கடினராந்தீக்கோள்கூட
எண்ணியநோக்குமுற்று லிப்பலன்சரிநடக்கும்
நண்ணியசுபர்தான்நோக்கம் நாடியேவிருந்தபோது
புண்ணியன்றனக்குயோகம் பொருந்திடாதென்னலாமே.

இ-ள். முன்கவியில் சொல்லப்பட்ட கண்ணூனயோகத்திற்கு பாபர்களிருக்க அல்லது நோக்க அந்தந்த பலனுண்டாகும் சுபர்கள் நோக்கமாயிருந்தாலும் அல்லது கூடியிருந்தாலும் கண்ணூன யோகமுண்டாகா தென்பதாம். 96

21-வது சுலோகம். ஊனயோகமுண்டாகுங் காலம்.

பொருந்தியயோகந்தானும் புகன்றிட்டகோள்தனக்கு
வருந்தசைபுத்தியந்ரம் மற்றும்கோசரத்தினும்
தரும்பலனிவைகளென்று சாஸ்திரவழியுணர்ந்து
பெரும்புவியுறையும்பேர்க்கு பேசிடாய்தீரமாக.

இ-ள். இப்போது சொல்லிவந்த கண்ணூனயோகம் சிசுவுக்கு தசாபுத்தியந்திரம் கோசாரபலன் காலங்களிலாவது இந்த யோகமுண்டாகும் இதை நன்றாய் யூகித்துச் சொல்லவேண்டிய தென்பதாம். 100

21-வது சுலோகம். பிரசவகாலம் மாதம் சந்திரனிருந்தராசி.

பேசியகருப்பாதானம் பிரசனகாலந்தன்னில்
மாசிலாதுவாதசாம்சம் மதிதனைக்கூடிநிற்க
தேசுருமதிசமான சேருயிராசின்முன்னாள்
நேசமாம்பத்தாமாதம் நேரிழைபிரசவிப்பாள்.

இ-ள். கருப்பாதான லக்கினத்தைக்கொண்டும் பிரஸ்னை லக்னகாலத்தின்போது எந்த துவாதசாம்சம் சந்திரனைக் கூடியிருக்குமோ அந்த விராசித சமராசியின் முதலில் பத்துமாதமாகும் அதில் பிரசவிப்பாள் என்பதாம். 101

21-வது சுலோகம். பிரசவகாலம் சந்திரனிருந்தவிராசி.

விதமதுகருப்பாதானம் வெண்மதியுறைந்தவோரை
பதியதின்துவாதசாம்சம் பற்றிடவமிசையாதி
அதினுறுமமிசைபோல வம்புலியடைந்திருக்க
சுதனதுபுரசவந்தான் சுகமுடனுமென்றேதே.

இ-ள். கருப்பாதானகாலம் பிரஸ்னகாலத்தில் சந்திரனிருந்த இராசியும் அந்த விராசி துவாதசாம்சம் எதுவுதயமோ அந்த விராசியில் சந்திரன் வருநாள் கருப்பிணி பிரசவிப்பாளென்பதாம். 102

21-வது சுலோகம். பிரசவகாலம்.

பிரசவகாலக்கூறு பேசிடபகல்ராக்கண்டு
வருகிறராசிதன்னுள் மகிழ்திரிம்சாம்சைபாகம்
மெருழுதயத்தைப்போலும் பிசகிடாமகலிராவில்
உருகடிகைதான்சென்று லுலகதிற்பிரசவிப்பாள்

இ-ள். பிரசவகாலம் கருப்பாதானத்தைக்கொண்டும் பிரஸ்னை லக்கி னத்தைக்கொண்டு பிரசவகாலம் சொல்லவேண்டியது. பிரஸ்னலக்கினத் தில் பாகை முப்பதில் எத்தனையாவதுபாகை உதயமென்று தெரிந்து உதயலக்னராசிபாகையில் எத்தனைசென்றதோ அத்தனைநாழிகை சென்று கருப்பிணி பிரசவிப்பாளென்பதாம். 103

21-வது சுலோகம். பிரசவகாலம்.

ஓதியபகலிராவிலுருகடி கைகளைப்போலு
மாதவள்பிரசவிப்பாள் வருஞ்சிரவுதயராசி
தீதறுபிரஸ்னமானல் செப்பியபகலேசென்மம்
காதலாம்பிருட்டமாகில் கங்குலில்பிரசவந்தான்.

இ-ள். பிரஸ்னகாலத்திலுள்ள நாழிகை எத்தனையோ அத்தனை நாழி கைக்கு பிரசவமாகும் சிரவுதய விராசிகளென்னும் பகல் வலிதுள்ள விராசி பிரஸ்ன லக்னமானல் பகலில் பிரசவமாகுமாம் இராவலிதுள்ளபிருட்டோ தயராசிகளில் பிரஸ்னலக்னமானல் ராத்திரியில் பிரசவமாகுமென்பதாம்.

21-வது சுலோகம். பிரசவகாலம்.

வந்தகற்பிரஸ்னலக்னம் வரும்பாகைமுப்பதுக்குள்
முந்தியேசென்றபாகை மூறையதின்கடிகைசென்றால்
அந்தமாஞ்சேடமான ததின்பாகைதனிலேமாது
சுந்தரமகவுதம்மைச் சுகமுடன்பெற்றெடுப்பாள்.

இ-ள். பிரஸ்ன லக்னம் எந்த விராசியாயிருந்தாலு மந்தராசியை திரிம் சாம்சம்செய்ய உதயமானபிரஸ்ன லக்னத்தில் சென்றபாகை யெத்தனை யாகுமோ அதை நீக்கி பிரஸ்ன லக்கினத்தில் செல்கிறபாகை எத்தனை யாகுமோவென்று அதைத்தெரிந்த அத்தனையாவது பாகையின் தொகை யைப்போல அத்தனை நாழிகைக்குப் பிரசவிப்பாள். உதாரணம் சாராவளி யில் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 105

21-வது சுலோகம். கர்ப்பந்தரித்து மூன்றும் வருஷப்பிரசவம்.

பெற்றவாதானலக்னம் பெருங்குடமகரராசி
உற்றசுவாங்கிசமாகி லுயர்சனிபவனுமேழில்
நிற்றலால்கர்ப்பிணீயு நேருமூவாண்டின்பின்னல்
கற்றவத்துடையசேயை நாரிபெற்றெடுப்பளாமே.

இ-ள். கர்ப்பாதானலக்னம் மகரமாக அல்லது கும்பமாக இருக்க அந்த நவாமிசை இராசிக்கு ஏழில் சனியிருந்து பார்க்க கர்ப்பிணி மூன்றும் வருஷத்தில் பிரசவிப்பாளென்பதாம். 106

22-வது சுலோகம். கர்ப்பிணி மூன்றும் வருஷப்பிரசம்.

நாரியின்கர்ப்பாதானம் நலமுளவோரைதன்னுள்
கூடியதெதுவானாலும் கும்பமுமகரவிராசி
தேறியநவாம்சமாகிற் றிகழ்சனியேழிற்றங்க
பாரினில்மூன்றுண்டின்பின் பாவையும்பெறுவாள்சேயை.

இ-ள். ஸ்திரீகளுக்கு கர்ப்பாதான லக்னம் எந்த விராசியாயிருந்தாலும் மகர கும்ப நவாமிசலக்னமாகவரினும் அதற்கு ஏழாமிராசியில் சனியிருக்க கர்ப்பிணி மூன்று வருஷத்தில் பிரசவிப்பாள் என்றறியவேண்டியதென்பதாம். 107

22-வது சுலோகம். கர்ப்பிணி பன்னிரண்டுவருஷப் பிரசவம்.

பெறுகர்ப்பவாதனங்கள் பெற்றிடுலக்கினம்தானும்
முறுமவையெதுவானாலு முயர்குளிர்நவாங்கிசத்திற்
வருநிஷேகந்தான்செய்ய மதியவனேழினிற்க
மருவுமீராறுமாண்டில் மங்கையும்பிரசவிப்பாள்.

இ-ள். கர்ப்பாதான லக்னம் எந்த விராசியாகவிருந்தாலும் அந்தவிராசியில் கடகநவாமிசத்தில் நிஷேகமென்னும் கர்ப்பாதானஞ்செய்ய அதற்கேழாமிராசியாகிய மகரத்தில் சந்திரனிருந்து கர்ப்பாதான லக்னத்தைப் பார்க்க பன்னிரண்டு வருஷத்தில் கர்ப்பிணி பிரசவிப்பாளென்பதாம்.

22-வது சுலோகம். கர்ப்பாதான லக்னபலன்.

கர்ப்பாதானந்தன்னல் காரிகையார்கட்கெல்லாம்
உற்பவித்திடுஞ்சுகங்க ளூனமாமங்கக்கூலும்
பற்பலசெனனராசி பகர்வுதுயுக்தியாலும்
விற்பனவாரூடத்தால் விளம்புசிந்தனைகளாமே.

இ-ள். கருப்பாதான லக்னத்தைக்கொண்டு அங்கவீனயோக சம்பவம் சென்மகாலத்திலும் பலவிதபலன்களையும் சென்மலக்னம் பிரஸ்னலக்னத்தைக்கொண்டு யூகித்துச் சொல்லவேண்டியது தாற்பரியமென்பதாம். 109

படலச்செய்யுள் தொகை.

ஆடவர்மடவார்கூட வவனியிற்கர்ப்பமாகும்
நீடியகருப்பாதானம் நிகழ்த்தியபடலமித்துள்
நீடியநூற்றப்பத்து நலமுடன்மூன்றுசெய்யுள்
பாடினேன்வயித்தியலிங்கம் பாவலர்புகழத்தானே.

கர்ப்பாதானப்படல முற்றிற்று.

௳

கடவுள் துணை.

# மங்களேஸ்வரீயம்.

ஆறவது

## ஜனனகாலப்படலம்.

### விநாயகர் துதி-வெண்பா.

மதிநதியுந்தானணிந்த மாதேவர்தன்புதல்வா
பதியதனிலுன்பாதம் பத்தியதாய்—நிதமேற்றிச்
ஜென்மகாலப்படலம் சீருடனேசெப்புதற்கு
நன்மதுரவாக்கெனக்கு நாட்டு.

1-வது சுலோகம். சிசுவின்பிதா சமீபமில்லாதஜெனனம்.

சந்திரனேலக்கினத்தைத் தானுற்றுநோக்காமல்
வந்தசிசுதன்யோக வகைவிபரம்—தந்தையவன்
ஊரதனிலேயிருந்து முதவிபுரியாமல்
தூரவேபோயினதாய்ச் சொல்.

இ-ள். சென்மலக்னத்தைச் சந்திரன் பார்க்காதிருக்க பிறந்த சாதகனுடைய தகப்பன் உள்ளூரிலிருந்தும் வீட்டிலில்லாது வெளியேபோய் இருந்தான் அல்லதுதகப்பன் வெளியூரிலிருந்ததாயும் சொல்லப்படுமென்பதாம்.

1-வது சுலோகம். சிசுவின்பிதா தேசாந்திரம்.

செங்கதிராயுன்பாக்யம் சென்றிடவேசென்மமதை
திங்களவநோக்காத சீரதனல்—அங்குசுதன்
பிதிரவன்தேசாந்திரமே போயிருந்ததாகபலன்
விதியுளசேயர்க்குரைப்பாய் மெய்.

இ-ள். சென்மலக்னத்திற்கு எட்டாமிடம் ஒன்பதாமிடங்களில் சூரியனிருக்க சென்மலக்கினத்தைச் சந்திரன்பார்க்காவிடில் பிறந்த சிசுவின் தகப்பன் தன்னுடைய தேசத்தைவிட்டு மறுதேசம்போயிருந்தானென்பதாம்.2

1-வது சுலோகம். சிசுவின்பிதா மறுதேசம்.

உதயமதைமதிகாணுதொன்ப தெட்டுமேசரமாய்
சதிரவனுமங்கிருக்கக் காண்சேயின்—பிதிரவனும்

அருகிலிருக்காம லன்னியதேயந்தனிலே
மருகியிருந்தானெனவே மாட்டு.

இ-ள். சென்மலக்னத்தைச் சந்திரன் பார்க்காமலிருக்க எட்டாமிடம் ஒன்பதாமிடம் சரராசியாக விருக்க அதில் சூரியனிருக்க சென்னமான சிசுவின் பிதா மறுதேசம் போயிருந்தானென்பதாம். 3

1-வது சுலோகம் சிசுவின்பிதா சமீபமில்லாதசெனனம்.

இந்துவுதயமதை எழிலோடும்நோக்கிலராய்
சொந்தமுளவெட்டொன்ப துந்திரமாய்—விந்தையுள
இடத்தில்கதிரிருக்க வீன்றபிதா தன்னகத்தின்-
தடத்திலேயில்லையெனச் சாற்று.

இ-ள். சந்திரன் சென்ம லக்னத்தை பார்க்காதிருக்க எட்டாமிடம் ஒன்பதாமிடம் ஸ்திரராசியாயிருக்க அதில் சூரியனிருக்க செனனமான சிசுவின் தகப்பன் உள்ளூரிலிருந்தும் சமீபத்திலில்லை யென்பதாம். 4

1-வது சுலோகம்.

சிசுவின்பிதா மறுதேசத்தின் மார்க்கத்திலிருந்தான்.

சென்மமதையம்புலியுந் தீவிரமாய்நோக்காமல்
தன்மமதுமெட்டுபயந்தானாக—மன்னுகதிர்
சொந்தமாய்தானமர துயசுதன்றன்னுடைய
தந்தைவழி மத்தியிருந்தான்.

இ-ள். சென்ம லக்னத்தைச் சந்திரன் பார்க்காதிருக்க எட்டாமிடம் ஒன்பதாமிடம் உபயராசியாயிருந்து அதில் சூரியனிருக்க செனனமானசிசுவின் தகப்பன் உள்ளூரிலுமில்லாது வெளியூரிலுமில்லாது நடுவழியிலிருந்தான், உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 5

2-வது சுலோகம் சிசுவின் பிதாமறுதேசப்போயிருந்தான்.

சென்மமதைச்சந்திரனும் திரமுடனேநோக்காது
சுன்னுதயமல்லது செவ்வாவேழில்—நண்ணிடவே
வந்தசிசுவின்பிதிரும் மறுதேசமேசென்றான்
சிந்தைதிடமாகவேநீ செப்பு.

இ-ள். சென்மலக்கினத்தைச் சந்திரன் காணாதிருக்க சனிசென்ம லக்கினத்திலிருக்க ஏழாமிடம் செவ்வாயிருக்கப் பிறந்த சிசுவின்பிதா தேசாந்திரம் போயிருந்தானென்பதாம். 6

2-வது சுலோகம் சிசுவின் பிதாமறுதேச சஞ்சாரம்.

சந்திரருக்கிருபுறமும் சௌமியராம்மால்புகரோன்
அந்தமுடனேயிருக்கவவனிதனில்—வந்ததொரு

மகவினதுதன்தந்தை மறுதேசமேசென்றான்
சகமறியயானுரைத்த தாம்.

இ-ள். சந்திரன் இருந்தராசிக்கு ஒருபுறம் சுக்ரனும் மற்றொருபுறம் புதனுமிருக்க செனனமான சிசுவின் தகப்பன் மறுதேசம் போயிருந்தான் அதாவது சந்திரனுக்கு இரண்டாமிடமும் பன்னிரண்டாமிடமும் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிறது என்பதாம். 7

3--வது சுலோகம் கர்ப்பசெனனம்.

திங்களவன்செவ்வாயின் திரேகாணமீதமர
தங்குமதியோன்றனக்கு தனலாபம்—அங்குசுபர்
நிற்கவேதாரணியில் நிகழ்சர்ப்பமாகவுமே
உற்பவிக்குமாமென் றுரை.

இ-ள். சந்திரன் செவ்வாயின் திரேகாணத்திலிருக்க அந்தச்சந்திரனுக்கிரண்டாமிடம் பதினோராமிடத்தில் சுபர்களிருக்க பாம்பு செனனமாகுமென்பதாம். 8

3-வது சுலோகம் செவ்வாயின் திரேகாணங்கள்.

ஆடுவிட்டனில்முதலு மலவனெடுவில்லிரண்டு
காடுறையுஞ்சிங்கங்கயல்மூன்று—நாடுமிவை
செவ்வாய்தனக்குசொந்த திரேகாணமாமெனவே
இவ்வாறுரைப்பதே எண்.

இ-ள். மேஷம் முதலும் விருச்சிகத்தில் முதலும் கடகம் இரண்டும் தனுசில் இரண்டும் சிங்கத்தில் மூன்றும் இந்த திரேகாணங்கள் செவ்வாயின் திரேகாணமென்னப்படுமென்பதாம். 9

3-வது சுலோகம் பாம்புசுற்றப்பட்டு செனிக்கும் சிசு.

செவ்வாயின் திரேகாணம் சென்மலக்னமாகவுற
ஒவ்வுசுபர்லாபந் தனமுறைய—இவ்வுலகிற்
கற்பமதுசுற்றிக்கொண்டு தானுதிக்குமென்றேநீ
விற்பனமாய்த் தானுரைப்பாய் மெய்.

இ-ள். செவ்வாயின் திரேகாணங்களில் எதுவாகிலும் ஒன்று சென்மலக்னமாயிருக்க சுபக்கிரகங்கள்யாராவது இரண்டாமிடம் பதினோராமிடங்களிலிருக்க சற்பம் சுற்றப்பட்டு செனனமாகும் உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 10

4-வது சுலோகம் ஒருபையிலிரண்டு செந்துக்கள் செனனம்.

சூரியனு நாற்காலிற் றேயுவுமற் றோர்வலிதாய்
தேரியுபயம்மதிலே சென்றிருக்க—நாரியர்க்கு

ஒருமையிலேயிரண்டு வுற்பவமாஞ் செந்துவென
திரமுடனேயெல்லோர்க்குஞ் செப்பு.

இ-ள். சூரியன் மேஷம் ரிஷபம் சிம்மம் தனுசு பின்னரையும் மகர முன்னரையும் நாற்காலிராசிகளாம் இதிலிருக்க மற்றகிரகங்கள் மிதுனங் கன்னி தனுசு மீனராசியில் பலவந்தர்களாயிருக்க கர்ப்பவயிற்றில் இரண்டு செந்து ஒருமையில் கட்டப்பட்டு செனிக்கும் என்பதாம். 11

5-வது சுலோகம். கொடிசுற்றினசெனனம்.

ஆடரிபுல்லஞ்செனன மாரல்சனிசென்மமுற
நாடதனில்சென்ம நவாங்கிசமும்—தேடிமிக
அந்தவோரையங்கிசமா மவயவத்திலேநாளம்
உந்திக்கொடியோடுதிக்கு மாம்.

இ-ள். மேஷம் சிங்கம் ரிஷபம் இந்த ராசிகளிலொருராசி செனனலக்ன மா சனியாகிலும் குஜனாகிலுமிருக்க செனன காலவிராசி நவாம்ச சம்பந்த மான இராசிகால புருஷனுடைய எந்த அவயவமாகுமோ அந்த அவயவத் தில் உந்திக்கொடி சுற்றிப்பிறக்கும் சாராவளியிலும் சொல்லப்பட்டிருக் கிறது. காலபுருஷன் இராசி அங்கம் இராசி படலத்தில் சொல்லி இருப் பதினால் அதை அறிந்து கொள்ளவேண்டிய தென்பதாம். 12

6-வது சுலோகம். குலபுத்திரசாதகசெனனம்.

சந்திரனை சென்மமதை சற்குருவு நோக்கமுற
சொந்தமணவாளனுக்குத் தோன்றினன்-இந்தவிதம்
சுரகுருதன் னங்கிசமும் தூய்மதியலாது சென்மம்
வரவுமணவாளவநற் சேய்.

இ-ள். சந்திரனையும் சென்மலக்னத்தையும் குருபார்க்க குருபுத்திரனும் அல்லது சந்திரனைப் பார்த்தாலும் குலபுத்ரன். குருநவாமிசை சென்ம லக்னமானாலும் குலபுத்ரன் சந்திராலக்னமாக விருந்தாலும் குலபுத்ரனும். உதாரணம் யவனேஸ்வரர் சொல்லியிருக்கிறா ரென்பதாம். 13

6-வது சுலோகம். பரசாதகன் செனனம்.

பருபதி யோரிடத்தில் பற்றிடவே பொன்னோனும்
அருளுடனே நோக்கிலனேயாமாகில்—விரிபுவியில்
தாயும்பலபேரை தழுவியே வுற்பவித்த
சேயும்பாசாதகனைச் செப்பு.

இ-ள். சூரியன் சந்திரன் எந்த விராசியிலாவது கூடியிருக்க இவர்களை குருபார்க்காவிட்டால் செனனமான சிசுவுபரசாதகன் குருபார்க்க குலபுத் திரனவனென்பதாம். 14

6-வது சுலோகம். புரசாதகன் செனனம்.

பருதிசனிசேயிவரை பால்மதியுங் கூடிநிற்க
தருபுவியிலேயுதித்த சாதகனும்—விரவியே
தாய்தனை மணர்ந்தவர்க்கு தானுற்பவிக்காத
சேய்தனைக்குவிப்பலனைச் செப்பு.

இ-ள். சந்திரன் சனி செவ்வாய் சூரியனைகூடி நிற்குங் காலசெனன மான சிசுபரசாதகனுகும். அதாவது தாயைக் கலியாணஞ்செய்தவன் தகப் பனும் அப்படி தகப்பனுக்குண்டான கரு அல்லவென்றறியவேண்டியது.

6-வது சுலோகம். குலபுத்திரசனனம்.

செப்பிடநற்றிங்களவன் றேவகுருவீடதிலும்
ஒப்புதிரேகாணம் நவாங்கிசமும்—இப்புவியில்
பன்னிரண்டாமங்கிசமும் பார்ப்பானைகூடிநிற்க
பன்னுகுலபுத்திரனும் பார்.

இ-ள். சந்திரனிருந்தராசி குருவீடாகவிருந்தாலுமல்லது குருதிரேகாண மாயிருந்தாலுமல்லது. குருநவாங்கிசமா யிருந்தாலுமல்லது, குருதுவாத சாம்சமா யிருந்தாலும் குலபுத்திரனுகும். இப்படி ஒருவிதத்திலுமில்லை யாயின் குருவைச் சந்திரன் கூடிநிற்க குலபுத்திரசெனனம். உதாரணம் கார்க்கி சாராவளி இவைகளில் சொல்லப்பட்டதென்பதாம். 16

6-வது சுலோகம். குலபுத்திர செனனம்.

ஓரிடத்தில்திங்கள்ரவி யுற்றிடவும்பாபர்களை
சேரயிவர்தங்களையுஞ் செம்பொன்னன்-நேருறவும்
உன்னுகுலபுத்திரனு முரைத்தமுன்யோகமது
தன்குருவுநோக்கிலிலை தான்.

இ-ள். எந்தராசியிலாவது அடைந்திருந்த சூரியன் சந்திரர்களை இதர பாபக்ரகங்களை கூடியிருக்க இவர்களை குருபார்க்க குலபுத்திரனுகும் முன் பரசாதகனென்ற யோகத்துக்கு குறிபார்க்கில் அந்த யோகமுண்டாகா தென்பதாம். 17

7-வது சுலோகம். சிசுவின்பிதா சிறை.

ஆடரிதேள்மான்குடமும் மம்புலிதேய்ந்திட்டண்டும்
நீடுபுதன்பாபயுக்த யாழிவை—கூடுமிதில்
சனிசேயுங்கூடிநிற்கத் தரணிக்கேழைந்தொன்ப்ரான்
சனிசேயேல்தந்தைசிறை தான்.

இ-ள். மேஷம் சிங்கம் விருச்சிகம் மகரம்கும்பமும் அமரபக்ஷமானல் கடகமும் பாபர்களை புதன்சேர்ந்திருக்கில் மிதுனம் கன்னி இந்த இரண்டு ராசிகளும் முன்சொல்லிவந்த ராசியும் பாபராசி யெனப்படும் இந்த பாப

ராசியில் சனி செவ்வாய்கூடிநிற்க சூரியனிருந்த ராசிக்கு 7-5-9 இந்தஸ்தானத்தில் இவர்களிருவருமிருக்க செனனமான சிசுவின் பிதாவானவன் சிறையிலிருந்தானென்பதாம். 18

7-வது சுலோகம். சிறைபட்டவிடம்.

தந்தைசிறைபட்டவிடம் தரணிசரமாகில்வெளி
அந்தவோரையேதிரமே லவ்வூராம்—இந்தவித
முறையிலுபயமெனி யுள்வெளியல்லாதுவழி
சிறையிதுவுங்காவலெனத் தேர்.

இ-ள். சூரியன் சரராசியில் இருக்கவெளியூரிலும் ஸ்திரராசியில் இருக்க உள்ளூரிலும் உபயராசியாயில் உள்ளூரிலும் வெளியூருமல்லாது மத்திய வழியில் சிசுவின் தகப்பன் சிறைப்பட்டான் அல்லது பந்தனப்ராப்த்தியடைந்திருந்தா னென்பதாம். 19

8-வது சுலோகம். செனனசிசுவுஓடம் கப்பல்.

சந்திரனும்பூரணனாய் தான்கடகராசியுற
புந்திசென்மம்பொன்னாலில் புக்கிடவுஞ்—சுந்தரியாள்
ஓடமரக்கலத்தி னுண்மையுடனீன்றவளாய்
நாடதனிற்றீரமொடு நாட்டு.

இ-ள். சந்திரன் பூரணனாகி தன்னிராசியாகிய கடகத்திலிருக்க குருநாலாமிடமிருக்க புதன் சென்மலக்னத்திலிருக்க கர்ப்பிணி ஓடம் மரக்கலமென்னப்பட்ட கப்பல் தெப்ப முதலியவைகளில் பிரசவித்த சாதகமென்னப்படுமென்பதாம். 20

8-வது சுலோகம். ஓடத்தில் செனனம்.

மீனமொடுமான்கடகம் மேவுசென்மலக்கினமாய்
தானவனுமேழினுறச் சாற்றுவது—ஆனபலன்
ஓடமரக்கலத்தி னுற்பவித்தானென்றுமே
நாடறியவேயுரைத்தே னன்.

இ-ள். மீனம் மகரம் பின்னரை கடகம் இவைகளிலொன்று சென்மலக்னமாய் சந்திரன் ஏழாமிடமிருக்க ஓடம் மரக்கலமென்னப்பட்ட கப்பல் தெப்பமுதலிய வற்றில் செனனமான சிசுவென்று சொல்லப்படுமென்பதாம். 21

9-வது சுலோகம். சலசமீபஜனனம்.

சலராசிலக்கினமாய்ச் சந்திரனு மவ்விடத்தில்
மலமாயமர்ந்திட்ட பார்வையால்—நலமாக
நீரருகிலேயிவனும் நேர்மையுடனே செனனம்
தீரமுடனிப்படி செப்பு.

இ-ள். நீரிராசியாகிய கடகம் மகரம் மீனமிவைகளிலொன்று லக்னமாய் அதில் சந்திரன் வலிதாயிருக்க சலசமீபத்தில் செனனமான சிசுவென்பதாம். 22

9-வது சுலோகம். ஜலசமீபம் குளக்கரை செனனம்

எந்தராசியானுமெழில்மதியும் பூரணனும்
அந்தவிடமேயமரவலநோக்க—அந்தமுடன்
தண்ணீரருகினிலே தாய்கருவை விட்டு
பண்ணதனில்வந்த மகன்.

இ-ள். சென்மலக்னம் எந்த ராசியானாலும் அதில் நிறைந்த பூரணசந்திரனிருக்க அல்லது அந்த ராசியை நோக்க ஜலசமீபம் குளக்கரைகளில் செனனமென்றறிய வென்பதாம். 23

9-வது சுலோகம். ஜலசமீபம் செனனம்.

ஜலராசிசென்மலக்னஞ் சாரசுகமீரைந்தில்
நிலவுமிருந்திடவே நீடுலகில்—வலிதோடு
தகமையுளநீரருகிற் றுனும்செனித்ததுவாய்
சகமதனிற்றீரமுடன் சாற்று.

இ-ள். நீரிராசிகள் சென்மலக்னமாய் அந்த லக்னத்திற்கு நாலாமிடத்திலாவது பத்தாமிடத்திலாவது சந்திரனிருக்க ஜலசமீபமுள்ளவிடத்தில் செனனமென்றறிய உதாரணம் சாராவளியென்பதாம். 24

10-வது சுலோகம். சிறைச்சாலை செனனம்.

சென்மமதற்கும் மதிக்கும் செப்புவிரயந்தனிலே
சுன்னிருக்கப்பாபர் தொடர்நோக்க—நன்மையற்ற
காவல்சிறைச்சாலைதனில் காரிழைபிரசவிக்க
தீவிரமாய்ச்சென்மமதைச் செப்பு.

இ-ள். சென்மலக்னத்திற்காவது சந்திரனுக்காவது பன்னிரண்டாமிடத்தில் சனியிருக்க அந்தச் சனியைப் பாபர்கள் பார்க்க சிறைச்சாலைகூடமென்னப்பட்ட இடத்தில் கர்ப்பிணி பிரசவிக்க செனனமான சிசுவாகுமென்பதாம். 25

10-வது சுலோகம். குளக்கரை செனனம்.

கொண்டலொடுதேள்செனனம் கொம்பியதிலிருக்க
தண்ணவனுமேசனியைத்தானோக்க—எண்ணுநதி
வாவியருகினிலே வண்மையுடன் வந்தவனென்று
தீவிரமாயிப்பலனைச் செப்பு.

இ-ள். கடகமாவது விருச்சிகமாவது சென்மலக்னமாய் அதில் சனியிருக்க அந்தச் சனியை சந்திரன் பார்த்தானால் நதி குளக்கரையில் செனனமாகு மென்பதாம். 26

11-வது சுலோகம். ஊஷரபூமி கிரீடைகிரகம் தேவாலயசெனனம்.

சலராசிலக்கினமாய் சனியுமதிலேயிருக்க
நிலவோனுநோக்க வூஷரபூமி—புலவரெனில்
மேவுங்கிரீடைபுரி மென்கிரகமாங்கதிர்க்கு
தேவர்கடம்மாலயமாய்த் தேர்.

இ-ள். நீரிராசிகளிலெதுவாகிலுமொன்று செனமலக்னமாக அதில் சனியிருக்க அந்தச்சனியை சந்திரன் பார்க்க ஊஷரபூமிசெனனம் புதன்பார்க்க ஸ்திரீ புருஷாள் கூடி காமக்கிரீடை செய்யுமிடம் செனனம் சூரியன் பார்க்க தேவாலயத்தில் செனனம். இது நஷ்டாதி பிரஸ்னைகளுக்கும் சுரத பிரஸ்னைகளுக்கும் உபயோகமாகு மென்பதாம். 28

12-வது சுலோகம்

மசானமென்னும் பூமியும் மனோரம்மியவிடமுஞ் செனனம்.

இருகாலேசென்மமதா யெழில்சுன்னதிலிருக்க
குருதிநோக்குற்றிடிலோ மியமாம்—பிருகுமதி
நேருறவுநோக்கிடவே நிகர்மனோரம்மியமாம்
சீருடையவில்லிற்சென்மந் தேர்.

இ-ள். இருகாலி ராசியாகிய தனுசு முன்னரையும் மிதுனம் துலாம் கன்னி கும்பம் இந்தராசிகளில் ஒன்று செனமலக்னமாக அதில்சனியிருக்க அந்தச்சனியை செவ்வாய்பார்க்க மசானபூமியில் செனனம். அந்த சனியை சந்திரனாவது சுக்ரனாவதுபார்க்க மனோரம்மியமான வீடுகளில் செனன மென்றறியவும் மனோரம்மியமென்பது மெத்தைவீடென்றும் சொல்லப்படு மென்பதாம். 29

12-வது சுலோகம்.

அக்கினிசாலை ராஜகிருகம் ஆலயம் கோசாலைகளில் செனனம்.

கும்பம்யாழ்கன்னிதுலை கூறுமிதிலொன்றுசென்மம்
கொம்பியதிலேயிருக்க குருகாண—வெம்புசுடர்
சாலைரவிராசரகம் சாற்றிடுதேவாலயங்கோ
சாலையதிற் சென்மமெனச் சாற்று.

இ-ள். இருகாலி ராசிகளாகிய மிதுனம் கன்னி துலாம் கும்பம் இவைகளிலொன்று செனமலக்னமாய் அதிலே சனியிருக்க அந்தச்சனியைக்குரு பார்ப்பாரானால் அக்கினிசாலையில் செனனமாம். அந்தச்சனியை சூரியன் பார்க்க ராஜாக்கிருகம் தேவாலயம் கோசாலை முதலான விடங்களில் செனனமென்பதாம். 30

12-வது சுலோகம். சித்திரவீட்டில் செனனம்.

கன்னிதுலைவீணைகுடம் காணுமிதிலொன்றுசென்மம்
சன்னிருக்கத்தூதன் தொடர்நோக்க—உன்னதமாம்
சிற்பபிரதமைகள் திகழுமிடமதிலே
யுற்பவித்தானென்றே யுரை.

இ-ள். இருகாலி ராசிகளாகிய மிதுனம் கன்னி துலாம் கும்பம் இவைகளிலொன்று சென்மலக்னமாய் அதில் சனியிருக்க அந்தசனியை புதன் பார்க்க பிரதமைகளால் அலங்கரிக்கப்பட்டும் அனேக சிறப்புள்ள வீட்டில் செனனம். இந்தவிதி நஷ்டப்பிரஸ்னை சுரதப்பிரஸ்னைக்கும் உபயோகமாகும். உதாரணம் கிராந்தாந்தரங்களில் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 31

13-வது சுலோகம் செனன பூமி.

எந்தெந்தராசிகட்கு மேற்கனவேகூறுவிதம்
அந்தந்தராசி நவாங்கிசத்தில்—வந்தோற்கு
சரமானாலேவழியில் தருவுபயம்வீட்டின்வெளி
திரமானால்வீடெனவே செப்பு.

இ-ள். எந்த ராசிகளானாலும் அவைகள் சஞ்சரிக்குமிடங்களை ராசி படலத்தில் சொல்லியிருக்கிற பிரகாரமாக அந்த ராசி நவாங்கிசத்தைக் கொண்டு அந்தந்த பிரதேசங்களைச் சொல்லப்படும் ஆனால் லக்னராசியாவது தன்னவாமிசையாவது சரராசியானால் வெளிமார்க்கத்திலும் திரராசியாகில் வீட்டிலும் அந்தராசி சஞ்சாரதேசத்திலும் உபயராசி நவாங்கிசமாகில் அந்தராசி சஞ்சாரதேசத்திலும் பிரசவமென்பதாம். 32

13-வது சுலோகம் செனன பூமி.

சரராசிசென்மலக்னம் சாற்றுமந்தராசியதில்
உருவாநவாங்கிசையேல் வழியாகும்—திரமானால்
வீடதுவாமேயுபயம் மேவும் வெளிதிண்ணையென
நாடும்வலிதானறிந்து நாட்டு.

இ-ள். சரராசி சென்மலக்னமாய் அந்த ராசி நவாம்சமே யுதயமானால் சயகிரக மார்க்கத்திலும், திரராசி, சென்மலக்னமாய் அந்த லக்னவிராசி நவாம்சமே யுதயமானால் தன் வீட்டிலும் உபய விராசி நவாம்சமே யுதயமானால் வீட்டுவெளி திண்ணையிலும் பிரசவித்த செனனமென்பதாம். 33

13-வது சுலோகம், செனனபூமி.

சென்மநவாங்கிசமும் தேறிவலிதறிந்து
உன்னுவவிராசி யுறைவிடத்தே—சென்மமதாம்
முன்யோகமில்லாது முறையிராசிதன்னமிசம்
தன்போலவே செனனஞ் சாற்று.

இ-ள். நவாம்சம் சென்ம விராசி பலாபலத்தினுல் பிரசவக்ஞானரூபம் பலனுண்டாகும் ஆனுல் சென்மலக்ன நவாமிசவிராசி இந்த இரண்டிலெது வலிதாயிருக்குமோ அந்த விராசி சஞ்சாரபூமியில் பிரசவமாகும் உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறது. முன்யோகமில்லாமற் போனுல் மாத்திர மிராசியமிச கோசரமார்க்கப் பிரசவமென்று சொல்லவேண்டிய தென்பதாம். 34

14-வது சுலோகம் தாயினுல் விலக்கப்பட்ட சிசுவு செனனம்.

சனிசேயுங்கூடிநிற்கச் சாற்றுமவர்க்கைந்தொன்பான்
பனிபகையுமல்லாது பால்மதியும்—இனிதாக
மன்னப்புவியதனில் வந்திட்டபாலகனை
அன்னையவள் நீக்கிடுவாளாம்.

இ-ள். சனி செவ்வாய் இருவருங்கூடிநிற்க அவர்களுக்கு ஐந்தாமிடத்திலாவது ஒன்பதாமிடத்திலாவது சூரியனிருக்க அல்லது சந்திரனிருக்க கர்ப்பிணிதானீன்ற சிசுவை விலக்கிவிடுவாளென்பதாம். 35

14-வது சுலோகம். விலக்கப்பட்ட சிசுவளருமிடம்.

சேயவனும் நீலனுமே சேரவவர்க் கொன்பதைந்தில்
நாயரல்ல நாளரசுன் நாடிநிற்கத்—தூயகுரு
கண்டிடவே தாய்விலக்க காசினியில் மற்றோர்பால்
அண்டி சுதனுயுள் சுகனும்.

இ-ள். செவ்வாயுஞ் சனியுங்கூடிநிற்க அவருக்கு ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் சூரியனுவது சந்திரனுவதிருக்க குரு பார்க்கப்படுமோனுல் கர்ப்பிணிதானீன்ற சிசுவை விலக்கிவிடுவாள் அந்த சிசுவை மற்றயாராகிலு மெடுத்து வளர்ப்பார்கள். சிசு சுகவந்தனுயும் தீர்க்காயுளுள்ளவனும் போகவந்தனுயு மிருப்பானென்பதாம். 36

14-வது சுலோகம் விலக்கப்பட்ட சிசுசெனனம்.

ஓரிடத்தில் சேய்சனியு முற்றிடவே யைந்தொன்பான்
தேரிமதி நிற்கையிலே சேயிழையும்—சீருடனே
பெற்றசிசு தன்னையவள் பேணுது நீக்குவளாம்
உற்றபல னீதென் றுரை.

இ-ள். செவ்வாயுஞ் சனியுங்கூடி ஓரிராசியிலேயிருக்க இவர்களுக்கு ஐந்தாமிடம் ஏழாமிடம் ஒன்பதாமிடங்களில் சந்திரனிருக்க கர்ப்பிணிதானீன்ற சிசுவை விலக்குவாளென்பதாம். 37

15-வது சுலோகம். சிசுமரணம்.

ஆலோனுஞ் சென்மமதி லாரலுபே யேழிலுற
காலுனன் பால்மதியைக் கண்டிடவே—ஞாலமதில்

வந்தசிசு தாயைவிட்டு மற்ருேரிடம் வளர்ந்து
அந்தகனூர் தானடைவா னும்.

இ-ள். சென்மலக்னத்தில் சந்திரனிருக்க ஏழாமிடத்தில் செவ்வாயிருக்க சந்திரனைச் சனிபார்க்க கர்ப்பிணி தானீன்ற சிசுவை விலக்கிவிடுவாள் அந்த சிசுவு மற்ருெருவர்பால் வளர்ந்து சிலகாலமிருந்து பிறகு இந்தச் சிசு மரணமாகுமென்பதாம். 38

15-வது சுலோகம். சிசுமரணம்.

சந்திரனே சென்மமுற சண்டனுதயம் நோக்க
மந்தனொடு சேய்லாப மதிலிருக்க—சுந்தரமாய்
உதித்தசேய் தாயைவிட்டு வுண்மையாய் நீங்கியபின்
கதித்தசிசுவே மரணங் காண்.

இ-ள். சந்திரன் சென்மலக்னத்திலிருக்க சூரியன் சென்மலக்னத்தை நோக்க சனியாவது செவ்வாயாவது பதிஞேராமிடமிருக்க கர்ப்பிணிதானீன்ற சிசுவை விலக்கிவிடுவாள் அந்த சிசுவும் மரணமாகுமென்பதாம். 39

15-வது சுலோகம்.

தாய்விலக்கப்பட்ட சிசுவு அன்னியரிடம் வளரும்.

சந்திரனே லக்கினத்தில் தரணிசுத னேழினுற
சந்திரனை நற்கோள்கள் தானோக்க—வந்தவனை
கண்டகோள் சாதியரால் கைசிக்கிப் போஷணையாய்
அண்டிவளர் வானென் றறை.

இ-ள். சந்திரன் சென்மலக்னமிருக்க செவ்வாய் ஏழாமிடமிருக்க அந்தச் சந்திரனை சுபக்கிரகம் பார்க்க செனனமான சிசுவை அன்னியர் வளர்ப்பார்களாம் அன்னியராவது எந்தகிரகம் பார்த்ததோ அந்த கிரகத்தின் சாதியார் யாரோ அந்த சாதியார் கையில் சிசுவளருமென்பதாம். 40

15-வது சுலோகம்.

தாய்வளர்க்கப்பட்ட சிசு அன்னியரிடம் வளரும்.

சந்திரனும் சென்மத்திற் றனிருக்க வேழ்தீயர்
வந்திருக்குங் காலில் வலிதாய்ப்பொன்—இந்துதனை
பார்க்கவே வந்தானைப் பகரன்னை நீக்கிடினும்
தீர்க்காயுள் பெற்றிடுமாம் சேய்.

இ-ள். சென்மலக்னத்தில் சந்திரனிருக்க ஏழாமிடம் பாபக்கிரகமிருக்க குரு லக்னத்தைப்பார்க்க செனனமான சிசுவை தாய்விலக்கப்பட்டாலும் அன்னியரிடம் வளரும் சிசுவும், தீர்க்காயுளுள்ளதாக விருக்கும் உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 41

16-வது சுலோகம். சிசுசெனன வீட்டின்கணிதம்.

பகலோன் பகல்வலிதாய் பங்குமிரவில் வலிதாய்
சகமீ திருக்கத்தன் தந்தையுடை—யகமீதும்
துன்னுமதி ராவலிதும் தூயபுகர் பகல்வலிதேல்
அன்னையகமீ துதித்தா னும்.

இ-ள். பகலில் செனனமானவர்க்கு சூரியன் வலிதாயிருக்க சிசு தகப்பன் வீடு அல்லது சிறிய தகப்பன் பெரிய தகப்பன் வீட்டில் செனனம் மேற்படி இரவில் செனனமானவர்க்கு சனி வலிதாயிருக்க தகப்பன்வீடு அல்லது சிறிய தகப்பன் பெரியதகப்பன் வீடுகளில் செனனம் இரவில் செனனமானவர்க்கு சந்திரன் வலிதாயிருக்க தாய்வீடு சிறியதாய் பெரிய தாய் மாமன் வீடுகளில் செனனம் மேற்படி பகலில் செனனமானவர்க்கு சுக்ரன் வலிதாயிருக்கத் தாய்வீடு சிறியதாய் பெரியதாய் மாமன் வீடுகளில் சிசு செனனமான தென்பதாம். 42

16-வது சுலோகம். நதி கூபம் செனனம்.

நல்லகோள் நீசமது நாடியிருக்குங் காலை
சொல்லுநதி கூபமது சூழுமிடம்—அல்லாது
மரங்களது தானடைந்த மாவனத்திலே தனியாய்
பிறந்தவனு மென்றே புகல்.

இ-ள். சுபக்கிரகங்கள் நீசம் பெற்றிருக்கும் போதில் நதிக்கரை கிணற்றின் சமீபம் அல்லது மரங்கள் சூழ்ந்திருக்கிறவிடம் காடுகளில் தனியாக இந்த சிசு செனனமானு னென்பதாம். 43

16-வது சுலோகம். மனிதரில்லாதவிடம் செனனம்.

சந்திரனை லக்கினத்தைச் சவுமியருங் காணுமல்
அந்தசுபர் நீசமுற்றுங் காணுது—வந்திட்ட
பாலன் மனிதரில்லாப் பருத்த வடவிதனில்
சாலமுடன் வந்தவனுய்ச் சாற்று.

இ-ள். சென்ம லக்னத்தையும் சந்திரனையும் சுபக்கிரகங்களும் நீசக்கிரகங்களும் காணுதிருக்க செனனமானது மனித சஞ்சாரமில்லாத காடு வனங்களிலே செனனமான சிசு வென்பதாம். 44

16-வது சுலோகம். மனிதருள்ளவிடம் செனனம்.

ஒருராசி யதுதனிலே யுற்றசுபக் கிரகம்
பெருசெனனம் சந்திரனைப் பின்காண—அரிவையவள்
சனமதுகள் தானிருக்கும் தக்க தலமதிலே
கனமுளசேயைப் பெற்றாள் காண்.

இ-ள். ஒரு இராசியிலடைந்த சுபக்கிருகங்கள் சென்மலக்னம் சந்திரனைப் பார்க்க கர்ப்பிணி சனங்கள் இருக்கும் நல்ல விடத்திலே பிரசவிக்க செனனமான சிசுவாகும். உதாரணம் சாராவளியும் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 45

17-வது சுலோகம். கர்ப்பிணி இருளில் சயனம்.

அம்புலி யெங்குற்றிடினு மங்கிசையில் தான்மாறி
கும்பமொடு மகரமதில் குலவவிருள்—அம்புவியும்
சென்மலக்கினம் மதிலும் திகழுஞ் சுகமிருக்க
கன்னிசயனம் மிருளாய்க் காண்.

இ-ள். சந்திரனெந்த ராசியிலிருந்தாலும் நவாங்கிசத்தில் மாறி மகரம் கும்ப நவாங்கிசத்திலிருக்க கர்ப்பிணி இருளுள்ளவிடத்தில் சயனமாவாள் சந்திரன் சென்மலக்னத்திலாவது நாலாமிடத்திலாவதிருக்க கர்ப்பிணியாகிய பிரசூதி இருளில் சயனமாவாளென்பதாம். 46

17-வது சுலோகம் பிரசூதி இருளில் சயனம்.

சனியுடனே சந்திரனும் சார்ந்தா லிருளாகும்
சனிமதியைக் கண்டா லிருளாகும்—தனியாக
சந்திரனு நாலினுற தையல் பிரசூதி
அந்தகாரத் திற்சயன மாம்.

இ-ள். சந்திரன் சனியைக்கூடியிருந்தாலும் பிரசூதி இருளில் சயனம் சந்திரனைச் சனிகண்டாலும் பிரசூதி இருளில் சயனம். சந்திரன் நாலாமிடமிருக்க பிரசூதி இருளில் சயனமென்பதாம். 47

17-வது சுலோகம். பிரசூதி சயனம் இருள்.

கர்க்கடக மீனமதில் கலையமரிலிருள் சயனம்
கர்க்கடக மீனமிசம் கலையிருளாம்—கெர்ப்பதானம்
காலமதி லிவ்விதமாய் கலையமரி லிருளதனில்
சீலமுடன் றூங்குவளாஞ் செப்பு.

இ-ள். கடகம் மீனத்தில் சந்திரனிருக்க பிரசூதி இருளடைந்த விடத்தில் சயனமாம். சந்திர னெந்தராசியிலிருந்தாலும் அமிசையில் கடகம் மீனம் நவாங்கிசையிலிருந்தாலும் பிரசூதி இருண்டவிடத்தில் சயனமாம். கர்ப்பாதான காலத்தில் சந்திரன் மகரம கும்பவிராசியிலாவது அல்லது கடகம் மீனம் நவாம்மிசத்திலிருந்தாலும் ஸ்திரீ புருஷாள் இருண்ட இடத்தில் சயனமென்பதாம். 48

17-வது சுலோகம். பிரசூதிசயனம் இருள்.

இந்தவிருள் சயன மிருந்திட்டா லம்மதியை
அந்தகதிர் நோக்கவந்த காரமது—அந்தவிடம்

இல்லையென் றேயுரைத்தா ரெவனேஸ்வரர் வசனம்
சொல்லியது நிச்சயமாஞ் சொல்.

இ-ள். இப்போது முன் பிரசூதி இருளிடத்தில் சயனம் சொன்ன யோகமானதுக்கு அந்தசந்திரனை சூரியன்காண இருளில்லையாம். இதற்கு உதாரணம் யவனேஸ்வரர் சொல்லியது நிச்சயமாயறிய வென்பதாம். 49

17-வது சுலோகம்.

இருளில்லாது தீபமுள்ளவிடம் பிரசூதிசயனம்.

சந்திரனைச் செங்கதிருந் தானோக்கி லிருளில்லை
அந்த கதிரைச்சே யவன்காண—சொந்தமதாய்
சேய்பிறக்கும் வீடுதனில் தீபமது வுண்டென்று
வாய்மையுடன் கூறும் வகை.

இ-ள். முன்சொல்லப்பட்ட இருள் சயன யோகத்துக்குச் சந்திரனை சூரியன் காண இருளில்லையாம் வலிதுள்ள சூரியனை செவ்வாய் பார்ப்பானாகில் பிரசூதியிருக்கப்பட்ட விடம் தீபமுள்ளவிடமென்றறிய வென்பதாம்.

17-வது சுலோகம். பூமியில் பிரசூதி சயனம்.

நீசனுமாய் லக்னதி நிற்கவல நீசனவன்
தேசுபெறு நாலினுற சென்மமதில்—நீசனுற
சோமனவன் றேனுறைய சுதனுதிக்கும் போதிற்றாய்
பூமி படுத்தாளாம் புகல்.

இ-ள். சென்மலக்னதி நீசமானாலும் பிரசூதிபூமி சயனம். நீசன் நாலாமிடத்திலிருந்தாலும் பிரசூதி பூமிசயனம். சென்மலக்னத்தில் நீசனிருந்தாலும் சந்திரன் நிசமானாலும் பிரசூதிபூமி சயனமென்பதாம். 51

17-வது சுலோகம். சிசு செனன விதம்.

சிரவுதய லக்கினமேல் சேய்சிரசு முன்றோன்றும்
சிரபிருட்டங் கைமுந்தி தானுதிக்கும்—வருபிருஷ்டம்
பூமிதனைப் பார்த்து பிட்டமதுங் கால்நீட்டி
நேமியதிற் சென்ம நிலை.

இ-ள். சிரவுதயவிராசி லக்னமானால் சிரசு முன்னாகவுதிக்கும் பிருஷ்டோதயவிராசி லக்னமானல் கைகளை நீட்டிக்கொண்டு கருப்பத்தினின்று சிசு செனன மாகும். உதாரணம் சாராவளி சொல்லப்பட்ட தென்பதாம்.

17-வது சுலோகம். விபரீத செனனம்.

சென்மத் ததிபதியுந் திகழு நவாங்கிசனும்
சென்மத்தினின்ற சுபர் நீயருமே—அந்நிலத்தில்

வக்கிரமாய் தானிருக்க வருஞ்சேய் முன்பின்மாறி
உத்த விபரீத் முறை.

இ-ள். சென்மலக்ஞாதிபதியாவது நவாங்கிசாதிபதியாவது சென்ம லக்னத்திலிருந்த சுபராவது பாபராவது அந்தந்த விராசியிலாவது மற்ற விராசியிலாவது வக்ரமாயிருக்க முன் சொல்லிவந்த சிரபிருட்டம் சிரோதயம் பிருட்டோதயங்கள் மாறி விபரீதமாக சிசுசெனனமாகு மென்பதாம்.

17-வது சுலோகம். கஷ்டப் பிரசவம்.

திங்களுக்கு நாலேழில் தீயோ ரமர்ந்தாலும்
அங்குமதி பாபரைத்தா னண்டிநிற்க—துங்கமுறு
தாயவளுந் துன்பமுற்று சஞ்சலத்தி லேயுழன்று
சேயதனை பெற்றளெனச் செப்பு.

இ-ள். சந்திரனுக்கு நாலாமிடத்திலாவது ஏழாமிடத்திலாவது பாபர்களிருக்க அல்லது சந்திரன் பாபிகளைச் சேர்ந்திருந்தாலும்கர்ப்பிணி துன்பமுற்று மனக் கலக்கத்துடனே பிரசவித்த செனனமா மென்பதாம்.

18-வது சுலோகம். தீபத்தைல அளவு.

சந்திரனே ராசிமுதல் தானிருக்கத் தைலமிக
இந்துமத்தி ராசியிலே மத்தியெனல்—அந்தவிடம்
அந்தியத்தி லேயமர வச்சுடரிற் றைலம்வர்த்தி
அந்தியமா மென்றே யறி.

இ-ள். சந்திரன் எந்த விராசியிலிருந்தாலும் அந்த விராசியை மூன்று கூறு செய்ய அதில் முதற் கூறிலிருந்தால் தீபத்தில் தைலம் நிறைய இருக்கும். மத்தியாகிய இரண்டாங்கூறில் சந்திரனிருக்க தைலமும் திரியும் அரைவாசியிருக்குமாம். அந்த விராசியின் கடைசியிலிருந்தால் தயிலமும் திரியும் கொஞ்சம் தானிருக்கும். உதாரணம் சாராவளியில் சொல்லப் பட்டிருக்கு மென்பதாம். 55

18-வது சுலோகம். தீபதைல அளவு.

சேயுதிக்குங் காலமதில் சீதமதி பூரணனாய்
கேயமுடனேயிருக்க நிறைதயிலம்—தேயுமதி
குறையிலோ வவ்விதமாங் கூறுமமா வாசியெனில்
அறைவதுவே யிருளென்பா யாங்கு.

இ-ள். செனனகாலத்தில் சந்திரன் பூர்வபக்ஷமாயும் பூரணையாயுமிருக்கில் தீபத்தில் வர்த்தியும் எண்ணெயும் நிறையவிருக்கும் அமரபக்ஷமானால் சந்திரன் குறைந்திருக்கும் விதம்போல தீபத்தின் வர்த்தியும் குறைவுபடும் அமாவாசியாகில் இருளென்றே சொல்லப்படு மென்பதாம். 56

18-வது சுலோகம் தீபதைல அளவு.

பிரசவமேலக்னமுதல் பிரபலதீபத்தயிலம்
பிரசவமேமத்திபத்தில் பின்பாதி—பிரசவத்தின்
அந்தியலக்னஞ்செனன மாகினலற்பமதாய்
இந்தவிதந்தீபதைல மெண்.

இ-ள். பிரசவம் சென்மலக்னத்தில் முதல்கூறுனல் தீபத்தில் தைல முந் திரியும் நிறைய இருக்கும் லக்னமத்தில் பிரசவமானல் முன்பாதி எரிந்து பின்பாதி திரியும் தைலமிருக்கும் லக்ன அந்தியமானதில் பிரசவமானல் தீபத்தின் தைல முந்தியும் அற்பமாக விருக்கும் இது விராசியின் ஆதியந்தம்போல தீபதிரி தைலமிருக்கு மென்பதாம். 57

18-வது சுலோகம் தீபத்தின் அளவு.

தினகரனுமேசரத்திற் சென்றிடத்தீபம்மலையும்
அனலிதிரமேயிருக்க வவ்விடமாம்—கனலுபயம்
தன்னிலிருந்திடவே சரவிளக்குபோலிசையும்
மன்னியதீபத்தின் வகை.

இ-ள். செனனகாலத்தில் சூரியன் சரராசியிலிருக்க அலைந்துகொண்டிருக்கும். தீபம் சூரியன் திரராசியில் இருக்க அந்ததீபம் ஒரே விடத்திலிருக்கும் சூரியன் உபயராசியிலிருக்க சரவிளக்குபோல தீபமசைந்துகொண்டிருக்கும். உதாரணம் மணித்தர் வசன மென்பதாம். 58

18-வது சுலோகம் தீபமிருக்குந்திசை.

கதிரோனுதயமுதல் கழறிடுமெட்டுத்திசையில்
பதியாகதானமையும் பான்மைபோல்—கதிர்திக்கில்
சுடரொளியாந்தீபமது சுகமாயிருக்குமென்று
திடமுடனேசொல்வதுதான் சீர்.

இ-ள். சூரியன் உதயமுதல் இராத்திரி பகல் எட்டு சாமத்திற்கு எட்டு திக்கில் சூரியன் சஞ்சரிப்பதனலும் அதேவிதமாக சூரியன் இருந்த திக்கில் தீபமிருக்குமென்று அரியவேண்டியது உதாரணமாம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 59

18-வது சுலோகம் தீபமிருக்குந் திசை.

பகலிருந்தராசியிதை பன்னிரண்டாய்ப்பங்கிட்டு
சகமதிலேசெங்கதிரோன் சார்ந்தவிடம்—தகரா
எண்ணைப்போலாகவுமே யிரவிதிசையிற்றீபம்
உண்மையுடனுற்றதென்றே யோர்.

இ-ள். சூரியனிருந்த ராசியை துவாதசாம்சம் செய்துகொண்டு எந்த இராசியின் துவாதசாம்சத்தில் சூரியனிருப்பனோ அதுபோல பிரசூதி சயனக்கிரகம் பன்னிரண்டுவிதமாக்குவது அதாவது மேஷ முதலாக கணனஞ் செய்ய வெத்தனையாகுமோ அத்தனையாவ தெண்ணுள்ள இராசிதிக்கில் தீபமிருக்குமென்று அறியவேண்டு மென்பதாம். 60

18-வது சுலோகம் தீபத்தின் தொகை.

சூரியநட்பாச்சியுச்சம் தோயவலிதுற்றிடவும்
தேரியசேய்செங்கதிரைத் திட்டியுற—பாரினிலே.
சேயுதிக்கும்வீடதிலே தீபமனேகந்திகழ
தூயசுதன்வந்தானெனச் சொல்.

இ-ள். சூரியன் நட்பு ஆக்ஷி உச்சம் மூலத்திரிகோணமென்னப்பட்ட வலிதாகவிருக்க அந்த சூரியனை செவ்வாய் பார்க்க பிரசூதியிருக்கப்பட்ட விடத்தில் அனேக தீபம் பிரகாசிக்க சிசு செனனமா மென்பதாம். 61

18-வது சுலோகம் தீபத்தின் தொகை.

பகலவனைப்பகைநீசம் பற்றியகோள்கண்படவும்
செகமீதுசேயுதிக்கும் சீரகத்தில்—திருவொளிதான்
இல்லாமலற்பவொளி யிருக்குமெனவேநீயும்
வல்லமையாற்கூறிடு வாய்.

இ-ள். சூரியனை பகைநீசம் பெற்ற கிரகங்கள் பார்க்க வெளிச்சம் அதிகமில்லாமல் அற்பவெளிச்சமா யிருக்குமென்று நிச்சயமாக சொல்லவேண்டியது உதாரணம் கிரந்தாந்தரங்களில் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 62

18-வது சுலோகம் கிரகதிசை.

கதிர்கீழ்தென்சேய்சனிமேல் காணில்புதன்வடக்கு
நிதிபுகர்தென்கீழரவு நேர்தென்மேல்—மதிதனக்கு
நேரும்வடமேற்கு நிகழ்பொன்வடகிழக்கு
கூறுங்கோள்திக்கறிந்துக் கொள்.

இ-ள். சூரியனுக்கு-கிழக்கு, சுக்ரனுக்கு-தென்கிழக்கு, செவ்வாய்க்கு-தெற்கு, ராகு கேதுக்கு-தென்மேற்கு, சனி-மேற்கு, சந்திரனுக்கு-வடமேற்கு, புதனுக்கு-வடக்கு, குருவுக்கு வடகிழக்கு, இந்தவிதமாக கிரகத்தின் திசை யறியவேண்டிய தென்பதாம். 63

18-வது சுலோகம் பிரசவவீட்டின் வாசல்.

பலனுற்றுகோள்களுந்தான் பண்பாகக்கேந்த்ரமுற
வலிவுள்ளகோள்திசையில் வாசலதாம்—நிலமீது

எத்தனைகோள்கேந்திரிக்க வத்தனைவாயிற்களென
சித்தமதுதான் துணிவாய்ச் செப்பு.

இ-ள். கேந்திரங்களிலிருந்த கிரகத்தின் திசையில் பிரசவித்த இடத்தின் வாசலாம். அப்படி கேந்திரமிருப்பவரிலும் வலிதுள்ள கிரகத்தின் திசையின் வாசலாகும். அப்படி பல கிரகங்கள் கேந்திரத்திலிருப்பாரானால் பலவாகிய வாசல்களுண்டென்பதாம். 64

18-வது சுலோகம் பிரசவவாசல்.

கண்டமதிலேகிரகம் கருதியமரானாகில்
மண்டலக்கோள் தன்னில் வலிவதுதான்—கொண்டகோள்
திசையதிலேபிரசூதி செய்யதலைவாசலென
பிசகாதென்றேயினிப் பேசு.

இ-ள். கேந்திர ஸ்தானங்கள் நாலிலும் கிரகமில்லாதிருந்தால் அந்த கிரகங்களில் நட்பாக்ஷி யுச்சமென்கிற வலிதுள்ள கோள்களுக்கு சொல்லப்பட்ட திசையில் பிரசூதிவாசல் இருக்கும். உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 65

19-வது சுலோகம் பிரசவவீட்டின் லக்ஷணம்.

செனனகாலந்தனிலே செப்புமேழ்கோளில்மிக
சனிவலிதுபெற்றிருக்க தாரணியில்—செனனவகம்
புறதனமுஞ்சீரணித்து புதிதானவீடதனில்
வுறமுடனேவக்தவனு மோர்.

இ-ள். செனனகாலத்தில் ஏழுகிரகங்களைப் பார்க்கிலும் சனிவலிதுடனேயிருக்க பழயவீடானது பழுதுள்ளதாயிருந்ததைத் திருத்தி புதிதாக பழுது பார்த்து செவ்வையாகக்கட்டின வீட்டில் செனனமென்றறியவென்பதாம். 66

19-வது சுலோகம் பிரசவவீட்டின் லக்ஷணம்-

உதிரவன்வலிதானு லுற்றமனைதீப்பட்டும்
மதிவலிதுநல்லபுது மச்சகமாம்—மதிபூர்வம்
ஆகுமேல்வீடதுவும் அழகுடையதாமென்றும்
வாகுடனேகூறும் வகை.

இ-ள். செனன காலத்தில் ஏழு கிரகங்களைப் பார்க்கிலும் [illegible] வலிதுபெற்றிருக்கில் தீப்பட்ட வீட்டில் சிசு செனனமாம் சந்திரன் வலிது பெற்றிருக்கில் புதிதாக கட்டப்பட்ட வீடாம் ஷை சந்திரன் பூர்வபக்ஷமா யிருக்க அழகுள்ள வீடென்றும் சொல்லப்படு மென்பதாம். 67

19-வது சுலோகம் பிரசவவீட்டின் லக்ஷணம்.

பரிதிவலிதானலே பலமற்றகூறையகம்
அறிஞனவன்சிற்ப மலங்கிருதம்—பிருகானல்
சித்திரமலங்கரித்த சீரானபுதுவகம்பொன்
மெத்தவலிதானவகம் விள்ளு.

இ-ள். சூரியன் வலிதாகவிருக்கில் பலனில்லாத கூறை வீடாகும் புதன் வலிதானல் சிற்பமலங்கரித்த வீடாகும். சுக்ரன் வலிதானல் அலங் காரமுள்ள புதுவீடாகும். குருவலிதானல் மிகவும் வலிதுள்ள வீடாகும் வெகுநாள்பட விருக்கக்கூடியதாம். 68

19-வது சுலோகம். செனனவீட்டின் பக்கத்திலுள்ள குறிப்பு.

வலிதாகுங்கோளதினல் வருஞ்சேய்செனனவகம்
வலிதுள்ளோருற்றவக மாதியதாங்—குலவும்
பனிரண்டுராசிதனை பங்குநாலாகியதால்
செனனவகம்சுற்றகமாந் தேர்.

இ-ள். வலிதுள்ள கிரகத்தினல் சிசு செனனமான வீட்டின் குறிப்பு அறியவேண்டியது ஆனல் வலிதுள்ள கிரகமிருந்த ராசியாதியாக பன்னி ரண்டு ராசிகளையும் நாலுபங்காய்ப்பிரிக்க ஒருபாகத்துக்கு மூன்று ராசியா கும் அந்தவிதம் செனனவீட்டிற்கு சுற்றிலுமுள்ள வீடுகளின் அடையாளம் அறியவேண்டியதென்பதாம். 69

19-வது சுலோகம்.

செனனவீட்டின் சுற்றியுள்ளவீட்டின் அடையாளம்.

செனனமுதல்மூன்றுலே செப்புவதுகீழ்வீடாம்
கனமானநாலுமுதல் காண்தெற்கு—இனமான
ஏழுமுதல்மேற்காக்கு மிதுபோலபத்துமுதல்
வாழுமகங்கூறுவாய் வடக்கு.

இ-ள். சென்மலக்னம் நீக்கி இரண்டாமிடம் மூன்றுமிடத்திலுள்ள கிரகத்தினல்கீழ்புரமிருக்கப்பட்டவீட்டின்குறியும்நாலாமிடம் ஐந்தாமிடம் ஆறுமிடத்தினல் தெற்கிலுள்ள வீட்டினடையாளக் குறியும் ஏழாமிடம் எட்டாமிடம் ஒன்பதாமிடத்தினல் மேற்கிலுள்ள வீட்டி னடையாளக் குறிப்பும் பத்தாமிடம் பதினோராமிடம் பனிரண்டாமிடத்தினல் வடக்கி லுள்ள அடையாளக்குறிப்பும் சொல்லவேண்டிய உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 70

19-வது சுலோகம். செனனவீட்டின்விதம்.

குருபரமவுச்சமுன்னைக் குலவுமீன்யாழ்செனனம்
வருபவர்க்கிரண்டுவித வாழ்மனையும்—குருவவனும்

பரமவுச்சந்தாண்டினல் பாலனகமூன்றுவிதம்
பரமவுச்சம்நாலாய்ப் பகர்.

இ-ள். பிரகஸ்பதிபரமவுச்சத்துக்கு முன்னாகவிருக்கில் சென்மலக்கினம் மிதுனம் அல்லது மீனமாயிருந்தால் இரண்டுவித அந்தஸ்த்துள்ளவீட்டில் செனனமென்றும் குருபரமவுச்சத்துக்கு முன்னாகவிருக்க மூன்றுவித அந்தஸ்த்துள்ள வீட்டில் செனனமாம் குருபரமவுச்சமாயிருந்தால் நாலுவித அந்தஸ்த்துள்ள வீட்டின் செனனமென்றறியவும் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 71

19-வது சுலோகம். செனனவீட்டின் விதம்.

துரகமதில்பொன்னிருக்கச் சூதிகாவீடதுவும்
திரிசாலையென்று தெரிந்திடுவாய்—அரிவைமீன்
மிதுனகுருசென்மத்தில் வேந்தன்பத்தாதிபனேல்
சுதனுதிப்புத்துவிசாலை சொல்.

இ-ள். தனுசில் குருவிருக்கப் பிரசவவீடானது திரிசாலை கன்னி மீனம்மிதுனத்தில் குருலக்னத்திற்கு பத்தாமாதிபதியானதால் துவிசாலையென்று சொல்லவும் திரிசாலை மூன்றுகட்டுவீடு துவிசாலை பிரண்டுகட்டுவீடு உதாரணம் லகுசாதகமென்பதாம். 72

20-வது சுலோகம். செனனவீட்டின் வாஸ்துக்குவிபரம்.

நண்டுதுலைதேளாடு நற்குடமுங்கீழ்வாசல்
தண்டுமீன்கன்னிதனு தான்வடக்கு—குண்டைசென்மம்
மேற்கானவாசலது மேவுசிங்கமான்றெற்கு
தீர்க்கமுளவாசலம்சந் தேர்.

இ-ள் கடகம் துலாம் விருச்சிகம் கும்பம் மேஷம் இவைகளிலொன்று சென்மலக்னமானல் வாஸ்த்து கீழ்வாசலாகும் மிதுனம் கன்னி தனுசு மீனம் இவைகளிலொன்று சென்மலக்னமானல் வாஸ்த்து வடக்குவாசலாகும். ரிஷபம் சென்மலக்னமானல் வாஸ்த்து மேற்குவாசல். மகரம் கும்பம் இவைகளிலொன்று சென்மலக்னமானல் வாஸ்த்து தெற்கு அந்த இராசி அம்சமானலும் அந்தந்ததிக்கு பிரசூதிவாசல் யென்றறியவென்பதாம். 73

21-வது சுலோகம். பிரசூதிசயனம்.

ஆடுவிடைதான்கிழக்கு வலவனரிதெற்காகும்
பாடுமியாழ்கன்னிதனு பகர்வாயுசேடியற்கு
நிருதியாமீனீசன் நிறையோடுதேள்மேற்கு
வருமகரங்கலசம்வடக் காம்.



21-வது சுலோகம். பிரசூதிசயனம்.

இந்தவிராசிகள்தா னெண்ணுசென்மமாகவரில்
அந்தவிராசிகளுக் காராய்ந்து—முந்திநாம்
சொன்னதிசைதன்னில் பிரசூதிசயனம்மெனவே
திண்ணமதாயிப்பலனைச் செப்பு

இ-ள், பிரசூதிசயனிக்குந்திசைசொல்லப்படும்அதாவதுமேஷரிஷபம் கிழக்கு மிதுனம் அக்னி கடகம் சிங்கம் தெற்கு, கன்னிநிருதி துலாம்விருச்சிகம் மேற்கு தனுசு வாயு, மகரம் கும்பம் வடக்கு, மீனம் ஈசானம் இந்த இராசிகள் சென்மலக்னமானால் பிரசூதி அந்த இராசிக்குள்ள திசையில் சயனித்திருப்பா ளென்பதாம். 74

21-வது சுலோகம் பிரசூதிசயனமஞ்சம்.

பிரசவித்தராசிலக்னம் பிரசூதிதன்றலையை
திரமாகவைத்துறங்குஞ் சீரதுவாம்—பெருசென்ம
மாதிமூன்றுமோரை மஞ்சமதின்கால்முதலாம்
ஒதுவதுவலமேற்கா னுரை.

இ-ள். பிரசவ லக்னராசி யெதுவோ அந்த ராசியின் திக்கில் பிரசூதி தலைவைத்து சயனிப்பதாம். அதாவது சென்ம லக்னத்திற்கு மூன்றுவது ராசி சயனமஞ்சத்தின் வலது பக்கத்திலுள்ள முதற்காலாகும் அதில் மேற்கிலுள்ள பாகமாம் அதாவது தலையுள்ளவிடம் மேற்காகுமென்பதாம். 75

21-வது சுலோகம். பிரசூதி சயனமஞ்சம்.

பன்னிரண்டாம்ராசியதால் பகரிடக்கால்மேற்காகும்
உன்னியவாறும்ராசி வ்லங்கீழா—யொன்பதாம்
ஓரைதனைக்கொண்டறிய வுரைக்குமிடங்கீழ்க்காலாம்
தேரியமஞ்சத்தின்வகை செப்பு.

இ-ள். பனிரண்டாம் ராசி மஞ்சத்தில் இடதுபக்கத்திலுள்ள மேற்கு காலாவது காலாம். ஆறுவது ராசி வலதுபக்கத்தில் கால்புறத்திலுள்ள மஞ்சத்தின் இரண்டாவது காலாகுமாம். ஒன்பதாம் ராசியினால் இடது பக்கத்தில் கால்புறத்தில் உள்ள மூன்றுவது காலாகும். இந்தவிதமாக மஞ்சத்தின் நாற்கா[illegible]லிருக்குமிட மென்பதாம். 76

21-வது சுலோகம். பிரசூதி சயனமஞ்சம்.

சென்மலக்கினமிரண்டுஞ் சிரசுள்ளபாகமது
என்னசுக[illegible]ந்து மெழில்வலமாம்—இன்னும்
ஏழெட்டுகாற்புறமா மீரைந்தும்லாபமது
சூழுமிடபக்கமெனச் சொல்.

இ-ள். சென்ம லக்னம் இரண்டாமிடம் மஞ்சத்தில் சிரசுள்ள பக்கமாம். நாலாமிடம் ஐந்தாமிடம் வலது கைப்புறமாம். ஏழாமிடம் எட்டாமிடம் காற்புறமாம். பத்தாமிடம் பதினோராமிடமும் இடதுகைப்புறமாகுமென்பதாம். 77

### 21-வது சுலோகம். பிரசூதி சயனமஞ்சம்.

மஞ்சமதிலேயுபய ராகியராசிவளைவாம்
மஞ்சமதில்பாபர் வளைந்தொடியும்—மஞ்சத்தை
நல்லோருறக்காண நலமாந்தீயோர்வலிதாய்
இல்லினுறையில்வலிதா மெண்.

இ-ள். மஞ்சத்துக்கு சொல்லப்பட்ட பன்னிரண்டு ராசிகளில் உபய ராசியிருந்தவிடம் வளைந்திருக்குமாம். அப்படி யுபயராசியில் பாபர் யிருக்க வளைந்து ஒடியாநிற்கும். உபயராசியில் சுபரிருந்தாலும் சுபர் பார்த்தாலும் ஒடியாது செவ்வையாயிருக்கும். பாபக்கிரகங்கள உச்சம் சுயதிரிகோணம் சுவக்ஷேத்திரம் மித்துரு க்ஷேத்திரம் இப்பேர்ப்பட்ட ஸ்தானங்களிலிருந்தால் பழுதில்லாது வலிதுள்ளதாயிருக்கும் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விதமாகவே சுரத பிரஸ்னையில் மஞ்சலக்ஷணமும் ஸ்திரீ புருஷ லக்ஷணமு மறியவேண்டிய தென்பதாம். 78

### 22-வது சுலோகம். பிரசூதி சமீபமிருந்த ஸ்திரீ.

சென்மமதற்கும்மதிக்கும் திகழுமத்தியந்தனிலே
வுன்னிடுங்கோளெத்தனையோ வத்தனையு—மின்னனையார்
அருகிலிருந்திடுவோ ரக்கோள்நிறம்வயது
உருவுலகுங்கண்டு யுரை.

இ-ள். சென்ம லக்னத்திற்கும் சந்திர லக்னத்திற்கும் மத்தியில் இருந்த கிரகமெத்தனையோ அத்தனை ஸ்திரீகள் பிரசூதி சமீபமிருந்தவர்களாம். அவர்களுக்கு ரூபம் வயது தேசம் முதலானவைகளைக் கிரகங்களினாலே அறிந்து விபரமாகச் சொல்லவேண்டியது. சுமங்கலி விதவையென்பதும் கிரகத்தினாலே சொல்லவேண்டிய தென்பதாம். 79

### 22-வது சுலோகம். பிரசூதி சமீபமிருந்த ஸ்திரீகள்.

உதயமுதலாறுக்குள் ளூற்றிடுங்கோளைப்போலும்
பதியதர்க்குவெளியுளள பாவையர்கள்—பதியுள்ளே
இருந்தமடமாதர்கள் ளெண்ணிக்கைகோளதினால்
வருந்துகைபோலாயும் வகை.

இ-ள். சென்மலக்கினமுதல் ஆறுராசிக்குள்ளிருந்த கிரகமெத்தனையோ அத்தனை ஸ்திரீகள் பிரசூதியிருந்தவிடத்திற்கு வெளியில் இருந்த ஸ்திரீகள் தொகையும் ஏழாமிடம் முதல் [illegible] ரண்டாமிட [illegible]

ள்ள கிரகத்தைப்போல பிரகுதி சமீபமிருந்த ஸ்திரீகளைச் சொல்லவேண்டியது. உதாரணம் ஜீவசர்மா சொல்லியிருக்கிறார். லகுசாதகமும் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 80

23-வது சுலோகம் சிசுலக்ஷணம்.

செனனநவாங்கிசத்தால் சீருங்குணமறிய
இனமுடையவலிதா யிருந்தக்கால்—தனதுவலி
யற்றிருக்கும்போது வவனியில்வந்தோர்க்குமே
உற்றகுணமேயிலையா மோர்.

இ-ள். சென்மலக்ஞதி நவாங்கிசாதி வலிவுடனே யிருந்தால் அவர்களுக்குள்ள குணங்குறியும் சமான தேகமுள்ளவனாகும். இந்த இருவரும் வலிவில்லாதிருந்தால் அந்த கிரகத்துக்குச் சொல்லப்பட்ட சரீரமிருக்காதென்பதாம். 81

23-வது சுலோகம். சிசுலக்ஷணம்.

செனனகாலந்தனிலே திகழுமெழுகோளதிலே
இனமுடனக்காலில்வலி வேற்றகோள்—தனைநிகராம்
தேகங்குணங்குறிகள் சீராம்நடவடிக்கை
சோகங்களற்றுநீ சொல்.

இ-ள். செனனகாலத்தில் லக்ஞதிபதி நவாங்கிசாதிபதியவர்கள் பலமில்லாதிருக்க ஏழு கிரகங்களில் வலிதுள்ள கிரகங்களுக்கு சொல்லப்பட்ட குணங்குறிகள் சரீரலக்ஷணம் முதலானவைகளைச் சொல்லவேண்டியதென்பதாம். 82

23-வது சுலோகம். சிசுலக்ஷணம்.

சென்மகாலந்தனிலே திங்களுறுமங்கிசத்தோன்
தன்னவரிலெக்கோள்கள் தானமரின்—உண்ணுகுணம்
உருவநிறங்குறியு முண்டாருஞ்சேய்தனக்கு
மருவுமுதல்கூறுதலே மாண்பு.

இ-ள். சென்மகாலத்தில் சந்திரனிருந்த நவாங்கிசத்தின் அதிபதியாரோ அவருக்குள்ள குணம் குறி உருவம் மற்ற லக்ஷணங்களை அறிந்து சொல்லவேண்டியதென்பதாம். 83

23-வது சுலோகம். லக்கினதுவாதச அங்கம்.

இலக்கினமேசென்னியதா மிரண்டாமிடமுகமாம்
துலங்குமூன்றாகுமிடம் மார்பாகும்—பலமான
வீரிரண்டுநெஞ்சாகு வேழிலைந்துமேவயிறும்
கூறியதாறுந்தியின்கீழ் கொள்.

23-வது சுலோகம். லக்கினதுவாதச அங்கம்.

ஏழிடமேலிங்கமதா மெட்டுபிருஷ்டம்மொன்பான்
தாழுதுடையீரைந்தும் சங்காகும்—சூழ்லாபம்
தன்கணுக்காலேயாகும் சாற்றுமிருபாதமது
பன்னிரண்டாமிடமாம் பார்.

இ-ள். சென்மலக்னம்-தலை, இரண்டாமிடம் - முகம், மூன்றுமிடம்-மார்பு, நாலாமிடம்-நெஞ்சு, ஐந்தாமிடம்-வயிறு, ஆறுமிடம்-உந்திக்குங்கீழ் கடிப்பிரதேசமாம் ஏழாமிடம்-லிங்கமென்னும் ஆண்குறி, எட்டாமிடம்-பிருஷ்டம், ஒன்பதாமிடந்-துடை, பத்தாமிடம்-முழங்கால், பதினோராமிடம்-கணுக்கால், பன்னிரண்டாமிடம்-இரண்டுபாத மென்பதாம். 84

23-வது சுலோகம். அவயவலக்ஷணம்.

எந்தராசிகள்தனிலு மெழிலாகத்தீர்க்கமுற
அந்தகோளாலே யதின்விபரம்—அந்தந்த
வலிதும்வலிகுறையும் மதித்தேயுரைத்திடுதல்
தலைமுதலாயீராறுந் தான்.

இ-ள். அதிகம் குறைவு எந்த இராசியிலிருக்குமோ அந்த அவயவமாகுமோ அந்த இராசி தீர்க்கராசியானால் அந்த அங்கம் குறைந்திருக்காது தீர்க்கராசியாதிபதி கிரகயுக்தமான தீர்க்கராசியானால் அந்தம் அங்கம் குறைந்திருக்கும் இராசி கிரகங்களில் ஒன்றுகுறைவாயும் ஒன்று தீர்க்கமாயுமிருந்தால் அந்த அங்கம் சமமென்று சொல்லப்படும். இராசியில் அனேகம் கிரகமிருந்தால் பலவானான கிரகாதிக்கமே சொல்லவேண்டும். ஒரு கிரகமுமில்லாவிட்டா லிராசி சமானமாகவே குறைவும் அதிகமும் சொல்லவேண்டியதென்பது. உதாரணம் சத்யாசாரி வசனமென்பதாம். 85

24-வது சுலோகம். முதல் திரேகாணம்.

செனனதிரேகாணமதால் சேயினடையாளமதும்
கனமதுளசிரசுமுதற் கண்டமிரண்—டினமாகும்
கண்டமுதலுந்திவரை கருதியமூன்றேநாபி
கொண்டுவிரு பாதம்வரை கூறு.

இ-ள். சென்மலக்னத்தில் முதல் திரேகாணமானால் சிரசு முதல் கண்டம்வரையினுள்ள அங்கமாம். சென்மலக்னம் இரண்டாந் திரேகாணமானால் கண்டமுதல் நாபிவரையிலுள்ள அங்கமாம். சென்மலக்னம் மூன்றாந் திரேகாணமானால் நாபி முதல் பாதம் வரையிலுள்ள அங்கமென்றறிவதா மென்பதாம். 86

24-வது சுலோகம் அங்கத்தின் வலம் இடம்.

இரண்டொடுமூன்றேநாலு என்னுமைந்தாரேழுவலம்
திரமுடனேயேழுங்கீழ் செப்புவிதம்—விரவிய
எட்டுமுதலீராறு மிடதுபக்கமாமெனவே
திட்டமுளசென்மமுச்சி தேர்.

இ-ள். பன்னிரண்டிராசிகளுக்குள்ளே எது லக்னமாகுமோ அந்த விரா சிக்கு பின்னுலிருக்கப்பட்ட விராசிகள் உதவிராசியாகும். மின்பாதியான விராசிகள் அனுதிதராசியாகும் ஆனதால் லக்னத்திற்கு 12-11-10-9-8-இந்த ராசிகளும் சப்தமத்தில் லக்னத்தில் எத்தனே பாகைகள் சென்றிருக்குமோ அத்தனே பாகமும் உதித்த ராசியாகும் மற்றய 2-3-4-5-6 இந்த ராசிகளும் சப்தமத்தில் லக்னத்தில் எத்தனேபாகை சென்றிருக்குமோ அத்தனேபாக மும் அனுதிதராசியாகும் அதில் உதிதராசிகளால் இடதுபக்கம் உள்ள அவ யவமும் அனுதிதராசிகளால் வலது பக்க அவயவமும் தெரியவேண்டிய தென்பதாம். 87

24-வது சுலோகம். முதல் திரேகாணம் அங்கம்.

உதயசிரமிரண்டுமுத லொளிசெவியுநாசியது
வதனமுடன் பிடரிவாய் வலது—துதியிடது
பிடரிகன்னமூக்கு பேச்சறியுங்காதுடனே
இடதுகன்ன மாகுமென வெண்.

இ-ள். சென்மலக்னம் சிரசு இரண்டாமிடம் வலதுகண்மூன்றுமிடம் வலதுபக்கத்துக்காது, நாலாமிடம் வலதுநாசி, ஐந்தாமிடம் கன்னம் முக வாய்க்கட்டை, ஆறுமிடம் வலதுபிடரி, ஏழாமிடம் வாய், எட்டாமிடம் இடது பிடரி, ஒன்பதாமிடம் இடது கன்னம் முகவாய்க்கட்டை, பத்தா மிடம் !இடதுநாசி, பதினேராமிடம் இடதுகாது, பன்னிரண்டாமிடம் இடது கண், இந்தவிதமாக முதல் திரேகாணம் அங்கம் என்பதாம். 88

24-வது சுலோகம். இரண்டாவது திரேகாணம் அங்கம்.

உதயகண்டமிரண்டுபுய மூன்றுகைநான்குவிலா
சுதனவன்மார்பாறு வயிறேழ்நாபி—விதிவயது
ஒன்பதுமார்பத்துவிலா வுயர்லாபமேகரங்கள்
பன்னிரண் டிடப்புயமாம் பார்.

இ-ள். சென்மலக்னம் கழுத்து, இரண்டாமிடம் வலப்புயம், மூன்று மிடம் வலக்கை, நாலாமிடம் வலது புறவிலா, ஐந்தாமிடம் வலது மார்பு, ஆறுமிடம் வலது வயிறு, ஏழாமிடம் உந்தி, எட்டாமிடம் இடது வயிறு, ஒன்பதாமிடம் இடது மார்பு, பத்தாமிடம் இடது புறவிலா, பதினேரா மிடம் இடதுகை, பனிரண்டாமிடம் இடது புயம், இந்தவிதமாக இரண் டாவது திரேகாணத்தின் அங்கம் என்பதாம். 89

24-வது சுலோகம். மூன்றுவது திரேகாண அங்கம்.

சென்மமடிவயிறு செப்புமிரண்டேநிதம்பம்
துன்னியமூன்றேவலது வண்டமாம்—உன்னியறு
நாலால்வலதுதுடை நாடுமைந்தேமுழங்கால்
காலாறு வேழபாதங் காண்.

இ-ள். சென்மலக்னம்-அடிவயிறு, இரண்டாமிடம்-வலது நிதம்பத்தட்டாகும், மூன்றுமிடம்-சிசினம் அண்டமாம், நாலாமிடம்-வலதுதுடை, ஐந்தாமிடம்-முழங்கால், ஆறுமிடம்-கெண்டைக்கால், ஏழாமிடம்-இரண்டுபாதங்களுமாம் என்பதாம். 90

24 வது சுலோகம். மூன்றுவது திரேகாண அங்கம்.

எட்டுவிடக்கணுக்கா லென்னவொன்பதே முழங்கால்
திட்டமுளபத்து மிடதுதொடை—இட்டமுடன்
பன்னொன்றிடவிருஷ்ணம் பன்னிரண்டேநிதம்பம்
என்னுதிரே காணவங்க மென்.

இ-ள். எட்டாமிடம்-இடதுக்கணுக்கால், ஒன்பதாமிடம்-இடதுமுழங்கால், பத்தாமிடம்-இடது தொடை, பதினொராமிடம்-சிசினம் அண்டமாம் பனிரண்டாமிடம்-இது நிதம்பத்தட்டாம். உதாரணம் கிரந்தாந்தரவசனம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 91

25-வது சுலோகம். சிசுவுக்கு மச்சம் மருவு.

எந்தவோரையெவ்வங்க மேற்குமோவவ்விடத்தில்
அந்தமிலாப்பாப ரடைவாரேல்—அந்தந்த
அங்கமதிலேவடிவும் மமையுமருமச்சங்கள்
தங்குமந்தச் சேயுடலில் தான்.

இ-ள். எந்தராசிகளுக்கும் மூன்று திரேகாண முள்ளதாம் அதில்பாபக்கிரகமிருந்தராசி அங்கத்தில் மருவுவடிவு மச்சம் தழும்பு உண்டாயிருக்குமென்பதாம். 92

25-வது சுலோகம். சிசுவுக்கு மச்சமருவு.

சாற்றுவதுபாபர்தமை சௌமியர்கூடக்காண
ஏற்றிருக்குமச்சமென வேயிசைப்பாய்—தேற்றமிகு
தீயகோளாக்ஷியுற திரராசியவ்வமிசத்
தேயமரக் கர்ப்பமருத் தேர்.

இ-ள். பாபக்கிரகத்தைச் சுபர்கூடினாலும் சுபர்பார்த்தாலும் மச்சமுண்டாகி சிசு செனனமாகும். பாபர்கள் ஆக்ஷிபெற்றிருந்தாலும் அல்லது திரராசியில் இந்த பாபரிருந்தாலும் மருவுடனே சிசுசெனனமாகுமென்பதாம்.

25-சுலோகம். இதுவுயது

மச்சமுடனேமருவு மகவுக்கீயுங்கிரகம்
இச்சையுடன்சொக்ஷேத்ரஞ் சுயவமிசம்—மெச்சுதிர
மாகிலுல்மச்சமுடன் மதலையதுதானுதிக்கும்
ஆகுமற்ற வங்கிசைபின் னும்.

இ-ள். சிசுவுக்கு மருவுச்சங்களைக்கொடுக்கப்பட்ட கிரகம் சொக்ஷேத்திரத்திலாவது சுயநவாமிசத்திலாவதிலிருக்க அல்லது திராசியிலிருந்தாலும் சிசுவு மருவு மச்சத்துடனே செனனமாகும் மற்ற கிரகங்களின் நவாமிசையி லிருந்தால் பின்பு அந்தமரு மச்சம் உண்டாகுமென்பதாம். 94

25-வது சுலோகம். சிசுவுக்கு மச்சமருவு.

மருவுடனேமச்சங்கள் மதலைக்கிலாவிட்டால்
வருகுமோர்காரியத்தால் மச்சம்வடு—தெரிவாய்நீ
அந்தக்கிரகதிசை யவர்பொசிப்புவந்தரத்தில்
எந்தவிதத் தாலும்வரு மெண்.

இ-ள். சிசுவுக்கு மருவுமச்சங்களைக் கொடுக்கிற கிரகம் கொடுக்காதிருந்தால் ஏதாகிலும் ஒரு காரிய நிமித்தம் சிசுபிறந்த சில நாளைக்குப்பின் உண்டாகும் அதெந்தகாலமென்றால் அவர்கள் மகாதிசைபுத்தி அந்திரகாலத்தில் எந்த விதத்திலும் மருவுமச்சம் உண்டாகு மென்பதாம். 95

35-வது சுலோகம். கிரகமக்ஷம்.

மருமச்சமீயுங்கோள் மந்தனெனில்வாதமதால்
குருதியெனிலக்கினியா யுதமரவம்—குறையுமதி
சலசீவர்தம்மாலும் சாற்றுமிருகக்கொம்பால்
பலவிரணம் காயந்தழும் பாம்.

இ-ள். சிசுவுக்கு மருவுமச்சத்தைக் கொடுப்பவர் சனியானல் வாதரோகத்திலும் செவ்வாயானல் அக்கினியாலும் கத்தி முதலான ஆயுதங்களினல் சர்ப்ப விஷத்தினல் உண்டாகும் அமரபக்ஷ சந்திரனல் நீர் வாழும் செந்துக்களினலும் நாற்கால்மிருக கொம்பினல் ரணம் தழும்பு முதலானவைகளுண்டாகுமென்பதாம். 96

25-வது. சுலோகம். சிசுவுக்கும் மச்சமருவு.

பாவியுடன்சேர்ந்திட்ட பாகனெனில்மண்ணதிலே
தாவிசருக்கிவிழல் தண்ணீரில்—மேவிவிழல்
மண்கட்டிமேல்விழுதல் மற்றுஞ்சுவர்வீழ்ந்து
புண்பட்டகாயம் புகல்.

இ-ள் பாபர்களுடன் சேர்ந்தபுதனும் பாபியாம் அப்படிப்பட்ட புதனல் நடக்கும்போது சருக்கிவிழுதல் மண்கட்டிவிழுதல் சுவர் இடிந்து

விழல் இந்த விஷயங்களினால் புண்காயம் உண்டாகித் தழும்பு மருவுவடிவு உண்டாகுமென்பதாம். 97

25-வது சுலோகம். சிசுவுக்கு மச்சமருவு.

பருதிமருமச்சமதை பண்ணுங்கோளானுக்கால்
மிருகமதின்காலால் நகங்களால்—மரக்கொம்பால்
உண்டாந்தழும்பிரண முரைப்பாய்விபரமொடு
மண்டலத்திலியார்க்கும் வகை.

இ-ள். சூரியன் மருமச்சத்தை உண்டுபண்ணுபவரானால் மிருகங்களின் கால்கள் கொம்புகளாலும் விரகுகட்டை கம்புமுதலியவைகளினால் ரணம் தழும்புண்டாகு மென்பதாம். 98

25-வது சுலோகம். சிசுவுக்கு மச்சமருவு.

அங்கமதிலுள்ளவடை யாளக்கோள்பொன்புகர்மால்
தங்குமிடந்தன்னில் தழும்பிரணம்—அங்கில்லை
திடமுடனேகாத்திரமும் தேமலதுவுண்டென்று
இடமறிந்துகூற லியல்.

இ-ள். சரீர அங்கங்களில் குரு சுக்ரன் பாபருடன் சேராத புதன் இவர்களிருந்த இடம் தழும்பும் மச்சம் இருக்காது தேமல் வலிதுமுதலிய விருக்கு மென்பதாம். 99

25-வது சுலோகம். சிசுவுக்கு மருவுமச்சம்.

புந்தியொடுமுக்கோள் பொருந்துசுபர்பாபரெனில்
அந்தகிரகம்நின்ற விடம்வலத்தில்—தங்கியகோள்
தன்னில்வலிவுற்றவரின் தனதுதிசைபுத்தியதில்
பின்னமுளமச்சமருப் பேசு.

இ-ள். புதனுடனே சுபரும்பாபருங்கூடி மூன்றுபேரிருந்தால் அந்தக் கிரகமிருந்த ராசியின் அவயவம் இடதுபக்கத்திலாவது அல்லது வலதுபக் கத்திலாவது மச்சமருவு உண்டாகும். அதுஎந்தகாலமென்றால் அவர்களில் வலிது பெற்ற கிரகத்துக்கு சொல்லப்பட்ட திசைபுத்திகளில் உண்டாகு மென்பதாம். 100

26-வது சுலோகம். சிசுவுக்கு மச்சமருவு.

சென்மமதற்காறிலுறு தீயகோள்தானுமுற
இன்பமாமவயவத்தி லேமருவாம்—தன்னுக்ஷி
தன்னமிசைதிரராசி தன்னிலிருந்திடவே
பின்னமருவாய்ச்செனனம் பேசு.

இ-ள். சென்மலக்னத்திற்கு ஆறாமிடத்தில் பாபக்கிரகமிருக்க அந்த ராசிக்கேற்பட்ட அவயவத்தில் மரு மச்சமுண்டாகுமாம் அந்தப்பாபக் கிர

கம் சொக்ஷேத்திரம் சுயநவாம்சம் ஸ்திர ராசியிலிருக்க அந்த விடத்தில் மச்சமருவுடனே சிசுசெனனமாகு மென்பதாம். 101

26-வது சுலோகம். சிசுவுக்கு மச்சமருவு.

இருமூன்ரும்ராசியது வேற்றசரராசியுமாய்
வருவோர்கள்பாபர்களு மாசினல்—பிறராசி
மற்றகோளங்கிசையேல் வருவோர்திசைபுசிப்பில்
உற்றமருதோன்றும் முறை.

இ-ள். சென்ம லக்னத்திற்கு ஆரும்இடம் சரராசியாகியும் அதில்பாபக் கிரகமிருக்க அல்லது பாபர்கள் அன்னியராகிய கிரகங்களின்ராசியிலிருக்க அல்லது சரராசி மற்ற கிரகராசியில் நவாம்சத்திலிருக்க மருவுமச்சமில்லா மல் பிறந்து பிறகு அந்த கிரகங்களின் சுயதிசை புத்திகளில் மருவு மச்ச முண்டாகு மென்பதாம். 102

26-வது சுலோகம். சிசுவுக்கு பலவர்ணமச்சம்.

எட்டிலுறுந்தீயோரை யெழிற்சுபருநோக்கமுற
திட்டமுடனந்த வவயவத்தில்—இட்டமொடு
வெள்ளையுடனேகருப்பு மேவும்பலவர்ணம்
பிள்ளை தனக்குண்டென்னப் பேசு

இ-ள். சென்மலக்னத்திற்கு எட்டாமிடத்தில் பாபரிருக்க அந்த பாபரை சுபக்கிரகங்கள் பார்க்க அந்தஅவயுவ அங்கத்தில் வெள்ளைஎள்ளை போலகருப்புமச்சம் பலவிதமாகவுண்டாகி சிசுவுசெனனமாகு மென்பதாம்.

26-வது சுலோகம். சிசுவுக்கு மயிர்முளைத்தமச்சம்.

இருநான்கில்பாபருட லெழிலுறுநல்லோர்கூடி
திரமாயிருந்திட்ட போதினிலும்—வருமச்சம்
சம்பந்தம்ரோமமுடன் தாறுண்டாகும்மெனவே
அம்புவியிலியார்க்கு மறை.

இ-ள். எட்டாமிடத்தில் பாபக்கிரகமும் சுபக்கிரகமுங் கூடியிருக்க மச்சத்தில் மயிர் முளைத்திருப்பதுடன் சிசுசெனனமாகு மென்பதாம். 104

படலச்செய்யுள் - தொகை.

சென்மகாலப்படலம் சீருடனேயாராய்ந்து
சொன்னவெண்பா நூறுடனே ஒன்பானும்—நன்மையுடன்
பாரதனிலுள்ளோர்க்கு பண்பாய்வயித்தியலிங்கம்
தீரமொடுசெப்பியதாந் தேர்.

ஜனனகாலப் படல முற்றிற்று.

# மங்களேஸ்வரீயம்.

ஏழாவது

## பாலாரிஷ்டப்படலம்.

---

### விநாயகர் துதி.

மூடிகமதிலேயேறும் முதல்வனேபாலசந்த்ரா
சேடியர்க்கருவிற்றோன்றும் சிசுக்களாம்பாலருக்கு
நாடியவரிட்டயோகம் நலமுடனுரைக்கவுன்றுள்
சூடினேன்சென்னிமீது துணையதுபுரிந்திடாயே.

### 1-வது சுலோகம். சிசுமரணம்.

ஆதவனுதிக்குமுன்னுமவ்வலரி யத்தமித்ததிபின்கடிகை
ஓதிடுமிரண்டில்மதியவனோரை யுற்றுமெவ்வோரையிலேனும்
தீதுறுபாபர்நவாங்கிசையீறில் சேர்ந்திடுகாலதிலுதித்த
சாதகன்மரணமாவதுதிண்ணம் சதுர்முகனமைத்திடுவிதியே.

இ-ள். சூரியன் உதயமாக இரண்டு நாழிகை முன்னும் அஸ்தமான பின் இரண்டு நாழிகையும் சந்திகால மென்னப்படும் அந்த சந்தியாகாலத்தில் சந்திர ஒரைகூடி யிருக்க எந்த லக்கினத்திலாயினும் நவாங்கிசத்தின் கடைசியில் பாபர்களிருக்க பிறந்தசிசு மரணமாகு மென்பதாம். 1

### 1-வது சுலோகம். சிசுமரணம்.

செனனலக்கினமாதியொன்று நாலெழுபத்தினிற்றிங்களோ
டினமில்பாபிகள்மூவராகியு மேய்ந்தநாலுவிடத்திலும்
புனைகொள்காலமிப்பூவுதித்திடு புண்ணியச்சுதன்பொற்பிழந்
தினலாவிட்டேமனுருல செய்துவானெனவெண்ணிடே.

இ-ள். சென்மலக்னம் நாலாமிடம் ஏழாமிடம் பத்தாமிடம் இந்தவிடங்களிலொன்றில் சூரியன் செவ்வாய் சனி இவர்களுடன் சந்திரன்கூடி யிருக்க அல்லது கேந்திரஸ்தான மெதிலாவது பாபரிருக்க பிறந்தசிசு மரணமாகும். உதாரணம் சாராவளி சொல்லப்பட்டிருக்கிறது. இதுபிணிவிஷயத்தின் பிரஸ்னைக்கும் சொல்லலாம், கிரந்தாந்தரவசனமும் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 2

### 2-வது சுலோகம். சிசுமரணம்.

பாலனுதித்திடுஞ் செனனலக்கினத்தைப் பாகைமுறை கத
மறிந்து கதத்தைப்பத்தில், சாலவிடுத்ததின்சேடபாகையாதி தரு

ராசியாறுமுற்கூறதன்பின்ஞறும், சீலமிதிற்பிற்கூறுங் தீயர்முன்னும் திகழ்சுபர்கள் பின்னுமுறச்செனித்தகாலே, ஞாலமிசை தேளலவன்செனனவீடாய் நற்குழவிதோன்றவுயிர் நமன்கொள்வானே.

இ-ள். சென்மலக்கினத்தைப் பாகையாக்கி அந்தப்பாகையில்சென்ற பாகை யெத்தனையோ அத்தனை பாகையும் பத்தாமிடத்தில் தள்ளி மிச்சமிருக்கும் பாகையெத்தனையோ அத்தனை பாகையும் நாலாமிடத்தில்சேர்க்க ஆறிராசியாகும் அது பூர்வார்த்த மென்னப்படும். நாலாமிடத்தில் சென்ற பாகைமுதல் பத்தாமிடத்திற்கூட்ட ஆறிராசியாகும் அந்த ஆறிராசியும் உத்தரார்த்தமென்னப்படும். பாபர்கள் பூர்வார்த்தத்திலும் சுபர்கள் உத்தரார்த்தத்திலுமிருக்க கடகம் விருச்சிகம் சென்மலக்னமாக சிசு செனனமானல் மரணமாகும் உதாரணம் பாதராயண வசனம் சொல்லப்பட்டிருக்கிறது அனுதேவதல வசனமும் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 3

2-வது சுலோகம். சிசுமரணம்! கலிவிருத்தம்.

உற்றசென்மத்துக் கேழ்க்குமிருபுறம்
பற்றுகற்சுப ரோடுறைபாவர்கள்
நிற்றலார்சிசு வாயுள்நிலேத்திடா
கற்றநூன்முறை கண்டகணக்கிதே.

இ-ள். சென்மலக்கினத்திற்கு இரண்டு பன்னிரண்டிலாவது அல்லதெட்டாமிடம் ஆறுமிடத்திலாவது பாபர்கள் சுபருடன் கூடியிருந்தாலும் சிசுமரணம். உதாரணம் தேவதல வசனமும் பட்டோத்பலர் வசனமும்யவனேஸ்வரர் வசனமும் சொல்லப்பட்டதினலே லக்னபி முகமென்றும் ஆஸ்த்தாபி முகமென்னப்பட்டதில் 12 லிருந்த கிரகம் லக்னபி முகமாம். 6 மிடமிருந்த கிரகம் ஆஸ்தாபி முகமாம் ஆனல் ஆறுமிடம் எட்டாமிடத்தில் பாபரிருக்க பிறந்த சிசுமரணமென்று பட்டோத்பலர் வியாக்யானஞ்செய்திருக்கிறர். சிலர் துதியத்திலிருக்கப்பட்ட கிரகம் ஆஸ்தாபிமுகமென்பதினலே பாபர்கள் 2-8-லிருக்க பாலாரிட்டமென்று சொல்லப்படும். இதற்கு உதாரணமாம் கார்க்கிவசனம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம்.

3-வது சுலோகம். சிசுமரணம். கலிவிருத்தம்.

கூறிடுமிலக்கினத்து மேழிலுங்குளிர்மதி
சேருமில்லிலுஞ்சுபர்கள் சேர்ந்திடாததீயராய்
சாருவார்கடம்மையுஞ் சவுமியர்கள்கண்படா
தூரிகரலுதித்தசே யுயிரிழப்பதுண்மையே.

இ-ள். சென்மலக்கினத்திலும் ஏழாமிடத்திலும் சந்திரனுடனும் சுபரைக்கூடாத பாபரிருக்க அவர்களை சுபர்கள் பார்க்காதிருக்க பிறந்த சிசுமரணமென்பதாம். 5

4-வது சுலோகம். சிசுமரணம்.

மதிபாவியாகிமீராறுமன்ன சென்மத்துமெட்டில்
விதிபாபரொன்றசென்மமேவு கேந்திரங்கள்நாலில்
துதிகொள்நற்சுபரில்லாமற் றாயசேய்செனனமாகில்
பதியிழந்தாவிநீத்து பரகதியடையுங்கொல்லோ.

இ-ள். சந்திரன்கலை குறைந்து அமரபக்கமாகி லக்கினத்திற்கு பனிரண்டாமிடமிருக்க சென்மலக்கினத்திலும் எட்டாமிடத்திலும் பாபிகளிருக்க சென்மம் 4-7-10-இந்த விடங்களில் சுபர்களில்லாதிருக்கப் பிறந்த சிசு மரணமாகும் சிலர் லக்கினம் அஷ்டமத்தில் பாபரிருக்க சிசு மரணமென்பார்கள். உதாரணம் கார்க்கிவசனம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம்.

5-வது சுலோகம். சிசுமரணமும் தீர்க்காயுசும்.

மதிபாவருடனேமெட்டு மற்றுமீராறுசென்மம்
பதிதனிலிருக்கநாலில் பனிங்குமால்பொன்னேக்கற்றல்
விதியறுமுடிந்தேசாகும் மேவுகேந்திரங்கள்நாலில்
துதிகொள்நற்சுபர்கணிற்கத் தோன்றினுயுள்தீர்க்கம்.

இ-ள். சந்திரன் பாபிகளுடனேகூடி 7-8-12-சென்மலக்கினம் இவைகளிலிருக்க கேந்திரத்தை தவிர மற்றவிடங்களிலிருந்து சுபர்களாகிய குரு புதன் சுக்ரன் இவர்களிருந்து சந்திரனைப் பார்க்காதபோது சிசுமரணம் சுபர்கள் கேந்திரங்களிலிருக்க செனனமான சிசு தீர்க்காயுள்ளதாயிருக்கும் உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 7

6-வது சுலோகம். சிசுவுக்கு ஒருமாதம் ஆயுசு. கலி விருத்தம்.

எட்டினிலாறி லெய்தும்மதிதனை
மட்டில்லாச்சுபர் மன்னநோக்கற்றபோ
திட்டமாய்கொடும் பாவர்நோக்கெய்திடில்
மட்டில்மாதம்மொன் றுக்குள்ளேமாரகம்.

இ-ள். சந்திரன் ஆறுமிடத்திலாவது எட்டாமிடத்திலாவது இருக்க அந்த சந்திரனை சுபர்கள் பார்க்காமலிருக்க பாபர்கள் அந்த சந்திரனைப் பார்க்கப்பட்டிருக்குங் காலத்தில்பிறந்தசிசுவு ஒருமாதத்துக்குள்ளே மரணமாகும். உதாரணம் சாராவளியில் சொல்லப்படுமென்பதாம். 8

6-வது சுலோகம். சிசுவுக்கு எட்டுவருஷம். கலி விருத்தம்.

அட்டமத்தினி லாறினிலம்புலி
துட்டபாபர்தொடர் பின்றிதுய்யகோ
ளிட்டமாகவே யிந்துவைநோக்கிட
நட்டமாகிடும் நாலிரண்டாண்டிலே.

இ-ள். சந்திரன் ஆறுமிடத்திலாவது எட்டாமிடத்திலாவதிருக்க பாபி களின் பார்வைதன்னை அடையாமல் சுபர்களின் பார்வையை சந்திரன் அடைந்திருக்க பிறந்தசிசுவு எட்டுவருஷம் வரையிலிருந்து அதின் பிறகு மரணமாகு மென்பதாம். 9

6-வது சுலோகம். சிசுவுக்கு நாலுவருஷம். கலி விருத்தம்.

ஆயுள்நோய்தனி லாறம்புலிதனை
யேயும்பாபரு மின்சுபருந்நிறைந்
தீயும்நோக்கமதிந் துவுமக்கெய்திட
ஆயுள்நாலென்ன லாகுஞ்சிசுவிற்கும்.

இ-ள். ஆறுமிடத்திலாவது எட்டாமிடத்திலாவது இருந்த சந்திரனை சுபர்களும் பாபர்களும் கூடியிருக்க அல்லது சுபரும் பாபரும் சந்திரனை நோக்கினால் சிசுவு நாலுவயது தீர்க்கமாயிருந்து பின்பு மரணமாகுமென்ப தாம். 10

6-வது சுலோகம். சிசுமரணம்.

மேடவிருச்சிகமகரம்சிங்கங்கும்பமேவு சென்மந்தனக்காறெ ட்டாகத்திங்கள், கூடுமவ்வில் லமர்ந்திருக்ககொடுஞ்சேய்காரி குளி ர்பகைமார்த் தாண்டனுரு கொதித்துநோக்க, நீடுசுபர் மதிதனை நோக்காதகாலே நிறைந்தபுவிதனிற்பிறந்த மகவைத்தானும், கூடி யிருக்க மறலியுயிர்கொள்வனென்று கூறுவதுமுன்னோர்கள் குணி த்ததாமே.

இ-ள். பாபர்கள் வீடாகிய மேஷம் விருச்சிகம் மகரம் கும்பம் சிங்கம் இந்த ராசிகளிலெதாவது சென்மலக்னத்திற்கு ஆறுமிடமாகவல்லது எட் டாமிடமாயிருக்க அதில் சந்திரனிருக்க சூரியனாவது செவ்வாயாவது சனி யாவது பாம்பாவது சந்திரனைப்பார்க்க பிறந்தசிசு மரணமாகுமென்பதாம்.

6-வது சுலோகம். சிசுமரணம்.

நல்லவர்மனையாறெட்டால் நவிலுமவ்விடத்திற்றிங்கள்
செல்லவேமரணமென்போம் தீயர்வீடதில்மதியும்
நல்லவர்தம்மைச்சேர்ந்து நலமுடனிருந்தபோதும்
வல்லமையுடனேவந்த மகவதும்மரணந்தானே.

இ-ள். சுபர்களின்வீடு சென்மலக்கினத்திற்கு ஆறுமிடம் அல்லது எட் டாமிடமாகிலும் அதில் சந்திரனிருக்குங்காலத்திற் பிறந்தசிசுமரணமாகும் பாபர்களின்வீடு சென்மலக்கினத்திற்கு ஆறுமிடம் அல்லது எட்டாமிடமா கில் அதில் சந்திரன் சுபர்களைக்கூடியிருக்குங் காலத்தில்பிறந்த சிசுமரண மாகும். உதாரணம் யவனேஸ்வரரால் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம்.

6-வது சுலோகம். சிசு தீர்க்காயுள். கலிவிருத்தம்.

சென்மத்தாறெட்டில் சேருமதிதனை
வன்மத்தோடினியோ ருடன்பாபரும்
கன்மத்தாலெவர் கண்ணும்படாதக்கால்
சென்மித்தோர்க்குயிர் தீர்க்கமதாமெனே.

இ-ள். சென்மலக்கினத்திற்கு ஆறுமிடத்திலாவது எட்டாமிடத்தி லாவதிருந்த சந்திரனைச் சுபர்களும் பாபிகளும் பார்க்காதிருக்கப் பிறந்த சிசுக்கு பாலாரிஷ்டம் கிடைக்காது தீர்க்காயுசா யிருக்கும். உதாரணம் பட்டோத்பலரால் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 13

6-வது சுலோகம். சிசு ஒருவருஷம். கலிவிருத்தம்.

எட்டுவாறினி லெய்துமதிதனை
இட்டமாய்த்திய ரோடினியவர்
திட்டியில்லையேல் செப்புமோராண்டதில்
நட்டமாஞ்சிசு வென்றுநவில்கவே.

இ-ள். சென்மலக்கினத்திற்கு ஆறுமிடத்திலாவது எட்டாமிடத்திலா வதிருந்த சந்திரனை சுபர்களாலும் பாபர்களாலும் பார்க்கப்படாதிருந்தால் அந்த காலத்தில் பிறந்தசிசு ஒருவருஷம் ஜீவித்திருந்து பிறகு மரணமாகு மென்பதாம். 14

6-வது சுலோகம். சிசு ஒருமாதம். கலிவிருத்தம்.

ஆறெட்டினி லம்புலிநின்றிட
தேரும்பாபர்கள் திங்களைநோக்கிட
பாரில்வந்தநற் பாலகன்றானுமே
ஆறைந்துநா ளாகும்வயதுமே.

இ-ள். சென்மலக்கினத்திற்கு ஆறுமிடத்தில் அல்லது எட்டாமிடத்தி லிருந்த சந்திரனை பாபக்கிரகங்கள் பார்க்கப்பட்டிருக்கும்போது பிறந்த சிசு ஒருமாதம்வரையிலிருந்து பின்பு மரணமாகு மென்பதாம். 15

6-வது சுலோகம். சிசுவைத்தகப்பன் வளர்ப்பது.

பொருத்துமாறெட்டில்மதியவனிருந்து புண்ணியர்பாபருமொத்து
பருத்தகண்ணோக்கம்பற்றுகாற்பூர்வ பக்கமேநிசியதில்லாமல்
விருத்திடுமமரபக்கமேற்பகலில் மேதினியுதித்திடுமகவை [ரே.
கருத்துளான்றந்தைகாப்பவனுருகுங் காண்கிலானனையையென்றன

இ-ள். பூர்வபக்ஷம் இராத்திரியிலும் அமரபக்ஷம் பகலிலும் பிறந்தவர் க்கு சந்திரன் ஆறுமிடம் அல்லது எட்டாமிடமிருக்க அந்த சந்திரனை பாபக்கிரகங்களும் சுபக்கிரகங்களும் பார்க்கப்பிறந்த சிசுவைத் தகப்பன் வளர்ப்பான் தாய் வளர்க்கமாட்டாள். உதாரணம் மாண்டவ்யரால் சொல் லப்பட்டிருக்கிற தென்பதாம். 16

6-வது சுலோகம். சிசுவு ஒருமாதம். கலிவிருத்தம்.

நேருமாறெட்டி னின்றசுபர்களும்
தேரியேவலி தேற்றுமிருந்திட
காரிசேய்ரவி கண்படச்சேயுமே
மாரகம்மது மாதமதொன்றிலே.

இ-ள். சென்மலக்கினத்திற்கு எட்டாமிடத்தில் அல்லது ஆறுமிடத்தில் சுபக்கிரகம் வலிதாயிருக்க அவரைப் பாபிகள் பார்க்கப் பிறந்த சிசு ஒருமாதம் வரையில் சீவித்திருக்கு மென்பதாம். 17

6-வது சுலோகம். சிசு தீர்க்காயுள். கலிவிருத்தம்,

ஆறெட்டினி லானசுபர்களுந்
தேறிநிற்கவே சீருளபேர்களை
கூறுநற்சுபர் கோதறநோக்கிட
மாரகமிலேவாழும் தீர்க்காயுளே.

இ-ள். ஆறுமிடத்தில் அல்லது எட்டாமிடம் சுபரிருக்க அந்தச்சுபரை மற்றொருசுபர் பார்க்கப்பட்டிருக்குங்காலத்தில் பிறந்தசிசுக்கு பாலாரிஷ்டமில்லை தீர்க்காயுசுள்ளதாகும் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிறது. தேவகீர்த்தியும் சொல்லியிருக்கிறார் என்பதாம். 18

6-வது சுலோகம். சிசு ஒருமாதம்.

செனனுதிதீயரிகலிற்செயித்த திரமேசெறிந்ததினமே
இனமாகுசென்மனேழிலிருக்க விளவல்தனக்குவுயிரும்
கனமாதம்மொன்றில்வுடல்விட்டு நீங்ககாலன்கைப்பற்றுவானும்
அனமேயதின்பின்னுயிர் வாழ்வதில்லையயனுரமைத்தவிதியே.

இ-ள் சென்மலக்னத்ததிபதி பாபர்களுடன் சேர்ந்து யுத்தத்தில் செயிக்கப்பட்டேழிலிருக்குங்காலத்தில் பிறந்த சிசு ஒருமாதம் ஜீவித்திருக்கும் பிறகு மரணமாகு மென்பதாம். 19

7-வது சுலோகம். சிசுமரணம். கலிவிருத்தம்.

சென்மலக்கினத்தின்மீது தேய்மதியும்நின்றிட
வன்மமோடுபாபர்கேத்ரம் மற்றுமட்டமத்துற
தன்மமற்றசேயுதிக்கிற் றங்கிடாதுலகினில்
கன்மமானதேகம்விட்டு காலனூர்செல்லுமே.

இ-ள். சென்மலக்கினத்தில் அமரபக்ஷ சந்திரனிருக்க அஷ்டம்நாலு ஏழு பத்து சென்மம் இந்த விடங்களில் பாபர்களிருக்கும் காலததில் பிறந்த சிசு மரணமாகு மென்பதாம். 20

7-வது சுலோகம். சிசு மரணம். கலிவிருத்தம்.

எட்டுநாலேழி லிந்துவிருந்திட
துட்டபாபர்கள் தூயமதிக்குமே
இட்டமோடு விருபுறம்நின்றிடச்
சட்டமானசேய் தானுமரிக்குமே.

இ-ள். சந்திரன்பாபர் மத்தியிலிருக்க அதாவது சந்திரனுக்கு இரண்டாமிடத்தில் ஒரு பாபியும் பன்னிரண்டாமிட மொருபாபியுமிருக்கப் பிறந்த சிசுவு மரணமாகுமென்பதாம் இவ்விடத்தில் எட்டில்சந்திரனிருக்க பாபரிருபுறமுமிருக்க யோகம் 1-நாளில் சந்திரனிருக்க பாபரிருபுறமுமிருக்கயோகம் 2-ஏழில் சந்திரனிருக்க பாபரிருபுறமுமிருக்க யோகம் 3-இந்தவிதமாக சொல்லப்பட்ட தென்பதாம். 21

7-வது சுலோகம். சிசுவுந் தாயும் மரணம்.

சந்திரன்செனனம்நிற்க சவுமியர்கண்ணுேக்கற்றும்
சந்திரற்கிருபாற்பாபர் தங்கிடவேழுவெட்டில்
அந்தவாறுபாபர்நிற்கி லன்னையுஞ்சிசுவுஞ்சாகும்
இந்துவைநல்லோர்காண விளவல்சாம்தாய்சாகாளே.

இ-ள். சந்திரன் சென்மலக்னமிருக்க 2-12-ல் பாபரிருக்க சுபர்கள் லக்னத்தைப் பார்க்காதிருக்க ஏழு எட்டில் பாபரிருக்கினும் தாயும் சிசுவும் மரணமாகுமாம். சந்திரனைச் சுபர்கள் பார்க்க சிசுவுசாகும் தாய்சாகமாட்டாள். பலயுத்தத்திற்கு சுபக்கிரகங்களினால் இந்தயோககர்த்தாவான சந்திரனைப் பார்க்கப்படுமானல் சிலர் சிசுவுக்குந் தாய்க்கும் வியாதியுண்டாகும். மரணம் உண்டாகாதென்றும் சொல்லுவார்க ளென்பதாம். 22

8-வது சுலோகம். சிசு மரணம்.

மதியவரெந்தராசியிலேனும் மகிழ்நவாங்கிசையிலொன்பானிற்
றுதிகொங்காலில்சுபர்கள்நோக்கற்றுசொல்லுமைந்தொன்பதிற்பா
குதிகொளுங்காலிற்குவலயத்துதித்த குழவியுமரணமதாகப் [பர்
பதியற்பிரமனமைத்ததையறிந்து பகருவாய்பாருளோர்தமக்கே.

இ-ள். சந்திரன் எந்தராசியிலாவதிருந்து அந்தராசி அந்தியமான ஒன்பதாவது நவாமிசத்திலிருக்க அந்தச் சந்திரனை சுபர்கள் பார்க்காதிருக்க ஐந்து ஒன்பதில் பாபர்களிருக்கப் பிறந்த சிசு மரணமதாகு மென்பதாம். 23

8-வது சுலோகம். சிசுமரணம். கலிவிருத்தம்.

உதயமீதம்புலியவனுற்றிட
பதியும்பாட்டினில் பாவர்கள்பற்றுங்கால்
துதிகொளம்புவி தோன்றுமதலையும்
சதியாய்மாரகஞ் சாற்றிடலாகுமே.

இ-ள். சென்மலக்கினத்தில் சந்திரனிருக்க ஏழாமிடத்தில் பாபர்களிருந்து சந்திரனையும் லக்னத்தையும் பார்க்க சிசுமரணம். உதாரணம் லகு சாதகம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 24

9-வது சுலோகம். சிசுவுந்தாயும் மரணம்.

ஓதுவானினிலுற்றதிங்களை யுரக்கிருந்தமதொப்புகாற்
சீதமாமதிநீலனோடுமேசேர்ந்து சென்மமீதுற
கோதிலாயுளில்சேயுநின்றிட குலவுமன்னையும்சேயுமாய்ப்
போதவேமரணம்புகுமென புங்கவன்புகன்றிட்டதே.

இ-ள். சந்திரனைக் கிரகணம் பிடித்திருக்க சந்திரனும் சனியுங்கூடி சென்மலக்னத்திலும் செவ்வா யெட்டிலுமிருக்க பிறந்த சிசுவும் தாயும் மரணம் என்பதாம். 25

9-வது சுலோகம். ஆயுதத்தினால் சிசுவுந் தாயும் மரணம்.

இரவியைக்கிரணம்பற்றி யிருந்திடரவிம்மால்சென்மம்
திரமுடனிருக்கவெட்டில் சேயவனிருக்குங்காலிற்
தரணியிலுதித்தசேயுந் தாயுமாயுதங்கடன்னால்
விரவியகாயம்பட்டு விண்ணுடுதனிற்சேர்வாரே.

இ-ள். சூரியனைக் கிரகணம் பிடித்திருக்க சூரியன் புதன் இருவரும் சென்மலக்கினமிருக்க எட்டாமிடத்தில் செவ்வாயிருக்க பிறந்த சிசுவும் தாயும் ஆயுதங்களினால் குத்தப்பட்டும் காயம்பட்டும் மரணமாவார்கள் என்பதாம் இது சூரியகிரகணகால செனனயோகம். 26

வசனம். சந்திரகிரகண காலத்தில் லக்கினத்திலடைந்த சந்திரனுடன் சூரியன் கூடமாட்டான் சூரியன் சமீபத்திலிருக்கிற புதனுங் கூடமாட்டான். பாபக்கிரகத்துடன்கூடிய புதனும் பாபியாம் அஷ்டமதானமடைந்த குஜனுங்கூடமாட்டானானதால் சனியுடன் கூடின சந்திரனென்றுசொல்லப்பட்டது.

வசனம். சூரியகிரகண காலத்தில் லக்கினத்திலடைந்த சூரியனுடன் அஷ்டமமிருந்த குஜன்கூடமாட்டானானதிலும் சூரியனுடன்கூடின புதன் அசுபனாவான் ஆனதினால் சனி புதனுடன் கூடப்பட்ட சூரியனென்று சொல்லப்பட்டதாம்.

9-வது சுலோகம். சிசு மரணம்.

தரணியம்புலியைச்சவமியர் நோக்கச்சாரலுமற்றுசென்மத்தே
நிரணயமுடனேநிற்கவைந்தெட்டு நேருறமொன்பதிற்றீயர்
முரணதாயுறினுமொய்த்தவிப்பூவின் முளைத்திடுமிளவலைமொழியா
திரணமுஞ்சீவித்திருந்திடதென்றுசெப்புவாய்செகத்தியர்தமக்கே

இ-ள். சூரியனாவது சந்திரனாவது சுபர்களுடன் கூடாமலும் பார்வை யடையாமலிவர்கள் ஜென்மலக்னத்திலிருக்க ஐந்து எட்டு ஒன்பதிற் பாபர்களிருக்க பிறந்த சிசுவு சீக்கிர மரணமென்பதாம். உதாரணம் கிரந்தாந்தர வசனம் சொல்லப்பட்டது. இப்போது சொன்னபடி சூரியனையாவது சந்திரனையாவது சுபர்கள்கூட அல்லது பார்க்கில் சிசுவுக்கு மரணமில்லை யென்பதாம். 27

10-வது சுலோகம். சிசுகொஞ்சநாளிருந்துமரணம்.

மந்தனீராறிலொன்பான் மார்த்தாண்டனஜென்மந்திங்கள்
செந்தியட்டமத்தினிற்க செம்பொனின்நோக்கந்தானும்
சந்திரற்கில்லாதபோது தரணியிலுதித்தசேய்தான்
தந்தைதாயிடத்திற்சின்னாள் தங்கிபின்மரணந்தானே.

இ-ள். சனி பன்னிரண்டாமிடத்திலும் சூரியன் ஒன்பதாமிடத்திலும் சந்திரன் ஜென்மலக்னத்திலும் செவ்வா எட்டாமிடத்திலுமிருக்க பலவானான குரு சந்திரனையும் லக்னத்தையும் பார்க்காதிருக்கும்போதுபிறந்த சிசு கொஞ்சநாள் தாய் தகப்பனிடம் வளர்ந்து பிறகு மரணமாகு மென்பதாம். 28

10-வது சுலோகம். மரணம் தீர்க்காயுசு.

பொன்வலிதாகியிருந்திடுகாலை புகலுமிவ்வயோககர்த்தாவை
சன்முதற்பாபர்நேர்ந்திடும்போது சுகமுடன்றேன்றியசிசுவும்
இன்னிலமதிலேகொஞ்சநாளிருந்து விறந்திடும்பலனதுவாகும்
மன்னனைந்திருக்கசன்னவ னேக்கமதலேக்கியாயுளும்தீர்க்கம்.

இ-ள். குருவலிதாகவிருக்க ஜென்மாதிபதியை அல்லது மாரகாதிபதியை சனி முதலான பாபர்கள் பார்க்க பரந்த சிசு கொஞ்சநாளிருந்து பிறகு மரணமாம் குரு ஐந்திலிருக்க சனி முதலான பாபிலக்னாதி சந்திரன் அட்டமாதி இவர்களையெல்லாம் பார்த்தால் சிசுவுக்கு ஆயுள்தீர்க்கமாகு மென்பதாம். 29

11-வது சுலோகம். சிசுமரணம். 6 தீர்க்காயுசு.

தேய்ந்தமாமதியந்தீயரோடணுகி ஜென்மலக்கினத்திலுமல்ல
வாய்ந்தயேழெட்டோடைந்தொன்பதீராறுமருவிடசுபர்நோக்கற்
எய்ந்திடுசிசுவுமரணமதாகு மிரணியன்மாலுடன்புகரோன் [று
தேய்ந்தமாமதியைநோக்கிடுங்காலில் சிசுவுக்காயுளுந்தீர்க்கம்.

இ-ள். அமரபக்ஷ சந்திரன் பாபருடன்கூடி ஜென்மலக்னம் ஏழாமிடம் எட்டாமிடம் ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் பன்னிரண்டாமிடங்களிலிருக்க சந்திரனைச் சுபக்கிரகங்கள் பார்க்காதிருக்க சிசுமரணம் குருபுதன் சுக்ரனிவர்களிலொருவர் சந்திரனைப்பார்க்க தீர்க்காயுசு, ஐந்தாமிடத்தில் சந்திரனிருக்க யோகம். (1) ஏழாமிடத்தில் சந்திரனிருக்கயோகம், 30

ஒன்பதாமிடத்தில் சந்திரனிருக்க யோகம். (3) லக்னத்திலிருக்க யோகம். (4) பன்னிரண்டில் சந்திரனிருக்க யோகம். (5) அட்டமத்திலிருக்க யோகம். (6) இப்படி சொல்லப்பட்டயோகம் 6-க்கு சந்திரனை சுக்ரன் புதன் குரு இவர்களில் பலவந்தனுன கிரகம் சம்யோக வீக்ஷணமுண்டாயிருந்தால் பாலாரிஷ்டமில்லை யென்றறியவும். உதாரணம் சாராவளியில் சொல்லப்பட் டிருக்கிறதென்பதாம். 31

12-வது சுலோகம். சத்தியோமரணம்.

குருதிகல்லோர்நோக்கற்று குஜமுடன்செனமந்தங்க
கரியவனெட்டிலாறில் கருதியசனிசேய்தாமும்
திரமுடனேழில்நல்லோர் திட்டியுமில்லாக்காலை
தரணியில்வந்தசேயும் சத்தியோமரணமாமே.

இ-ள். செவ்வாய் சுபர்களின் பார்வையடையாமல் சென்மலக்னமிருக்க அஷ்டமத்திலாவது ஆறுமிடத்திலாவது சனி யிருந்திட்டபோது அந்த குஜ சனி யிருவரும் சப்தமத்தில் சுபக்கிரகங்களினுல் பார்வை யடையாதவரா யிருந்தாலும் சிசு திடலென மரணம். இதை சத்யோ மரணமென்று சொல்லப்பட்டதென தாற்பரியமாம். 32

12-வது சுலோகம். மரணகாலம்.

முன்னமேயரிட்டயோக முரைத்ததில்காலாகாலந்
தன்னையேயுரைக்காதாலுஞ் சாற்றுவேனதின்வகைகள்
மன்னுசந்திரன்சஞ்சார மாதியாதிகடன்னுலும்
நன்னயமோடுரைப்பேன் நற்சிசுவாயுடன்னை.

இ-ள். முன் அரிட்டயோகங்கள் உண்டுபண்ணுகிற காலநிர்யணம் சொல்லாததாலும் சந்திரசாரகதியைக்கொண்டுசொல்லப்படுமென்பதாம்.

12-வது சுலோகம். சிசு ஒருவருஷத்துக்குள் மரணம்.

அரிட்டயோகாதிதம்மி லதிவலிபெற்ருேராலும்
முறைத்திளவருஷமொன்று மோங்குபல்பாபர்நோக்க
திரத்துடன்மதியுநின்ற சீருறுராசிகொண்டு
மரிட்டமேயுரைக்கலாகு மருந்தவமுனிவர்வாக்கே.

இ-ள். இப்போது சொல்லப்பட்ட அரிஷ்டயோகத்தில் அரிட்டயோக கர்த்தாவாகிய கிரகங்களில் எவர்வலிவு பெற்றிருப்பாரோ அவராலும் ஸ்தானங்களினுலும் ஒருவருஷத்துக்குள் மரணம் அனேகபாபிகளால் பார்க்கப்பட்டால் பலவந்தனுகிய சந்திரன் அடைந்தவிராசிகளின் வலுவினுல் பாலாரிட்டம் சொல்லப்படும் இது ரிஷி முனிவர்களால் சொல்லப்பட்டது. 33

12-வது சுலோகம். சிசுஒருவருஷத்துக்குள்மரணம். கலிவிருத்தம்.

தீயர்நோக்குளதேருநற்சேர்மாதி
வாயுமுன்னரிட்டாதி வலிவிகொண்
டுயர்தன்மனே நோய்ந்திடுவாரெனில்
நேயமாகுமோராண்டுள்நிர்யாணமே.

இ-ள். பாபர்கள் பார்வையடைந்திருந்த சந்திரன் பலவானுய் செனனவிராசியிலிருந்தாலும் அரிட்டயோகாதிகளில் லவிதான கிரகம் நல்லோர் வீட்டிலிருக்க ஒரு வருஷத்துக்குள் மரணமென்பதாம். 34

12-வது சுலோகம். அரிட்டபங்கம்.

ஆண்டினுள்ளடைகின்றநிர்யாணமு மன்னைதந்தையர்க் காகுமரிட்டமும், தூண்டுகாலசெனனத்ரேகாணத்தால் தூயமாமதியிருந்ததொடர்பினுல், வேண்டும்மம்மதிகொள்ளும் நவாங்கிசம் மிக்க கோளுறும் வெய்யமனையிஞ, லீண்டுமிவ்வகைதன்னதினுற்பெற்று மிளவலுக்குப்பாலாரிட்டமெய்துமே.

இ-ள். ஒரு வருஷத்துக்குள் மரணமும் தாய்மரணமும் சொல்வது சென்மதிரேகாணத்திஞலும் சந்திரனிருந்த நக்ஷத்திரத்திஞலும் நவாமிசையிஞலும் செனனகாலத்தில் கிரகமிருந்தகதிகளைக் கொண்டும் அரிஷ்டமும் அரிஷ்டபங்கமும் சொல்லப்படும். உதாரணம் கிரந்தாந்தர வசனம் சொல்லப்பட்ட தென்பதாம். 35

வசனம். இந்த அத்தியாயங்களில் சொல்லப்பட்ட அரிஷ்டயோகத்திற்கு பங்கம் அனேகவிருக்கிறது இந்தயோகத்தில் பிறந்தவர்கள் அனேகர் ஜீவித்திருக்கிறுரென்று தேவகீர்த்தியவர்கள் சொல்லப்பட்ட வசனமிவ்விடத்தில் சொல்லப்பட்ட தென்பதாம்.

12-வது சுலோகம். அரிஷ்டபங்கம்.

இலக்கினத்ததிவலிதுபெற்றிருக்க விழிவுகொட்டியரியன்நோக்கம்
இலத்திடாகாலம்நேருகேந்திரத்தில் நீள்சுபர்நோக்கமுற்றிடிலோ
பலவகைக்யரிஷ்டயோகமு மில்லைபூாலகன்றனக்குயிராகூஷி [டே.
வலிபெறுநீடூழ்வாழ்வனென்ற யனுமறைந்தனன்கோள்வலிகொண்

இ-ள். சென்மலக்னதிபதி வலிதுடனிருந்து பாபர்களின் பார்வையில்லாமலுமிருக்க கேந்திரஸ்தானங்களில் சுபரிருக்க அல்லது கேந்திரஸ்தானத்தைப் பார்க்க சகல அரிஷ்டங்களும் நீங்கி சகல சற்குண சம்பத்தோடு தீர்க்காயுசுள்ளவஞ யிருப்பானென்பதாம். 36

12-வது சுலோகம். அரிஷ்டபங்கம்.

தேருமாமதியோனெட்டிற் சேரினும்காலபுந்தி
சேருபொன்புகரவன்றன் திரேகாணமதிலுற்ருனேல்

மாரகவரிஷ்டயோகம் மாறிடும்மகவுதானும்
சீருமாயுளேயும்பெற்று செல்வமுந்தங்கிவாழ்வன்.

இ-ள். சந்திரன் ஜென்மலக்கினத்திற்கு எட்டாமிடத்திலிருக்க அந்த ராசி யெதுவானாலும் குரு புதன் சுக்ரன் இவர்களின் திரேகாணத்தில் சந்திரனிருந்தால் அரிஷ்டம் நீங்கி தீர்க்காயுசுள்ள சிசுவாயிருக்குமென்பதாம்.

12-வது சுலோகம். அரிஷ்டபங்கம்.

நிறைமதிசுபரினகமதிலமர நீள்சுபரிருபுறமிருக்க
புறையுறுதென்றுபுகன்றதுகணிதம் பொய்யலமெய்யிதுவெனவே
குறையுளவரிஷ்டம்நீங்கிடும்விதங்கள் கூறியதென்னவென்றுலோ
நிறையதிபதியுமதிதனைக்காண நீடுலகத்திலாயுளுமுண்டே.

இ-ள். பூரணச்சந்திரன் சுபர்கள் க்ஷேத்திரத்திலிருக்க இருபுறத்திலும் சுபர்களிருக்க அரிஷ்டம்கிடையாது. அந்த சந்திரனைச் சுக்கிரன்பார்க்க அரிஷ்டமில்லை அதிகவிசேஷ மென்னப்படும் வளர்பிறைக்கும் இவ்விதம் சொல்லலாம். சிசுவுக்காயுள் தீர்க்கமாம் என்றறியதென்பதாம். 38

12-வது சுலோகம். அரிஷ்டபங்கம். கலிவிருத்தம்.

பொன்னும்மாலும் புகரவன்றன்னிலே
நன்னயச்சுபர் கேந்திரநண்ணிட
துன்னும்பாபரைத் தூயகோள்சேரினும்
மென்னுநற்சிசுக் கில்லையரிஷ்டமே.

இ-ள். குரு புதன் சுக்ரன் இவர்களிலொருவர் பலவானாய்க் கேந்திர ஸ்தானத்திலிருக்க இந்த சுபர்கள் பாபரைக்கூடி யிருந்தபோதிலும் அரிஷ்டமுண்டாகாது தீர்க்காயு ளுண்டாகு மென்பதாம். 39

12-வது சுலோகம். அரிஷ்டபங்கம். கலிவிருத்தம்.

மதியுமாறில் மருகியிருந்திட
புதனும்பொன்னோன் புகர்திரேகாணத்தில்
துதிபெறவுறில் தோன்றிடுசேயிக்கு
கதியரிஷ்டமும் கண்டிடாதென்னவே.

இ-ள். சந்திரன் ஜென்மலக்கினத்திற்கு ஆறாமிடத்திலிருக்க அது வெந்த ராசியானாலும் குரு புதன் சுக்கிரனிவர்கள் திரேகாணத்தில் சந்திரனிருக்க அரிஷ்டம் நீங்கும் சர்ப்பதிஷ்டியானவனை கருடன்வந்திரக்ஷிப்பது போல அரிஷ்டம் நீங்குமென்பதாம். 40

12-வது சுலோகம். அரிஷ்டபங்கம். கலிவிருத்தம்.

இந்துவுற்ற விடத்துக்கிருபுறம்
புந்திபொன்புகர் புக்கிடுவோரெனில்

சந்ததக்கருடன் சமுகம்முறும்
விந்தைபாம்பாய் விளம்பலரிட்டமே.

இ-ள். சந்திரனிருந்த ராசிக்கி ரண்டாமிடத்திலும் பன்னிரண்டா மிடத்திலும் சுபர்களாகிய குரு சுக்ரன் புதன் இவர்களிருக்க கருடன் சமுகத்தைக்கண்ட பாம்புபோல அரிஷ்டம் ஓடிப்போ மென்பதாம். 41

12-வது சுலோகம். அரிஷ்டபங்கம்.

நிலவுபூரணமதாகி நேருமெட்டாறினின்றாலும்
குலவியபூர்வபக்ஷம் கூறியநிசிவந்தோர்க்கும்
கலைகுறைபக்கமாகி கருதுநற்பகல்வந்தோர்க்கும்
பலனதுவரிஷ்டமில்லை பகர்வதுவாயுட்டீர்க்கம்.

இ-ள். சந்திரன் பூரணமாகி ஆறெட்டிலிருந்தாலு மரிட்டமில்லை பூர்வபக்ஷம் ராத்திரியில் ஜெனனமானவர்க்கு சந்திரன் ஆறு எட்டிலிருந்தாலும் அரிட்டமில்லை அமரபக்ஷ பகலில் ஜெனனமானவர்க்கு சந்திரன் ஆறு எட்டிலிருந்தாலும் அரிட்டமில்லை யென்பதாம். 42

12-வது சுலோகம். அரிட்டபங்கம். கலிவிருத்தம்.

கலைநிறைந்த பசுங்கதிர்தேவனுங்
குலவுசென்மத்தில் கோதறுமேழுற
வலிநிறைந்தபொன் மன்னிடகேந்திரம்
நலமதாய்நின்றிட நாடிடாமாரகம்.

இ-ள். பூரணகலைகளையுடைய சந்திரன் சென்மலக்கினத்தி லிருக்க அல்லது ஏழாமிடத்திலிருக்க குரு வலிதுடனே கேந்திரங்கள் எதிலாகினு மிருக்க பிறந்த சிசுவுக்கு அரிஷ்டநீங்கி தீர்க்காயுளா யிருக்குமென்பதாம்.

12-வது சுலோகம்.

சுபர்கள்தம்மனையிலேனும் சுபர்நவாங்கிசையிலேனும்
சுபர்திரேகாணத்தேனும் சுபர்களாம்புகர்மால்பொன்னுஞ்
சுபரெனுமதியாமின்னோர் தோய்வரேல்சிசுவுக்காயுள்
சுபமதாய்நிலைத்துவாழுந் துயருறாதென்னலாமே.

இ-ள். சுபர்கள் வீடாகிய ரிஷபதுலாம் மிதுனங் கன்னிதனுசுமீனம் கடகம் இந்த விராசிகளிலாவது நவாமிசையிலாவது திரேகாணத்திலாவது சுபர்களாகிய குரு சுக்ரன் புதன் சந்திரன் இவர்களிருக்க அரிஷ்டம் நீங்கி சுகமாக ஆயுளுடனே யிருக்கு மென்பதாம். 44

12-வது சுலோகம். அரிட்டபீடிதம். கலிவிருத்தம்.

சாருஞ்சுபர்தம் ஷட்வர்க்கத்தினி
லேரும்பாபரிருந்திட வினியோர்

தேரும்யங்கிசம் சேர்ந்திடநோக்குற
நேருமரிட்டம் நிலையாய்ப்பெறுமே.

இ-ள். சுபர்களுடைய ஷட்வர்க்கங்களில் பாபர்களிருக்க சுபர் அங்கிசமேறி யிருந்தாலும் சுபர்பார்வையிருந்தாலும் சிசுவுக்கு அரிஷ்டம் பீடிக்கும் என்பதாம். அதாவது அன்பில்லாத ஸ்திரீயை அவள் கணவன் எப்படி இமிசை பண்ணுவானோ அந்தவிதமாகஅரிஷ்டம் பீடிக்குமென்பதாம்.

12-வது சுலோகம். அரிட்டபங்கம் கலிவிருத்தம்.

செனனகாலினிற் றேர்ந்தசுபர்களும்
சினமதாய்ச்சமர் தன்னில்செயித்தபேர்
தினமிகுஞ்சுபர் நோக்கமும்சேர்ந்திட
தனையனுக்கரிட்டம் மதுசார்ந்திடா.

இ-ள். செனனகாலத்தில் ஒருசுபக்கிரகம் யுத்தத்தில் செயிக்கப்பட்டிருக்க அந்த சுபரை மற்றொரு சுபர்நோக்க சிசுவுக்கு அரிஷ்டம் நீங்கும் அதெப்படியென்றால் பெருங்காற்று அடிக்க அதில் விருக்ஷமெப்படி அடிபடுமோ அப்படி அரிஷ்டம் நசிக்குமென்னும் தாற்பரிய மென்பதாம். 46

12-வது சுலோகம். அரிட்டபங்கம்.

சேயினுக்கரிட்டஞ்செய்யுந் தீயருமரிட்டமற்றும்
நேயநற்சுபர்களானோர் நின்றிடும்வலிமைதன்னில்
ஏயநற்சுபரிரட்டிவலிய ரேலிலையரிட்டம்
தோயலம்வலிவுநேரேல் சொல்லுவாயரிட்டமென்றே.

இ-ள். அரிஷ்டம் செய்யுங்கிரமமும் அரிட்டபங்கஞ் செய்யும் கிரகமும் வலிது அறிந்தால் அரிஷ்டம் செய்பவர் வலிதாயிருக்க அரிட்டமுண்டாகும். அரிஷ்ட பங்கக்கிரகம் வலிதாயிருந்தால் அரிஷ்ட முண்டாகாது. இருவரும் சமவலியாயிருந்தால் அரிஷ்டமே புண்டாகும். உதாரணம் ஸ்ரீபதியினால் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 47

படலச்செய்யுள் தொகை.

மேலதாம்தமிள்தெலுங்கு விளங்கிடவெனக்குறைத்த
சீலமாங்குருவின்பாதஞ் சென்னியில்சூட்டிக்கொண்டு
பாலராஞ்சிசுவரிட்ட படலத்தைவயித்தியலிங்கம்
ஞாலமேபுகழச்செய்யுள் நவின்றனனைம்பத்தொன்றே.

பாலாரிஷ்டப் படலம்

முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# மங்களேஸ்வரீயம்.

எட்டாவது

## ஆயுட்கணிதப்படலம்.

### வசனம்.

(முதலாவதுசுலோகம் உரை.)

முன் அத்யாயமாகிய பாலாரிட்டபடலத்தில் சொல்லப்பட்ட பாலாரிட்டமில்லாதபேர்களுக்கு ஆயுள் நிர்ணயம் செய்யவேண்டிய தானதால் கிர்ந்தகர்த்தா இந்த அத்தியாயத்தில் ஆயுள் நிர்ணய கிரமங்களைச்சொல்ல நினைத்தவரானதால் முதலில் மயன், யவனர், மணித்தர் பராசர் இவர்கள் சொல்லப்பட்டிருக்கிறப் பிரகாரமாக சூரியாதி கிரகபரமாயுளும் பிரமாண வருஷங்களையும் தெரிவிக்கிறார்.

சூரியஉபாசனையுள்ளவராகிய மயனும்யவனேஸ்வரர் என்னும்சோதிட சாஸ்திர வல்லவராகியும் மிலேச்ச தேசாதிபதியாகிவரும் மணித்தரென்னும் சோதிடகிரந்த கர்த்தாவும் சத்திமுனிவர் புத்திரராகிய பராசரும் அவர்களால் தங்கள் தங்கள் பரமவுச்சபாகத்திலிருக்கப்பட்ட சூரியாதி கிரகங்களுக்குகிரமமாக 8-15-5-2-5-11-10 இந்த தொகையுள்ள வருஷங்களைச் சொல்லப்படும். ஆனால் இந்த தொகையினால் பத்துசேர்த்து மொத்தம் செய்யவேண்டும். ஆனதால் அப்படிச் செய்ய ஏற்பட்ட வருஷங்கள் ஆயுளாம் சூர்யாதி கிரகங்கள் தங்கள் தங்கள் பரமவுச்சபாகத்தி லிருப்பவர் கொடுப்பாரென்று தாற்பரியம் அதெப்படி யென்றால்.

| | | |
|---|---|---|
| சூரியன் | 19 | வருஷம் |
| சந்திரன் | 25 | வருஷம் |
| செவ்வாய் | 15 | வருஷம் |
| புதன் | 12 | வருஷம் |
| குரு | 15 | வருஷம் |
| சுக்ரன் | 21 | வருஷம் |
| சனி | 20 | வருஷம் |

இவைகள் பரமோச்சபாகத்திலிருந்த சூருயாதிகிரகம் கொடுக்கும்பரம ஆயுள் பிரமாண வருஷங்களாம்.

## இரண்டாவது சுலோகம்.

பரமநீசாம்சத்திலிருக்கும் சூர்யாதிகிரகம் கொடுக்கும் ஆயுர்த்தாயங்களும் லக்னயர்த்தாய நிர்ணயகிரமமும் சத்ரு க்ஷேத்திரத்திலிருக்க குறைகிறதும் மூடமான கிரகத்துக்குக் குறைகிறதும் தெரிவிக்கிறார்.

சூரியாதி-கிரகங்கள் பரம நீசாம்சத்திலிருப்பாரானால் பாதி முன் சொல்லப்பட்ட ஆயுள் வருஷத்தில் பாதிகுறையும் இப்படி குறைகிற வருஷங்களாவன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியனுக்கு | ஹ | 9 | மீ | 6 |
| சந்திரனுக்கு | ஹ | 12 | மீ | 6 |
| குசனுக்கு | ஹ | 7 | மீ | 6 |
| புதனுக்கு | ஹ | 6 | மீ | 6 |
| குருவுக்கு | ஹ | 7 | மீ | 6 |
| சுக்ரனுக்கு | ஹ | 10 | மீ | 6 |
| சனிக்கு | ஹ | 10 | மீ | 6 |

அந்த பரமவுச்சம் பரமநீசாம்சைக்கு மத்தியிலிருக்கப்பட்ட கிரகங்களுக்கு திரைராசிகத்தினால் ஆயுட்பிரமாண நிர்ணயஞ் செய்யவேண்டியது அதெப்படி யென்றால்.

சகல கிரகங்களுக்கும் பரமவுச்சம் பரம நீச்சத்துக்கு நடுவில் ஆறிராசிகளிருக்கிறது. ஒருராசிக்கு முப்பது பாகை பாகை ஒன்றிற்கு கலை 60 கலை ஒன்றுக்கு விகலை அறுபதாகும் இந்தப் பிரகாரமாய் அந்த ஆறிராசிகளையும் கலையாக்க 10,800 கலைகளாகும். இப்படி இராசிகளை கலைகளாக்கிகிரகங்களுக்கு தன்பரமவுச்சாம்சத்தைப்பார்க்கிலும் அதிகமாயிருந்தால் அப்போது பரமவுச்சபாகம் வரையில்தள்ளிவிட்டுசேஷத்தைக் கலைகளாக்கிக்கொள்ளவும், தன் பரம நீசாம்சத்தைவிட அதிகமானால் அப்போது பரம நீசபாகம் வரையில் தள்ளிவிட்டு சேஷத்தைக் கலைகளாக்கிக் கொள்ளவும் அந்தகலைகளுக்கு கிரகயுக்த கலையென்றும் கிரகமடைந்த கலையென்றும் சக்ஞையாம்.

அந்த கிரகத்திற்கே பரமநீசாம்சத்தில் சொல்லப்பட்ட ஆயுள் பிரமாணவருஷங்கள் மாசங்கள் செய்யவேண்டியது இப்படிச்செய்தால் பரம நீசாம்சமடைந்த சூரியாதி கிரகங்களுக்கேற்பட்ட மாசங்களாம்.

| கிரகம் | சூரிய | சந்திர | செவ் | புதன் | குரு | சுக்கிர | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| மாதம் | 114 | 150 | 90 | 72 | 90 | 126 | 120 |

பகணர்த்த கலைகள் 10,800-க்கு 114-மாதமாகும் இந்த வீட்டுக்கு எத்தனைமாதம் வருமென்று திறையிராசிகத்தால் கணக்கு ஏற்படுத்தவேணும் இதற்கு திரைராசிக சூத்ரம் லீலாவதியென்னும் கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது பிரமாணமும் இச்சையும் சமானசாதியானதால் முதலில்

பிரமாணசங்கியையும், கடைசியில் இச்சாசங்கியையும் போடுகிறது பலம் அன்னிய ஜாதியானதாலும் நடுவில் போடுகிறது இச்சையினால் பலத்தைப் பெருக்கி பிரமாணத்தினால் வகுக்க ஈவுபலமாக வேற்படும்.

முன்னமே பிராகிருதத்தில் பிரமாண மென்பது பகணார்த்த கலைகள் 10,800-மாம் இச்சை. கிரகமடைந்த கலைகள் பலமென்பது கிரகபரமநீசமா சங்களாம் இந்த மாதிரி போட்டுக்கொண்டு திரைராசிக் கணிதம் செய்யத் தக்கது.

## உதாரணம்.

சூரியன் விருஷபத்தில் 13-பாகை 48-கலைதாண்டி 49-வது கலையிலி ருப்பதனால் எத்தனை வருஷமாகும் சூரியனுக்கு மேஷத்தில் பத்துபாகை பரமவுச்சமானதால் அதுவரையில் தள்ளி 11-வது பாகை முதல் ரிஷபத் தில் சூரியனிருக்கிறகலைவரைக்கும் எண்ண கூடியனடைந்த கலைகள் 2028 ஆகும்.

| பிரமாணம் | பலம் | இச்சை |
|---|---|---|
| பகணார்த்தகலை 10,800 | சூரியன் பரம நீசமாசம் 114 | சூரியனடைந்த கலை 114 2028 |

இவ்விடத்தில் இச்சாசங்கியை யான 2028-னால் பலசங்கியையான 114-னாலும் பெருக்க இரண்டுலக்ஷத்து முப்பத்தோராயிரத்து நூற்றெ ண்ணூற்றிரண்டாகும் இந்த சங்கியையும் பகணார்த்தகலைசங்கியை 10,900 னால் வகுக்கவந்தது மாதம் 21-போக மிச்சம் 4,392-இந்த தொகையை 30 னால் பெருக்கவந்தது 13176 - ஒருலக்ஷத்து முப்பத்தோராயிரத்து எழு நூற்றறுவது. இந்ததொகையை பகணார்த்தகலை சங்கியையான 10,800-னால் வகுக்கவந்தது நாள் 12-மிச்சத்தை 12,160-இண்டாயிரத்து நூற்ற றுபது இந்த தொகையை 60-னால் பெருக்கவந்ததொகை 129,600-ஒரு லக்ஷத்திருபத் தொன்பதுனாயிரத் தறுநூறு இந்த தொகையை பகணார்த் தகலை 10,800-ல் வகுக்கவந்த நாழிகை 12-சேஷம் பூஜ்யம் அப்படி சேஷ மிருந்தால் 60-னால் பெருக்கி 10,80-னால் வகுக்கவந்தது விநாடியாகும்.

இப்படி யேற்பட்ட வருஷம் 1-மாதம் 9-நாள் 12-நாழிகை 12-ஆகும் இவைகளை பரமோச்சபாகமடைந்த சூரியன் பரமாயுள் பிரமாணமானவரு ஷங்கள் 19-ல் தள்ளிப்போட்டு மிச்சம்வருஷம் 17-மாதம் 2-தினம் 17- நாழிகை 48-இது பரமோச்சபாகத்தை விட்டு நீசத்துக்கு போகிற ராசி ஒன்றுபாகை 13-கலை 48 அடைந்த சூரியன் கொடுக்கப்பட்ட ஆயுள் பிர மாணமென்று தெரியவும் பரமநீசாம்சையான துலாராசித சமபாகைவிட்டு உச்சத்துக்குப்போகிறவிர்ச்சிகராசியில் 829-எண்ணூற்றிருபத்தொன்பது வதுபாகையி லிருப்பவனாகிய சூரியனுக்கு இந்தபிரகாரமே கணிதஞ்செய் தால் வருஷம் 1-மாதம் 9-தினம் 12-நாழிகை 12-ஏற்படும் இதை பரமநீ சத்திலிருக்கும்.

சூரியனுக்கேற்பட்ட வருஷம் 9-மாதம் 6-ஆனதால் இத்துடன் சேர்க்க மொத்தம் ஏற்பட்ட வருஷம் 11-மாதம் 3-தினம் 12-கடிகை 12-பரம நீச்சத்திலிருந்து உச்சத்துக்குப் போகுமிராசி 7-பாகை 13-கலை 48-அடைந்த சூரியன் ஆயுள் பிரமாணகாலமெனத் தெரியவும் இந்த விதமாகவே மற்றகிரகங்களுக்கும் அனுபாத ஆயுர்த்தாயம் நிர்ணயிக்கப்பட்டதென்பதாம்

வெகுவுபாயத்தினால் அனுபாத ஆயுர்த்தாயம் சொல்லப்படும்.

இஷ்டமான கிரகத்திற்கிராசிராதிபாகைகலைகளை ஏற்படுத்தி அதில் முன்சொல்லப்பட்ட உச்சதுருவம் கழித்து மிச்சத்தை வைத்துக்கொள்ளுகிறது கிரகம் பரமோச்சபாகத்திற்கு உள்ளேயிருந்தால் உச்சதுருவம் போகாதான படியால் அப்போது பனிரண்டு ராசியைகூட்டி உச்சதுருவம் கழித்து சேஷத்தை வைத்துக் கொள்ளுகிறது அந்தசேஷம் ஆறிராசிக்குக் குறைந்ததானால் அதை 12-இராசியில் கழித்து சேஷத்தை வைத்துக் கொள்ளுகிறது. ஆறிராசிகளுக்கு அதிகமாகயிருந்தாலதையே வைத்துக் கொள்ளுகிறது. இந்த விதமாகவே ஏற்பட்டவிராசிபாகை கலைகளைச்சேர்த்து வைத்துகொள்ளுகிறது அந்தந்த கிரகத்துக்குள்ள பரமாயுள் வருஷங்களினால் பெருக்கி விகலைத்தானமாக்கி 60-ஆல் வகுக்க கலைஸ்தானமாகும் அந்த கலைஸ்தானத்தை பாகைகளாக்கி அந்த பாகைகளை யிராசியாக்கிக் கொண்டு அந்த விராசிஸ்தானம் 12-பங்கானதால் வருவது பலம் பகணத்தானமாகும் அந்த பகணஸ்தானம் வருஷங்களாம் இராசி சேஷம்மாசமாகும் பாகை சேஷம்தினம் கலைசேஷம் நாழிகை விகலை சேஷம் விநாடியாம் இப்படி சூரியாதி கிரகங்களினுடைய ஆயுள் பிரமாணக்கதியேற்படும் இந்த விஷயமாய் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிறது.

(இதற்குதாரணம்.)

சூரியனுக்கு மேஷாதி யிராசி 1-பாகை 13-கலை 48-விகலை பூஜ்யம் சென்றிருந்த மேஷவிராசியில் பரமோச்சபாகம் வரையில் பாகை 10-கழிக்க சேஷமிராசி 1-பாகை 3-கலை 48-இது ஆறிராசிக்குக் குறைந்தாலும். 12-யிராசி கூட்டிக்கொண்டு அதில் 1-3-48-0-கழிக்கவேணும் இப்படிச் செய்ய மிச்சம் 26-12-0-ரவிபரமோச்சம் ஆயுள்பிரமாண வருஷம் 19-19-19-பத்தொன்பதைக்கொண்டே பிரத்யேகமாக வெவ்வேறு பெருக்கவந்த மொத்தம் 190-498-228-0 இவைகளை முன்சொன்ன பிரகாரமே வகுக்க வருபது வருஷம் 17-மாதம் 2-நாள் 17-நாழி 48-விநாடி பூஜ்யம்.

மற்றொரு உதாரணம்.

சூரியன் மேஷத்திலிருக்க விராசி பூஜ்யம் பாகை 8-கலை 5-விகலை 5-அடைந்தவனாயிருந்தால் உச்சத்துருவம் கழிக்கக்கூடாதானதால் 12-கூட்டிகொண்டு அந்த.

| ராசி | பாகை | கலை | விகலை |
|---|---|---|---|
| 12 | 8 | 5 | 5 |

இவைகளில் உச்ச துருவபாகம் பத்து பாகை கழிக்க சேஷம் இராசி 11-பாகை 8-கலை 5-விகலை 5-இவைகள் பரமோச்சமடைந்த சூரியன் பரமாயுள்ள பிரமாண சங்கியை 19-19-19-19-னல் பிரத்தியேகமாக பெருக்கி வகுத்து பங்கிட வருஷம் 18,மாதம் 10-நாள் 13-நாழிகை 36-விஞடி 35-இப்படி சூரியனுக்கு உதாரணம் எழுதப்பட்டது. இந்தப்பிரகாரமே மற்ற கிரகத்திற்கும் யூகிக்கவும்.

லக்ஞயுர்த்தாய நிர்ணயகிரமம் சொல்லப்படும்.

ஜென்மலக்னத்தில் சென்ற நவாமிசைகளுக்கு சமமாகிய வருஷத்தைக் கொடுப்பார் அதெப்படி யென்ருல் லக்னம் வரையிலுள்ள மேஷாதி யிராசிகளைவிட்டு லக்னத்தில் சென்றிருக்கிற பாகைகளை கலைகளாக்கி அந்த கலைகளை ஒரு நவாமிசைக்கு 200-கலைகளாகும் 200 - கலைகளைக் கொண்டு பங்கிட்டு வருக்க வந்த ஈவு சென்ற நவாமிச சங்கியையாகும் இப்படி எத்தனை நவாங்கிசம் சென்றிருக்குமோ அத்தனை வருஷங்களாகும் சேஷமான கலைகளை 12-ஞல் பெருக்கி 200-ஞல் வகுக்க வந்த ஈவு மாதங்களாகும் அந்த சேஷத்தை 30-ஞல் பெருக்கி 200-ஞல் வகுக்க வந்தஈவு நாள்களாகும் அந்த சேஷத்தை 30-ஞல் பெருக்கி 200-ஞல் வகுக்க வந்த ஈவு விஞடியாம் இப்படி லக்ன ஆயுர்த்தாய நிர்ணயம் செய்ய வேண்டியது.

சிலர் லக்னவிராசிக்கு முதலாக சமமாக சொல்வார்கள் அதெப்படி யென்ருல் மேஷ முதல்கொண்டு லக்னம் வரையில் எண்ண லக்னம் வரைக்கும் தள்ளி எத்தனையாகுமோ அவ்வளவு லக்ஞயுர்த்தாய வருஷங்களாகும் பிறகு லக்னத்திலடைந்த பாகைகளை கலைகளாக்கி 12-ஞல் பெருக்கி யிராசிகலையாகிய 1800-கொண்டு வகுக்க வருவது ஈவு தினங்களாகும். அதின் சேஷத்தை 60-ஞல் பெருக்கி 1800-ஞல் வகுக்க வரும் ஈவு கடிகையாகும் இந்த விஷயத்திற்குச் சுலோகம் ஹோராசாஸ்திரமும் மணித்தர் வாக்கியமும் சொல்லப்படிட்டிருக்கிறது.

சிலர் நவாம்சாதி பலவாஞயிருந்தால் நவாமிசைத்தைக் கொண்டும் லக்னவிராசியாதிபதி பலவாஞயிருந்தால் இராசியைக்கொண்டு ஆயுதர்த்தாயம் செய்யென்று சொல்வார்கள். இதற்கு சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது சாராவளியில் வக்ரித்திருக்கிற கிரகத்தைவிட்டு சத்ரு க்ஷேத்ரமடைந்த கிரகத்திற்கு தாங்கள் ஆயுர்த்தாயத்தில் மூன்றிலொருபங்கு கழித்து இரண்டு பங்கைச் சேர்க்கவும்.

ஆஞல் வக்கிரித்திருக்கிற கிரகத்தைத் தவிர மற்ற கிரகம் சத்ரு க்ஷேத்திரமிருந்தால் தங்கள் வருஷங்களில் மூன்றி லொருபங்கு கழிக்க

வும் வக்ரித்திருக்கும் கிரகம் சத்துரு க்ஷேத்திரத்திலிருந்தால் கழிக்கக் கூடாதென தாற்பரியம் இந்த அர்த்தம் அனேக கிரந்த கர்த்தர்களுக்கு சம்மதமாகவிருக்கிறது பட்டோத் பலரும் தெரிவிக்கிறார். இதற்கு கிரந்தாந்தர வசனம் சுலோகம் சொல்லப்பட்டது சிலர் அங்காரகனைத் தவிர மற்ற கிரகம் சத்துரு க்ஷேத்திர மிருந்தால் மூன்றிலொருபங்கு கழிக்கப் படும் அங்காரான் சத்துருக்ஷேத்திரமிருந்தால் மூன்றிலொருபங்கு கழிக்க வேண்டியதில்லை யென்று சொல்வார். இந்த அர்த்தத்திற்கு சுலோகம் பாதராயணர் உக்தி சொல்லப்பட்டிருக்கிறது. சுக்ரன் சனியைவிட்டு மற்றவர்கள் அஸ்தமனமானால் தங்கள் ஆயுள் வர்ஷங்களில் பாதி குறைக்கப் படும் சுக்ரன் சனி இவர்கள் அஸ்தமானமாயிருந்தாலும் தங்கள் ஆயுள்வருஷங்கள் குறையாதென்று தாற்பரியம் இந்த அர்த்தத்திற்கு சுலோகம் பாதராயணவசனம் சொல்லப்பட்டது.

மூன்றாவது சுலோகத்துக்குரை சத்யாசாரி.

சக்ரபாத ஹரணமும் விரயாதிகரணமும் சொல்லுகிறார் பாபக்கிரகங்கள் வியஸ்தான முதற்கொண்டு தலைகீழாகவரும் சமயங்களில் குறைவுண்டாகும் அதெப்படியென்றால் லக்னத்திற்கு பன்னிரண்டாமிட மிருக்கப் பட்ட பாபக்கிரகம் கொடுக்கப்பட்ட ஆயுள் சகலமும் கழிக்கப்படும் பதினோராமிட மிருந்த பாபக்கிரகம் கொடுக்கப்பட்ட ஆயுளில் பாதிகுறைக்கப்படும் பத்தாமிடமிருந்த பாபக்கிரகம் கொடுக்கப்பட்ட ஆயுளில் மூன்றிலொருபங்கு குறையும் ஒன்பதாமிடமிருந்த பாபக்கிரகம் கொடுக்கப்பட்ட ஆயுளில் நாலிலொருபங்கு குறையும் எட்டாமிடத்தி லிருக்கப்பட்ட பாபக்கிரகம் கொடுக்கப்பட்ட ஆயுளில் ஐந்திலொருபாகம் குறையும் ஏழாமிடமிருக்கப்பட்ட பாபக்கிரகம் கொடுக்கப்பட்ட ஆயுளில் ஆறிலொருபங்கு குறையும் இந்த விரயாதி தானங்களில் சுபக்கிரகமிருந்தால் பாதிகுறையும் அதெப்படி யென்றால் சுபக்கிரகம் லக்னத்திற்கு பன்னிரண்டிலிருந்தால் அந்தக்கிரகம் கொடுக்கப்பட்ட ஆயுளில் பாதிகுறையும் பதினோராமிடமிருந்தால் நாலில் ஒன்று குறையும் பத்தாமிடமிருந்தால் ஆறிலொன்று குறையும் ஒன்பதாமிட மிருந்தால் எட்டிலொன்று குறையும் எட்டாமிடமிருந்தால் பத்திலொன்று குறையும் ஏழாமிடமிருந்தால் பன்னிரண்டிலொன்று குறையும் அந்தப்பிரகாரமே ஓரிராசியில் சுபக்கிரகமாவது பாபக்கிரகமாவது இந்த விரயாதியாகிய ஸ்தானத்தில் ஒன்றில் இரண்டு மூன்று கிரகமிருந்தால் அவருக்குள் பலவானான ஒருவனே அந்த ஸ்தானத்திற்குச் சொல்லப்பட்ட குறைவு அடைவான் மற்ற கிரகங்கள் குறைக்கமாட்டார்கள் இந்தப்பிரகாரமே சத்யா சாரியரால் சொல்லப்பட்டது வராகமிகிராசாரியாருக்கும் சம்மதமானதால் கிரந்தாந்தரத்தில் இந்த விதமாகவே சொல்லப்பட்டது.

நாலாவது சுலோகம் உரை.

லக்கினத்திலிருந்த பாபக்கிரகம் ஆயுர்த்தாயாம்சம் குறைக்கும் விதம் சொல்லுகிறார். பாபக்கிரகமான ரவிகுஜ சனி இவர்களிலொருவர் லக்கின

த்திலிருக்க சார்த்தோதித நவாம்ச ஹாதத் அர்த்தோதித நவாம்ச சகித மானதடைந்த நவாம்சைபினுல் பெருக்கப்பட்ட லக்னுயுள் சகிதமான சர் வக்கிரக தம்தம் ஆயுள் பிண்டத்தினுல் அஷ்டயுக்த சதசங்கியையுண்டாக் குமானுல் பங்கிடவரப்பட்ட வருஷாதிகள் நாசமடையும்.

(.அதெப்படியென்றல்.)

மேஷமுதல் தற்கால லக்னபாகம் வரைக்கும் விகலையாக்கி அந்தவிக லையை நவாம்ச பிரமாணமான 200-னுல் வகுக்கவந்த ஈவு எத்தனையோ அத்தனை நாவாம்சம் இராசி சக்கரத்தில் சென்ற நவாம்சையாகும் இதில் வர்த்தமான நவாம்சைக்கு ஒன்றுகூட்டினுல் அது சர்த்தோதித நவாம்ச மாகும் இதைக்கொண்டு லக்ன ஆயுள் சகிதமான சர்வகிரகம் தம்தம் ஆயு ளினுற் பெருக்கி 108-டைகொண்டு வகுக்கவந்த வீவு வருஷாதிகளை லக்கி னத்திலிருந்த பாபர்கள் குறைப்பார்கள் ஆனதால் அந்த வருஷாதிகள் சர்வகிரகம் தம்தம் ஆயுர்த்தாய பிண்டங்களில் கழிக்க சேஷம்குரூரோதய ஹரணசுத்தமான ஆயுள் பிண்டமாகும் இந்தப்பிரகாரமாய் அந்தந்தகிரகத் திற்கு பிரத்தியேகமாக அம்சகரணம் செய்தபிறகு அந்தந்த கிரக தசா வருஷமேற்படும்.

சிலர் சார்த்தோதித நவாம்சமானுலும் மேஷாதி யிராசிகளைக்கழித்து லக்னத்தில் சென்ற பாகையைக் கலையாக்கி அந்த கலையை 200-னுல் வகு க்கவந்த ஈவுசென்ற நவாம்சைகளாகும் அதில் வர்த்தமான நவாம்சைக் காக ஒன்றுகூட்டினுல் அதுசார்த்தோதித நவாம்சமாகுமாம் இதோடு சர்வ கிரகம் தம்தம் பிண்டாயுளைப் பெருக்கி முன் மாதிரியாக குறைவுசெய்ய வென்று தெரியவும்.

அந்த லக்னமிருந்த பாபக்கிரகத்தை சுபக்கிரகத்தால் பார்க்கப்படு மானுல் இந்தவிதானம் கொண்டே சார்த்தோதி நவாம்சையினுல்பெருக்கி 108-னுல்வகுக்கவந்த ஈவுகளில் பாதிகுறையும் லக்னத்தில் ஒருசுபரும்ஒரு பாபியும் கூடியிருந்தால் அந்தவிருவரில் எந்தகிரகம் தர்த்தமான நவாம்சை க்கு சமீபத்திலிருப்பாரோ அந்த கிரகத்திற்கு சொல்லப்பட்ட பிரகாரம் அம்சகரணம் செய்யவே இதரகிரகத்திற்கு அம்சகரணம் செய்யக்கூடாது இவ்விடத்தில் அமரபக்ஷ சந்திரனை பாபர்களுடன்சேர்க்கக்கூடாது, இந்த விஷயத்திற்கு சுலோகம் பாதராயணர் சொல்லி இருக்கிறுர்.

ஐந்தாவது சுலோகத்துக்குறை.

மனிதர் யானைக்கு ஆயுள் பிரமாணம் சொல்லுகிறுர் ஆனுல் 120-வரு ஷமும் ஐந்துதினமும் மனிதருக்கும் யானைக்கும் பரமாயுள் பிரமாணமாகு மாம், குதிரைக்கு 32-வருஷம் பரமாயுள் கழுதை ஒட்டகத்திற்கு 25-வரு ஷம் பரமாயுள். ரிடபம் மாடு எருமை இவைகளுக்கு 25-வருடம்பரமாயுள். ஒன்றும் குறைவுள்ளதல்ல ஆனுல் மாடு எருமைக் கிருபத்துநாலு வருடம் பரமாயுள். நாய்க்கு பன்னிரண்டுவருடம் பரமாயுள். புலி பூனை முதலாகிய

காவில் நகமுடையவைகளுக்கும் பன்னிரண்டு வருடம் பரமாயுளாகும்.ஆடு முதலான செந்துக்களுக்கு பதினாறு வருடம் பரமாயுளாகும். இவ்விடத்தில் அசுவாதிகளுடைய பரமாயுளைச் சொல்லுவது குதிரை ஜெனனகாலத்தைகொண்டு ஆயுள் பிரமாண நிர்ணயம் செய்யவேண்டியதற் கென்றறியவும் அதற்கு குதிரை பரமாயுளனுசரித்து த்ரைராசி கணிதத்தைக்கொண்டு பரமவுச்சமடைந்த கிரகபரமாயுள் ஏற்படுத்தலாம் அதெப்படி யென்றால் கிரகபரமாயுளைக்கொண்டு குதிரைப்பிரமாண ஆயுள் வருடத்தைப் பெருக்கி மனிதர் பரமாயுளால்வகுக்க குதிரைகளின் விஷயமானது அந்தந்த கிரகம் கொடுக்கப்பட்ட பரமாயுளைத் தெரிந்துகொள்ளவும்.

## இதற்குதாரணம்.

சூரிய பரமவுச்சவருடம் பத்தொன்பதைகொண்டு குதிரை பரமாயுள் வருடமான முப்பத்திரண்டு இதைப்பெருக்க அறுநூற்றெட்டு வருடம் இதை மனுஷபரமாயுளாகிய நூற்றிருபதைக்கொண்டு வகுக்க வந்த ஈவு வருடம்ஐந்துதினம் இருபத்துநாலு இந்தப் பிரகாரகிம சந்திரனுக்கு வேருடம் ஆறு மாதம்எட்டு. குஜனுக்கு வருடம் நாலு. புதனுக்கு வருடம் 3-மீ 2-தினம் 12-குருவுக்கு வருடம் 4 சுக்ரனுக்கு ஷு|5 மீ 7 தினம் 6 சனிக்கு வருடம் 5-மாதம் 4. இது அசுவவிஷயமான பரமவுச்சமான ரவியாதிக்கிரகம் கொடுக்கப்பட்ட ஆயுர்த்தாயம் இந்த விதமாகத்தானே மற்ற செந்துக்களுக்கும் ரவியாதி கொடுக்கப்பட்ட ஆயுர்த்தாயம் கணிதத்தைக்கொண்டறியவும் இந்த கிரக ஆயுர்த்தாயத்தை வைத்து மனிதருக்கு செய்தபிரகாரமே ஆயுர்த்தாயம்செய்து ஹரணசோதனைச் செய்யவே மிச்சமானது ஆயுசு குதிரைகளுக்குச் சொல்லப்பட்டது.

## ஆறுவது சுலோகத்துக்குரை.

எந்தயோகத்தில் பிறந்தவனுக்கு சம்பூரண ஆயுசுஉண்டாகுமோ அந்த யோகம் சொல்லுகிறார் மீனராசியினுடைய பரம நவாம்சையில் ஒன்பதாவது நவாமிசை லக்கினமாயிருக்க புதன் ரிஷபத்தில் 25 கலைதாண்டியிருக்க புதன் நீங்கலான மற்ற ஆறுபேறும் தங்கள் தங்கள் பரமவுச்ச பாகத்திலிருந்தாரானால் இப்படிப்பட்ட யோகத்தில் பிறந்தவனுக்கு பரமாயுள் பிரமாணம் வருடம் 120 தினம் 5 ஆகுமாம்.

## உதாரணங்கள்.

| | | | |
|---|---|---|---|
| லக்கினநவாமிசை | ,, | 9 | ,, |
| சூரியன் | ,, | 9 | ,, |
| சந்திரன் | 1 | 2 | ,, |
| குசன் | 9 | 27 | ,, |
| புதன் | 1 | ,, | 25 |
| குரு | 3 | 4 | ,, |
| சுக்ரன் | 11 | 26 | ,, |
| சனி | 6 | 19 | ,, |

இந்தவிதமாக அமைந்திருக்க பரமவுச்சமடைந்த ரவி சந்திரன்குஜன் புதன் குரு சுக்ரன் சனி பரமாயுட்பிரமாண வருடங்களாவன.

| | | |
|---|---|---|
| ரவிக்கு | வருஷம் | 19 |
| சந்திரனுக்கு | வருஷம் | 25 |
| குஜனுக்கு | வருஷம் | 15 |
| குருவுக்கு | வருஷம் | 15 |
| சுக்ரனுக்கு | வருஷம் | 21 |
| சனிக்கு | வருஷம் | 20 |

இந்தப்பிரகாரமாக ஏற்பட்டிருப்பதாலும் புதனுக்கு எத்தனைவருடமென்றால் புதன் தன் நீச்சஸ்தானமிருந்து உச்சஸ்தானத்துக்கு போகும் இராசி 1-பாகை 0-கலை 25-க்கு உள்ளிருக்கிறான் இவைகளில் புதபரம நீச துருவக்கிரமம்போக 12 இராசி சேர்க்க இராசி 13-கலை 25-ல் பரமநீச துருவக்கிரமம் 11-15 கழித்துவிட்டு சேஷம் 1-15-25 இவைகளைக் கலைகளாக்க 3,725-கலைகளாகு மென்பதாம்.

த்ரைராசிகம்.

பகணூர்த்தக்கலைகள்-10,800 புதன் பரமநீசமாசங்கள் 72-ம் புதனடைந்த கலைகள் 2,725 இதைக்கொண்டு பெருக்கி பகணூர்த்தகலைகள் 10,800 கொண்டுவகுக்க வந்தவருடம் 1, மாதம் 6, தினம் 5, இவைகள் பரமநீச ஆயுள்வருடம் 6, சேர்க்க வருடம் 7, மாதம் 5, தினம் 5, புதன் ஆயுர்த்தாயம் ஏற்படுகின்றது. இவைகளை விய-லாபாதி-ஹரணம் செய்யத்தகுந்தது. சனி லக்னத்திற்கு அட்டமத்திலிருக்கிறார். தவிர தன் ஆயுள்வருடம் 20-ல் ஐந்திலொருபங்கான வருடம் 4, குறைக்கப்படும். அதைத்தவிர ஹரணசுத்தமானது சனிக்கு வருடம் 16-குஜன் லக்னத்திற்கு 11-மிடத்திலிருக்கிறானதால் தன் ஆயுசு வருடம் 15-ல் பாதியாகிய வருடம் 7-மாதம் 6-இதை குறைக்கப்படும், ஆனதால் ஹரணசுத்தமான வருடம் 7-மாதம் 6-முன்சொன்ன விதமாய் லக்கினத்தில் நவம நவாம்சையான லக்னுயுர்த்தாயம் வருடம் 9-இந்தப்பிரகாரம் சூரியாதிகளுக்கு ஸ்திரமாக ஏற்பட்டது.

| | | | | |
|---|---|---|---|---|
| சூரியனுக்கு | வருடம் | 19 | மாதம் | ,, |
| சந்திரனுக்கு | வருடம் | 25 | மாதம் | ,, |
| குஜனுக்கு | வருடம் | 7 | மாதம் | 6 |
| புதனுக்கு | வருடம் | 7 | மாதம் | 6 தினம்5 |
| குருவுக்கு | வருடம் | 15 | மாதம் | ,, |
| சுக்ரனுக்கு | வருடம் | 21 | மாதம் | ,, |
| சனிக்கு | வருடம் | 16 | மாதம் | ,, |
| லக்னத்திற்கு | வருடம் | 9 | மாதம் | ,, |

இவற்றைக்கூட்ட வருடம் 120. நாள் 5. ஏற்படும் இதுபரமாயுள் ஜீவிதயோக மென்னப்படும்.

ஏழாவது சுலோகத்துக்குரை.

பூர்வோக்தமான பரமாயுர்த்தாயத்திற்கு தோஷம் சொல்லுகிறார். முன்சொன்ன பிரகாரமாய் ஆசிர்த்தாயத்திற்கு சாணக்யடு என்னும் நாமங் கொண்ட விஷ்ணுகுப்த கர்த்தாவும் சித்தசேனரென்னும் கிரந்தகர்த்தாவும் தேவஸ்வாமியென்னும் சோதிட கிரந்தகர்த்தாவும் செய்தது அதெப்படியென்றால் விஷ்ணுகுப்தர் சுலோகம் சொல்லியிருக்கிறார். தேவஸ்வாமியும் சுலோகம் சொல்லியிருக்கிறார். மய யவன - மணித்தரும் சொல்லி இருக்கிறார்கள். இந்த மய-யவன மணிதபராசவிஷ்ணுகுப்த தேவஸ்வாமி சித்தசேனன் இவர்களுடைய மதமாம் பிரத்யக்ஷமான எட்டுவருடம் பாலாரிஷ்டங்கள் விட்டு இருபது வயசுத்திற்குள்ளாக ஆயுள் முடிந்தது அல்ல ஆனால் இவர்கள்சொல்லப்பட்ட மார்க்கத்தில் எட்டு வருடத்துக்குமேல் இருபது வருடத்துக்குள்ளாக எவருக்கும் ஆயுளுக்கு இடரில்லை எட்டு வயசுத்துக்குமேல் இருபதுவயசுத்துக்குள் மரணமடைகிறார்களானதால் இது பிரத்யக்ஷ தோஷமென்று தாற்பர்யம்.

(எட்டாவது சுலோகத்துக்குரை.)

முன்சொல்லப்பட்ட கிரந்தகர்த்தாமதம் என்னவென்றால் மற்றொரு தோஷம் சொல்லுகிறார். முன்சுலோகம் சொல்லியபடி எந்தவெந்தயோகத்தில் சம்பூர்ணமான ஆயுசு சொல்லப்பட்டதோ அந்த யோகத்தில் ஆறுகிரகம் பரமோச்சமடைந்தவராணாலும் மற்றும் சிலகிரந்தகர்த்தரைக் கொண்டும் சார்சபவுத்தமதம் என்னும் சக்கரவர்த்தியோகஞ் சொல்லப்பட்டது. அதெப்படியென்றால் பாதராயணர் சொல்லியிருக்கிறார் ஆனதால் ஆறுகிரகம் பரமோச்சமாயிருக்க பிறந்தவன் சகலபூமியையும் ஆளும் இராசனுவனும். ஆறுகிரகங்கள் பரமவுச்சமடைந்தாலும் பூர்ணாயுசுண்டாகாது தனமில்லாத தரித்திரனும் பூர்ணாயுசு வருடம் உயிருடனிருக்கிறான். ஆனதால் மயயவனாதிகளால் மற்றொருதோஷம் பிரத்யக்ஷமாகும்.

அது இப்படி லக்ஷயமானத்திற்கு சத்தியாசாரியார் ஆயுர்த்தாயம் முக்யமாக அங்கீகரித்து முன்சொல்லப்பட்ட விதமாய் மய யவனாயுர்த்தாயத்தில் தோஷங்கள் சொல்லப்படும். பராசர் முதலானோர் முன் சொல்லப்பட்ட பிண்டாயுர்த்தாயமே முக்யமாகச் சொல்லியிருக்கிறார். பட்டோத்பலர் இப்படிச்சொல்லப்பட்ட பரமாயுர்த்தாயத்தில் சொல்லப்பட்ட தோஷத்தில் அசம்மதமாயிருந்தால் சுலோகம் சொல்லப்பட்டது. 2-இந்த இரண்டு சுலோகத்தால் வராகமிகிராசாரி யென்பவரால் சொன்னதல்லவென்று தெரிந்து சொல்லி இந்த தோஷத்திற்கு பல்காரஞ்சொரிலுகிறார் அதிற் எட்டு வருடத்திற்குமேலும் இருபது வருடத்துக்குள்ளும் ஆயுசு முடிவாகிற தென்றுசொல்லிய தோஷத்திற்கு பரிகாரமெப்படி யென்றால்.

தம்தம் லக்னத்தின் நாவம்சத்தில் குருரோதய ஹயணமும் செய்யவர்த ஆயுர்த்தாயத்திற்குமீதி இல்லாததினாலும் அநுஷ்டானம் அயுத்தம்.

| கிரகம் | சூ | சந் | செ | புத | குரு | சுக் | சனி | லக் |
|---|---|---|---|---|---|---|---|---|
| இராசி | 0 | 1 | 10 | 11 | 9 | 11 | 0 | 10 |
| பாகை | 9 | 2 | 28 | 14 | 4 | 26 | 19 | 1 |
| கலை | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |

இதற்கு உதாரணம்.

கும்பராசியினுடைப் பிரதமநவாம்சிசம் லக்னமாகி, ரவி சந்திரன் சுக்ரன் பரமஉச்ச மடைந்திருக்க புதன் குரு-சனி-பரமநீசத்திலும், குஜன்கும்பராசியின் 29-வது பாகையிலிருக்க லக்னத்தில் கொஞ்சமாவது அடையாததினால் லக்னயுர்த்தாயம் இல்லை, பரமஉச்சமடைந்தவரும் பரமநீச படைந்தவரின், ஆயுர்த்தாயங்கள், விதிதமாயிருக்கிறது. குஜாயுர்த்தாயம்ஏற்படும் விதமெப்படியென்றால் குஜபுக்தி 10-28-ல் குஜபரம உச்சத்துருவக்கிரமம் 9-28-ல் கழிக்க சேஷம் 1, 0, 0, இதற்கு கலைகள் 1800-இந்த சங்கியைக்கு குஜபரம நீசமாச சங்கியைக்கு 90 - ஆல் பெருக்கி பகணுர்த்தகலை சங்கியைக்கு 10,800-ஆல் வகுக்கவருவது வருஷம் 1, மாதம்-3, இதற்கு பரம உச்சவருஷம் 15-ல் கழிக்க ஏற்பட்ட வருஷம் 13, மாதம்-9, இதுகுஜாயுர்த்தாயம் குருலக்னத்திற்கு 12-மிடமிருப்பதால் தன் பரமநீச வருஷம் 7, மாதம் 6-ல் பாதிகழிக்க வேண்டியதானதால் ஹரணசுத்தமான குரு வருஷம் 3, மாதம் 9, இப்படி அந்தந்தகிரகத்திற்கு ஏற்பட்டவருஷம் எவ்வளவென்றால்.

| | | | | |
|---|---|---|---|---|
| சூரியனுக்கு | வருஷம் | 19 | மாதம் | ,, |
| சந்திரனுக்கு | வருஷம் | 25 | ,, | ,, |
| குஜனுக்கு | வருஷம் | 13 | ,, | 9 |
| புதனுக்கு | வருஷம் | 6 | ,, | ,, |
| குருவுக்கு | வருஷம் | 3 | ,, | 9 |
| சுக்ரனுக்கு | வருஷம் | 21 | ,, | ,, |
| சனிக்கு | வருஷம் | 10 | ,, | ,, |

லக்னத்திற்கு கொஞ்சம்கூட சொல்லாததினால் லக்ன ஆயுர்த்தாயம் இல்லை இவற்றைக்கூட்ட. வருஷம் 98, மாதம் 6, குஜன்லக்னத்திருந்தால் குருரோதய ஹரணம் செய்யத்தக்கது லக்னம் கும்பம்பிரதமநவாம்சங்கள் 91. இதைக்கொண்டு சர்வகிரகம் தம்தம் ஆயுள் பிண்ட வருஷம் 98.மாதம் 6-ம். பெருக்கி 8, 963 இதை அஷ்டோத்தரசதமான 108-ல் வகுக்க வந்தவு 83 இவைகளை சர்வகிரக தம்தம் ஆயுள் பிண்டமான வருடம் 98, மாதம் 6-ல் கழிக்க சேஷம் வருஷம் 15, மாதம் 6 ஸ்திரமாக ஏற்படுகின்றது .இப்படி எட்டுவருஷத்துக்குமேல் 20 வருஷத்துக்குள் ஆயுள்முடிவாகிறபடியினாலும் அந்த தாஷணம். ஆயுர்தமாயிருக்கிறது ஆனதாலும் பாபக்கிரகமில்லாது லக்கினத்தில் பிறந்தவருக்கு எட்டுவருடத்துக்குமேல் இரு

பது வருடத்துக்குள் மரணமாகிறார்களானதால் முன்சொன்ன மய யவனாதி யுக்தாயுர்த்தாயத்தில் தோஷமில்லாமற் போகாதென்று சிலர் சொல்வார்கள்.

அப்படி சொல்லக்கூடாது அதென்னவெனில் எந்த கிரந்தகர்த்தா இந்தவிதமாய் ஆயுர்த்தாயம் சொல்லி யிருக்கிறாரோ அந்தகிரந்தகர்த்தரே அனேகவிதமான அபமிருத்து யோகங்கள் சொல்லி இருக்கிறார். அதெப்படியென்றால் பாதராயணர் சுலோகம்சொல்லி இருக்கிறார். சாராவளியிலும் சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது யவனேஸ்வரரும் சொல்லி இருக்கிறார் ஆனதால் முன்சொல்லப்பட்ட கிரந்தகர்த்தாவின் மதத்தில் எட்டு வருடத்திற்குமேலும் இருபதுவருடத்துக்குள்ளும் ஆயுள்முடிவாகிறதினாலே இந்தலக்ஷணம்யுக்தமாகாதுசுலோகம் சொல்லியவிரண்டு தோஷத்திற்கும் பரிகார மெப்படியென்றால்.

சக்ரவர்த்தி யோகம் இல்லாது தீர்க்காயுசு உண்டாகுமிதற்கு வுதாரணம்.

| | | |
|---|---|---|
| சூரியன் | ரிஷபத்தில் | 10-பாகையிலிருக்கிறார் |
| சந்திரன் | மிதுனத்தில் | 3-பாகையிலிருக்கிறார் |
| செவ்வாய் | கும்பத்தில் | 28-பாகையிலிருக்கிறார் |
| புதன் | மேஷத்தில் | 15-பாகையிலிருக்கிறார் |
| குரு | சிம்மத்தில் | 5-பாகையிலிருக்கிறார் |
| சுக்ரன் | மேடத்தில் | 27-பாகையிலிருக்கிறார் |
| சனி | கும்பத்தில் | 20-பாகையிலிருக்கிறார் |
| லக்னம் | தனுசில் | 17-பாகையிலிருக்கிறார் |

முன்சொன்ன விதானத்தைக் கண்டு அந்தந்த கிரகத்திற்கு ஏற்பட்ட ஆயுள் வருஷங்களாவன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியனுக்கு | வருடம் | 17 | மாதம் | 5 | |
| சந்திரனுக்கு | வருடம் | 22 | மாதம் | 11 | |
| குஜனுக்கு | வருடம் | 13 | மாதம் | 9 | |
| புதனுக்கு | வருடம் | 7 | மாதம் | 0 | |
| குருவுக்கு | வருடம் | 13 | மாதம் | 9 | |
| சுக்ரனுக்கு | வருடம் | 19 | மாதம் | 9 | தினம்-3 |
| சனிக்கு | வருடம் | 13 | மாதம் | 4 | |
| லக்னத்திற்கு | வருடம் | 8 | மாதம் | 0 | |

பிரகஸ்பதிலக்னத்திற்கு 9-மிட மிருப்பதினால் தன் ஆயுர்த்தாய வருடம் 13, மாதம் 9-ல், அஷ்டாம்சமாகியது குறைக்கப்படுமானதால் ஹரணசுத்தமான குரு வருடம் 12, தினம் 12, சந்திரன் சப்தமிருந்தானனதால் தன்னாயுர்த்தாயத்தில் கஷ்டாம்சம்ஆகியதுகுறைக்கப்படுமானதால்ஹரண

சுத்த சந்திரவருடம் 19, மாதம் 1. ரவிக்கு குரு மித்ரனும்சுக்கிரன் தற்காலமித்திரனானதால் சத்துருக்ஷேத்ரமானஹரணம் இல்லை அங்காரகன் சத்ருக்ஷேத்ரமான கும்பத்திலிருந்தவனானதாலும் முன்சுலோகத்தில் குஜனுக்கு வக்ரனென்றபேரிருப்பதினால் குஜனுக்கு அனேகர்கள் சொல்லுகிறார்களானதாலும் குஜனுக்கு சத்துருக்ஷேத்திரஹரணமில்லை, இந்தவிதமாக ஹரண சுத்தமான ஆயுள் வருடங்களாவன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியனுக்கு | வரு | 17 | மீ | 5 | |
| சந்திரனுக்கு | வரு | 19 | மீ | 1 | |
| குஜனுக்கு | வரு | 13 | மீ | 9 | |
| புதனுக்கு | வரு | 7 | மீ | 0 | |
| குருவுக்கு | வரு | 12 | மீ | 0 | தினம் 12 |
| சுக்கிரனுக்கு | வரு | 19 | மீ | 3 | |
| சனிக்கு | வரு | 13 | மீ | 4 | |
| லக்னத்திற்கு | வரு | 8 | மீ | 0 | |

இவைகளெல்லாம் கூட்ட வருஷம் 109 மாதம் 10 தினம் 12.

ஆகிறது மிகசொற்பமான சேடத்தை வில்க்கப்பட்டது இப்படி இராஜயோகமில்லாது பூர்ணாயுசுண்டாகும் இதுவும் தவிர சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறதென்று சந்திரயோகப் படலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தவிர கேமுத்ரயோக பலனென்று சொல்லப்பட்டிருக்கிறது தவிர இந்தயோகத்தில் பிறந்தவன் பூர்வோக்தப் பிரகாரமாய் தீர்க்காயுஷ்வந்தனும் வெகுதரித்திரனுமாகிறான் ஆனதால் ஒரு சுலோகம் சொல்லப்பட்டதெனத்விதியதூஷணத்திற்கு அவகாசமில்லை இப்படி இரண்டு தோஷங்களுக்கு அசம்மதாயிருப்பதினாலும் இந்த இரண்டு சுலோகங்களும் வாராகிமிகிராச்சாரியார் சொல்லப்பட்ட மயயவனாதி மதாயுர்த்தாயத்தைவிட்டு இவ்விடத்தில் சொல்லப்போகிற சத்யாசாரிமதாயுர்த்தாயங்கள் அங்கீகரிக்க அந்த மார்க்கமும் பகுதராசாரியார் சம்மதமாயிருக்கிறதென்று தெரிவிக்க பூர்வோக்த ஆயுர்த்தாய நூஷணார்த்த மல்லவென்று தெரியத்தக்கது. இன்னும் வாராகிமிகிராசாரி பிரதிக்ஞையான இந்த கிரந்தத்தில் வெகு கிரந்த கர்த்தா மதங்களை சொல்லியிருக்கிறாரெனத் தெரியத்தக்கதென்பதாம்.

ஒன்பதாவது சுலோகத்துக்கு உரை.

இதில் ஜீவசர்மா மதாயுர்த்தாயமும் சத்யாசாரிமதா யுர்த்தாயமும் சொல்லப்படும்.

ஜீவசர்மாதன் மதத்தினால் பரமாயுசு வருடம் 120, தினம் 5, பரமாயுசுடைய சப்தமாம்சமும் ஒவ்வொரு கிரக ஆயுர்த்தாயமா

வது சொல்லப்பட்டபடியால் பரமஉச்சமான வருடம் 120 தினம், 5, இதை ஏழால்வகுக்கவந்தவீவுவருடம் 17,தினம் 22, நாழிகை 8 விஞடி 34 பரம உச்சமடைந்தஒவ்வொருகிரகத்துக்கும் ஆயுர்த்தாயமாகுமென ஜீவசர்மாசொன்னதாற்பரியம் சொல்லப்பட்டிருக்கிறது இந்தகிரகம் செய்யசுலபமாகவேற்படுமென சொல்லியிருப்பதிஞலும் பரம நீசத்திலிருந்த கிரகத்திற்கு பாதி குறைவுபடும் ஆனதால் வருடம் 8, மாசம் 6, தினம் 6, நாழிகை 4, விஞடி 17, ஆயுள் ஏற்படும் கிரகம் உச்சநீசம் மத்தியிலிருப்பவர்க்கு முதலில் பிண்டாயுர்த்தாயத்திற்கு சொல்லியபிரகாரமே த்ரைராசிகம்செய்ய அந்தந்த கிரகத்திற்கு ஆயுர்த்தாயம் நிர்ணயிக்கத்தக்கது அந்த கிரகங்களில் அங்காரகன் தவிர மற்றகிரகங்களிலே சத்ருக்ஷேத்ரமிருந்தால் திருதியாம்சமாகிய மூன்றிலொன்றுகுறைக்கப்படும் சுக்ரன் சனீசுவரன்தவிர மற்றோர்கள் அஸ்தமானமாயிருந்தால் அர்த்தாம்சமான பாதி குறைக்கப்படும் சர்வார்த்த திரிசரண பஞ்சசஷ்டபாகஹா, என்றபிரகாரம் விரயாதிஹரணம்செய்யத்தக்கது பாபக்கிரகம் சென்மலக்ன மிருந்தால் குரூரோதயஹரணம் செய்யவும் இப்படி ஜீவ சர்மாயுர்த்தாயத்தில் அம்சகரணுதிகளெல்லாம் பூர்வோக்தமய யவஞதி மதானுசாரமாகவே செய்யவேண்டியது.

(இதுவும் சத்யாசாரிமதாயுர்த்தாயக் கிரகம்.)

எப்படி யென்றால் கிரகபுக்த நவாம்ச விராசி துல்யம் ஆனல் ஒவ்வொரு இராசிகளிலும் எந்த நவாம்சையில் கிரகமிருக்குமோ அந்த நவாம்சம் எந்த விராசி நவாம்சமாகுமோ அந்த விராசிவரையில் மேஷ முதல்கொண்டு எண்ண யெத்தனையாகுமோ அத்தனை வருடம் ஆயுசும் அந்தகிரகம் கொடுக்கும் இப்படி கிரகம் டைந்த நவாம்ச விராசி எத்தனையாகுமோ அத்தனை வருடங்களும் வர்த்தமான நவாம்சையில் அடைந்த கலையைக்கொண்டு த்ரையிராசிகம் செய்யவந்த அத்தனை மாதம் நாள் அந்தந்த கிரகத்திற்கு ஆயுள்பிரமாண காலமாகும் அந்த திறையிராசி விதானம் முந்திய சுலோகத்தில் வராகி மிகிராசார்யரால் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த அர்த்தத்திற்கு சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது. சத்யாசாரி வசனம் சத்யமதா யுர்த்தாயம் அனேக கிரந்த கர்த்தாக்கள் சொல்லியிருக்கிறார்கள். அந்த ஆயுர்த்தாயத்திற்குச் சமானமாகும் அதெப்படி யென்றால் சுலோகம் யவனேஸ்வரர் சொல்லியிருக்கிறார் ஆனல் சிலர் இந்த சத்ய யவனேஸ்வரர் வாக்கியத்திற்கு எந்த விராசியில் கிரகமிருக்குமோ அந்த விராசியில் எத்தனை நவாம்சம் அடைந்திருக்குமோ அத்தனை வருடமே அந்த கிரகம் கொடுக்குமென்று சொல்வார்கள். அப்போது ஒரு கிரகத்திற்கு 9 வருடங்களுக்குமேல் ஆயுர்த்தாயம் ஏற்படாததினால் அப்படி சொல்லக்கூடாது. பாதராயணரால் சுலோகம் சொல்லப்பட்டிருக்

கிறது. ஆனதால் இந்த பாதராயண வசனனுசாரமாகவே சத்யா சாரி யவனேஸ்வரர் வாக்கியத்திற்கு அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது. அப்படி அர்த்தம் செய்ய ஏற்பட்ட முக்கிய தாற்பரியமென்னவென்றால் எந்த கிரகம் சிறியிலாவது மேஷ நவாம்சையிலடைந்தால 2-வருடம் மிதுன நவாம்சையடைந்தால 3-வருடம் கடகநவாம்சையடைந்தால 4-வருடம் இந்தப்படி 12-வருடம் வரைக்கும் ஒவ்வொரு கிரகத்திற்கும் ஆயுர்த்தாயமேற்படும்.

(பத்தாவது சுலோகத்துக்குரை.)

முன்சொல்லிய சத்தியமதாயுர்த்தாயம் பார்க்கும் கிரமம் சொல்லுகிறார்.

இஷ்டமான கிரகத்துக்கு கலைகள் செய்து 200 லே வகுக்க வந்த ஈவுதொகையை 12-ல் வகுக்க வருடமாகும் சேஷமானதை மாதம்தினம் கடிகைகளாக வேற்படும்.

உ-தாரணம்.

தற்காலம் கிரகமடைந்த விராசியாதிகள் யிராசி 1-பாகை 8-கலை 45-இவைகளெல்லாவற்றையும் கலைகளாக்க 2325-இதை 200-ல் வகுக்க வீவு 11-இந்த பதினொன்றை 12-ல் கழிக்கபோகாதானபடியால் இந்த பதினொன்றும் வருடமாகும் சேஷம் 125-இதை 12-ல் பெருக்க ஆனது 1,500-இதை 200-ல் வகுக்க வந்தது 7-மாதங்கள் சேஷம் 100-இதை 30-ல் பெருக்க 3000-ம் இதை 200-ல் வகுக்க வந்ததினம் 15 சேஷம் இல்லாததின கடிகை இல்லை இப்படி வருடம் 11-மாதம் 7-தினம் 15-வருகின்றது, இந்த கிரகத்திற்கே சுலோகம் பாதராயண வசன மனுசரித்து கணிதம் செய்யப்பட்டிருக்கிறது அதெப்படியென்றால்,

தற்காலம் கிரகமடைந்த விராசியாதிகள் இராசி 1-பாகை 8-கலை-45-இவைகளை பிரத்தியேகமாக 12-ல் பெருக்க ஆகிய மொத்தம் 12-96-540 இவைகளை திரும்ப ஒன்பதால் பெருக்க 108-864-4860-இவைகளை கலையின்தொகையாகிய 4, 60-இதை 60-ல் வகுக்க வந்த வீவு 81-சேஷம் பூஜ்யம் இந்த 81-பாக சங்கியை 864-உடன் சேர்க்க 945-இதை 30-ல் வகுக்கவந்த வீவு 31-சேஷம் 15-தினமாகும் வீவு 31-ம் இராசி சங்கியைக்கு 108-உடன் சேர்க்க 139-இதை 12-ல் வகுக்கவந்த ஈவு 11-சேஷம் 7-இது மாதமாகும் இந்த வீவு 11-இதை 12-ல் வகுக்க வாராதானபடியால் இதே வருடமாகும் இப்படி வருடம் 11-மாதம் 7-தினம் 15-கடிகை பூஜ்யம் முன்போலவேவந்தது இப்படியவனேஸ்வர சத்யாசார்ய பாதராயண மதானுசாரமாக வராக மிகிராசாரியரால் ஆயுர்த்தாய நிர்ணயக் கிரமம் சொல்லப்பட்டது.

(பதினோராவது சுலோகத்துக்குரை.)

இப்படி வந்த ஆயுர்த்தாயத்திற்கு சத்யாசாரிமதத்தினால் கிரியாவிசேஷம் சொல்லுகிறார்.

தன் உச்சஸ்தானமடைந்த கிரகத்தைக்கொண்டும் வக்ரித்திருக்கிற கிரகத்துக்கும் கொடுக்கப்பட்ட ஆயுசு இதை மூன்றினால் பெருக்கவும் உத்தமவர்க்கோத்த மாங்கிசமிருந்த கிரகத்திற்கும் தன்னவாம்சையடைந்த கிரகத்திற்கும் சுபக்ஷேத்திரமடைந்த கிரகத்துக்கும் சுயதிரேகாணமிருந்த கிரகத்துக்கும் கொடுக்கப்பட்ட ஆயுர்த்தாயத்தை இரண்டினால் பெருக்கிக்கொள்ளவும் சத்யாசாரி யோக்தமாய் இந்த அம்சாசுர்த் தாயத்தில் இப்படி சொன்ன அனுந்தி விசேடம் இதரமான முதல் மயயவனாதி மதத்தில் சொல்லப்பட்டிருக்கிற சத்துருக்ஷேத்ர ஹரணாதி கர்மாதியும் இந்த சத்ய மதாயுர்த்தாயத்தில் பூர்வோக்த பிரகாரமே சத்துருக்ஷேத்திரமடைந்த கிரகத்திற்கு திரிதியாம்சமாகிய மூன்றிலொன்று குறைக்கப்படும் சுக்ரன் சனி நீங்கலான அஸ்தமான கிரகத்திற்குப் பாதி குறைகிறது விரயாதி ஹரணம் செய்யவும் சுலோகம் சொன்னபடியே உச்சஸ்தானமிருந்த கிரகத்திற்கும் வக்ரித்திருக்கும் கிரகத்துக்கும் ஏற்பட்ட ஆயுசை மூன்றினால் பெருக்கவேண்டியது வர்க்கோத்தமாங்கிசையு சுயநவாங்கிசையும் சுயக்ஷேத்திரமும் சுயதிரேகாணமு மிருந்த கிரகத்திற்கு ஏற்பட்ட ஆயுளை யிரட்டித்திருக்கிறது. இந்த சத்யாயுரத்தாயத்தில் குரூரோதய ஹரணம் இல்லையென்று முந்திய சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

(பன்னிரண்டாவது சுலோகத்துக்குரை.)

இப்படிசத்யாசாரியமதத்தில் கிரகாயுர்த்தாயம்சொல்லி யின்னமும் லக்னயுர்த்தாய பிரகாரமும் குரூரோதய ஹரண நிஷேதமும் தள்ளும்படி சொல்லுகிறார்.

மற்றும் விசேஷ மென்னவென்றால் சத்யாசாரியோக்தமாய் லக்னம் நவாம்சவிராசி துல்ய வருஷங்கள் கொடுக்கும் அதெப்படியென்றால் லக்னத்தில் எந்த விராசி நவாம்சம் உதயமாகுமோ அந்த விராசிக்கு பூர்வ விராசிகளெல்லாம் மேஷமுதலெண்ண வெத்தனையாகுமோ அத்தனை வருஷங்கள் வர்த்தமான நவாங்கிசையை கலைகளாக்கி அந்த கலைகளை 12-னால் பெருக்கி 200-னால் வகுக்க வந்த எத்தனை மாதங்கள் சேஷத்தை 80-னால் பெருக்கி 200-னால் வகுக்க வருவதத்தனை நாள்களாம் அந்த சேஷத்தை 60-னால் பெருக்கி 200-னால் வகுக்க வந்ததத்தனை நாழிகளாம இது லக்னயுர்த்தாயமாகும் இந்த லக்னயுர்த்தாயம் கிரகங்களுக்குச் சொன்ன பிரகாரமே தருகின்றதாம். அந்த லக்னம் பலயுக்தமா யிருந்தாலிராசி சமான வருஷமாகக் கொடுக்கும் அதெப்படி யென்றால்,

லக்னவிராசிக்கு முன்னிராசியை மேஷ முதலெண்ண வெத்தனைவருமோ அத்தனை வருஷமாம் லக்கினத்தில் சென்ற பாகை கலைகளை யெல்லாம் கலைகளாக்கி 12 ல் பெருக்கி 1,800-னல் வகுக்க வந்த தத்தனை மாதமாகும் அந்த சேஷத்தை 30-னல் பெருக்கி 1,800-னல் வகுக்க வந்ததத்தனை தினங்களாம் அந்த சேஷத்தை 60-னல் பெருக்கி 1,800-னல் வகுக்க வந்ததத்தனை நாழிகையாகு மது லக்னயுர்த்தாயமாகும் லக்னதிபதி பலவீனமாயிருந்தால் செனனவிராசி நவாம்ச விராசியினல் லக்னயுர்த்தாயம் சொல்ல வேண்டியது குரூரோதய ஹரணம் இந்த சத்யமதாயுர்த்தாயத்தில் கிடையாது.

குரூரோதய ஹரணமாவது லக்னத்தில் பாபிகளிருந்தால் குறைப்பதும் மய யவனதி மதாயுர்த்தாயத்தில்சொல்லிய குரூரோதய ஹரணமும் இந்த சத்யமதாயுர்த்தாயத்தில் இல்லை. முதல் சொல்லப்பட்ட மய யவனதி வருடத்திலும் கிரதாயப் பரமாஸ்வராமசமென்னும் ஜீவசர்மாயுள் வருடமும் செய்யத்தகுந்த திறை ராசிகளும் இந்த அத்யாயத்தில் இல்லை சிலர் பூர்வோக்தங்களான மய யவனதி வருடங்களும் ஜீவசர்மவுக்த வருடங்களும் ஆயுர்த்தாயங்களும் செய்யக்கூடாது.

மற்றுமெப்படி யென்றல் சத்யோதவாயுர்த்தாயத்தினல் பார்க்கவேண்டியதென்று அர்த்தம் சொல்லுகிறர். அப்படி பட்டோத்பலரும் பூர்வோத்தாயுர்த்தாயங்களை நிஷேதிக்கவில்லை பக்ஷாந்தரங்களா லங்கீகரித்து வியாக்யானஞ் செய்திருக்கிறர்.

(பதின்மூன்றுவது சுலோகத்துக்குரை.)

இப்படி வராகமிகிராசாரியானவர் மயமணித்தாதிமதமும்ஜீவசர்மா மதமும் சத்யாசாரிமதமும் ஒத்துப்பார்த்து அதில் சத்யாசாரி மதம் முக்கியமாயங்கீகரிக்கப்பட்டு அதில் அனேக வர்க்கங்களைத் தள்ளப்பட்டுச் சொல்லுகிறர்.

இப்படி சொல்லப்பட்ட மூன்று மதத்திலும் சத்யாசாரி யாயுர்த்தாயத்தைச் சிலர் ஆயோக்கியமானது அல்லவென்று செய்கிறர். ஆனல் அனுவஸ்யமான அனேக கணக்குகள் செய்து கெடுத்துப் போடுகிறர்கள். அதெப்படியென்றல் சுயோச்சத்திலிருந்த கிரகத்திற்கு ஆயுர்த்தாயம் திரிகுணம் செய்து அந்த கிரகமே வக்கிரித்திருக்கில் அதை மறுபடியும் திரிகுணம் செய்கிறது அந்த கிரகமே சுவக்ஷேத்திரத்திலிருக்க மறுபடியும் த்விகுணம்செய்து அந்தகிரகமே சுயநவாம்சையிலிருந்தால் அதையும் த்விகுணம் செய்துகொள்ளுகிறது அந்த கிரகமே சுயதிரேகாணத்திலிருக்க மறுபடியும் த்விகுணம் செய்து இாதபிரகாரம் சத்யமதாயுர்த்தாயத்தை வெகுகுணம் செய்து கெடுத்துபோடுகிறர்களென்று தாற்பரியம்.

மற்றெவ்விதஞ் செய்யவேண்டியதென்றால் அனேகமான த்வி குணம் திரிகுணஞகரம் பிராப்தமானால் அவைகளிலெது அதிகமா னதோ அந்த குணம் ஒன்றுமாத்திரமே செய்யத்தக்கது. மூன் கிரந்த்ராசாரி சம்பிரதாய சித்தமானது அதெப்படியென்றால் ஒரு கிரகம் சுவக்ஷேத்திரம் த்வீகுணம் சுயநவாமிசம் த்விகுணமும் பிராப்தமாயிருந்தால் ஒருதடவை மாத்திர மத்விகுணம் செய்ய வேண்டியது. ஒரு த்ரிகுணம் ஒரு த்விகுணமும் பிராப்தமானால் அந்த இரண்டில் அதிகமாயுள்ள த்ரிகுணம் மாத்ரமே செய்யவேண் டியது ஒருகிரகத்துக்கு இரண்டு த்ரிகுணம் சம்பவிக்குமானால் ஒரு தடவை மாத்திரமே த்ரிகுணஞ் செய்யவேண்டியது. இந்தப் பிர காரமே சக்ரபாத ஹரணம் தவிர மற்ற ஹரணங்களில் அனேகவி தமான குறைவு ஏற்படுமானால் அவைகளில் அதிகமான குறைவு ஒன்று மாத்திரம் செய்யவேண்டியது அதெப்படி யென்றால்.

இந்த சத்யாசாரி மதத்தில் நீசக்கிரகத்திற்கு அர்த்தாம்சமான பாதி குறைவும் நீசக்ஷேத்திரமடைந்தும் சத்துருக்ஷேத்திரமடைந் தும் அஸ்தமானமடைந்து மிருந்தால் ஒருதடவை மாத்திரம் அர்த் தாம்ச கரணஞ் செய்யவேண்டியது ஒரு கிரகத்திற்கு கொஞ்சம் குறைவும் கொஞ்சம் குணனமாகிய பெருக்கலும் உண்டானால் அதில் அதிகமான ஒரு ஹரணமாத்திரமே செய்து பிறகு அதிக மான ஒரு குணனம் செய்யத்தக்கது சக்ரபாத ஹரணத்தில் சத் துரு க்ஷேத்திராதி ஹரணமும் உச்சாதி குணனமும் பிராப்திக் குமானால் முதலில் சக்ரபாத ஹரணமுஞ் செய்து பிறகு சத்துரு க்ஷேத்திராதி ஹரணங்களில் அதிகமான ஒரு ஹரணம் மாத்தி ரமே செய்து பிறகு அதிகமான குணனம் ஒன்று செய்யத்தக்கது இந்த விஷயமாய் சுலோகம் கார்க்கியரால் சொல்லப்பட்டது. இவ் விடத்தில் வராகமிகிராசாரி மதமான சத்யாசாரிமதமான அம்சா யுர்த்தாயம் முக்கியமா யங்கீகரிக்கப்பட்ட போதிலும் மணித்தர் சுலோகம் சொல்லியிருக்கிறார். ஆனதால் ஜென்மலக்னம் பலயுக் தமானால் அம்சாயுர்த்தாயமும் ரவிபலாதிக்கமாயிருந்தால் மய யவ னதியுக்தமாகிய பிண்டாயுர்த்தாயமே செய்ய தகாது பட்டோத் பலரால் தெரிவிக்கப்பட்டது சிலர் அம்சாயுள் பிண்டாயுள் இரண்டு ஏற்பட்டு அந்த இரண்டில் எது அற்பாயு ளுண்டாயிருக்குமோ அதை கடையில் அந்ததர்தசை மூலதசாபதிக்கு மித்ர கிரகாந்தர் த்த திசையானல் அப்போதே மரணமுண்டாகுமாம் மத்ய கிரக திசையாகில் சரீர பீடையுண்டாகுமென்று சொல்லலாம்.

(பதினொலாவது சுலோகத்துக்குரை.)

அபரிமிதாயுள் யோகம் சொல்லுகிறார்.

ஜன்மலக்னம் கர்க்கடகம் அதி குரு சந்திரன் கூடியிருக்க புத னும் சுக்ரனும் கேந்திரமிருக்க 11-6 3 ரவிகுஜ சனியிருக்க இந்த

யோகத்தில் பிறந்தவனுக்கு கணிதக்கிரமம் தவறி அபரிமிதமான ஆயுசு உண்டாகும் ஆனால் சென்மலக்னம் கடகமாய் அதில் குருவும் சந்திரனும் கேந்திரஸ்தானத்தில் புதன் சுக்ரனும் மற்ற ரவிகுஜன் சனியதா சம்பவமாக ஏகாதச சஷ்ட த்ருதியத்திலிருக்க பிறந்தவனுக்கு பூர்வோக்த கிரமத்துக்கு அதிகமாக அபரிமிதாயுர்த்தாய யோகமுண்டாகுமானதாலிந்த யோகத்திற் பிறந்தவனுக்கு ஆயுர்த்தாய கணிதம் செய்யவேண்டிய தில்லையென தாற்பரியம்.

ஆயுள் கணிதப்படல முற்றிற்று.

---

# மங்களைஸ்வரியம்.

ஒன்பதாவது

## தசாந்தரபலப்படலம்.

முதலில் சில வசனமும் பிறகு செய்யுளும் சொல்லப்பட்டிருக்கிறது.

(முதல் சுலோகத்துக்கு வசனம்.)

கிரந்தகர்த்தா பூர்வோக்த அத்யாயவுக்தப்பிரகாரமாக தெரியப்பட்ட ஆயுளுள்ளவனுக்குண்டாகும் சுக துக்காதிகள் இந்த அத்தியாயத்திற் விபரமாகச்சொல்ல நினைத்தவராய் முதலிற் தசாக்கிரமம் சொல்லுகிறார்.

இலக்னம் ரவிசந்திரன் இவர்களுக்குள்ளே பலவந்தனானவர் தசைமுதலில் நடக்கும் அந்த முதல் தசாதிபதிக்குக் கேந்திரபணபர ஆபோக்லீபஸ் தானங்களிலிருந்த கிரகம் கிரமமாக முதல் வயதிலும் மத்திய வயதிலும் அந்திய வயதிலும் தங்கள் தங்கள் தசாபலன் கொடுக்கும் முதல் தசாபதிக்கு கேந்திரஸ்தானத்தில் கிரகமில்லாதிருந்தால் முதல் வயதில் பல பரிபாகம் கிடைக்காமல் போகாது. பணபரஸ்தானத்தில் கிரகமில்லாதிருந்தால் மத்திய வயதில் பலன் கிடைக்காமற் போகாது மறுபடியு மெவ்விதம் என்றால், 5

கேந்திரபணபர ஸ்தானங்களில் கிரகமில்லாதிருந்தால் முதல் வயதிலும் ஆபோக்லீபஸ்தானத்தில் கிரகத்திற்கு பல பரிபாகம் ஆகுமானதாலும் ஆனால் லக்னத்திற்கு சரீரமாகும் ரவிக்கு ஆத்மாவாகும் சந்திரனுக்கு மனமாகும் இந்தவிதமாக லக்னம் ரவி சந்திர

னிவர்களில் லக்னம் பலாதிக்கமாயிருந்தால் லக்னத்திற்கும் சந்திரன் பலாதிக்கமாயிருந்தால் சந்திரனுக்கும் சூரியன் பலாதிக்கமாயிருந்தால் சூரியனுக்கும் முதல்தசை யுண்டுபண்ணவும் அந்த முதல்தசாதிபதிக்கு கேந்திரஸ்தானங்களிலிருந்த கிரகங்களில்பலாதிக்க கிரமமான கிரகதிசை யுண்டாக்கவும் பிரதம தசாதிபதிக்கு பணபரஸ்தானத்தி லிருந்த கிரகங்களில் பலாதிக்கமான கிரக்கிரமம்போலே திசையுண்டாக்கவும் அதின் பிறகு முதல் திசாதிபதிக்கு ஆபோக்லீபஸ்தான மிருந்த கிரகங்களில் பலாதிக்கமான கிரமத்தினால் தசையுண்டாக்கவும் கேந்திரங்களில் கிரகமில்லாவிட்டால் முதல் வயதிலே முதல் தசாதிபதிக்சாந்தரமும் பணபரஸ்தானத்திலிருந்த கிரகத்திற்கு தசைகளுண்டாக்கவேண்டியது. கேந்திரத்திலும் பணபரத்திலும் கிரகமில்லாதிருந்தால் ஆபோக்லீபஸ்தானத்திலிருந்த கிரகத்திற்கே தசைகளுண்டாக்கவும் கேந்திரங்களிலும் ஆபோக்லீபங்களிலும் கிரகமிருந்து பணபரஸ்தானத்தில் கிரகங்கள் இல்லாதிருக்கினும் கேந்திரங்களிலிருந்த கிரகத்திற்கு பலாதிக்க கிரமம்போல் திசைகளுண்டாக்கவும் பிறகு ஆபோக்லீபஸ்தானங்களிலிருந்த கிரகங்களுக்கு தசைகளுண்டாக்கவும் இந்த விஷயமாய் சுலோகம் லகுஜாதகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

(இரண்டாவது சுலோகத்துக்கு வசனம்.)

தசாகாலப்பிரமாணமும் கேந்திராதி ஸ்தானமடைந்திருக்கும்

கிரகமூல தசாதிக்கிரமம் சொல்லப்படும்.

முன்சொல்லிய ஆயுர்த்தாய அத்யாய பிரகாரமே எந்த கிரகத்திற்கும்சோத்தியம்செய்து சுத்தமானஆயுசுஉண்டாக்கப்படுகிறதோ அந்த ஆயுசே அந்த கிரகத்தின் தசைகாலமென்று கற்பிக்கவும் ஆனால் எந்த கிரகத்திற்கு சோத்யம்செய்து சுத்தமானமானால் எந்த கிரகத்திற்கு சோத்யம்செய்து சுத்தமான ஆயுசு எவ்வளவு வேற்படுமோ அந்த காலமாத்திரமே அந்த கிரகதிசை யென்று தாற்பரியம் அந்த திசைபலவானுக்கு முதலிலாகும் ஆனால் லக்ன சந்திர சூரியருக்குள் பலவானுக்கு முதல் திசை யுண்டுபண்ணி அந்த முதல் தசாதிபதிக்கு கேந்திரஸ்தானமிருந்த கிரகங்களில் பலவானை யிருக்கப்பட்டவருக்கு தனதந்தரதசை யுண்டுபண்ணி அதைப்பார்க்கிலும் பலவீனனை கேந்திரத்திலிருப்பவர்க்கும் எல்லாருக்கும் தசையுண்டுபண்ணவும் பிறகு இந்த விதமாகவே பணபரஸ்தான மிருந்தவருக்கு ஆபோக்லீபஸ்தான மிருந்தவர்க்கும் பலாதிக்க கிரமத்தினால் தசையுண்டுபண்ணவும் அந்த கேந்திரஸ்தானத்திலிருந்த அனேக கிரகத்திற்கு பலம் சரியாயிருந்தால் எந்த கிரகத்திற்கு ஆயுள் அதிகமான வருஷம் அதிகமாக விருக்குமோ அந்த கிரகத்திற்கு திசை முந்தியுண்டாக்கவும் அப்படி ஆயுர்த்

தாய வருஷம் சரியாயிருந்தால் எந்தக் கிரகம் சூரியமண்டலத்திலி ருந்து முதலில் உதயமாகுமோ அந்தக்கிரகத்துக்கு முதல் திசை யுண்டுபண்ணவும்; இந்த அர்த்தத்திற்கு சுலோகம் கார்க்கியரால் சொல்லப்பட்டிருக்கிறது.

(மூன்றுவது சுலோகத்துக்குரை.)

இந்தப்பிரகாரமேற்பட்ட மகாதசையில் அந்தர் தசாபலக் கிரமங்களைச் சொல்லுகிறுர்.

இவ்விடத்தில் மூலதசாவருஷங்களில் தற்காலகிரகஸ்திதியைப் பிடித்து முதலில் மூலதசாபதிக்கு பாகையுண்டாக்கி பிறகு மூலத சாபாதிக்குவந்த அந்தர்தசா வருஷத்திற்கு சமமாக அர்த்தாதிபா கங்களும் ஏகராசியாதியடைந்த கிரகத்திற்குண்டுபண்ணவும்மூலத சாதிபதியோடு கூட ஓரிராசியிலிருந்த கிரகம் மூலதசாபதி தனதந் தரதசா காலங்களில் அர்த்தாம்சமாகிய பாதிகாலங்கள் மூலதசா வருஷத்தில் அபகரித்து தன்தசாபலத்தைக்கொடுக்கும்.

மூலதசாபதிக்கைந்து ஒன்பதிலிருந்த கிரகம் மூலதசாபதிதன தந்தரத்திசாகாலங்களில் திரிதியாம்சமாகிய மூன்றிலொருபாகம்மூ லதசாபதி வருஷத்தி லபகரித்து தன் தசாபலனைக் கொடுப்பான் மூலதசாபதிக்குச் சப்தமத்தியிலிருக்கும் கிரகம் மூலதசாபதி தம் தம் தசாந்தர காலத்தில் சப்தமாம்சமாகிய ஏழிலொருபங்கு மூல தசாவருஷத்தி லபகரித்துத் தன்தசாபலனைக் கொடுப்பான்.

மூலதசாபதிக்கு சதுர்த்தாஷ்டமாகிய நாலு எட்டில் இருந்த கிரகம் மூலதசர்பதி தன் தசார்ந்தர்த் தசாபலகாலத்தின் வருஷத் தில் சதுர்த்தாம்சமாகிய நாலிலொருபங்கு மூலதசாபதியின் வரு ஷத்தில் அபகரித்து தன்தசாபலனைக் கொடுப்பான் இந்தப்பிரகா ரமாக லக்னசகிதமான கிரகங்களானல் லக்னமும் கிரகமும் ஒருவ ருக்கொருவர் இந்தபூர்வோக்த ஸ்தானங்களிலிருந்தார்களேயானுல் அவாளவாள் தசாகுணங்களினல் மூலதசாகாலத்தை பரிபாகம் பண்ணுவார்கள் ஒரு விராசியிலிருக்கப்பட்ட கிரகத்தைப் போல வே லக்னமும் ஏகாவிராசியாதி யடைந்ததாகும்.

முன்சொன்னபாகங்களை அபகரித்து தன் தசாபலத்தைக் கொடுப்பனென்னும் தாற்பரியம் இந்தவிதமாக சொல்லப்பட்டஸ் தானங்களில் எந்தஸ்தானத்திலாவது இரண்டுமூன்று கிரகமிருந்தா ல் அதில் பலாதிக்கமான ஒருகிரகத்திற்கே அந்தர்த்தசா வுண்டுப ண்ணவேணுமே தவிர மற்றகிரகத்திற்குச் செய்யக்கூடாது இந்த அர்த்தத்திற்கு சுலோகம் சத்யாசாரிசொல்லியிருக்கிறுர்.

லக்னத்திற்கு அம்சம் குறைவுபட்டு அந்த லக்னத்தில் கிரக மிருந்தானல் அந்தலக்னமடைந்த கிரகங்களில் பலாதிக்கமுள்ள

கிரகத்திற்கு அந்தர்த் தசாபாக மூண்டுபண்ணவேணும் சிலர் ஒரு ஸ்தானத்தில் எத்தனை கிரகங்களிருக்குமோ அத்தனை கிரகத்திற்கு அந்த ஸ்தானத்தில் ஏற்பட்டிருக்கும் ஒருபாகமே தள்ளிவிட்டு அந்தர் தசாவுண்டுபண்ண வேண்டியதென்று சொல்லுகிறார்கள்.

(நாலாவது சுலோகத்துக்கு வசனம்.)

அந்தரத்திசாபாகம் செய்வதற்கு கணிதங்கள் சொல்லுகிறார்.

இவ்விதம் சொல்லப்பட்ட அர்த்தாம்சம் திரிதி யாம்சாதி ஸ்தானங்களைச் சமச்சேதமென்னும் சமமான பங்குக்கு கொண்டு வந்து அதப் பிரதேசஸ்திதேசச் சங்யாவி ஹீனமான சமமாக செய்யப்பட்ட அந்தசகலஸ்தானங்களையும் மூலதசாவருஷத்தினால் வெவ்வேறாகப் பெருக்கி சேஷசங்கியை விஹீனங்களாயுள்ள வெல்லாத்தொகைகளை மொத்தமாக்கி பாகஞ்செய்யத் தக்கது இப்படிச்செய்ய முதலில்சொல்லப்பட்ட ஆயுர்த்தாயம் சங்கைகளுக்கு அதிகமாக விருந்தால் அந்தர் தசாகாலமேற்படும் ஆனால்முன்சொல்லப்பட்ட அர்த்தாம்சம் திருதியாம்சம் சப்தாம்சாதிஸ்தானங்களை சமம்பண்ணி அதற்குள்ள சங்கியைகளைக் கழித்து மிச்சமிருக்கிற சகலஸ்தானங்களையு வெவ்வேறாக மூலதசா வருஷத்தில் பெருக்கிக் கொண்டு சங்கியாவிஹீனங்களில் மிச்சமாயிருக்கப்பட்ட சங்கியைகளையெல்லாம் ஒன்றாய்க் கூட்டி அந்த மொத்தத்தினால் வகுக்கஏக விராசிலடைந்த கிரகங்களின் அந்திர தசாகாலங்கள் வருமென்று தாற்பரியம் உதாரணம் மூலதசாபதிக்கு சதுர்த்தாஷ்டமத்தில்கிரகமிருந்து மூலதசாபதியிருந்த விராசியிலும் திரிகோண சப்தமங்களில் கிரகமில்லாதிருக்க.

இதற்கு நியாசம்.

| | | |
|---|---|---|
| 1 | 1 | 1 |
| 1 | 4 | 4 |

| | | | | |
|---|---|---|---|---|
| இவைகளைச் சமச் சேதம் செய்ய | 16 | 4 | 4 | இதிலிருந்துகீழிருக்குமசங்கியைகளைக்கழிக்க |
| | 16 | 16 | 16 | |

16 - 4 - 4 இருக்கிறது இந்தத்தொகைகளை ஒன்றாய்க் கூட்ட இருபத்திநாலு மூலதசாவருஷம் 6 - இந்த ஆறினால் முதல் ஸ்தானத்திலிருந்த 16 - ஐப்பெருக்க 96 - முதலில்மொத்தம் சேர்க்கப்பட்ட 24 - னால் வகுக்க மூலத்தசாதிபதிக்கு வந்த அந்தர்தசா வருஷங்களாவது நாலு திரும்ப மூலதசா வருஷம் ஆறினால் இரண்

டாவது ஸ்தானத்திலுள்ள நாலினுல் பெருக்கவந்த 24-இதுவும் முதலில் கூட்டின 24 - ஞல் வகுக்க மூலதசாபதிக்குச் சதுர்த்த ஸ்தானமிருந்த கிரகத்துக்கு வந்த அர்தர்த்தசா வருஷம் 1-திரும்ப மூலதசா வருஷம் ஆறைக்கொண்டு திரிதியஸ்தான மிருந்த 4-ஞல் பெருக்க வந்த 24 - இதையும் முதலில் கூட்டின 24-ஞல் வகுக்க மூலதசாபதிக்கு அஷ்டமத்திலிருந்த கிரகத்திற்கு வந்த அந்தர்த் தசா வருஷம் 1-இந்த மூவரின் அந்தர்தசா வருஷங்கள் உண்டாகியும் ஆறுவருஷங்களாகும்,

மற்றொரு உதாரணம்.

மூலதசாபதிக்கு ரூபம் 1-மூலதசாபதியுடன்கூடின ஏகராசியிலிருந்த கிரகத்துக்கு ரூபார்த்தம் 2-மூலதசாபதிக்குத் திரிகோண ஸ்தானமான ஐந்து ஒன்பதுகளில் ஒரு ஸ்தானமிருந்த கிரகத்துக்கு ரூபம் திரிதியாம்சமாகிய 3 - சதுர்த்தாஷ்டமத்தில் ஒரு ஸ்தானத்திலிருந்த கிரகத்திற்கு ரூபம் சதுர்த்தாம்சம் 4-மூலதசாபதிக்குச் சப்தமஸ்தான மிருந்த கிரகத்திக்கு ரூபம் சப்தமாம்சமாகிய 7-இதற்கு நியாசம்.

ரூபசப்தமாம் 7 இதற்கு நியாசம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | 1 | 1 | 1 | 1 |
| 1 | 2 | 3 | 4 | 7 |

இவைகளைச் சமயம் செய்யவந்தது.

| | | | | |
|---|---|---|---|---|
| 168 | 84 | 56 | 42 | 24 |
| 168 | 168 | 168 | 168 | 168 |

இவைகளின் கீழிருக்கும் சேஷசங்கியைக்கழிக்க168-84-56-42-24-இருக்கிறதை வைத்து இதுவுண்டாகியும் வந்தமொத்த 374-மூலதசாவருஷம் 12-இந்த 12 - ஞல் முதல் தொகையாகிய 168-இதைபெருக்க 2016-முதலில் மொத்தம் சேர்த்த தொகை 374-ஞல் வகுக்க மூலதசாபதிக்கு வந்த அந்தர்தசை வருஷம் 5-மாதம் 4-தினம் 21 கடிகை-32 விஞடி-5 இதை திரும்ப மூலதசா வருஷம் 12-ஞல் த்விதியசங்கியைக்கு 84-ஞல் பெருக்கவந்த 1008-இதை முதலில் மொத்தம்செய்திருக்கிற 574 - ஞல் வகுக்க மூலதசாபதியோடு கூடி யேகராசியடைந்த கிரகத்திற்கு வந்த அந்தர்த்தசா வருஷம்-2 மாதம்-8 தினம்-10 கடிகை-16 விஞடி-2 திரும்பமூலதசாவருஷம்12-ஞல் திருதீயசங்கியையான 56-ஞல் பெருக்கி அந்த 972-இதை முதலில் மொத்தம் செய்திருக்கும் 374-ஞல் வகுக்க மூலதசாபதிக்குத் திரிகோணஸ்தானமிருந்த கிரகத்திக்குவந்த அந்தர்த்தசா வருஷம் 10 மாதம்-9 தினம்-16 கடிகை-50 விஞடி-41 திரும்ப மூலதசா வருஷம் 12-ஞல் நாலாவது தொகையின் 42-ஞல் பெருக்க அந்த 504-இதை முதலில் மொத்தம் சேர்த்திவை

த்த 374-ஞல் வருக்க மூலதசாபதிக்குச் சதுரஸ்ரமென்னும் நாலு எட்டிலிருந்த கிரகங்களுக்கு வந்த அந்தர்த்தசாவருஷம்-1 மாதம்-4 தினம். கடிகை-8 விஞடி-1 திரும்ப மூலதசாவருஷம் 12-ஞல் பஞ் சமசங்கியைபான 24-ஞல் பெருக்கி அந்த 288 - இதை 12-ஞல் பெருக்கி மாதக்களாக்கி அவைகளை முதல் மொத்தம் செய்திருக் கிற 374-ஞல்வருக்க மூலதசாபதிக்கு சப்தமமிருக்கிற கிரகத்திக்கு வந்த அந்தர்த்தசா மாதம் 9- தினம்-7 கடிகை-13 விஞடி-9 இப் படி வந்த அந்தர்த்தசா விவரங்களாவன.

| | |
|---|---|
| மூலதசாபதிக்கு | வரு-5 மீ-4 தினம்-20 கடிகை-32 விஞ-5 |
| ஏகராசியடைந்த கிரகத்திற்கு | வரு-1 மீ-8 தினம்-10 கடிகை-16 விஞ-2 |
| திரிகோணமிருந்தகிரகத்திற்கு | வரு-1 மீ-9 தினம்-16 கடிகை-51விஞ 41 |
| நாலுஎட்டிலிருந்த கிரகத்திற்கு | வரு-1 மீ-4 தினம் 5 கடிகை- 8 விஞ-1 |
| சப்தமமிருந்த கிரகத்திற்கு | வரு-,, மீ-9 தினம்- 7 கடிகை-13 விஞ-9 |
| விடப்பட்டிருக்கிற சுவற்ப சேஷங்களாக வந்து | ,, கடிகை- வி - 2 |

மொத்தம் வருஷம் 12-மாதம் பூஜ்யம் நாள் பூஜ்யம் நாழிகை பூஜ்யம் விநாடி பூஜ்யம் இது மூலதசா வருஷங்கள் இப்படியே அந் தந்த கிரக ஸ்திதியை கொண்டு அந்தந்த கிரக தசானுகால அனுசா ரமாய் அந்தர்த்தசா வருக்க வேண்டியது.

---

சுலபமாகிய வுபாயத்தினல் அந்தர்த்தசாவருஷாத்யாய
கிரமமும் முன்சொன்னவரே தெரியச்செய்கிஞர்.

(அதெப்படி யென்ருல்.)

மூலதசா வருஷம் பன்னிரண்டு இந்த தொகையை 84-நால் பெருக்கவந்தது 1008 அர்த்தாம்ச காரியாகிய கிரகத்துக்கு 42 திரிதியாம்ச காரியாகிய கிரகத்துக்கு 23 சப்தமாதம் சகாரியாகிய கிரகத்துக்கு ரூபம் 12 சதுர்த்தாம்ச காரியாகிய கிரகத்துக்கு 21 இவைகளெல்லாம் சேர்க்கவந்த மொத்தம் 103 இத்துடன் 84 கூட்ட 187 ஆகும் இந்த 187 ல் 84 இம்மூலதசாவருஷம் 12 க்கும் பெருக்கவந்த 1008 இதை வருக்கவந்தது வருஷம் மாதம் நாள் நாழிகை விநாடி மூலதசாபதிக்கு வருஷம் 5 மாதம் 4 நாள் 20 கடிகை 23 விநாடி 5 அந்தர்த்தசா.

இதை த்வித்ரிசப்த சதுர்ப்பக்த காகாவென்னும் கிரமத்தி ஞல் இரண்டிஞல் பங்கிட மூலதசாபதியோடு 2 யாதம் 8 தினம் 10 கடிகை 16 விநாடி 2 அந்த மூலதசாபதி தத்தாமதசா வருஷத் திஞலேயே 3 பேருக்குக் கொடுக்க திரிகோணமிருந்த கிரகத்துக்கு வந்த அந்தர்த்தசாவருஷம் 4 மாதம் 9 தினம் 6 கடிகை 50 விநாடி 11 அந்த மூலதசாந்தர்த்தா வருஷத்தையே யேழிஞல் வருக்க ஏழி லிருந்த கிரகத்துக்கு வந்தமாதம் 9 தினம் 7 கடிகை 13 விநாடி 9

அந்த மூலதசா வருஷத்தையே நாலினல் வகுக்க நாலு கட்டிலிரு ந்த கிரகத்துக்குவந்த அந்தர்த்தசா வருஷம் 1 மாதம் 4 தினம் 5 கடிகை8 விநாடி1 இந்தப் பிரகாரமே அந்தர்த்தசா வுண்டாக்கவும்,

இப்படி அந்த்ர திசையைக்கொடுத்து பிறகு முன்சொன்ன தசாவிபாகக்கிரமமே அந்தந்த கிரகத்திற்கு அந்தர்தசை கொடுக் கப்படும் ஒவ்வொரு தசாபா சக்கிரகத்திற்கு அந்தர்த்தசாபா சகத் வம் சம்பவிக்காமற்போனல் அந்தகிரகத்தைவிட்டு மற்ற கிரகத் துக்கு தசாபாகத்வம் உண்டாயிருக்குமோ அந்த கிரகத்திற்கு அந் தர் தசா கொடுக்கவேண்டும் சிலர் முதலில் மூலதசாபதிக்கு அந் தர்த்தசா கொடுத்து பிறகு வேக ராசியிலிருந்த கிரகத்துக்கும் பிறகு திரிகோணஸ்தித கிரகத்திற்கு தனதந்தரமும் சதுரஸ்ரமென் னும் நாலெட்டிலிருந்த கிரகத்திற்குபிறகும் சப்தமமிருந்த கிரகத் துக்கு அந்தர்த்தசை கொடுப்பார் அதுயுக்தமல்ல சுலோகம் கார் க்கி மகாரிஷியால் சொல்லப்பட்டிருக்கிறது ஆனதால் தசாவி பாபக்கிரமமாகவே அந்தர்த்தசா விபாகம் செய்யத்தக்கது.

(ஐந்தாவது சுலோகத்துக்கு வசனம்.)

இந்த தசாந்தர்த்தசையில் சுபாசுப பலன்களும் சொல்வதற்கு பலரூபமான சில சக்ஞைகள் சொல்லுகிறார்.

ஜெனன காலத்தில் செம்மையாக முன் சொல்லப்பட்ட ஸ்தா னாதி சகலவலிதோடு கூடியிருக்கினும் தன்னுடைய பரமோச்சு பாகத்தி லிருக்கினும் அந்த கிரகதிசை சம்பூர்ணதிசை யென்னப் படும். கேவலமென்னும் நிச்சயமாகிய உச்சராசியிலிருந்து கொஞ் சம் பலசகிதமாயிருக்கும் கிரகதிசை பூரணதிசை யென்னப்படும் சம்பூரண தசாந்தர்த்தசாகாலத்தில் சரீரஆரோக்யமும் தனமும் சமர்த்துள்ளவனுய் புருஷனுக்கு அதிக விர்த்தியுண்டாகும் பூரண திசை ஆரோக்யதன சமர்த்தாதியுண்டாகும் பலமில்லாத கிரகத் தின் திசை றிக்த திசையாம் அந்தறிக்த திசையில் தனநாசமுண் டாகும் நீச்ஸ்தானமடைந்திருந்தாலும் சத்ருக்ஷேத்திரமிருந்தா லும் சத்துருநவாம்ச மிருந்தாலும் அந்த கிரகதிசை அனிஷ்டதிசை யென்னப்படும் இந்த அனிஷ்ட தசாந்தர்த்தாதிசையில் காலத்தில் வியாதி பீடிதம் தனநஷ்டம் முதலான துண்டாகும் இதற்கு சுலோ கம் கார்க்கிவசனமும் கிரந்தாந்தரமும் சொல்லப்பட்டிருக்கிறது.

(ஆருவது சுலோகத்துக்கு வசனம்.)

தசாந்தர்ந் தசைகளுக்கு மற்றும் சில சக்ஞைகள் சொல்லுகிறார்,

பரமோச்சமிருந்து வருகிற கிரகத்தின் திசை அவரோகண திசையென்று பேருடையதாகும் ஆனல் தன்பரமோச்சத்தைத்

தாண்டி பரமநீசாம்சைக்குள்ளாக ஆறிராசியிருப்பதால் அந்த விராசிகளிலாவதிருந்த கிரகத்தின்திசை அவரோகணி யென்னப் படும் இந்ததிசை அதமபலனைக் கொடுக்கும் அந்த அவரோகண திசை எந்த விராசியிலாவது மித்ர நவாம்சையிலாவது இருந்த ரெகத்தினால் கொடுக்கப்பட்டதானாலும் மத்தியதிசை யென்னப் படும்.

பரம் நீச்சந்தாண்டி உச்சாபிமுகமா யிருக்கப்பட்ட திசை ஆனால் பரம நீசந்தாண்டி பரமோச்சத்துக் குள்ளிருக்கிற ஆறிரா சிக்குள் எந்த விராசியிலாவதிருக்கப்பட்ட கிரகத்தின்திசை ஆரோ கணீ யென்னப்படும் இந்த திசை சிரேஷ்ட பலனைக்கொடுக்கும் ஆரோகணியென்னும் திசை எந்த விராசியிலாவது நீசவிராசி நவாம்சத்திலாவது சத்ருராசி நவாம்சத்திலாவது இருக்கப்பட்ட கிரகத்தினால் கொடுக்கப்பட்டதானாலும் அதமதிசை யென்னப் படும் முதலில் சத்ரு நவாம்சஸ்திதி கிரகதிசை அணிட்ட திசை யென்னப்படும் இப்போது அதுவே அதமதிசையென்று சொல் லப்படும். இந்த இரண்டுக்கும் பலபேதம் என்னவென்றால்.

அவரோகணதிசை சத்ருநவாம்ச ஸ்தித கிரகங்களின் திசை அசுபப்பலனைக் கொடுக்கும் ஆரோகணத்திசையில் சத்ரு நவாம் சையிலிருந்த கிரகமாயிருந்தால் சுபபலனை சொற்பமாக கொடுக்கு மென்று தெரியவேண்டியபடி இப்படி அதரோகணதிசை அதம திசையானால் அது அனிஷ்ட திசையாகும் ஆரோகணதிசை உச்ச நவாம்சம் மித்ருநவாம்சஸ்த்தித கிரகம் மத்யதிசையானால் சம்பூர் ணதிசையாகும் இந்த அர்த்தத்திற்கு சுலோகம் கார்க்கிவசனம் சொல்லப்பட்டிருக்கிறது.

ஏழாவது சுலோகத்துக்கு வசனம்.

தசாந்தர் தசைக்கும் மற்றொருசக்ஞை சொல்லப்படும்.

பிரசஸ்த்தமான சுவோச்ச மூலத்ரிகோணம் ஸ்வக்ஷேத்ர மித் ருக்ஷேத்ரங்களிலும் தன் நீசவிராசி நவாம்சங்களிலாவது சத்ரு கிர கராசி நவாம்சயிலாவது இருக்கப்பட்ட கிரகத்தின் திசை மிஸ்ரம மாகிய சுபாசுபப்பலன்க ளிரண்டையும் கொடுக்கும் திசையென்று சொல்லப்பட்டது. இப்படிசொல்வதினால் மிஸ்ரதிசையின் பலனா வது சம்பத்துக ளுண்டாகியிருந்து வியாதியினால் சரீர சௌக்கிய மில்லாமல் போகிறதும் சரீர சௌக்கியமாயிருந்தும் தனமில்லா போகிறதும் இவைகளாம் அந்த அந்தரத்தில் சூர்யாதிகிரகங்களு டைய தசாந்தர தசைகளில் சக்ஞாரூப பேருக்கு சமமாகிய பலன் களை எந்தெந்த திசைகளில் எந்தெந்த பலனோ ஏந்தப்பிரகாரம் உப யோகமாகுமோ அந்தப் பிரகாரமாய் சொல்லப்போகிறார் சக்ஞா ரூப பலமென்பது சம்பூர்ணதிசை மிகவும் சிரேஷ்டபலன் பூர்ண

திசை சிரேஷ்டபலன் அனிஷ்ட திசை மிக்க அசுபபலன் இந்தப் பிரகாரமாய் சகல திசைகளிலும் தம்தம் பேருக்கு சமமானபலன் கொடுக்குமென்று தாற்பரியம்,

எட்டாவது சுலோகத்துக்கு வசனம்.

லக்கின திசையில் உத்தம மத்திம அதம பலரூப பேதம் தெரியச்செய்கிறார்.

லக்கினத்தின் பிரதம த்விதிய திரேகாணங்களால் உபயவிராசி லக்னமாய் அதம மத்ப சிரேஷ்ட பலனாகும் அதெப்படி யென்றால் உபயவிராசி லக்னமாய் அதல் முதல் திரேகாணமானல் லக்னதிசை அனிஷ்ட பலனுண்டாகும் துதியதிரேகாணமானல் மிஸ்ரம பலனுண்டாகும் திருதியதிரேகாணமானல் சிரேஷ்ட பலனுண்டாகும்ஆனல் சரராசிலக்னமாய் அதில் முதல் திரேகாணமானல் சிரேஷ்ட பலனுண்டாகும் துதிய திரேகாணமானல் மிஸ்ரமபலனுண்டாகும் திரிதிய திரேகாணமானல் அதமபலனுண்டாகும் ஆனல் திரராசி லக்னமாய் அதில முதல் திரேகாணமானல் அசுபபலனும் துதிய திரேகாணமானும் சுபபலனும் திரிதிய திரேகாணமானல் மிஸ்ரம பலனுமாகும் இந்த விதமாக லக்னத்தினுடைய உத்த அதம மத்திமதிசைகள் உண்டாக்கப்படும் என்பதாம். 12

ஒன்பதாவது சுலோகத்துக்கு வசனம்.

கிரகங்களுடையநைசர்க்கிக தசாகாலம் சொல்லுகிறார்.

கிரகங்களுக்கு நைசர்க்கிக காலமாவன சந்திரனுக்கு வருஷம் 1-குஜனுக்கு வருஷம்-2 புதனுக்கு வருஷம்-9 சுக்ரனுக்கு வருஷம்-20 குருவுக்கு வருஷம் - 18 சூரியனுக்கு வருஷம்-20 சனிக்கு வருஷம்-50 இந்தவிதமாக இந்தசந்ராதிகிரகங்களுக்குகிரமமாக நைசர்க்கிக திசாவருஷங்களாம்இப்படி 120-வருஷங்கள் பரமாயுளாகும்.

இந்த நைசர்க்கிகாதிசாதிபதிகள் பலவந்தனுய் உபசெய ஸ்தானத்திலிருந்தாரானல் தங்கள் தங்கள் தசாந்திரகாலத்தில் சுபபலன் கொடுப்பார் ஈனபலமுள்ளவராய் அபசெயஸ்தானத்தி லிருந்தாரானல் அசுபபலனைக் கொடுப்பார்கள் யவனேஸ்வரரால் சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது. 13

இந்த நைசர்க்கிக திசைக்குப் பிரயோஜனம் சொல் லுகிறார் முன்சொல்லப்பட்ட திசையுடைய பரிபாகம் நைசர்க்கிக தசாகால ஜெனிதங்களான தங்கள் தங்கள் வருஷங்களில் சம்பூர்ண பலனுண்டாகு மென்டதாம் ஆனல் முன்சொல்லப்பட்ட கிரகதிசையும் நைசர்க்கிக கிரகதிசையும் இந்த இரண்டு திசையும் ஒரு கிரகத்திற்கே ஏககாலத்தில் கூடினாலும் அப்படி யெவ்வளவு மாதமிருந்தால் அவ்வளவு காலம் அந்தகிரகத்தின் திசையா

வது அந்தர்த்திசையாவது சம்பூர்ணமான சுபபலனைக் கொடுக்குமென்று தாற்பரியம் இதற்கு சுலோகம் சத்யாசாரிசொல்லியிருக்கிறார். பூர்வீக யவனமதத்தரால் லக்னதிசை நைசர்க்கிக காலம் சொல்லப்பட்டது.

புராணயவனர் இந்த 120-வருஷத்துக்குமேல் ஆயுள்உண்டாகியிருந்தால் அப்படி அந்திய வயதில் லக்னத்தினுடைய நைசர்க்கிக திசையாகும் அந்தலக்ன திசைசுபகரமுள்ளதென்று சொல்வார். ஆனால் ஒவ்வொரு யோகத்திலும் 120-வருஷத்துக்குமேல் ஆயுளுண்டாகுமானால் அப்படிப்பட்ட யோகத்தில் பிறந்தவனுக்கு 120-வருஷத்துக்குமேல் அந்தியவயதில் லக்கின நைசர்க்கிக தசாகாலம் கொடுக்கவேண்டுமென்று சொல்லுவாரென்று தாற்பரியம்.

சுசதகீர்த்தி முதலாகிய சிலகிரகந்த கர்த்தாக்கள் அந்த விதமே அந்தியவயதில் லக்னதிசை சுபகரமானதா லதேகொடுப்பார் சுலோகம் சுரர்கீர்த்தி சொல்லியிருக்கிறார் ஆனாலும் வராகிசாரி லக்னதிசையில்சுபாசுபதவங்கள் திரேகாணத்தினால் சொல்லியிருக்கிறானதாலும் பலாபலவசத்தினால் சொல்லவில்லையானதால் யவனோக்த பிரகாரமாய் அந்தியவயதில் லக்ன நைசர்க்கிக திசை சுபபலன் கொடுக்குமென்று தெரியவும்.

(பத்தாவது சுலோக வசனம்.)

இப்படி தசாந்தரதசைகளைச்சொல்லி அந்ததிசைபிரவேச
காலத்தில் தற்காலகிரக சஞ்சாரத்தைக் கொண்டும்
திசையினுடைய சுபாசுபத்வம் சொல்லுகிறார்.

முன்சொன்னவிதமாக திசாந்திரங்களைவைத்து அந்த திசாந்திர பிரவேசகால சவிகலசாவணமும் ஆரியபட்ட சித்தாந்தி சொன்ன விதமாயும் அத்தியகுணத்தினாலும் ஸ்பஷ்டமாக கிரகத்தை வைத்து தற்கால லக்ன ஸ்புடம் செய்யத்தக்கது அதெப்படியென்றால்.

ஸ்ரீபதியென்பவர் சொன்னவிதமாய் ஜென்மகால கற்பா திசாபகணமத்யரவிகளின் திசாவருஷம் மாதம்தினம் கடிகைகள்சேருமுன்னம்திசாப்பிரவேசகால பகணாதி மத்யரவியாகும். இதற்கு ஸ்ரீபதி உதாரணம் சொல்லி இருக்கிறார்.

ஜென்மகால சபகணமத்யரவி(4292-10-3-56)இதினால் லக்னமகாதிசையில் லக்னாந்தர்த்தசா வருஷத்தின் சங்கியையான(3-9-1-19-0) இவைகளை கூட்டிட லக்கினாந்தர்த் தசாந்திக மத்ய ரவி (4296-7-10-15-0)யென்று சொன்னபிரகாரம் அனுபாதத்தால் துவிகுணம் கொண்டுவர கிரமம் துவிகனமும் யுகரவிபகணத்தினால் பெருக்கி யுகசாவன வாசாரத்தினால் வகுக்க பகணாதி சூரியன் வரு

வான் அந்த பகணுதி சூரியனை வைத்துக்கொண்டு விபரீதமாக யுக சாவனவாசரத்தால் பெருக்கி யுகரவிபகணத்தால் வருக்க சகலத் துய்கணம் வரும் இந்த விஷயமாய் இதற்கு உதாரணம் சொல்லப் பட்டிருக்கிறது.

லக்ஞந்ததர்த்தசா மத்யரவி (4296-7-10-15-0) இதுவும் ஆரியப் பட்ட சித்தாந்த சாவனவாசரங்கள் 1577917500-நூற்று ஐம் பத்தேழுகோடி எழுபத்தொன்பது லக்ஷத்து பதினேழாயிரத்து ஐந்நூறு) இதனுல்பெருக்கிகலேஸ்தானத்தை அறுபதினுல் வருத்து கலே ஸ்தானத்தைகூட்டி அந்த கலேஸ்தானத்தை 60 னுல்வருத்து பாகைஸ்தானத்தில் கூட்டிஅந்தபாகை ஸ்தானம் 30 னுல்வகுத்து இராசி தானத்தில் கூட்டிஅந்தராசி 12 னுல்வகுத்துபகணஸ்தானத் தில் கூட்டி அந்த பகணஸ்தானமே யுகரவிபகணமான (4320000) நாற்பத்து மூன்று லக்ஷத்திருபனுயிரம்) இவைகளில் வருக்கவந்த ஈவு சாவணத்துய்கணம் (1569374-பதினைந்து லக்ஷத்து அறுபத் தொன்பதினுயிரத்து முந்நூற்றெழுப்த்துநாலு)சேஷங்களே 60னுல் பெருக்கிரவிபகணத்தினுல் வகுக்க கடிகை 45 உபயம் துய்கணம் 1559375-45 பதினைந்துலக்ஷத்து அறுபத்தொன் பதினுயிரத்து முந்நூற்றெழுபத்து நாலு (நாற்பத்தைந்து) இந்த துய்கணம் கடிகையும் பகணத்தினுல் பெருக்கி கடிகை ஸ்தானங்களே 60 னுல் வகுத்து துவிகணத்தில் கூட்டி சாவனவாசரத்தினுல் வகுக்க பக ணங்கள் வரும்பகண சேஷங்களே 12-னுற் பெருக்கிகடிகா சேஷங் களே 60 னுல் வகுத்து பகண சேஷத்தில் சாவனவாசரத்தினுல் வகுக்க இராசிகள் வரும் தற்சேஷத்தினுல் பாகைகள் வரும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பகணமத்யரவி | 4296 | 7 | 10 | 15 | 0 |
| ஸ்புடரவி | 7 | 11 | ,, | | |
| அயனும்சம் | 11 | 13 | ,, | | |
| இஷ்டகடிகை | 11 | ,, | ,, | | |
| தற்கால உதயலக்கினம் | 1 | 7 | 28 | | |
| ஸ்புடசந்திரன் | 8 | 2 | 54 | | |
| ஸ்புடகுஜன் | 5 | 28 | 50 | | |
| ஸ்புடபுதன் | 7 | 26 | 50 | | |
| ஸ்புடகுரு | 3 | 14 | 1 | | |
| ஸ்புடசுக்ரன் | ,, | ,, | 28 | | |
| ஸ்புடசனி | 9 | 14 | 3 | | |

இந்தப் பிரகாரமே சகலகிரக தசாந்தர்த்தசா பிரவேச காலங் களும் கிரகங்களும் லக்னங்களும் ஸ்புடம் செய்யத்தக்கது சாவண மாசத்தைக் கொண்டு ஆயுர்த்தாய திசாவிபாகஞ் செய்யத்தக்கது இதற்கு உதாரணம் கார்க்கி வசனம் சொல்லப்பட்டிருக்கிறது.

(சாவணமாதப் பிரமாணம்.)

சூர்யவுதய முதற்கொண்டு மறுபடியும் சூரியவுதயம் வரையில ஒருதினம் அப்படிப்பட்டதினம் 30-கூடியது ஒருமாதம் அப்படிப்பட்ட மாதம் 12-கூடியது ஒரு வருஷம் இப்படி ஒருவருஷத்துக்கு 360-தினங்களாகும் இப்படி சாவன மாதத்திஞலே ஆயுர்த்தாய விபாகம் செய்யத்தக்கது இதற்கு உதாரணம் கார்க்கிவசனம் சொல்லப்பட்டிருக்கிறது.

திசாதிபதி திசாப்பிரவேச லக்னமிருந்த போதிலும் திசாதிபதிக்கு மித்ருகிரகம் திசாபிரவேச லக்னமிருந்தாலும் சிலர் திசாதிபதிக்கு மித்ரக்ஷேத்திரம் லக்னமாயிருந்தாலுமென்று சொல்லுவார் இந்த திசாதிபதியினுடைய சப்தவர்க்கமும் லக்னமடைந்திருந்தாலும் சுபக்கிரக திசாப்பிரவேச லக்னத்திலிருந்தாலும் திசாபதி திசாபிரவேச லக்னத்திற்கு 3-6-10-11 இந்த ஸ்தானங்களிலிருந்தாலும் ஆரம்பித்ததிசை சுபப்பலனை கொடுக்கும் இதற்கு உதாரணம் ஸ்ரீ பதிவாக்கியம் என்பதாம்.

மகா திசாதிபதிக்கு அதிசத்ருவான கிரகம் அந்திரதிசாதிபதியானுல் மிகவும் அனிஷ்டபலன் கொடுப்பன் அதிமித்ரமாயிருக்கும் கிரகம் அந்தர்த்தசாதிபதியானுல் அதிக சுபப்பலனை கொடுப்பன் மத்யகிரகம் அந்தர்த்தசாதிபதியானுல் அதற்கு ஏற்பட்ட பலனைக் கொடுப்பான் இந்தப்பிரகாரமாகவே அந்திரதிசைகளில் பிரவேசகாலத்தைவைத்து சுபாசுபப்பலனை கற்பனைசெய்யவும்.

இப்படி சொல்லப்பட்ட சுபதிசைகளில் திசாப்பிரவேசகால முதற்கொண்டு திசாந்தியம் வரைக்கும் தசாதிபதி சுபப்பலனை கொடுக்கமாட்டான். மறுகாலென்ன கொடுப்பானென்ருல் தற்கால சந்திரகிராந்தவசம்போல ஒரு நாளைக்கு சுபப்பலனும் மற்றொரு நாளைக்கு அசுபப்பலனும் கொடுப்பானுகையினுல் அதன் விபரஞ் சொல்லுகிருர்.

சந்திரன் ஒவ்வொரு இராசியிலும் சஞ்சரிக்கின்றதால் திசாதிபதியினுடைய தற்கால மித்ரக்கிரக ராசியிலாகிலும் உச்சராசியிலாகிலும் திசாதிபதிக்கு உபசெய ஸ்தானமாகிய 3-6-10-11 திரிகோணமாகிய 5-9 லும் ஏழிலும் இருந்தவனுப் அப்போது சந்திரனிருந்த இராசி சென்மகாலத்தில் எந்த பாவத்தின் சக்னையுடையதா யிருக்குமோ அந்த பாவத்தினுடைய சுபயபலப்ராதுர்பாவங்கள் உண்டாகும்.

இப்படி சொல்வதைப் பார்க்கிலும் இன்னொருவிதமாய் தாசதிபதிக்கு தற்கால சத்துரு விராசியிலாவது தசாதிபதிக்கு நீசராசியிலாவது திசாதிபதியுடன் கூடி ஒரு இர்ாசியிலாவது திசாதிபதி

க்கு துதியசதுர்த்த அஷ்டமதுவாதச ஸ்தானங்களி லொருஸ்தானத்திலிருந்த சந்திரன் சுபதிசையில் கூட அப்போது சந்திரனிருந்த இராசி சென்மகாலத்தில் எந்த பாவசக்ஞையுடையதாயிருக்குமோ அந்த பாவத்தினுடைய பலனே கொடுப்பான் இந்த அர்த்தத்திற்குதாரணம் கார்க்கிவசனம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம்.

இப்படி சதாப்பிரவேச காலத்தில் திசாதிபதியிருந்த ஸ்தானம் முதல்கொண்டு இப்படிச்சொன்ன தானங்களிலிருந்த சந்திரனுக்கு சொன்னபலன் கொடுப்பானென்று தெரியவேண்டியது உச்சநீசாதி ஸ்தானமடைந்த சூர்யாதி கிரகதிசை பலன்கள் சூசகமாகத் தெரிவிக்கப்பட்ட கிரந்தாந்தரவசனமும் கொஞ்சம் கொடுக்கும் விதத்தை உதாரணமாகச் சொல்லப்படும் சில சுலோகங்கள்.

(பதினோராவது சுலோகத்துக்கு வசனம்.)

அந்தர்த்தசாபிரவேசகாலத்தில் சந்திரனிருந்த ராசியைக்

கொண்டு சுபாசுபபலன்கள் சொல்லுகிறுர்.

சந்திரன் சுவக்ஷேத்திரமாகிய கடகத்திலிருக்கும்போது ஆரம்பித்த தசாந்தரதிசையில் சன்மானமும் தனமும் சவுக்கியமும் உண்டாகச்செய்யும் குஜக்ஷேத்திரமான மேஷம் விருச்சிகத்தில் ஒரு ராசியில் சந்திரனிருக்க ஆரம்பித்த அந்தர்த்தசையில் தன் பாரியாள் பரபுருஷ சம்போகம் செய்வாள் மிதுனங்கன்னியில் ஒரி ராசியில் சந்திரனிருக்க ஆரம்பித்த அந்தத்திசையில் வித்தை சினேகர் தனம் இவைகளைக் கொடுப்பான் சிம்மத்தில் சந்திரனிருக்க ஆரம்பித்த அந்தர்த்திசையில் தூரங்களிலும் நாடுகளிலும் வழிமார்க்கங்களிலும் வீட்டுக்கு சமீபத்திலும் கிருஷியென்னும் பயிர்த்தொழில் செய்யப்படும்.

ரிஷபம் துலாத்தில் ஒருராசியில் சந்திரனிருக்க ஆரம்பித்த அந்தத்திசை சவுக்கியமாய் திருப்தியான சாப்பாடு சாப்பிட்டிருப்பன். மகரம் கும்பங்களில் ஒருராசியில் சந்திரனிருக்க ஆரம்பித்த அந்தர்த்திசையில் கெட்டுப்போன ஸ்ரீவருவாள். தனுசு மீனத்தில் சந்திரனிருக்க ஆரம்பித்த அந்தரதிசையில் சன்மானம் தனம் சவுக்கியம் முதலான துண்டாகச்செய்யும் இந்தப் பிரகாரமாய் சுபகாலத்தில் பிரவேசித்த சுபதிசை அதிக சுபபலன் கொடுப்பன். சுபகாலத்தில் பிரவேசித்த அசுபதிசை மத்யம பலனைக்கொடுக்கும் அசுபகாலத்தில் பிரவேசித்த சுபதிசை மத்திம பலனைக்கொடுக்கும் அசுபகாலத்தில் பிரவேசித்த அசுபதிசை மிகவும் அசுபபலனைக் கொடுப்பான் இப்படி சுபாசுபகாலத்திசைகளை சூகிக்கத்தக்கதென்பதாம்.

12-வது சுலோகம். சூரியதிசை சுபபலன்.

பரிமளவஸ்துதந்தமும்புலித்தோல்பசும்பொன்னுற்பார்த்திபராலும்
திரவியலாபம்சமரதுபுரிதல் தீரனைப்பகைவரைசெயித்தல்
அரசருத்யோகம்கீர்த்திசௌரியங்க ளாண்மையாலுக்கிரசுபாவம்
விர்வுசத்கார்யத்தியாகியுமாவான் விண்மணிசுபதிசைப்பலனே.

இ - ள். வாசனைகளுள்ள வஸ்துக்களினாலும் யானைத்தந்தம் புலித்தோல் தங்கம் அரசரினாலும் திரவியமுண்டாகும். யுத்தஞ் செய்தல் திடமான நெஞ்சத்தினால் எதிராளிகளைசெயித்தல் இராஜ னிடத்தி லுத்தியோகம் செய்தல் கீர்த்தியுண்டாகும். சவுரிய பரா க்ரமம் கொடுமையான குணத்தினால் தனம் விர்த்தியும் நல்லகாரி யங்களிலே சிலவு செய்யும் தியாகியும் இது சூரியதிசையின் சுபப் பலன் ஆகுமென்பதாம் 16

12-வது சுலோகம். சூர்யதிசை அசுபபலன்.

தன்மனையாளான்மக்கள் சத்துருவாற்றனத்தினாலாயுதமரசர்
வன்னியால்விபத்துகலகமுண்டாகி வருகுமேதுர்விஷயங்கள்
உன்னுபாபங்கள்செய்திடவிச்சை யுதரமுநெஞ்சதிற்பிணியாம்
இன்னவாறுசுபமுமிஸ்ரமமான விருவிதப்பலனுமுண்டாமே.

இ-ள். தன் பெண்சாதி தன் பிள்ளை தனம் சத்துருவாகும் ஆயுதத்தினாலும் அக்னியினாலும் இராஜனாலும் உண்டாகும் துன் பம் துர்விஷயதியாகியாயும் பாபஞ்செய்ய இச்சையுள்ளவனாய்தன் பந்து மித்ரரிடத்தில் கலகமும் வயிறு நெஞ்சென்னும் இருதயத் தில் ரோகமும் உண்டாகும். இது சூரியதிசையில் அசுபப்பலனும் மிஸ்ரமமான திசைகளில் சுபாசுபப்பலன்கள் இரண்டும் உண்டாகு மென்பதாம். 17

13-வது சுலோகம். சந்திரதிசை சுபப்பலன்.

மந்திரஞ்செய்தல்மறையவர்நேசம் வஸ்திரம்புட்பமிர்த்தனமும்
விந்தையாங்கரும்புசர்க்கரைத்தேனும்வெண்டயிர்பாலுடனெய்யும்
அந்தமாஞ்செந்நெல்லரிசியென்செட்டா லாடல்பாட்டாற்றனம்விர்
சந்திரன்றனதுசுபதிசைகீர்த்தி சம்பத்துசகலமுமிகவே. [த்தி

இ - ள். சந்திரதிசையின் சுபப்பலனானது மந்திரஞ்செய்தல் பிராமணர் சிநேகம், வஸ்த்திரம், புஷ்பம், நிர்த்தனம், கரும்பு, சர்க்கரை, தேன், பால், தயிர், நெய், நெல், எள், ஆடல்பாடல், வியாபாரத்தினால் தனம்விருத்தி கீர்த்தி சம்பத்து முதலியன உண் டாகுமென்பதாம். 18

13-வது சுலோகம் சந்திரதிசை அசுபப்பலன்.

நித்திரைசோம்பல்பொறுமையு மசதிநீள்புகழ்வேதியர்சேவை
அத்தனாரியைப்பூசனைபுரித லன்புள்மனையவள்தனக்கு
புத்திரிசென்மம்கீர்த்தியுநாசம் பிலமுளர்நேயரினிடத்து
மெத்தவிரோதம்மிஸ்ரமமாகில் மேம்படுசுபாசுபங்காணே.

இ-ள். சந்திரதிசையில் அசுபப்பலனாவது நித்திரை, சோம்பல், ஆலசியம், அசதியுண்டாகும். பிராமணசேவையுண்டு சிவபூசை விஷ்ணுபூசை யுண்டாகும் மனையவள் பெண்குழந்தைகளைப் பெற்றெடுப்பாள் கீர்த்தியும் தனமும்நாசம் பலவான்களிடத்திலும் விரோதமுண்டாகுதல் மிஸ்ரமதிசையானால் சுபபலனும் அசுபபலனுமுண்டாகுமென்பதாம். 19

14-வது சுலோகம். செவ்வாய்திசை சுபப்பலன்.

அரசரின்னேசம்பகைதனைவெல்லல் ஆட்டினால்கம்பிளியதனால்
திரவியலாபம்துணைவரார்பூமி திரவியமிகவுமுண்டாகும்
தரணியிற்கீர்த்திமிக்கவேயுண்டு தரைமகன்சுபதிசைதனிலே
வருபலனிதுவாம்மிஸ்ரமமாகில் வந்திடுமிருபலன்தானே.

இ-ள். செவ்வாதிசையின் சுபப்பலனாவது இராஜசினேகம் பகைவரை ஜெயித்தல் ஆடு கம்பிளி முதலியவற்றால் தனவிருத்தி சகோதரனாலும் பூமியினாலும் தனம் விருத்திகீர்த்தி பிரதாபமுண்டாதல் இவைகளுண்டாகும் மிஸ்ரமமானால் சுபப்பலனும் அசுபப்பலனும் இரண்டுபலனும் நடக்குமென்பதாம். 20

14-வது சுலோகம். செவ்வாய்திசை அசுபப்பலன்.

மக்களுமித்ரர்குருவுடன்புலவர் மனையவள்சோதிரருடனே
மிக்கவிரோதம்தாகமும்வரட்சி மெய்தனில்ரணம்சுரம்பிரமை
யுக்கிரகுணத்தாலிரத்தநோயுண்டு வொண்டொடிநேசத்தால்ரோக
வக்கிரன்மிகவுங்கற்பனைபுகல்வான் மற்றுமிஸ்ரமமுமவ்விதமே. [ம்

இ-ள். செவ்வாய்திசையின் அசுபபலனாவது புத்திரர் சினேகர் குரு வித்துவான் தன்மனையாள் சகோதரன் இவர்களிடம் விரோதமுண்டாகும் தாகவரட்சி சரீரத்திலிரணம் அம்மை சுரம் பித்தமயக்கம் கொடுமையினால் இரத்தசம்பந்தரோகம் ஸ்திரீகள் சினேகத்தினால் பலவிதநோயுண்டாகுதல் வார்த்தைக் கற்பனையாலுண்டாகும் மிச்ரமதிசையானால் மிச்ரமமான சுபா சுபப் பலன்கள் நடக்குமென்பதாம். 21

15-வது சுலோகம், புதன் சுபதிசைப்பலன்.

தூதகாரியத்தால்மித்திரர்குருவால் தூய்தணம்பிராமணராலும்
மேதையான்வித்தைதேர்ச்சியால் புகழுமேவிடும்பித்தளைகனகம்

நீதியாங்குதிரைபூமியினாலும் நேயரால்சுகந்தனம்லாபம்
சாதுரியங்கள்சரசமும்யூகம் தருமமேசெய்திடுபவனே.

இ-ள் தூதகாரியத்தினாலும் சினேகிதர் குருவினால் பிராமணராலும் கல்வியில் தேர்ச்சியடைந்து புகழ்கீர்த்தியுண்டாகும் பித்தளை வெண்கலம் தங்கம் பொன் வெள்ளி முதலாகிய உலோக வர்க்கத்தினால் தனம் விருத்தியாம் குதிரையினாலும் பூமியினாலும் சினேகரால் சுகமும் தனலாபமு முண்டாகும் வாக்குசாதுர்யமான பரிகாசவார்த்தை பேசவிச்சையும் பத்திவிர்த்தியும் தர்மஞ்செய்ய சிந்தனையுள்ளவனாயிருப்பான் இவ்விதமான பலன் நடக்குமென்பதாம். 22

15-வது சுலோகம். புதன்திசை அசுபப்பலன்.

வாக்குவிரோதம்துன்பமுமிக்க் மனமதுகவலையாமுலகைக்
காக்குமன்னவரால்பந்தனமுண்டாம் கருதிபவாதபித்தத்தால்
சூக்குமமானபீடிதநோய்கள் தோன்றிடுமகபமாந்திசையில்
நோக்குமாமிஸ்ரதிசையதுவானால் நோயுடன்சுபப்பலன்வருமே.

இ-ள். புதன் திசையில் அசுபபலனாவன் யாரிடத்திலும் பேசுகிறதில் விரோதம் உண்டாகும் மனது கவலை யடைதல் இராச தண்டனை பந்தனம் முதலியதும் வாதபித்தத்தினாலும் சூட்சுமமானரோக பீடிதங்கள் உண்டாகும், புதன் அசுபதிசையில் மிஸ்ரமமான திசையில் சுபமும் அசுபமும் உண்டாகுமென்பதாம். 23

16-வது சுலோகம். குருதிசை சுபப்பலன்.

அரசர்கள்நல்லோர்நேசமதாலு மானையுங்குதிரையுந்தங்கம்
திரமுளமக்கள்வஸ்த்திரங்குடைகள் சீருளவேதபாடத்தின்
நெறியுரையாலும்மந்திரசெபத்தால் நீதிசாஸ்திரமொழியாலும்
விரஷியமந்திராலோசனையுரைத்தல் மேவுநற்றனமதுவருமே. 24

16-வது சுலோகம். குருதிசை சுபப்பலன்.

பெருகியகார்யமுத்தியோகங்கள் பிரருபகாரசீலத்தால்
வருகுஞ்சன்மானம்வினையுஞ்சவுரியங்கள் மற்றுமேசற்குணமதனால்
அறிவொடுதேசுமடைபவனாகு மாண்மையால்பகைதனைவெல்வான்
குருதிசைதனிலேசுபப்பலனாகுங் கூறுமிவ்வகையினால்தனமே.

இ-ள். இராசர்களின் நேசத்தினாலும் நல்லவர்கள்நேசம் யானை குதிரை தங்கம் புத்திரன் வஸ்திரம் குடைகளினாலும் வேதபாடத்தினாலும் அதை பிறருக்கு உரைப்பதாலும் மந்திரம் செபம் செய்தல் நீதிமொழியைப் பிறருக்குச்சொல்லிவைத்தால் இரகசியமாகிய சூட்சுமமான யோசனைகள் சொல்லுதல் இவைகளினால் தனம் விருத்தியாகும் பெரிய காரியங்களாலும் உத்தியோகங்களினாலும் பிறருக்குபகாரஞ் செய்தல் இதனால் சன்மானங் கிடைக்கும் வினய

புத்தியும் சவுரியமும் சற்குணம் அழகும் அறிவும் உண்டாகும் ஆண்மையால் பகைவர்களை வெற்றியடைதல் இவைகளினால் தனம் உண்டாகும் இது குரு திசையில் சுபப்பலன் ஆகுமென்பதாம் 25

16-வது சுலோகம். குருதிசையில் அசுபப்பலன்.

தருமஞ்செய்பவர்விரோதம் தர்க்கமாம்பேச்சினாலும்
வருவதுபகையேயாகும் மதியதுகுறைவுண்டாகும்
தருவிஷயத்தாற்றீங்கும் தோன்றிடுஞ்செவியில்ரோகம்
குருதிசைமிஸ்ரமானால் கொள்சுபமசுபஞ்சேர்ந்தே.

இ-ள். தான தருமஞ் செய்பவர் விரோதம் சூட்சுமமான தர்க்கவார்த்தையினால் பகையுண்டாகும் புத்திகுறைவுண்டாகும் தர் விஷயத்தினால் தீமையுண்டாகும் செவியில் நோயுண்டாகும் மிஸ்ரமானால் திசையில் மிஸ்ரம பலனை யுண்டாகு மென்பதாம். 26

17-வது சுலோகம். சுக்ரதிசையில் சுபபலன்.

சங்கீதமதிலேமிக்கவல்லமையு சந்துஷ்டிபரிமளமணிதல்
தங்கமாமிஷ்டர்போசனதிர்ப்தி தோன்றியகவிகைவஸ்திரமும்
மங்கையர்நேசம்நவமணிபுட்பம் மகிழுதாம்பூலமும்மற்றும்
இங்கிதத்துடனேகூடிவாழ்பவனு மின்னமுமதிபலன்வருமே. 27

17-வது சுலோகம். இதுவுமது.

மித்திரர்பந்துவிட்டால் செல்வமிகுத்திடுலாபமுண்டாகும்
இத்தலமதிலேபலவிததொழிலால் வின்பமும்சமத்தினால்தனத்தை
மெத்தவும்பெற்றுகிருஷிவிவ சாயம்மேதினியதனில்கிக்ஷேபம்
சித்தியாமிவர்க்குசீரதுபெறுவன் சீதனின்சுபதிசையிதுவே.

இ-ள். சுக்கிரதிசையின் சுபப்பலனாவன் சங்கீத வல்லமையும் சந்தோஷம் வாசனை திரவிய மணிதலும் இஷ்டமித்திரர்கள் சினேகம் திர்ப்தியான போஜனம் குடைவஸ்திரம் ஸ்திரீகள் சங்கமம் நவரத்தினங்கள் புஷ்பம் தாம்பூலம் காமபோக சாதனமாகிய புஷ்பம் சயன முதலியதுண்டாம் இஷ்ட மித்றபந்துக்களினால் திரவிய லாபம் எடுத்த காரியம் தொழில் வியாபாரமுதலியதாலும் சமர்த்தினால் கிருஷி விவசாய மெனனும் உழுதுப்பயிரிடுதல் புதைப்பொருள் எடுத்தல் இவைகளினால் தனம் கிடைக்கும் சிறப்புண்டாகும் இந்த சுக்கிரன் திசையின்பலன் ஆகுமென்பதாம். 28

17-வது சுலோகம். சுக்ரதிசை சுபபலன்.

மன்னவராலும்வனமிருகத்தால் வனமதிலுறைந்திடுவேடர்
உன்னுமப்பகையால்தீமையுண்டாகியுயிருக்கும்பாதையுண்டாகும்
நன்னுமாசிலர்பாபிகளிடத்தும் நஞ்செனுமாற்றமுண்டாகும்
மின்னியமிஸ்ரதிசையதுவானால் மேவுநற்பலன்சிலதாமே.

இ-ள். சுக்ரதிசையின் அசுபபலனுவன ராஜகோபத்தினுல் துன்பமும் காட்டுமிருகம்வேடர்கள் நாற்கால்ஜெந்துக்களினுலும் தீங்குண்டாகும் உடலுக்கு முயிருக்கும் உபாதையுண்டாம் நற்குணமுடையவர் துர்க்குணமுள்ள பாபிகளிடத்தும் விரோதமுண்டாகும். மிஸ்ரமதிசையானுல் சுபாசுபப்பலன்களிரண்டும் நடக்குமென்பதாம். 29

18-வது சுலோகம். சனிதிசை சுபபலன்.

நகரமும்கிராமம்புலையரின்பதிக்கும் நாதனுமரசனேபோலும்
தகரதுமெருதுவொட்டகம்கழுதை சவுரியாற்கருடபட்சிகளால்
பகரரும்விருத்தையெள்ளுடநெல்லு லவிதத்தானியச்செட்டால்
நிகரறுதனத்தையேற்றுமேவாழ்வோன்நீலனின்சுபதிசைப்பலனே

இ-ள். சனி சுபதிசையில் நடக்கும் பலனுவன நகரமென்னும் பட்டணங்கள் கிராமங்கள் பறைச்சேரி இந்த தலங்களுக்குத் தலைவனுகவிருத்தல் ராசனைபோலுமாம் ஆடு எருது ஒட்டகம் கழுதையினுலும் மயிர் கம்பளத்தினுலும் கருடபக்ஷிகளின் இறகினுலும் அந்த வியாபாரத்தாலும் எள் நெல்தானியங்களினுலும் விருதாப்பிய ஸ்திரீகளினுலும் அதிகமான தனத்தையடைந்து சுகமாயிருப்பனென்பதாம். 30

18-வது சுலோகம். சனிதிசை அசுபபலன்.

பித்தமயீரிஷையுங்கோபமும் வாயுபிரமையுமோகமதாலும்
நித்திரையதிகம்சோம்பலுஞ்சிரமம் நேரிடும்வாதநோயாலும்
மெத்தவுமூனம்தாரமக்களினுல் மிகுதுயர்தேகமுமெலிவு
வுத்திடும்மிகவாபத்துகளுண்டா முரைத்திடுமிஸ்ரமிஸ்த்திரமே

இ-ள். சனிதிசை அசுபப்பலனுவன் பித்தத்தினுலு மீரிஷையினுலும் வாயுவினுலும் கோபத்தினுலும் பிரமையினுலும் மோகத்தினுலும் உபத்திரவமுண்டாகும் நித்திரை ஆலஸ்யத்தினுலும் வாதரோகத்தினு லங்கவூனமும் களத்திரபுத்திரரால் கஷ்டமும் சரீரமெலிவும் பலவித ஆபத்துகளுண்டாம் மிஸ்ரமமானுல்மிஸ்ரமப்பலனேயாகுமென்பதாம். 31

19-வது சுலோகம். லக்ன தசாபலன்.

வசனம்.

ஒவ்வொரு சுலோகத்தினுலும் சுபாசுபப்பலன் இரண்டும்
சொல்லப்பட்டிருப்பதினுலும் அதின் விஷயவியாபகம்
லக்ன திசாபலனும் சொல்லுகிருர்.

திசைகளுக்கு சுபாசுபம் மிஸ்ரமமுதலில் தானே சொல்லப்பட்டிருப்பதினுலும் மறுபடியும் ஜென்மகாலத்தில் உபசெயராசி

யாகிய 3-6-10-11-இந்த ஸ்தானங்களிலடைந்த நிர்மலமூர்த்தியா கிய கிரகத்துடைய திசையில் சுபமுண்டாகும் உபசெயராசியல் லாது அபசெயராசியாகி எட்டு விராசிகளிலுமிருந்த கிரகமும் சத் துருஸ்தான மிருக்கப்பட்ட கிரகதிசை அசுபபலனை யுண்டாக்கும் சூரிய சந்திரசுபதிசையில்சுபபலனையுண்டாகச்செய்வார் அசுபமான திசையில் அசுபபலனே வுண்டாகச் செய்வார் மிஸ்ரமமென்னும் சுபாசுபதிசையில் சுபாசுப மிஸ்ரபலன்செய்வார் இந்தவிஷயமாய் சத்யாசாரி சுலோகம் சொல்லியிருக்கிறார்.

லக்ன தசாபலம் லக்னாதிபதிக்குச் சமானமானது அதெப் படியென்றால் மேஷலக்னத்திற்கு குஜாதிபலன்களும் விருஷப லக் னத்திற்கு சுக்ரதசாபலன்களும் இந்தவிதமாகவே மற்றவிராசிகளு க்கும் தெரியவேண்டியது இதுவுந்தவிர திரேகாண வசத்தினால் லக்னதிசை சுபதிசையானால் சுபபலனும் அசுபதிசையானால் அசு பப்பலனும் சொல்லுந்தக்கது முன்சொன்னபடி தசாரிஷ்டத்திற்கு சிறிது பங்கமாகும் அதற்குச் சாராவளியில் சுலோகம் சொல்லப் பட்டிருக்கிறது.

21-வது சுலோகம். வசனம்.

இந்த தசாபலன்களிலே மற்ற பாவபலம் திருஷ்டிபலம் தம்தம் திசைகளிலேயே பலவிதமாகுமென்று தெரியச்செய்கிறார்.

சகனார்த்தியாயமென்னு மிராசிபடலத்திலும் எந்த கிரகத்து தாம்பரமாதி திரவியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த கிரகத் தின் சுபதிசையில் அந்த கிரகத்துக்குச் சொல்லப்பட்டிருக்கிற திர விய லாபமும் அசுபதிசையில் அந்த திரவிய நஷ்டமுண்டாகும்.

எந்தகருமத்தினால் ஜீவனம்சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த கிரகத்தினுடைய தசாந்தர்த்தசையில் அந்த தரும ஜீவனபலனை யடைப்படும். பாவஸ்தானத்துள் யோகம் உற்பவமானதும் ராசி பலனும் திஷ்டிபலனும் நாபசயோகபலனும் அந்த பலன்களெல் லாம் அந்த கிரகத்தினுடைய திசையிலயோசிக்கவும் நாபசயோக த்திற்கு மாத்திரமே சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது. தவிர சமஸ்த திசையிலும் தனத்தைக்கொடுப்பாரென்பதாம். 8

21-வது சுலோகம். வசனம்.

சென்மகாலந்தெரியாத புருஷனுக்கு அவன் சரீரகாந்தியைக் கொண்டு கிரகதிசா நிர்ணயம் செய்யும்விதம் சொல்லுகிறார்.

முன்கிரகயோனி படலத்தில் சொல்லியிருக்கிற 13-பாட்டினு ள்ளபடி குஜாதிகிரகங்களுக்கு அக்னியாதிபூதங்கள் சொல்லப்பட் டிருக்கிறதல்லவா அதுபோல சகலகிரகத்துக்கும் தன்திசையடை

ந்த பிருதிவியாதிபூத அம்சமான சரீரகாந்தி பிரகாசிக்கும் அதெப்படி யென்றால்,

பிரிதிவிபூதத்திற்கு பிராணேந்திரிய கிராஹ்யமான கந்தகுணமானபுருஷனவான் அப்போது பிருதிவிசாயல் குணமுள்ளவனயிருப்பான் அப்போது புததிசையெனறறியவும் ஜலபூதத்திற்கு ரசனேந்திரிய கிராஹ்யமான ரசகுணமுள்ள புருஷனவன் நல்ல ருசியுள்ளபதார்த்தம் புசிப்பான் கலேச்சாயை குணமுள்ளவனயிருப்பனே அப்போது சந்திர சுக்கிரதிசையிலொன்றென்று தெரியத்தக்கது.

அக்னி பூதத்திற்கு சட்சேந்திரிய கிராஹ்யமான ரூபகுணமுள்ள புருஷன் அப்போது நல்லரூபம் உள்ளவனயிருப்பன் அக்னிசாயா குணமுண்டாகியிருப்பன் அப்போது குஜ ரவி இவர்களிலொருவர் திசையென்று யூகிக்கவும் வாயு பூதத்திற்கு தொக்கிந்திரிய கிராஹ்யமான ஸ்பரிசமுள்ளவன் மானதாலந்த புருஷனெப்போதும் மிருதுவாகிய ஸ்பரிசமுள்ளவன் வாயுச்சாயகுண முண்டாகி யிருக்குமோ அப்போது சனி திசைகாலமென்று கிராகிக்கத்தக்கது ஆகாசபூதத்திற்கு சுரோத்ரேந்திரிய கிராஹ்யமான சப்தம் குணமான புருஷன் அப்போது நல்லசிரவணங்களைக் கேழ்ப்பன் ஆகாச சாயகுண முடையவன யிருப்பானே அப்போது குருதிசாகாலமென்று தெரியத்தக்கது சாயகுணம் தெரியும்வித மெப்படியென்றால் இவ்விடத்தில் ஐந்து சுலோகம் சொல்லப்பட்டன புருஷலக்ஷணத்திலென்பதாம். 34

22-வது சுலோகம் வசனம்.

இப்படிசொல்லப்பட்ட சாயலில் வாயுச்சாயல் தவிர மற்றசாயல்களில் சுபபலனுண்டாமாதலால் அந்த பல பேதங்கள் அந்தராத்மா ரூபத்தாலே தெரியும் விதம் சொல்லுகிறார்.

சுபபலன் கொடுக்கும் திசையில் அந்தராத்மாவாகிய மனது சுபசொரூபமாகவே யிருக்கும் அப்போதுமகாபூதகிருதசாயலினல் தெரியச்செய்யும்படியான கிரகதிசை புருஷனுக்குவெகு விதமான சௌக்கியம் தனலாபம் உண்டாகச் செய்யும் இப்படிச்சொல்வதினல் அசுபதிசையில் புருஷனுடைய மனசு அசுபமாகவேயிருக்கும் அப்போது மகா பூதகிருதச் சாயலினல் காட்டப்பட்ட கிரகதிசை அசௌக்கியமும் அனர்த்தாகம் உண்டாகச் செய்யும் மிஸ்ரதிசை மிஸ்ரபலன் சித்தியென்று தெரியத்தக்கது.

இதற்கு யாத்ரா கிரந்தத்தில் சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது இப்படிச்சொல்லப்பட்ட சுபாசுபப்பல பரிபாகத்தினல் வர்த்

தமான திசையும் யூகிக்கவும் ஆனால் புருஷன் அனுபவிக்கவும்சுபா சுபபலனை விசாரித்து அந்த பலன் எந்த கிரகத்தினுடையதிசை யென்று சொல்லப்பட்டிருக்குமோ அந்தகிரகத்தினுடைய திசை யென்று யூகிக்கவேண்டுமானதால் இப்படிசாயகுணத்தினால் அந்த ராத்மாவாகிய மனதின் பவனானுபவத்தினால் வர்த்தமான திசை யென்று தெரியவேண்டியதாம் சுக்ர சுபதிசையில்நிதிப்பிராப்தியும் சனி அசுபதிசையில் அங்கவீனபலனும் இப்படிசொல்லப்பட்டிருக் கிற சுபாசுபபலன்கள் சிலருக்குஅனுபவத்து வராததினால் அதற்கு காரணம்சொல்லுகிறார். பலவீனமான கிரகத்துக்கு பல ஸ்வரப்பன சிந்தனையினாலும் ஆனால் எந்தகிரகம் பலவீனமாயிருக்குமோ அந்த கிரகத்துக்குச் சொல்லப்பட்ட பலன்கள் உண்டாயிருக்குமென்ப தாம். 35

23-வது சுலோகம் வசனம்.

ஒருகிரகத்துக்கு பரஸ்பரவிருத்தமான இரண்டுபலனும் சமானமாக சம்பவிக்குமானதால் அந்தபலன்கெடுமென்பதாம் பின்னமுள்ள கிரகத்துக்கு பரஸ்பர விருத்தமென்னும், ஒன்றுக்கொன்று விரோதமாகிய இரண்டுபலனும் சம்பவிப்பதால் அந்தந்த கிரகதிசை யுண்டாகுமென்று சொல்லுகிறார்.

ஒரு கிரகத்தினுடைய இரண்டுபலன்களில் பரஸ்பர விரோத மும் சமானமாயிருப்பதால் அந்தபலன் நாசமென்று சொல்லவே ண்டியது ஆனால் நாபசயோகபலன் தவிர மற்றபலன் அந்தந்த கிரகதிசையில் கொடுக்குமென்று சொல்லப்பட்டிருப்பதால் ஒரு யோகத்தினால் சுவர்ணமென்னும் தங்கத்தை கொடுப்பவனாகவும் மற்றொரு யோகத்தில் சுவர்ணம் அபகரிக்கப் பட்டவனென்றும் அப்போது அந்தக்கிரகம் சுவர்ணதாஸிபகாரம் இரண்டும் செய்ய மாட்டானென்று சொல்ல வேண்டியதானதால் இப்படி இரண்டு பலன்களின் அதிகம் குறைவு உண்டாயிருக்குமானால் அப்போது எந்த பலன் அதிகமாயிருக்குமோ அந்த பலன் பரிபாகமடையும் அதெப்படியென்றால் ஒருகிரகத்துக்கு இரண்டுவிதத்திலும் சுவர் ணம் கொடுப்பவனும் ஒரு விதத்தினால் சுவர்ணமபகரிப்பவனுயு மிருந்தால் இந்த இரண்டு பலன்களில்சுவர்ண பிரதத்வம் அதிகமா யிருந்தால்சுவர்ணம்கொடுப்பானே தவிரஅபகரிக்கமாட்டான் இப் படி ஒரு கிரகத்துக்கு இரண்டு விதத்தினாலும் சுவர்ணாபகாரியும் ஒரு விதத்தில் சுவர்ண பிரதனும் ஆனால் சுவர்ணாபகாரமே செய் வான் இந்தப் பிரகாரம் யூகிக்கவும்.

ஒரு கிரகத்துக்கு ஒரு பலன் கொடுப்பவனாயிருக்க மற்றொரு கிரகம் சமானமான பலனாவது அன்னியபலனாவது கொடுக்கும் மறுபடியுமெவ்வித மென்றால் சகல கிரகங்களும் தங்கள் தங்கள்

திசையில் அடைந்தவரானால் தங்கள் தங்கள் பலனைக் கொடுப்பவராகும்.

ஆனால் ஒருகிரகம் சுவர்ணம் கொடுப்பவனாயு மற்றொரு கிரகம் சுவர்ணத்தை அபகரிப்பவனாயு மிருந்தால் சுவர்ண பிராப்தியடையுந்திசையில் சுவர்ணத்தைக் கொடுப்பான் சுவர்ணாபகாரி திசையில் சுவர்ணத்தை யபகரிப்பானென்றும் தாற்பரியம்.

படலச்செய்யுள் தொகை.

சாதகபலனைப்பார்த்துத் தரணியிலுள்ளபேர்க்கு
மாதிசையந்திரங்கள் வசனமுங்கவியுமாக
நீதியாய்த்தமிழ்தன்னாலே நிகழ்த்திடகுருவைப்போற்றி
காதலாலியானுரைத்தேன் கண்டிடுமுப்பத்தாறே.

தசாந்தரபலப்படல முற்றிற்று.

# மங்களேஸ்வரீயம்.

பத்தாவது

## அஷ்டவர்க்கப்படலம்.

விநாயகர் துதி.

சித்திரவதனத்தோடும் தேவர்க்குமுன்னாய்வந்து
சந்திரன்தனைப்பிடித்து தன்கோட்டுக்கிணையாய்ச்செய்து
விந்தையாய்க்கண்ணாற்காணும் விக்கினநாதவுன்னை
சந்ததம்யான்பணிந்துதன் தந்திமாமுகனேகாப்பு.

1-வது சுலோகம். வசனம்.

ஜென்மகாலத்தில் சூரியனாதியாகிய ஏழுகிரகமும் லக்னமும் இந்த வெட்டும் எந்தராசியி லிருக்குமோ அந்தராசி முதற்கொண்டு சாரவசத்தினால் இராசிகளில் சஞ்சரிக்கின்ற ஒவ்வொருகிரகத்தினுடைய சுபாசுபப்பலன்கள் இந்த அஷ்டவர்க்கப்படலத்தில் சொல்லப்பட்டதால் முதலில் சூரிய அஷ்டவர்க்கம் சொல்லுகிறார். புருஷனுக்கு ஜென்மகாலத்தில் எந்த கிரகம் எந்த ராசியிலிருந்ததோ அந்த இராசி சுபஸ்தான மென்னப்படும். 1

சூரியன்விந்து 48-க்கு விபரம்.

சூரியன்பதிதனக்குத் தூயகேந்திரங்கள்நாலு
சூரியதனமும்லாபம் குலவுபாக்கியமுமெட்டில்

சூரியன்வருருங்காலம் சுபப்பலன்விருத்தியாகும்
மாறிமற்றிடத்தில்சூர்யன் வந்திடல்லசுபமாமே

(இ-ள்) சூரியனிருந்த ஸ்தானமுதற் கொண்டு -2-4-7-8-9-10 11 - இந்த ஸ்தானங்களில் சாரவசத்தினால் வந்திருக்க சுபப்பலன் சித்தியாகும் இந்த இடங்கள் தவிர மற்ற விடங்களில் வந்திருக்குங் காலத்தில் அசுபப்பலன் சித்திக்குமென்று தெரியத்தக்கது. 2

சூரியனில் செவ்வாய் விந்து 8.

ஆரலின்பதிதனக் கைந்திடுகேந்த்ரம்நாலும்
தேரியவிரண்டுலாபம் செப்பியவொன்பானெட்டில்
சூரனுமிருந்தபோது சுபப்பலன்விருத்தியாகும்
மாறிமற்றிடத்தில்சூர்யன் வந்திடிலசுபங்காணே. 3

1-வது சுலோகம், சனி விந்து 8.

சனியுறும்பதிதனக்கு தனமதுமாயுள்லாபம்
இனியநற்பாக்கியத்து மேற்றகேந்திரங்கள்நாலில்
பனியதின்கையோன்வந்தால் பகர்வதுசுபப்பலன்கள்
தனமுடன்விருத்தியாகும் கண்டறிபலனைத்தானே.

(இ-ள்.) சனியிருந்த ஸ்தானத்திற்கிரண்டு எட்டு பதினொன்று ஒன்பது ஒன்று நாலு ஏழுபத்து இந்த ஸ்தானத்திலிருந்த சூர்யன் சுபப்பலன் தருவனென்பதாம். 4

1-வது சுலோகம் சந்திரன் சுக்கிரன்-3:

சந்திரர்தனக்குமூன்றுடனாறு சாற்றுமீரைந்தொடுலாபம்
அந்தவாறுபுகர்தன்க்கு ஆறுவேழ்பன்னிரண்டில்
வந்துறைகதிரோனுைல் வருவதுசுபப்பலன்கள்
இந்தவாறறிந்துகொண்டு மியற்றிடுபலனைத்தானே.

(இ-ள்.) சந்திரனிருந்த ஸ்தானத்திற்கு மூன்று ஆறு பத்து பதினொன்றில் சூரியனிருக்க சுபகரனுவான். சுக்கிரனிருந்த ஸ்தானத்திற்கு ஆறு-ஏழு-பன்னிரெண்டில் சூரியனிருக்க சுபகரனுவானென்பதாம். 5

1-வது சுலோகம் புதன் குரு லக்னம்.

மாலமன்றனக்குவைந்தொன்பானும் மற்றுயசெயமதுவீராறு
சேலவற்கைந்தாறிலாபமும்பாக்யம் சென்மலக்கினமதுதனக்கு
நாலுடனீராறுபசெயந்தன்னில் நாயிருமிருந்திடுவானேல்
சீலமும்சுபமாமென்றுமேயறிந்து செப்பிடலாறெட்டுவிந்தே.

(இ-ள்.) புதனிருந்தஸ்தானத்திற்குஐந்து ஒன்பதுமூன்று ஆறு பத்துபதினொன்று இந்தஸ்தானத்தில் இருந்த சூரியன் சுபகரனும் குருவிருந்த ஸ்தானத்திற்கு ஐந்து ஆறு பதினொன்று ஒன்பது இந்த ஸ்தானத்திலிருந்த சூர்யன் சுபகரனும் சென்ம லக்னத்திற்கு

நாலு பன்னிரண்டு மூன்று ஆறு பத்து பதினொன்றிலிருந்த சூர்யன் சுபகரன்உதாரணம் லகுசாதகமென்பதாம். 6

2-வது சுலோகம். சந்திரன்விந்து 49-க்கு விபரம்.

சந்திரன்றனக்குச்சென்மம் சாற்றுமேழுபசெயங்கள்
செந்தியுமுபசெயங்கள் சீருளவிரண்டைந்தொன்பான்
புந்திமூன்றைந்தெட்டு புகர்லாபம்கேந்த்ரம்நாலும்
சுந்திரபொன்னெட்டீராறு தூய்லாபம்கேந்த்ரம்நாலே. 7

2-வது சுலோகம் இதுவுமது.

சுங்கனுலைந்தேழொன்பான் சோதிரங்கருமம்லாபம்
பங்குமூன்றைந்தாறுலாபம் பகலெட்டேழுபசெயங்கள்
தங்குலக்கினந்தனக்கு சாற்றியவுபசெயத்தில்
திங்களின் அட்டவர்க்கந் திடமுடன்வைப்பதாமே. 8

2-வது சுலோகம். இதுவுமது.

இந்தநால்விதமதாக விந்துவின்றொகையேழேழில்
சந்திரன்விந்துவைத்து சாற்றியதானந்தன்னில்
சந்திரன்வந்தகாலம் தானதுசுபமதென்று
சிந்தையாவருக்குஞ் செப்புவாய்பலன்கள்தானே. 9

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சந்திரன் | 1 | 3 | 6 | 7 | 10 | 11 | | | ஆக-6 |
| சூரியன் | 3 | 6 | 7 | 8 | 10 | 11 | | | ஆக-9 |
| செவ்வாய் | 2 | 3 | 5 | 6 | 9 | 10 | 11 | | ஆக-7 |
| புதன் | 1 | 3 | 4 | 5 | 7 | 8 | 10 | 11 | ஆக-8 |
| குரு | 1 | 4 | 7 | 8 | 11 | 10 | 12 | | ஆக-7 |
| சுக்ரன் | 3 | 4 | 5 | 7 | 9 | 10 | 11 | | ஆக-7 |
| சனி | 3 | 5 | 6 | 11 | | | | | ஆக-4 |
| லக்னம் | 4 | 6 | 10 | 11 | | | | | ஆக-4 |

இந்த விதமாக சந்திரன் விந்து 49-ல் வைத்து அந்த ஸ்தானங்களில் சந்திரனிருக்கும்போது சுபகரனும் இதையறிந்து பலன் சொல்லவும் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 10

3-வது சுலோகம். செவ்வாய் விந்து 39.

மங்கலன்கேந்த்ரம்நாலும் மருவுமெட்டிரண்டுலாபம்
துங்கமால்மூன்றைந்தாறு சொல்லியலாபமாகும்
தங்குபொன்னுறீரைந்து தன்னுடன்லாபமீராறு
சுங்கனுர்க்காறேட்டு சொல்லுலாபங்கள்வீயம். 11

இதுவுமது.

சுன்னெட்டொன்பான்லாபம் சுகசென்மம்காமம்பத்து
மன்னுசூரியருக்கைந்து மற்றுமேயுபசெயங்கள்

துன்னுமாமதிக்குமூன்றுறு சொன்னதுலாபமாகும்
சென்மலக்கினத்திலொன்றுந் திகழுபசெயங்கள்தானே. 12

இதுவுமது.

சேயவன்றனக்குவிந்து திரமுளமுப்பத்தொன்பான்
நேயமதுடனேவைத்து நிலைகளையறியவேண்டில்
ஆயுமப்பதியில்லார லடைந்திடசுபமதென்று
சேயவன் அட்டவர்க்கம் செப்பினூர்வராகமிகி. 13

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| சூரியன் | 3 | 5 | 6 | 10 | 11 | | | ஆக-5 |
| சந்திரன் | 3 | 5 | 11 | | | | | ஆக-3 |
| செவ்வாய் | 1 | 2 | 4 | 7 | 8 | 10 | 11 | ஆக-7 |
| புதன் | 3 | 6 | 6 | 11 | | | | ஆக-4 |
| குரு | 6 | 10 | 11 | 12 | | | | ஆக-4 |
| சுக்ரன் | 6 | 8 | 11 | 12 | | | | ஆக-4 |
| சனி | 1 | 4 | 7 | 8 | 9 | 10 | 21 | ஆக-7 |
| லக்னம் | 1 | 3 | 6 | 10 | 11 | | | ஆக-5 |

இப்போது சொல்லிய விதமாக செவ்வாய் அஷ்டவர்க்கம் 39 விந்து பலன் தெரியவேண்டியது. அந்தந்த ஸ்தானங்களில் செவ் வாய் சுபகரனுகுமென்பதாம். 14

4 வது சுலோகம். புதன் விந்து 54.

புந்திகோணம்பத்திராறு புகல்லாபமூன்றுமாறும்
சுந்திரபொன்னெறெட்டு தூயலாபங்கள்ரண்டும்
விந்தையாம்புகரெட்டொன் பான்விளங்குமொன்றிரண்டுமூன்று
அந்தவாறுநாலோடைந்து வாகியபதினென்றுமே. 15

இதுவுமது

முடவன்சேய்க்கிரண்டெட்டொன்பான்மொழிலாபம்கேந்த்ரம்நாலு
சுடரவனைந்தாறுபாக்யம் சொல்லுமாறீராறுலாபம்
திடமதிதனமாறெட்டு சேய்சுகம்லாபம்பத்து
அடருலக்கினமொன்றிரண் டாயுள்நால்லாபம்பத்தே. 16

இதுவுமது.

இந்தவேழ்கோளுஞ்சென்ம மெழிலுடனுரைத்ததானம்
சொந்தமாய்விந்துவைத்து சுகதுக்கமறியவேண்டில்
அந்தந்ததானத்திற் கறிஞனவ்விடத்தில்வந்தால்
சந்ததம்சுபனுயெனறு சாற்றியபலனிதாமே. 17

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| புதன் | 1 | 3 | 5 | 6 | 9 | 10 | 11 | 12 | ஆக-8 |
| குரு | 2 | 6 | 8 | 11 | | | | | ஆக-4 |
| சுக்ரன் | 1 | 2 | 3 | 4 | 5 | 8 | 9 | 11 | ஆக-8 |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சனி | 1 | 2 | 4 | 7 | 8 | 9 | 10 | 11 | ஆக-8 |
| சூரியன் | 5 | 6 | 9 | 11 | 12 | | | | ஆக-5 |
| சந்திரன் | 2 | 6 | 8 | 4 | 10 | 11 | | | ஆக-6 |
| செவ்வாய் | 1 | 2 | 4 | 7 | 8 | 9 | 10 | 11 | ஆக-8 |
| லக்னம் | 1 | 6 | 2 | 8 | 4 | 10 | 11 | | ஆக-7 |

இந்த விதமாக வேழுகோள் லக்னத்திற்கும் புதன் விந்து 54-ல் வைத்து பலாபலனறிய வேண்டில் இப்போது சொல்லப்பட்ட ஸ்தானங் களில் புதனிருக்க சுபகரணுகுமென்பதாம்.

5 வது சுலோகம் குருவிந்து-56.

குருகண்டம்லாபம்மூன்று குலவுமெட்டோடிரண்டு
குருதிக்குக்கேந்திரங்கள் கொள்தனமாயுள்லாபம்
அறிஞன்நால்பத்தாறுசென்ம மைந்திரண்டொன்பான்லாபம்
பருதிரண்டாயுள்கேந்திரம் பாக்கியம்லாபமூன்றே. 18

இதுவுமது.

சந்திரனைந்தொன்பானும் தனமுடனேழுலாபம்
மந்தன்மூன்றைந்துமாறு மற்றுமேபன்னிரண்டு
சுந்தரவிரண்டைந்தாறு தூயொன்பான்லாபம்பத்து
அந்தலக்கினந்திரிகோண மாறுலாபதனகேந்திரமாமே. 19

இதுவுமது.

பொன்னவன்விந்துவைத்து புகல்சுபவசுபந்தானும்
உன்னுமத்தானந்தன்னி லுயர்குருவந்தபோது
மன்னியசுபனேயாவான் மருவியவஷ்டவர்க்கம்
சொன்னதுவைம்பத்தாறு தொகையதுவறிந்திடாயே. 20

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| குரு | 1 | 2 | 3 | 9 | 7 | 8 | 10 | 11 | | ஆக-8 |
| சுக்ரன் | 2 | 5 | 6 | 4 | 10 | 11 | | | | ஆக-6 |
| சனி | 3 | 5 | 6 | 12 | | | | | | ஆக-4 |
| சூரியன் | 1 | 2 | 3 | 4 | 7 | 8 | 9 | 10 | 11 | ஆக-9 |
| சந்திரன் | 2 | 5 | 7 | 9 | 11 | | | | | ஆக-5 |
| செவ்வாய் | 1 | 4 | 7 | 10 | 2 | 8 | 11 | | | ஆக-7 |
| புதன் | 4 | 10 | 6 | 1 | 5 | 2 | 9 | 11 | | ஆக-8 |
| லக்னம் | 1 | 5 | 9 | 6 | 4 | 2 | 4 | 7 | 10 | ஆக-9 |

இந்த விதமாக குருவின் விந்து 56 வைத்து பலாபலன் அறிய வேண் டியது இப்போது சொல்லப்பட்ட ஸ்தானத்தில் குரு இருக்க சுபப்பலன் நடக்குமென்பதாம்.

6-வது சுலோகம் சுக்ரன்விந்து-51.

புகரொன்றுமுதலைந்தொன்பான் புகல்லாபமீரைந்தெட்டு
மிகுசன்னுலைந்தெட்டொன்பான் மேலாபமூன்றும்பத்து
பகலவன்றனக்குவிந்து பன்னிரண்டெட்டும்லாபம்
தருமதிகோணம்லாபம் தனஞ்சகமூன்றெட்டீராறு. 21

இதுவுமது.

ஆரல்மூன்றைந்தாறென்பா ரகும்பன்னொரீராறும்
கூறுமாலைந்தாறுமூன்று கொள்ளும்பாக்கியம்பன்னொன்று
தேருபொன்னெட்டைந்தொன்பான் றிகழும்பன்னொன்றுபத்து
சீரிலக்கினந்தொட்டைந்து செப்புமெட்டொன்பான்லாபம். 22

இதுவுமது.

சொன்னவித்தானந்தன்னில் தூய்புகர்வந்தபோது
மின்னுநற்சுபகரந்தான் விளங்கிடுமைம்பானிரண்டு
மன்னியவிந்துவைத்து மானிடர்தங்களுக்கு
நன்மைதீமைகளறிந்து நலமுடனுரைப்பதாமே. 23

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சுக்ரன் | 1 | 2 | 3 | 4 | 5 | 8 | 9 | 10 | 11 | ஆக-9 |
| சனி | 4 | 5 | 8 | 9 | 11 | 3 | 10 | | | ஆக-7 |
| சூரியன் | 8 | 11 | 12 | | | | | | | ஆக 3 |
| சந்திரன் | 1 | 3 | 3 | 4 | 5 | 8 | 9 | 10 | 12 | ஆக-9 |
| செவ்வாய் | 3 | 5 | 6 | 9 | 11 | 12 | | | | ஆக-6 |
| புதன் | 3 | 5 | 6 | 9 | 11 | | | | | ஆக-5 |
| குரு | 5 | 8 | 9 | 10 | 11 | | | | | ஆக-5 |
| லக்னம் | 1 | 2 | 3 | 4 | 5 | 8 | 9 | 11 | | ஆக-8 |

சுக்ரனுக்குச் சொல்லப்பட்ட விந்து 52 வைத்து பலாபலனறிய வேண்டியதற்கு அந்த ஸ்தானத்தில் சுக்ரன் வரும்போது சுபப்பலன் என்பதாம்.

7-வது சுலோகம். சனிவிந்து 39-க்கு விபரம்.

மந்தன்மூன்றைந்தாறுலாப பதிமூன்றுபதினொன்றுகும்
விந்தைசேயுபமேங்கள் விளக்கமாவைந்திராறும்
புந்தியாறெட்டோடொன்பான் புகர்லாபங்கருமம்வியம்
சுந்தரபொன்னைந்திராறு துயருநோய்லாபங்காணே. 24

7-வது சுலோகம். இதுவுமது.

பிருகவன்றனக்கீராறும் பிணியொடுலாபமாகும்
பருதிக்குகேந்திரங்கள் பகர்தனமாயுள்லாபம்
உருதிலக்கினத்தாநாலொன் றுபசெயதானமாகும்.
சரிவரவிந்தைவைத்து சாற்றிடும்பலன்கடாமே. 25

7-வது சுலோகம். இதுவுமது.

உரைத்தவித்தானந்தன்னி லுயர்சனிவந்தபோது
நிறைசுபகரனேடாவான் நிலையதுமாறிநிற்கில்
குறைவுறுமசுபமென்று கூறியகணிதநூலால்
தரைதனிலுள்ளபேர்க்கு சகலமுமுரைப்பதாமே. 26

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| சனி | 3 | 5 | 6 | 11 | | | | ஆக-4 |
| சூரியன் | 1 | 4 | 7 | 10 | 2 | 8 | 11 | ஆக-3 |
| சந்திரன் | 3 | 6 | 11 | | | | | ஆக-7 |
| செவ்வாய் | 3 | 6 | 10 | 11 | 5 | 12 | | ஆக-6 |
| புதன் | 6 | 8 | 9 | 10 | 11 | 12 | | ஆக-9 |
| குரு | 5 | 6 | 11 | 12 | | | | ஆக-4 |
| சுக்கிரன் | 6 | 11 | 12 | | | | | ஆக-3 |
| லக்னம் | 1 | 4 | 3 | 6 | 10 | 11 | | ஆக-6 |

இப்போது சொல்லப்பட்ட ஸ்தானங்களில் சனி சஞ்சார காலத்தில் சுபப்பலன் மற்றஸ்தானங்களில் இருக்க அசுபப்பல னென்பதாம். இந்த விதமாகவே யாவருக்கும் பலன் சொல்ல வேண்டியது.

8-வது சுலோகம். அஷ்டவர்க்கப்பல நிர்ணயகிரமம்.

பன்னிருராசிதன்னைப் பலமுடன்வரைந்துகொண்டு
மன்னியவேழுகோளை மாசறவதிலேநாட்டி
சொன்னவில்விந் துதன்னைச்சுகமுடனதிலேவைத்து
நின்னயப்பலன்களெல்லாம் நிலமிசையுரைப்பதாமே. 27

(இ-ள்) பன்னிரண்டு இராசிகளை எழுதி கிரகம் லக்னம் எழுதி விந்துவைத்து சொல்லப்பட்ட ஸ்தானங்களில் சுபப்பலன் சித்திக்கும் மற்ற ஸ்தானங்களிலிருக்க அசுபப்பலன் சித்திக்கு மென்பதாம். 28

8-வது சுலோகம். வசனம்.

முன்சொல்லி யிருக்கும் சுலோகம்போல எந்த கிரகத்திற் கெந்த ஸ்தானம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த ஸ்தானங்களில் அந்த கிரகம் சுபப்பல பிரதனுவான் மற்ற ஸ்தானங்களிலிருந்தால் அசுபப்பலன். பிரதனுவான் என்று தாற்பரியம் சென்மகாலத் தில் எந்த ஸ்தானத்தில் கிரகங்களிருக்குமோ அந்த வேழுஸ்தா னங்களிலும் சென்மலக்னம் ஒன்று இந்த எட்டு ஸ்தானமும் இவ் விடத்தில் சென்மகாலத்தைக்கண்டு கிரகிக்கப்படுமானதால் இந்த ஸ்தானத்தில ஒவ்வொரு ஸ்தானமுதற்கொண்டு அந்த அஷ்டவர் க்கத்தில் இஷ்டமானிஷ்ட சோதனம் செய்வதாலும் இஷ்டானிஷ் டங்களில் எது அதிகமாயிருக்குமோ அதின் பலன் கிரகம் கொடு க்கும் ஆனதால் இராசி சக்கரத்தில் சென்மகால கிரகஸ்திதியை எழுதிஎந்தக்கிரகஅஷ்டவர்க்கத்தில் எந்தஸ்தானத்தில் சுபப்பலன் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தஸ்தானத்தில் சுன்னமும் அசுபப் பலன் சொல்லப்பட்டிருக்கிற ஸ்தானங்களில் ரேகையுமெழுதி எந்தராசிக்கு பிந்து அதிகமா வருமோ அந்த ராசியில்அந்தகிரகம் சுபப்பலன் கொடுக்கும். எந்த ராசிக்கு ரேகைஅதிகமாகவருமோ

அந்த ராசியில் அந்தகிரகம் அசுபப்பலன் கொடுக்கும் அதெப்படி யென்றால்,

8-வது சுலோகம். விந்துபலன்.

எட்டுவிந்திருந்தஸ்தான மிவியாதியதாங்கோள்கள்
இட்டமாஞ்சாரத்தாலே வெழிலுடன்வருகுங்காலம்
மட்டிலாச்சுபப்பலன்கள் மகிழ்ந்துபூரணமதாக
சட்டமாய்த்தருவாரென்று சாற்றினேம்பலன்கடானே.

(இ-ள்.) அஷ்டவர்க்கம் விந்துவைத்ததில் எட்டுவிந்திருந்த ஸ்தானத்தில் அந்த கிரகம் சஞ்சாரத்தினால் சஞ்சாரஞ்செய்யுங்காலத்தில் சம்பூர்ணமான சுபப்பலனைக் கொடுப்பாரென்பதாம். 29

8-வது சுலோகம். விந்துபலன்.

பகர்ந்திடுமட்டவர்க்கம் பலனதுவிந்துதன்னால்
சகந்தனிலேழுமுங்கால் சாற்றிடுமாறில்பாதி
யுகந்திடுமைந்துகாலா மொருநான்குஞ்சுபமேபாதி
சுகந்தருபலனிவ்வாறு சுபமுங்காலரைக்காலாமே.

(இ-ள்.) அஷ்டவர்க்கத்தில் ஏழுவிந்திருந்தால் ஒரு ரேகையிருக்கும் விந்து தொகையில் ரேகைத் தொகையைக்கழிக்க ஆறு விந்து மிச்சமானதால் அரை சுபப்பலன் ஐந்து விந்திருந்த தானத்தில் மூன்று ரேகையிருக்குமானதால் காற்சுபப்பலன் நாலுவிந்திருந்த தானத்தில் சுபாசுபப்பலன் இரண்டு மல்லாது மததிமபலனும். இந்த விதமாக சுபப்பலனை யறியவேண்டிய தென்பதாம். 30

உதாரணம்.

ஆயுள் கணிதப்படலத்தில் சொல்லியபடி பரமாயுர்த்தாய ஜீவித யோகத்தில் பிறந்தவனுக்கு குஜாஷ்டவர்க்கம் எப்படி யென்றால்.

| | | | |
|---|---|---|---|
| மீனம்-சுக்கி<br>0 0 0<br>I I I I I | மேஷ சூரி<br>0 0 0<br>I I I I I | ரி-பு-சந்<br>0 0 0<br>I I I I I | மிதுனம்<br>0 0 0<br>I I I I I |
| கும்பம்<br>0 0 0 0<br>I I I I | குஜன்-அஷ்டவர்க்கம் | | கடக-குரு<br>0 0 0 0<br>I I I I |
| மகர செவ்<br>0 0 0 0 0<br>I I I | | | சிம்மம்<br>0 0 0 0 0<br>I I I |
| தனுசு<br>0 0<br>I I I I I I | விருச்சிகம்<br>0<br>I I I I I I I | துலா-சனி<br>0 0 0 0 0<br>I I I | கன்னி<br>0 0<br>I I I I I I |

சென்ம லக்னமான மீனத்தில் சுக்ரன் இரண்டாமிடமான மேடத்தில் சூர்யன் மூன்றாமிடமான ரிஷபத்தில் புதன் சந்திரன் ஐந்தாமிடமான கடகத்தில் குரு எட்டாமிடமான துலாத்தில் சனி பதினோராமிடமான மகரத்தில் செவ்வாய் இப்படியிருக்க குஜாஷ்டவர்க்கமான மேஷத்தில் ஐந்துரேகையும் மூன்றுவிந்து மானதால் ரேகையில் தொகையில் விந்து தொகையைக்கழிக்க இரண்டுரேகை மிச்சமானது கொண்டுகுஜன் சாரவசத்தினால்மேஷ விராசி யடைந்தபோது அரையே அரைக்கால் அசுபப்பலன் கொடுப்பான்.

ரிஷபத்தில் ஐந்துரேகையும் மூன்று விந்துவருமானதால் ரேகையின்தொகையில் விந்துவின் தொகையைக்கழிக்க இரண்டு ரேகை மிச்சமானதால் விருஷபவிராசி யடைந்தபோது அரையே அரைக்கால் அசுபப்பலன் கொடுப்பான்.

மிதுனத்தில் ஐந்துரேகையும் மூன்றுவிந்தும் வருமானதால் ரேகையின் தொகையில் விந்துவின் தொகையைக்கழிக்க இரண்டு ரேகை மிச்சமானதால் மிதுன விராசியடைந்தபோது அரையே அரைக்கால் அசுபப்பலனைக் கொடுப்பான்.

கடகத்தில் நாலுரேகை நாலுவிந்து சமமாக வருமானதால் கடக விராசியடைந்தபோது தத்யமபலன் தருவாரென்பதாம்.

சிம்மத்தில் ஐந்துவிந்தும் மூன்றுரேகையும் வருமானதினால் விந்துதொகையில் ரேகைத் தொகையைக்கழிக்க இரண்டுவிந்து மிச்சமாகுமானதால் சிம்மவிராசியடைந்தபோது அரையே அரைக்கால் அசுபபலன் கொடுப்பான்.

கன்னியில் ஆறுரேகையும் இரண்டுவிந்தும் வருமானதினால் கன்னியாராசி யடைந்தபோது அரைக்கால் அசுபப்பலன்தருவார். துலாத்தின் ஐந்துவிந்தும் மூன்றுரேகையும்வருமானதினால் துலா ராசி யடைந்தபோது அரையே அரைக்கால் சுபப்பலன்தருவார் விருச்சிகத்தில் ஏழுபேரையும் ஒருவிந்தும் வருமானதினால் விருச்சிகராசியடைந்தபோது அரையே அரைக்கால் அசுபப்பலன் தருவார் தனுசில் ஆறுபேரையும் இரண்டுவிந்தும் வருமானதினால் தனுவிராசியடைந்தபோது அரைக்கால் அசுபப்பலன்தருவார் மகரத்தில் ஐந்துவிந்தும் மூன்றுரேகையும் வருமானதினால் மகர ராசி யடைந்தபோது அரையே அரைக்கால்சுபப்பலன்தருவார். கும்பத்தில் நாலுவிந்தும் நாலுரேகையும்வருமானதினால் இரண்டு சமமானதால் கும்பவிராசியடைந்தபோது மத்திம பலன்தருவார். மீனத்தில் ஐந்துரேகையும் மூன்றுவிந்தும் வருமானதினால் மீன விராசியில் குஜன் அடைந்தபோது அரையே அரைக்கால் அசுபப்

பலன் தருவார். இப்படி சர்வக்கிரக அஷ்டவர்க்கத்தாலும் வந்த சுபப்பலனும் அசுபப்பலனும் மொத்தமாகச்செய்து அந்த சுபா சுபப்பலன்களில் அதிகமானதைக் குறைவுள்ளதினல் கழிக்க எந்த பலன் மிச்சமோ அந்த பலனெல்லாமுண்டாகுமென்று சொல்லத் தக்கது. இந்தவிதமாய் சுலோகம் பாதராயணரால் சொல்லப்பட் டிருக்கிறது.

8-வது சுலோகம். வசனம்.

இந்த யோகத்திற்கே புதன் அஷ்டவர்க்கம் எழுதப்பட்டது முன்சொன்னபடியே சென்மலக்னமான மீனத்தில் சுக்ரனும் இரண்டாமிடமான மேஷத்தில் சூரியனும் மூன்றாமிடமான ரிஷபத் தில் புதன் சந்திரன் ஐந்தாமிடமான கடகத்தில் குரு அஷ்டமான துலாத்தில் சனி பதினோராமிடமான மகரத்தில் குஜன் இப்படி இருக்க புதன் அஷ்டவர்க்க பலநிர்ணயக் கிரமம் எப்படியென்றால்.

| | | | |
|---|---|---|---|
| மீ ல-சு<br>0 0 0 0 0<br>! ! ! | மே-சூரி<br>0 0 0 0 0<br>! ! ! | ரி-சந்-புத<br>0 0 0 0<br>! ! ! ! | மிது<br>0 0 0 0 0<br>! ! ! |
| கும்ப<br>0 0 0 0 0<br>! ! ! | புதன் | | கட-குரு<br>0 0 0 0<br>! ! ! ! |
| மக-செ<br>0 0 0 0 0<br>! ! ! | | | சிம்<br>0 0 0 0 0<br>! ! ! |
| தனு<br>0 0 0<br>! ! ! ! | விர்ச்<br>0 0 0<br>! ! ! ! ! | துலா-சனி<br>000000<br>! ! | கன்<br>0 0 0<br>! ! ! ! ! |

இந்தயோகத்திற்கு மேஷத்திற்கு ஐந்து விந்து மூன்றுரேகை வருமானதினல் விந்து தொகையில் ரேகைத் தொகையைகழிக்க இரண்டுவிந்துமிச்சமாகும் ஆனதால் இந்தயோகத்தில் பிறந்தவரு க்கு புதன் சாரவசத்தினல் மேஷவிராசி யடைந்தபோது சுகப் பலன் தருவார்.

ரிஷபத்திற்கு நாலுவிந்துவும் நாலுரேகையும் வருமானதினல் புதன் ரிஷபவிராசி யடைந்தபோது சுபா சுபப்பலன் இரண்டை யும் கொடுக்கமாட்டான்.

மிதுனத்தில் ஐந்து விந்தும் மூன்றுரேகையு வருமானதினல் புதன் மிதுனராசி யடைந்தபோது அரையே அரைக்கால் சுபப் பலன்கொடுப்பான்.



கடகத்தில் விந்தும் ரேகையுஞ் சமானங்களான நாலேவரு மானத்தினுல் புதன் கர்க்கடக விராசியடைந்தபோது சுபா சுபப் பலன் இரண்டும்தொடுக்கமாட்டான்.

சிம்மத்தில் ஐந்து ரேகையும் மூன்றுவிந்தும் வருமானதினுல் புதன் சிம்மவிராசி யடைந்தபோது காலே அரைக்கா சுபப்பலன் கொடுப்பார். கன்னியில் ஐந்து ரேகையும் மூன்று விந்தும் வருமானதினுல் புதன் கன்னிபிராசி யடைந்தபோது காலே அரைக்கால் அசுபப்பலன் கொடுப்பான். துலாத்தில் ஆறுவிந்தும் இரண்டு ரேகையும் வருமானதினுல் புதன் துலா விராசி யடைந்தபோது அரைக்கால் அசுபப்பலன்கொடுப்பார் விருச்சிகத்தில் மூன்றுவிந்தும் ஐந்துரேகையும் வருமானதினுல் புதன் விருச்சிகவிராசியடைந்தபோது சமானமாக அசுபப்பலன் கொடுப்பார். தனுசில் நாலு விந்தும் நாலுரேகையும் வருமானதினுல் தனுசுராசில் யடைந்த போது சுபாசுபப்பலன் கொடுக்கமாட்டான் மகரத்தில் ஐந்து விந்தும் மூன்றுரேகையும் வருமானதினுல் மகரவிராசியில் புதன்அடைந்தபோது அரையே அரைக்கால் சுபப்பலன் கொடுப்பார்.

கும்பவிராசியில் ஐந்து விந்தும் மூன்றுரேகையும் வருமான தினுல் கும்ப விராசி யடைந்தபோது அரையே அரைக்கால் சுபப் பலன் கொடுப்பான் மீனத்தில் ஐந்து விந்தும் மூன்றுரேகையும் வருமானதினுல் மீனவிராசியிலடைந்தபோது அரையே அரைக் கால் சுபப்பலன் கொடுப்பார். இந்தவிதமாக மற்றகிரகத்துக்கும் அஷ்டவர்க்கப்பலன் யூகிக்கத்தக்கது இந்த தசாந்தர் தசா அத்தி யாயத்தில் சொல்லி இப்போது மறுபடியுஞ் சொல்லுவதால் பவு னருக்யபலன் சம்பவிக்கும் அந்தசங்கியைக்கொண்டு பவுனருதய பலன் கிடைக்காதென்று தெரியச்செய்யும்விதம் எப்படியென்ருல் தசாந்தர்த்தா அத்தியாயத்தில்.

ஒருகிரகம் ஒருகாரணத்தால் சுவர்ணதாதாவா யிருந்து மற் ருெரு காரணத்தால் சுவர்ணுபகாரியாஞல் அப்போதுஅந்தகிரகம் சுவர்ணதானமாவது சுவர்ணுபகாரமாவது செய்யமாட்டான் ஒரு கிரகம் இரண்டுகாரணத்தினுல் சுவர்ணதாதாவாயிருந்து ஒருகாரண த்தினுல் சுவர்ணுபகாரியானுல் ஒருகாரணத்தினுல் சுவர்ணதானஞ் செய்பவனுகும் இப்படி ஒன்றுக்கொன்று விரோதமாயும் சமான மான இரண்டுபலனும் குறையுமென்று சொல்லப்பட்டது

இந்த அஷ்டவர்க்கத்திலிருந்து சமானமாயிருந்தபோதிலும் சுபாசுபங்கள் ஒன்றுக்கொன்று விரோதமான இரண்டுபலனும் குறையும் என்று சொல்லப்பட்டது அதெப்படியென்றால் பாதராயணர் யவனேஸ்வராதிகளால் இந்தகிரகமிருந்த ஸ்தானமுதற்கொண்டு இந்தஸ்தானமிருந்த கிரகம் சுபாசுபப் பலன்கள்கொடுப்பார் பிரத்தியோகமா அஷ்டவர்க்கப்பலன்கள் சொல்லியிருக்கிறார் ஆனதால் அந்த சுபா சுபப்பலன்கள் சமானமாகவிருந்தால் அந்த இரண்டு பலனும் குறையும் இப்படிகொஞ்சம் சுபப்பலனும் கொஞ்சம் அசுபப்பலனும்) பிராப்தியாகுமானால் அந்த சுபாசுபப்பலன்களில் எது அதிகமாக விருக்குமோ அந்த பலன் பிராப்திக்குமென்று தெரியத்தக்கது அதெப்படியென்றால்.

அஷ்டவர்க்கத்தில் யவனேஸ்வரர் சொல்லிய பிரகாரம் ஒரு காரணத்தால் சுவர்ணதாதாவாயிருந்து மற்றொரு காரணத்தால் ரசிதமென்னும் வெள்ளியை) அபகரிக்கும் தன்மையும் அந்த பலனுக்கு தானபகாரணத் மகமான விரோத முண்டாயிருக்குமானதால் அந்தகிரகம் சுவர்ணஸ்தானமாவது ரசிதமென்னும் வெள்ளி அபகரித்தலும் செய்யமாட்டான் இப்படி எந்தஸ்தானத்தில் சுபாதிக்க முண்டாயிருக்குமோ அந்த ஸ்தானத்திசுபனும் எந்தஸ்தானத்தில் அசுபாதிக்க முண்டாயிருக்குமோ அந்த ஸ்தானத்தில் அசுபனும் எந்தஸ்தானத்தில் சுபாசுபம் சமானமாயிருக்குமோ அந்த ஸ்தானத்தில் சமனுமாவானென்று தெரியத்தக்கது இந்தவிதமாக அஷ்டவர்க்கத்தில் சமானமில்லா திருந்த பலன்கூடஇஷ்டானிஷ்ட சோதனம் சொல்லப்பட்டிருப்பதைகொண்டு பௌனருக்தமென்னும் பலன் சித்திக்காது ஆனதால்.

8-வது சுலோகம் வசனம்.

வராகமிகிராச்சாரி அஷ்டவர்க்கப் பலன்களை வெவ்வேறு சொல்லாது ஸ்தானசங்கியை மாத்திரம்கொண்டு ஸ்தானசுபாசுபத்வம் சொல்லுகிறார். யவனேஸ்வராதிகள் அஷ்டவர்க்கப் பலன்கள் வெவ்வேறாகச் சொல்லியதும் கடைசியில் வராகமிகியின் கருத்துபோல் சுபாசுபப்பலன் சங்கியை யுண்டாகாதிருந்ததானல் அந்த இரண்டுபலனும் குறைந்துபோம் சுபாசுப்பலன்களில் அதிகமாயிருக்கப்பட்ட பலன் பிராப்தியாகுமென்று சொல்லி யிருக்கிறார். இந்த அர்த்தத்திற்கு சுலோகம் யவனேஸ்வரரும் பாதராயனரும் சொல்லியிருக்கிறரென்டதாம்.

லக்ன முதற்கொண்டாவது சந்திரனிருந்த விராசி முதற்கொண்டாவது உபசெயஸ்தானத்திலும் உச்சதானத்திலும் சவக்ஷேத்திர மூலத்ரிகோணங்களில் இருந்தகிரகம் அஷ்டவர்க்கத்தில்

சுபப்பலன் கொடுப்பார் இந்த அர்த்தத்திற்கு சுலோகம் ஸ்ரீ தேவ கீர்த்தி சொல்லியிருக்கிறார்.

லக்ன முதற்கொண்டாவது; சந்திரன் முதற்கொண்டாவது அபசெயதானத்திலும் தன்னீசதானத்திலாயினும் சத்ருக்ஷேத்திரத்திலிருந்தகிரகம் அஷ்டவர்க்கத்தில் சுபப்பலன் கொடுப்பவரான போதிலும்தானேசுபப்பலசம்பத்துஅதிகமாகவுண்டாகாதுஇப்படி சொல்லுவதால் அஷ்டவர்க்கத்தில் அசுபப்பலன் கொடுக்கும் கிரகம் அபசெயநீச்சத்துரு தானமிருந்தால், மிகவும் அசுபப்பலன் கொடுப்பாராம் உபசெய சுவக்ஷேத்திர மித்ரக்ஷேத்திரஉச்சமூலத்ரிகோணங்களிலு மிருந்தால் அசுபப்பலன் சுலபமாகக் கொடுப்பாராம். சுபப்பலன் கொடுக்கும் கிரகம் அபசெயம் சத்ரு நீசச்தானமிருந்தால் சுபப்பலன் சுலபமாக கொடுப்பாராமென்று அறியவும் இவ்விடத்தில் உச்சநீசாதி தானமடைந்த சுபாசுபப்பலன் கற்பனை ஜென்மகால கிரகஸ்திதியைவைத்து செய்யவேண்டியது இந்த விஷயம் சுலோகம் ஸ்ரீ தேவகீர்த்தியும் யவனேசுவரரும் சத்யாசாரியும்சொல்லியிருக்கிறார்.

சந்திர நீங்கியமற்றோர் பலவானாயிருக்க தங்கள் தங்களுக்கு சொல்லப்பட்ட சுபாசுபப்பலன்கள் அதிகமாககொடுப்பார் பலவீனமாயிருந்தால் சுலபமாகக் கொடுப்பார். சந்திரன் சுபனாயிருந்தாலும் பலவீனனாயிருந்தால் அசுபப்பலனைக் கொடுப்பானே தவிர சுபப்பலன் கொடுக்கமாட்டான் பலவானாயிருந்தால் சுபப்பலன் கொடுப்பார் இந்த அர்த்தத்திற்கு சுலோகம் ஸ்ரீ தேவகீர்த்தியால் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம்.

(படலச்செய்யுள் தொகை,)

அட்டவர்காதிவிந்து வடைத்திடுபட்லந்தானும் எ
சட்டமாவசனம்செய்யுள் சாற்றினேன்முப்பத்தந்து
திட்டமாந்திருமலையன் செய்யநன்னகரில்வாழு
மிட்டனும்வயித்திலிங்க மியற்றினனுலகிளோர்க்கே.

பத்தாவது

## அஷ்டவர்க்கப்படலம்

முற்றிற்று.

---

Page number incorrect

உ

# மங்களேஸ்வரீயம்.

பதினோராவது

## ஜீவனபலப்படலம்.

### விநாயகர் துதி.

சீர்தரும்புவியிலுதித்திடும்பேர்க்கு செல்வமுண்டாயிடும்விதங்கள்
பேர்பெறவுரைக்கவருளது வளிப்பாபிரபலமுகந்நாதா
நேர்நிறையென்னும்இலக்கணமுறையும் நிர்ணயப்பலனதுகண்டு
பார்தனிலுனதுபதமலர்பணிவேன் பரம்பொருளேஎனைக்காப்பாய்

### 1-வது சுலோகம். தனப்பிராப்தி.

பத்திலேயிரவிநின்றல் பகர்தனம்பிதுர்தன்னாலும்
உத்தமாமதிதாயாலு முதிரன்சத்துருவால்புந்தி
மித்துருவாலும்பொன்னோன் மேவியஉடன்பிறந்தார்
வித்தகவெள்ளிமாதால் விரிசனிதாழ்ந்தோராலே.

இ - ள். லக்னத்திற்கும் சந்திரனுக்கும் பத்தாமிடத்திலே இருந்த கிரகங்களினால் தனம்வருத்து சொல்லப்படும். அதெப்படியென்றால், ஜென்ம லக்கினத்துக்கு பத்திலாவது சந்திரனுக்குப் பத்தாமிடத்திலாவது சூரியனிருக்க பிதுரினால் தனங்கிடைக்கும். சந்திரனிருக்க மாதாவினால் தனங்கிடைக்கும். செவ்வாய்க்கு சத்துருவால் கிடைக்கும் புதனுக்கு மித்துருக்களாலும் குரு சகோதரனாலும் சகோதரியினாலும் சுக்கிரன் ஸ்திரீகளாலும் களத்திரத்தினாலும் சனிதனக்கு தாழ்மையானவர்களினாலும் தனமுண்டாகுமென்பதாம். 1

### 1-வது சுலோகம். தனப்பிராப்தி.

தாழ்விலாவுதயத்திற்கும் சந்திரன்றனக்கும்பத்தில்
பாழ்படாதுற்றகோள்கள் பகர்திசைபுத்தியந்த்ரம்
ஊழ்வலியதனாலிந்த வுலகத்திற்செம்பொன்செல்வம்
வாழ்வதுதருவரென்றே வகுத்திட்டோமறிந்திடாயே.

இ - ள். ஜென்மலக்கினத்திற்கு பத்தில் ஒரு கிரகமும் சந்திரலக்கினத்திற்குப் பத்தில் ஒரு கிரகமுமிருந்தால் அந்த இரண்டு கிரகத்தின் திசை புத்தி அந்திரங்களில் முன்சொன்ன விதமாகவே அந்தந்த கிரகத்துக்குடைய மனிதராலே தனங்கிடைக்குமென்பதாம். 2

1-வது சுலோகம். தனப்பிராப்தி.

அரியுகல்லுதயத்திற்கு மம்புலிதனக்கும்பத்தில்
பெருமையாய்ப்பலகோள்நிற்கிற் பேசிறேமைக்கோள்கட்கு
வருதிசைபுத்திகாலம் மற்றுமேபிராணசூக்மம்
திருமகளருளினாலே செல்வமுண்டாகுமென்னே.

இ-ள். சென்மலக்னத்திற்கும் சந்திரனுக்கும் பத்தில் பல கிரகமிருந்தால் அவர்கள் திசை புத்தி யந்திரம் பிரமாணம் சூட்சமங்களிலே லட்சுமிவிலாச முண்டாகி தனம் அடைவானென்பதாம் ஒரு உதாரணம் கார்க்கி வசனமே. 3

1-வது சுலோகம். தனப்பிராப்தி.

என்னிடுமுதயத்திற்கு மெழில்மதியவற்கும்பத்தில்
மன்னுசூனியமால்நிற்க மதிரவியுதயத்திற்கே
வுன்னிடுபத்தாமாதி யுருநவாங்கிசாதிதன்னால்
பொன்னொடுதனமுஞ்சேரும் புகழ்பெறவிருப்பனாமே.

இ-ள். ஜென்மலக்னத்திற்கும் சந்திரனுக்கும் பத்தாமிடத்தில் கிரகமில்லாமல் அந்த வீடு சூனியமாயிருந்தால் அப்போது லக்னம் சூரியன் சந்திரன் இவர்களுக்கு தசமாதிபதியான கிரகம் எந்த விராசி நவாங்கிசையில் இருப்பானோ அந்த நவாம்சையின் அதிபதியாகிய கிரகம் யாரோ அவருக்குச் சொல்லப்பட்ட விதங்களினாலே தனம் உண்டாகும். அவர்கள் திசைபுத்தியந்திரங்களில் தனம உண்டாகும். உதாரணம் லக்ஷியமான கிரந்தமும் யார்க்கி வசனமும் என்பதாம். 4

2-வது சுலோகம் சூரியனால் தனப்பிராப்தி.

இரவிநவாங்கிசாதி யெனவரில்சுகந்தம்கூட்டு
பரிமளவவிழ்தத்தாலும் பண்டிதகளுமங்தங்கும்
உரியகம்பளத்தினோடு மோங்குசித்திராசனங்கள்
கிரயவிக்கிரயத்தாலுங் கீர்த்தியாய்தனமுண்டாமே.

இ-ள். ஜென்மம் சந்திரன் சூரியனுக்கு தசமாதிபதியிருந்த நவாங்கிசையானது சிங்கவிராசியா யிருக்கில் அதற்கு உடைய அதிபதிசூரியனானதினாலே சுகந்ததிரவியம் கூட்டுவர்க்கம் வஸ்துக்களும் பரிமளமும் அதாவது கெந்தபொடி ஊதுவத்தியில்லை முதலானவைகளினாலும் பொன் தங்கத்தாலும் ஆட்டுமயிர்தோல் ரத்தினக்கம்பளம் மற்ற பலவித கம்பளங்கள் வியாபாரத்தினாலும் வைத்தியம் செய்வதினாலும் மருந்துகள் செய்துக் கொடுத்தலினாலும் தனங்கிடைக்கும் என்பதாம். 5

2-வது சுலோகம். சந்திரதனப்பிராப்தி.

உண்டெனுநவாங்கிசாதி யுடுபதியானபோது
ஒண்டொடியதனால்செல்வ முயர்கிருஷிவிவசாயத்தால்
தெண்டிரைக்கடலினுள்ள சீவர்கள்வஸ்துவாலும்
அண்டியதனமுஞ்செம்பொன் னடைந்திடுஞ்சேயனுமே.

இ - ள். லக்னசந்திரன் சூரியனுக்கு தசமாதிபதி யிருந்தது கடகநவாங்கிசையானல் அதற்கு அதிபதி சந்திரனைதால் கிருஷி விவசாயம் நஞ்செய் புஞ்செய் பயிர்களினுலும் ஸ்திரீகளினுலும் அவர்களைக் கொண்டெந்த விதத்தினுலும் ஜலவஸ்துக்களினுலும் தனம் உண்டாகும். அதாவது சங்குமுத்து பவளம் பலகறை உப்பு மச்சங்கள் இன்னம் சகலவஸ்துக்களெதுவாலும் அவை களினுலே தனமுண்டாகு மென்பதாம். 6

2-வது சுலோகம். செவ்வாயால் தனப்பிராப்தி.

சேய்நவாங்கிசனேயாகில் செம்புபொன்ரஜிதம்தாது
தாய்மனேனிலைமால்தாரம் சுரிகையாயுதவியாபாரம்
ஆய்ந்துமுன்பின்பார்க் தாண்மையால்வேலைசெய்தும்
தீய்தனல்தொழில்மல்யுத்தம் செய்வதால்கனகஞ்சேரும்.

இ-ள். லக்னசந்திர சூரியனுக்கு தசமாதிபதியிருந்தது மேட விர்ச்சிக நவாங்கிசையாகில் அதற்கு அதிபதி செவ்வாயானதால் தங்கம் பொன் வெள்ளி செம்பு இன்னம் பலவிதமான தாதுவர்க் கங்களினுலும் மனேசிலை தாளகம் அரிதார முதலானவைகளின லும் வியாபாரத்தினுலும் கத்தி முதலான ஆயுதங்களைச்செய்து அதை விற்பனை செய்வதினுலும் முன்பின்பாராமல் சரீரபலத்தின லும் தைரியத்தினுலும் வேலைசெய்வதினுலும் மல்யுத்தஞ்செய்வதி லும் நெருப்பினல் செய்யப்பட்ட தொழிலினலேயும் தனம்சேரு மென்பதாம். 7

2-வது சுலோகம். புதன் தனப்பிராப்தி.

சவுமியநவாங்கிசராகில்தான் கல்வியதனில்தேர்ந்து
கவிபிரசங்கம்செய்து கணிதசோதிடமாந்திரீகம்
நவிலலக்கணவிசித்ரம் நன்மலர்மாலைகட்டல்
புவியதில்சிற்பமாய்ந்து புகழ்சித்ரம்வரைதலாலே.

இ - ள். சென்மம் சந்திரன் சூரியனுக்கு தசமாதிபதி யிருந்த நவாங்கிசை மிதுனங் கன்னியானல் அதற்கு அதிபதியாகிய புத னைதினலே கல்விதேர்ச்சியினல் கவிப்பிரசங்கம் கணக்கு சோதி டம் மாந்திரீகம் இலக்கணம் விசித்ரம் வியாகரணமும் தெரிந்து இருப்பதினுலும் புஷ்பமாலை கட்டுவதினுலும் சிற்பநூல் தெரிந்த

திலும் சித்திரங்கள் எழுதுவதிலும் தனங்கிடைக்கும் எழுத்து எழுதுவதும் புத்தகமுதலானதுகளாலும் தனங்கிடைக்கும் உதாரணம் பாடாந்தரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்பதாம். 8

3-வது சுலோகம். குருதனப்ராப்தி.

கனகநவாங்கிசமாகில் கங்கையாடுதலுபாசம்
தனதர்மம்யாகந்தானம் சாற்றியபுலவோர்தேவர்
புனிதபூாணிக்கந்தோன்றும் பொற்புருவிடத்திலும்
இனியவேதியர்தங்கத்தா லெழில்தனம்புகழுண்டாமே.

இ - ள். லக்னம் சந்திர சூரியனுக்கு தசமாதியிருந்த நவாங்கிசை தனுசு மீனமானல் அதற்கு அதிபதி குருவானதால் புண்ணிய தீர்த்தமாகிய கங்கை முதலான தீர்த்தங்களாடுவதிலும் தனம் தானதர்மம் யாகங்கள் செய்வதிலும் உபாசனை செய்தல் உபவாச மிருத்தலிலும் பிராமணர் தேவர் வித்துவாமிசர்களிலும் தங்கம் பொன்னிலும் மாணிக்க முற்பத்தியாகும் ஸ்தானங்களிலும் தனமுண்டாகு மென்பதாம் 9

3-வது சுலோகம். சுக்கிரதனப்ராப்தி.

புகர்நவாங்கிசமதாகிற் புகழ்மணிவயிரம்பச்சை
மிகுவயிடூர்யமுத்து மேலிந்திரநீலம்வெள்ளி
பகர்பத்மராகசெட்டல் பரிகரிபசுமாடாடு
மகிஷவியாபாரத்தால் வருந்தனஞ்சௌபாக்கியம்மே.

(இ-ள்.) லக்கினம் சந்திர சூரியனுக்கு தசமாதிபதியிருந்த நவாங்கிசை ரிஷப துலாமானல் அதற்கு அதிபதிசுக்கிரனுகையால் யாவரும் புகழப்பட்ட மாணிக்கம் வயிரம் பச்சை வைடூர்யம் முத்து இந்திர நீலம் வெள்ளி புஷ்பராகம் முதலிய வியாபாரத்திலும் யானை குதிரை பசுமாடு ஆடு எருமை முதலிய வியாபாரத்திலும் தனமுண்டாகு மென்பதாம். 10

3-வது சுலோகம். சனியால்தனப்ராப்தி.

வரைந்திடுசனியினம்சம் வழிநடைஆயாசங்கள்
குறைவுறுமிருகம்பட்சி கொலைபுரிதொழிலால்மிக்க
விரைவுடன்சுமையெடுத்தல் மேனிபிலடித்தல்நீச
முறைதொழில்செய்வதாலும் முதுதனமடைவன்காணே

இ - ள். சென்ம லக்னம் சந்திரன் சூரியனுக்கு தசமாதிபதியிருந்த நவாங்கிசை மகரகும்பமானல் அதற்கு அதிபதி சனியானதால் பிரசைப்பட்டு வழிநடத்தல் முதலானவைகளில் ஆயாசமுண்டாதல் மிருகம் பட்சி இவைகளை தந்திரமாகப் பிடித்துவதைத்தல் கொலைசெய்தல் சுமையெடுத்தல் கன்னுடலில் தானே அடித்

துக் கொள்ளல் நீசகர்மம் செய்தலினாலும் தனம்உண்டாகுமென்பதாம். 11

3.வது சுலோகம் தனப்ராப்தி விவரம்

காணிலக்கினமுஞ்சூர்யன் களங்கற்கும்பத்தாமாதி
ஊணிடுசாரங்கொண்டேயுயர் நவாம்சாதிக்கேற்ற
தோணிடுமுன்வர்கம்போல் சுதனுக்குத்தனங்களியாவும்
பேணியேகிடைக்குமென்று பிரபலமுடனேகூறே.

இ-ள். லக்னம் சந்திர சூரியர்களுக்கு தசமஸ்தானாதிபதியானவன்சாரவசத்தினாலே எந்த நவாங்கிசையிலிருப்பனோ அந்தநவாங்கிசைக்கு எந்த கருமம்சொல்லப்பட்டிருக்கிறதோ அவனுடைய ஸ்திதியைக்கொண்டுமுன் சொன்ன விதங்களினாலே காரிய சித்தியாகும் அதின்பேதங்களை இனி அடுத்த கவியிற் சொல்லப்படு மென்பதாம். 12

3-வது சுலோகம். உச்சரால் தனப்பிராப்தி.

கூறியநவாங்கிசத்தோன் குணமொடுபரமவுச்சம்
தேறியேநின்றபோது சீர்தனம்லகுவாய்க்கிட்டும்
பாரினுலுச்சமென்றால் பகர்பிரயத்தினங்கள்
நேரிடாதிருந்தபோதும் நிதிதனஞ்சேருமென்றே.

இ-ள். நவாங்கிசாதிபதியான கிரகம் யாரானாலும் பரமவுச்சமாகிய ஸ்தானத்திலிருந்தால் சுலபமாகவே விசேஷதனப் பிராப்தியாகும். உச்சராசியிலிருக்க தான் பிரயத்தனஞ் செய்யாதிருந்தபோதிலும் தானேகூடிவரும் தனங்கள் சௌபாக்கியமென்பதாம்.

3-வது சுலோகம். பகைநீச தனப்பிராப்தி.

என்றுமேநவாங்கிசத்தோனெழிலற்றுநீசமானால்
அன்றுமேசுயகன்மத்தாலடுத்தபோஷணையாற்சித்தி
நின்றிடபரமநீசம் நேர்ந்தவரெவரானாலும்
சென்றிடக்கட்டத்தோடு திரவியமற்பஞ்சேரும்.

இ-ள். நவாங்கிசாதிபதியான கிரகம் எவரானாலும் நீசராசியில் இருந்தால் வெகுபிரயத்தினத்தாலும் சுயக்கிரியை போஷணையினாலும் பலன் சித்தியாகும் பரமநீசமானால் கஷ்டத்துடனும் மிக்கசொற்ப பலப்பிராப்த்தியாம் அதாவது அற்பமான தனங்கிடைக்கும் உதாரணம் கார்க்கிவசன மென்பதாம். 14

3-வது சுலோகம். இராசிபால் தனப்பிராப்தி,

சேரவேபத்தாமாதிரிராசிநவாங்கிசமேற
தாரணிசுயதேசத்தில் சரமெனில்தூரதேசம்

பாரதிலுபயமானல் பலநாடுஞ்சுயதேசத்தில்
நேரதாய்தனங்கள்சேரும் நிலையதுகண்டுகொள்ளே.

இ-ள். தசமஸ்தானதிபதியிருந்த நவாங்கிசராசி சரராசியானல் தூரதேசத்திலும் திரராசியானல் சுயதேசத்திலும் உபயமானல் பலதேயங்களிலும் சுயதேசத்திலும் தனங்கிடைக்கும் உதாரணம் கிரந்தாந்தர வசனமென்பதாம். 15

4-வது சுலோகம். ஆட்சியால் நட்பால் தனப்ராப்தி.

கொள்ளுலக்கினம்மதிக்கும் கூறியபத்தாமாதி
உள்ளுறுமாக்ஷியாகி லுறன்முறைசுயகன்மத்தால்
மெள்ளவேநட்புபெற்ருல் மித்துருவாலேசெல்வம்
ஒள்ளியபகையுமாகி லுயர்தனம்பகைவனுலே.

இ-ள். லக்னம் சந்திரசூரியருக்கு பத்தாமாதியிருந்த நவாங்கிசாதிபதி சென்மகாலத்தில் ஆக்ஷிபெற்றிருக்கின் சுயசன்மத்தினுலும் சுயபந்துக்களினுலும் தனங்கிடைக்கும் பகைபெற்றிருக்கில் பகைவனுடைய தனம் பகையினுல் கிடைக்குமென்பதாம். 16

4-வது சுலோகம். உச்சசூரிய தனப்பிராப்தி.

பகலவனுச்சமானல் பாக்கியம்சுயபலத்தால்
இகமதிலிரவிபன்னென் றிரண்டினிலுற்றபோதும்
சுகமுறுசுயவுச்சாதி சூழ்ந்திடசுபகரைக்கூட
சகலவிதங்களாலும் தனமதுகிடைப்பதாமே.

இ-ள். சென்மகாலத்தில் சூரியன் பலவானய் உச்சஸ்தானமாகிய மேஷத்திலிருக்க தன் சுயபலத்தால் தனப்பிராப்தியாகும் சூரியன் 2-மிடம் 11-மிடத்திலிருந்தாலும் சுயவுச்சாதிபல சகிதமானலும் சுயகிரகத்தினலே அனேகவிதமாய் தனங்கிடைக்கும் உதாரணம் கார்க்கிவசன மென்பதாம். 17

படலச்செய்யுள் தொகை.

தாரணிமானிடர்க்குத் தசமாதிதன்னலே
நேரிடுசீவனர்த்தம் நிலைபெறஏழ்செய்யுள்
பேருறுமலையிராயன் பிரபலநகரம்வாழும்
சீருறுவயித்திலிங்கம் செப்பினேன்றீரமாக.

ஜீவனபலப் படலம்.

முற்றிற்று.

---

# மங்களேஸ்வரீயம்.

பன்னிரண்டாவது

## இராஜயோகப்படலம்.

1-வது சுலோகம் வசனம்.

கிரந்தகர்த்தா இந்தப் படலத்தில் இராஜயோகஞ் சொல்ல நினைந்தவர் கிரகங்கள் உச்சமடைந்திருக்க க்ஷத்திரியர் வமிசத்தில் பிறந்தவர் இராஜாதிபதியாவாரென்று சகலகிரந்தங்களும் பிரசித்தமாகச்சொல்லி இருப்பதினுலே அந்த விஷயம் யவனேஸ்வராதிகள் தங்கள் தங்கள் உச்சஸ்தானங்களிலிருந்த பாபியாகிய சூரியன் செவ்வாய் சனி இவர்களினுல் பாபகர்ம புத்தியுடைய அரசர்கள் செனனமாவாரென்று சொல்வார்கள். இப்படிச் சொல்வதினுலே சுபர்கள் உச்சமாயிருக்கப் பிறந்தவர் சவுமிய குணவந்தர்களாயும் சுபாசுபக்கிரகம் உச்சமாயிருக்க சவுமியபாப மிஸ்ரமகுண சுபாவமுள்ளவரென்று அபிப்பிராயம் ஏற்படுகின்றது. இந்த விஷயத்திற்கு சுலோகம் யவனர் வாக்கியமும் ஜீவ சர்மாமதத்திலும் உச்ச தானங்களிலிருந்த பாபர்களினுல் இராஜயப்ராப்தியும் இராஜாதிபதியாகவும் நேரிடாதிருக்குமானுல் இராஜ சமானமாகியவராயும் தனவந்தர்களாயுங் குரோத சீலராயுங் கலகப்பிரியராயு மிருப்பாரென்று ஜீவசர்மாமதம் சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது. லகு ஜாதகமும் சாமானியமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதினுல் வராகமிகிராச்சாரியாருக்கு யவனேஸ்திரர் மதமே தனக்குசம்மதமென்று சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 1

2-வது சுலோகம். நான்கிராஜயோகம்.

இப்போது முப்பத்திரண்டுயோகம் சொல்லப்படும்.

பொன்ஞெடுசவுரிசெவ்வாய் புண்டரீகனுமேயுச்சம்
நன்னயமுடனிருக்க நண்டொடுதிறையுமேடம்
உன்னிதப்புல்வாயென்னு மோரையில்செனித்தபேர்கள்
மன்னஞய்வருவாரென்று மானிலத்தவர்க்குக்கூறே.

இ-ள். மேஷத்தில் சூரியன் உச்சமாயும் கடகத்தில் குருவுச்சமாயும் துலாத்தில் சனியுச்சமாயும் மகரத்தில் செவ்வாயுச்சமாயுமிருக்க மேஷத்தில் செனனமானுல் முதல் இராஜயோகம் கடகத்தில் செனனமானுல் இரண்டாவது இராஜயோகம் துலாத்தில் ஜனனமானுல் மூன்ருவது ராஜயோகம் மகரத்தில் செனனமானுல்

காலாவது இராஜயோகமாகும் இந்தக்கவியில் நான்கிராஜயோகம் சொல்லி இருக்கிற தென்பதாம். 2

2-வது சுலோகம். மூன்று இராஜயோகம்.

குறைவறுரவிசுன்பொன்னன் கோதிலாயுச்சம்பெற்றே
நிறையொடுகடகம்மேடம் நேருமிவ்வோரைதன்னில்
தறைதனிற்செனித்தபேர்க்கு சாற்றுவதென்னவென்னில்
அறைவதுராஜயோக மாகுமிச்சாதகர்க்கே.

இ-ள். சூரியன் சனி குரு உச்சமாயிருக்க துலாத்தில் செனனமானால் ஐந்தாவது இராஜயோகம் சூரியன் குரு சனியுச்சமாக கடகத்தில் செனனமானால் ஆறாவது இராஜயோகம் குரு சனி சூரியனுச்சமாக மேஷத்தில் செனனமானால் ஏழாவது இராஜயோகம் இந்தக்கவியினால் மூன்று இராஜயோகம் சொல்லப்பட்டதென்பதாம். 3

2-வது சுலோகம். மூன்று இராஜயோகம்.

பொன்னவன்சவுரிசெவ்வாய் புகழுடனுச்சமாக
உன்னிதத்துலையுநெண்டு வோங்கியமகரராசி
தன்னிலேசெனித்தபேர்க்குச் சாற்றியராசயோகம்
தின்னமாயடைவனென்றே தீரமாயுரைத்திட்டோமே.

இ-ள். குரு சனி செவ்வாய் உச்சமாயிருக்க துலாத்தில் செனன லக்னமானால் எட்டாவது இராஜயோகம் குரு சனி செவ்வாயுச்சமாகி கடகம் செனனலக்னமானால் ஒன்பதாவது இராஜயோகம் குரு சனி செவ்வாயுச்சமாகி மகரம் சென்ம லக்னமாக வந்தால் பத்தாவது இராஜயோகம் இந்தக் கவியில் மூன்று இராஜயோகங் கூறிய தென்பதாம். 4

2-வது சுலோகம். மூன்றிராஜயோகம்.

பகலவன்சவுரியாரல் பலமுடனுச்சமாகித்
தகரதும்நிறையும்புல்வாய் தன்னிலேசென்மமானால்
செகமதிலிராஜயோகம் சீருடனடைவானென்று
புகலுவாயுலகிலுள்ள புண்ணியபுருஷருக்கே.

இ-ள். சூரியன் செவ்வாய் சனி இவர்கள் உச்சராசியிலிருக்க மேஷம் சென்மலக்னமானால் பதினோராவது இராஜயோகம் சூரியன் செவ்வாய் சனி இவர்கள் உச்ச விராசியிலிருக்க துலாம் சென்மலக்னமாகவரில் பன்னிரண்டாவது இராஜயோகம் சூரியன் சனி செவ்வாயுச்ச இராசியிலிருக்க மகரம் சென்மலக்னமானால் பதின்மூன்ருவது இராஜயோகமாம் இந்தக்கவியில் மூன்று இராஜயோகஞ் சொல்லப்பட்ட தென்பதாம். 5

2-வது சுலோகம். மூன்று இராஜயோகம்.

தினகரன்பொன்னனோடு சேயவனுச்சமாகி
இனமுடன்கடகம்புல்வா யேற்றிடுந்தகரிம்மூன்றும்
செனனலக்கினமாய்வந்த சீருளபாலர்கட்கு
பனிதல்நல்ராஜயோகம் பொருந்திவாழ்வோங்குமென்னே.

இ-ள். சூரியன் குரு செவ்வா யுச்சமாயிருக்க கடகம் சென்ம லக்னமானால் பதினாலாவது இராஜயோகம் சூரியன் குருசெவ்வா யுச்சமாக மகரஞ்சென்மலக்கினமானால் பதினைந்தாவது இராஜயோ கம். சூரியன் குரு செவ்வாயுச்சமாக மேஷம் சென்மலக்கினமா னால் பதினாறுவது இராஜயோகம் இந்தக்கவியில் மூன்று இராஜ யோகஞ் சொல்லப்பட்டதென்பதாம் 2

2-வது சுலோகம். இரண்டு இராஜயோகம்.

மதியவன் கடகநிற்க மன்னவனிரவியுச்சம்
பதிதநிலிருக்குங்காலை பார்தனில்கடகமேடம்
விதிபெறுஞ்சென்மமாக மேதினியதிலேவந்தான்
நிதியொடுராஜயோகம் நேர்பெறவடைவனுமே.

இ-ள். சந்திரன் சுவக்ஷேத்திரமாகிய கடகத்திலிருக்க சூரியன் மேஷத்திலுச்சமாயிருக்க குரு கடகத்தி லுச்சமாயிருக்க மேஷத் தில் செனனமானால் பதினேழாவது இராஜயோகம். கிரகங்கள் அந்தவிதமே யிருக்க கடகத்தில் சென்மமானால் பதினெட்டாவது இராஜயோகம் இந்தகவியில் இரண்டு இராஜயோகம் சொல்லியிருக் கிற தென்பதாம். 3

2-வது சுலோகம். இரண்டாவது இராஜயோகம்.

எழுசீர்க்கழில் நெடிலாசிரியவிருத்தம்.

நிறைமதியுங்கடகமதிலாக்ஷியாகி நீலனொடுபவுமனுமேயுச்சமாம, குறைவிலாகர்க்கடகமேஷந்தன்னில் குவலயத்திலுத்திட்டபாலரு க்கு, தறையாளுமன்னனிவர்யோகம்பெற்றே தனதான்யஞ்சம்பத் துமிகவேயுண்டாம், இறைவனிவன்பேருலகில்வாழ்குவானுமிப்பல னையின்பமுடனுரைத்திட்டோமே.

இ-ள். பூர்வபக்ஷ சந்திரன் கடகத்திலிருக்க சனிசெவ்வாயுச்ச மாயிருக்க கடகம் சென்ம லக்னமானால் பத்தொன்பதாவது இராஜ யோகம் மேஷம் சென்மலக்னமானால் இருபதாவது இராஜயோ கம் இதில் பிறந்தவர்கள் சகல சௌபாக்கியங்களையும் பெற்றிருப் பார்களென்பதாம்,

24

2-வது சுலோகம். இரண்டு ராஜயோகம்

பனிமதிகடகந்தங்க பகலவனாரனுச்சம்
இனியநற்தர்சுறுவு மிரண்டுமேசாதகர்க்கு
செனனலக்கினமதாகில் சீர்புகழ்யாவும்பெற்று
புனிதபூபதியின்யோகம் பூவினிலடைவனாமே.

இ-ள். சந்திரன் கடகத்திலும் சூரியன் மேஷத்திலும் செவ்வாய்மகரத்திலுமிருக்கமேஷம் சென்மலக்னமானால் இருபத்தொன்றுவது இராஜயோகம் சூரியனும் செவ்வாயும் உச்சமாகி சந்திரன் சுவக்ஷேத்திரமிருக்க மகரம் சென்மலக்கினமானால் இருபத்திரண்டாவது இராஜயோகம். இதில்பிறந்தவன் சிறப்புடையவனாயுங் கீர்த்தியுடன் சகல சுகபோகங்களையுமடைந்த இராஜனாகு மென்பதாம். 5

2-வது சுலோகம். இரண்டு இராஜயோகம்.

திங்களுங்கடகமாட்சி தேவர்கோன்சவுரியுச்சந்
தங்கிடநிறையுங்கொண்டல் தானதுசென்மமானால்
இங்கிதமுடயோனிந்த விளவற்குராஜயோகம்
பங்கமில்லாமலேற்று பார்தனிலிருப்பானாமே

இ-ள். சந்திரன் ஆக்ஷியாகவும் குரு சனி யுச்சமாகி மிருக்க துலாம் செனன லக்னமானால் இருபத்திமூன்றுவது இராஜயோகம் கடகம் சென்மலக்கினமானால் இருபத்து நான்காவது இராஜயோகமாகு மென்பதாம் 6

2-வது சுலோகம். இரண்டு இராஜயோகம்.

மதிகுருகடகந்தங்க மங்களனுச்சமாகத்
துதிபெருமலவன்மானிற் றோன்றியமதலைக்கேதான்
நிதிநவமணிசம்பத்தும் நேர்மையாயிவனும்பெற்று
பதிதனையாளுகின்றோன் பார்த்திபனாகுவானே.

இ-ள். குருவுஞ்சந்திரனுங்கூட கடகவிராசியிலிருக்க செவ்வாய் மகரவிராசியிலிருக்க கடகம் சென்மலக்னமானால் இருபத்தைந்தாவது இராஜயோகமாகுமென்பதாம். 7

2-வது சுலோகம். இரண்டு இராஜயோகம்.

சந்திரன்கடகந்தங்க சனிசெவ்வாயுச்சமாக
விந்தையாம்நிறையம்புல்வாய் விளங்குசென்மங்களானால்
சுந்தரபுவியாள்வேந்தாய் சுகமுடன்போகபோக்யம்
சொந்தமாயடைவானென்று தொல்லுலகதனிற்கூறே.

இ-ள். சந்திரன் சுவக்ஷேத்திர மிருக்க சனி உச்சனுயுஞ் செவ்வாயுச்சனுயுமிருக்க துலாம்சென்மலக்னமானுல் இருபத்தேழாவது இராஜயோகம் சந்திரன் கடகத்திலும் சனிதுலாத்திலும் செவ்வாய் மகரத்திலும் மிருக்க மகரம் சென்மலக்ன்மானுல் இருபத்தெட்டாவது இராஜயோகமென்பதாம். 8

2-வது சுலோகம், ஒரு இராஜயோகம்.

இரவியமுச்சனுயிந்து சொக்ஷேத்திரத்தில்
திரமுடனமர்ந்தபோது சென்மமுமேஷமானுல்
பரவியபுவியையாளும் பார்த்திபனென்னவேதான்
துரகமுங்காலாட்சேனை சூழுநல்லிராஜயோகம்.

இ-ள். சூரியன் மேஷத்திலும் சந்திரன் கடகத்திலுமிருக்க மேஷம் சென்மலக்னமாக வந்தால் குதிரையும் சேனைபரிவாரங்களையுமுடைய இருபத்தொன்பதாவது இராஜயோகத்தை யடைவா னென்பதாம். 9

2-வது சுலோகம். ஒரு இராஜயோகம். கலிவிருத்தம்.

தானவன்குரு தங்குங்கடகமே
ஆனகொண்டலி லம்புவிவந்தசேய்
தீனனுமிவன் திண்புயத்தோடுமே
நானிலம்புகழ் ராஜயோகத்தனே.

இ-ள். சுக்கிரன் சந்திரன் கடகமிருக்க கடகமே சென்மலக்னமானுல் தயைதாக்ஷிணியமும் வலிவும் பராக்கிரம முடையவனும் கீர்த்தியோடு இராஜயோகத்தை யடைந்திருப்பவன் முப்பதாவது இராஜயோகம் என்பதாம். 10

2-வது சுலோகம். ஒரு இராஜயோகம். கலிவிருத்தம்.

அம்புலியாட்சி யாகியிருந்திட
கொம்பியுச்சமாய்க் கோலில்செனித்தவன்
தெம்புடன்செகத் மதயதில்கீர்த்தியாய்
நம்பும்பூபதி நல்லயோகத்தனே.

இ-ள். சந்திரன்கடகத்திலும் சனி துலாத்திலுமிருக்க துலாம் சென்மலக்னமானுல் உலகத்தில்கீர்த்தியோடுவலிவுபராக்கரமவந்தனுய் முப்பத்தொன்ருவது இராஜயோகத்தை யடைவானென்பதாம். 11

2-வது சுலோகம். ஒரு இராஜயோகம். கலிவிருத்தம்.

மங்களனுச்சம் மாமதியாக்ஷியாம்
இங்கிதச்சுறுவேற்ற செனனமாய்

துங்கபூவினிற் றேன்றியநற்சுதன்
பொங்குமெய்ராஜ பூரணயோகனே.

இ-ள். சந்திரன்கடகத்திலும் செவ்வாய் மகரத்திலுமிருக்கமக ரஞ் சென்மலக்னமானால் சகலசம்பத்துகளையும்பெற்றுநிச்சயமான முப்பத்திரண்டு இராஜயோகத்தை யடைவான் இப்போதுசொல்லி வந்த இராஜயோகம் சரராசியைக் கொண்டேசொல்லப்பட்டதென் பதாம். 12

3-வது சுலோகம், வசனம்.

வர்க்கோத்தம நவாம்சையடைந்த சென்மலக்னத்தையாவது வர்னக்கோத்தம நவாம்சையடைந்த சந்திரனையாவது நாலுகிரகம் ஐந்து கிரகம் ஆறுகிரகத்திலை பார்க்கப்படுமானால் இருபத்திர ண்டு யோகம் சொல்லப்பட்டிருக்கிறது. சந்திரனைப்பார்க்க இரு பத்திரண்டும் ஜன்மலக்கினத்தைப்பார்க்க இருபத்திரண்டும் கூட்ட நாற்பத்துநாலு இராஜயோகமாகின்றது அதெப்படி யென்றால். 13

3-வது சுலோகம். நாலுகிரகம் நோக்க இராஜயோகம்.

சென்மலக்கினத்தைபல்லாது திங்கள்வர்க்கோத்தமாங்கிசை
உன்னிதத்துடனிருக்க வுதிரன்மாவிரவிபொன்னோன்
சென்மத்தைமதியைநோக்க செப்பியயோகமொன்று
என்னுமால்சேயும்வெள்ளி யிரவியும்நோக்கிரண்டே.

இ-ள். வர்க்கோத்த மாங்கிசையடைந்த சென்மலக்னத்தையா வது வர்க்கோத்தமாங்கிசம் பெற்ற சந்திரனையாவது செவ்வாய் பு தன் சூரியன் குரு இந்த நால்வரும் பார்க்க முதலாவது இராஜ யோகம் புதன்செவ்வாய் வெள்ளி சூரியன் இந்தநால்வரும்பார்க்க 2-வது இராஜயோகம் என்பதாம். 14

3-வது சுலோகம். நாலுகிரகம் நோக்க இராஜயோகம்.

சூரன்சேய்சுன்மால்நோக்க சொல்வதுயோகம்மூன்று
சூரன்சேய்பொன்னன்சுங்கன் றுகள்விழிகாணினான்கு
சூரன்சேய்பொன்சுன்காணில் சுகமுளயோமைமாது
சூரன்சேய்நீலன்வெள்ளி சோமனைக்காணிலாறே.

இ-ள் வர்க்கோத்த மாங்கிசம் பெற்ற சென்மலக்னத்தையா யாவது வர்க்கோத்தமாங்கிசம் பெற்ற சந்திரனையாவது சூரியன் செவ்வாய் சனி புதன் இந்த நால்வரும் பார்க்கமூன்றுவது இராஜ யோகம் சூரியன்செவ்வாய் குரு சுக்கிரன் இந்த நால்வரும் பார்க்க நாலாவது இராஜயோகம் சூரியன் செவ்வாய் குரு சனி இந்த நால் வரும் பார்க்க ஐந்தாவது இராஜயோகம். சூரியன் செவ்வாய் சனி சுக்கிரன் இந்த நால்வரும் பார்க்க ஆறுவது இராஜயோகமாகு மென்பதாம். 15

3-வது சுலோகம் நாலுகிரகம் நோக்க இராஜயோகம்.

ஆதவன்மால்பொன்சுங்க னன்பொடுகாணிலேழு
ஆதவன்மால்பொன்னீலன் னருவிழிநோக்காவெட்டம்
ஆதவன்மால்சுன்சுங்க னவர்நோக்கவொன்பதாகும்
ஆதவன்பொன்சுன்வெள்ளி யாமிவர்காணப்பத்தே.

இ-ள். வர்க்கோத்த மாங்கிசையடைந்த சென்ம லக்னத்தை யாவது வர்க்கோத்த மாங்கிசையடைந்த சந்திரனையாவது சூரியன் புதன் குரு சுக்கிரன் இந்த நால்வரும்பார்க்க ஏழாவது இராஜயோகம் சூரியன் புதன் குரு சனி இந்த நால்வரும் பார்க்களட்டாவது இராஜயோகம் சூரியன் புதன்சுக்ரன் சனி இந்த நால்வரும்பார்க்க ஒன்பதாவது இராஜயோகம் சூரியன் குரு சுக்கிரன் சனிஇந்தநால்வரும்பார்க்க பத்தாவது இராஜயோகமென்பதாம். 16

3-வது சுலோகம் நாலுகிரகம் நோக்க இராஜயோகம்.

மங்களன்மாலும்வெள்ளி மன்னவனதிபதினொன்றாகும்
மங்கள்ன்சனியுமாலும் மன்னவன்பனிரண்டாகும்
மங்களன்புகருஞ்சுன்னுமன்னவன்பதிமூன்றென்ன
மங்களன்மழைகோள்சுன்னு மாலவனீரேழாமே.

இ-ள். வர்க்கோத்தமாங்கிசை யடைந்த சென்ம லக்னத்தை யாவது வர்க்கோத்தமாங்கிசை யடைந்த சந்திரனையாவது செவ்வாய் புதன் சுக்ரன் குரு இந்தநால்வரும்பார்க்க பதினொன்றாவது இராஜயோகம் செவ்வாய்சனி புதன் குரு இந்தநால்வர்களும் பார்க்க பன்னிரண்டாவது இராஜயோகம் செவ்வாய் சுக்கிரன்சனிகுரு இந்தநால்வரும் பார்க்க பதிமூன்றாவது இராஜயோகம் செவ்வாய் சுக்கிரன் சனி புதன் இந்த நால்வரும் பார்க்க பதினாலாவது இராஜயோக மென்பதாம். 17

3-வது சுலோகம். நாலு ஐந்து கிரகம் நோக்க இராஜயோகம்.

பொன்புகர்சனிமால்காண புகல்வதுமூதைந்தாகும்
பொன்ரவிமால்சேய்நீலன் புரவலனீரெட்டாகும்
பொன்ரவிமால்சேய்வெள்ளி பூமிகாவலர்பன்னேழு
சுன்ரவிமால்சேய்சுங்கன் சொன்னதுமூவாறுமே.

இ-ள். வர்க்கோத்த மாங்கிசம் பெற்றசென்ம லக்னத்தையாவது வர்க்கோத்தமாங்கிசம்பெற்ற சந்திரனையாவது குரு சுக்கிரன் சனிபுதன் இந்தநால்வரும் பார்க்கபதினைந்தாவது இராஜயோகம் குருசூரியன் புதன்செவ்வாய் சனி இந்த ஐவரும் பார்க்க பதினாறுவது இராஜயோகம் குருசூரியன் புதன்செவ்வாய்சுக்கிரன் பார்க்க பதினேழாவது இராஜயோகம் சனி சூரியன் புதன் செவ்வாய் சுக்கிரன் இந்த ஐவரும்பார்க்க பதினெட்டாவது இராஜயோகம் என்பதாம் 18

3-வது சுலோகம். ஐந்துகிரகம் ஆறுகிரகம் நோக்க இராஜயோகம்.

புகர்சனிபொன்சேயெல்லோன் புரவலர்ப்பத்தொன்பானும்
புகர்சனிபொன்மாலெல்லோன் புகல்வதுவிருபதாகும்
புகர்சனிபொன்மால்செவ்வாய் புகன்றதுமூவேழாகும்
புகர்சனிபொன்மால்செவ்வாய் புகல்வதுவிருபான்ரண்டே.

இ-ள். வர்க்கோத்த மாங்கிசையடைந்த ஜென்ம லக்னத்தை யாவது வர்க்கோத்தமாங்கிசம்பெற்ற சந்திரனையாவது சுக்கிரன் சனி குருசெவ்வாய் சூரியன் இந்த ஐவரும்பார்க்க பத்தொன்பதாவது இராஜயோகம் சுக்கிரன் சனிகுருபுதன் சூரியன் இந்தஐவரும் பார்க்க இருபதாவது இராஜயோகம் சுக்கிரன் சனிகுருபுதன் செவ்வாய் இந்த ஐவரும் பார்க்க இருபத்தொன்றுவது இராஜயோகம் சுக்கிரன் சனி குரு புதன் செவ்வாய் சூரியன் இந்த ஆறுபேரும் பார்க்க இருபத்திரண்டாவது இராஜயோகமா மென்பதாம். 19

3-வது சுலோகம் நாற்பத்துநாலு இராஜயோகம்.

இந்தகோள்நோக்குதன்னை லேற்ப்படும்யோகந்தானும்
சொந்தமாயிருபான்ரண்டு துயமாமதியைக்கண்டால்
விந்தையாய்சென்மங்காணில் மேவியவிருபான்ரண்டு
அந்தவாறிரண்டுகூட்ட வாவதுநாற்பானுலே

இ-ள். இப்போதுசொல்லிவந்த யோகம்கிரகங்கள் நோக்கினதினுல் ஏற்பட்டது சென்மலக்கினத்தைப் பார்க்க இருபத்திரண்டு இராஜயோகமும் சந்திரனைப் பார்க்க இருபத்திரண்டுஇராஜயோகமும் ஆனதால் இரண்டையும் கூட்டினுல் நாற்பத்துநாலு இராஜயோகம் என்பதாம். 20

3-வது சுலோகம் ஐஞ்ஞூற்றிருபத்தெட்டு இராஜயோகம்.

ஒருவோரைக்கிருபான்ரண்டு வுடுபதிக்கிருபான்ரண்டு
இருவிதத்தையுங்கூட்டி யீராறுராசிக்கீய
வருவதுஐஞ்ஞூற்றேடு மற்றுமேயிருபத்தெட்டு
திருபனின்யோகமென்று நிலைமையையுரைத்திடாயே.

இ-ள். சென்மலக்னத்திற்கு இருபத்திரண்டு சந்திரனுக்குஇருபத்திரண்டு ஆகியநாற்பத்துநாலே பன்னிரண்டு இராசியில்பெருக்க ஐஞ்ஞூற்றிருபத்தெட்டு ராஜயோகம் இதை சந்திரன் வர்க்கோத்தமம்பேரில் முதல்யோகமாயும் லக்னம் வர்க்கோத்தமமான விரண்டாவது யோகமாயும் சொல்லப்படும். உதாரணம் மாண்டவ்ய வசனம் சுலோகம் சொல்லியிருக்கிறுர் ஐஞ்ஞூற்றறுப தென்பதாம்.

4-வது சுலோகம் மூன்று இராஜயோகம்.

சந்திரனிரவியுச்சந் தரைமகன்தேளிலாக்ஷி
புந்தியாழரியிற்பொன்னு புகழ்சனிகுடத்திலாக்ஷி
சுந்திரன்ரிஷபமேஷந் தூயநற்குடங்கர்தன்னில்
வந்தவன்ராஜயோகன் வழுத்திடுமூன்றதாமே.

இ-ள். சூரியன் மேஷத்திலும் சந்திரன் ரிஷபத்திலும் புதன் மிதுனத்திலும் குரு சிம்மத்திலும் செவ்வாய் விருச்சிகத்திலும் சனி கும்பத்திலுமிருக்க ரிஷபம் சென்மலக்னமானால் முதல்யோகமாம். மேஷம் சென்மலக்னமானால் இரண்டாவது யோகமாம் கும்பஞ்சென்மலக்னமானால் மூன்ருவது இராஜயோகமாம். இதுவுடனே முன் 560 இதைகூட்ட இராஜயோகம் அந்நூற்றறுபத்து மூன்ருதுமென்பதாம். 21

4-வது சுலோகம். இரண்டுயோகம்.

சந்திரன்மாலும்பொன்னேன் சனியவனுச்சமாகி
செந்தியுந்தாரிலாக்ஷி நினகரன்கன்னிசேர
சுந்தரபுகர்கோலேற நலிவிடைசென்மமாக
வந்தவன்ராஜயோகம் வண்மையையடைவனுமே.

இ-ள். சந்திரன் ரிஷபத்திலும் புதன் கன்னியிலும் குரு கடகத்திலும் சனி துலாத்திலும் செவ்வாய் மேஷத்திலும் சூரியன் கன்னியிலும் சுக்கிரன் துலாத்திலுமிருக்க துலாம் சென்மலக்னமானல் ஒரு இராஜயோகமும் ரிஷபம் சென்ம லக்னமானல் இரண்டாவது இராஜயோகமாம். உதாரணம் பாதராயணவசனம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகக்கூடியது 565 ஆகுமென்பதாம். 22

5-வது சுலோகம். ஒரு இராஜயோகம்.

மதிரவிவில்லில்நிற்க மங்கலனுச்சமாக
துதிபெறுசனிசுருவிற்றாய நல்மகரஞ்சென்மப்
பதியதாயுதித்தபேர்கள் பார்தனிற்சம்பத்தோங்கி
நிதிபுகழ்யாவும்பெற்று நீடுலகதில்வாழ்வார்.

இ-ள். சூரியன் சந்திரர்கள் தனுர் ராசியிலும் செவ்வாயுஞ் சனியும் மகரவிராசியிலுமிருக்க மகரஞ் சென்மலக்னமானல் சகல சம்பத்தும் தனம் புகழ்கீர்த்தியுடனே ராஜயோகத்தையடைவான் உதாரணம் மாண்டவ்ய வசனம் சொல்லியிருக்கிருர். ஆகக்கூடியது யோகம் 566 ஆகுமென்பதாம். 23

௬-வது சுலோகம். ஒரு இராஜயோகம்.

பொன்னவன் துரகம்நிற்க புகழ்ரவிசனியுமுச்சம்
நன்மதிகோலிலேற நாடியேமேஷந்தன்னில்

உன்னதமாகவந்தா னுலகத்திற்கீர்த்தியோங்க
மன்னனுமாவானென்று மதித்திடுகோள்தன்னாலே.

இ-ள். குரு தனுசிலும் சனி துலாத்திலும் சூரியன் மேஷத்திலும் பூர்வபக்ஷ சந்திரன் துலாத்திலுமிருக்க மேஷம் சென்மலக்னமானால் கீர்த்தியுள்ள ராஜனாவான் என்பதாம். 567-இராஜயோகமா மென்பதாம். 24

5-வது சுலோகம். ஒரு இராஜயோகம்.

வில்லதிலிரவிநட்பாய் வெண்மதிகுஜனுமானில்
நல்லுறவோடிருக்க நாட்டினிலெவரானாலும்
புல்லெனும்வாயில்வந்தால் பூபாலராவாரென்று
வல்லமையுடனுரைத்தோம் மாநிலமதிலுள்ளோர்க்கே.

இ-ள். தனுசில் சூரியனும் சந்திரனும் செவ்வாய்மகரத்திலிருக்க மகரஞ் சென்மலக்னமானால் எந்த குலத்தில் பிறந்தவரானாலும் பூபாலரென்னும் அரசனாவானென்பதாம் உதாரணம் பாதராயண வசனம் சொல்லப்பட்டிருக்கிறது, ஆகக்கூடியயோகம். 568-இராஜயோகமா மென்பதாம்! 25

6-சுலோகம். இராஜயோகம்.

விடையதேசென்மமாக விட்டனிற்குருவுநிற்க
நடையிலான்குடத்திலேற நாள்கேள்வனலக்னகேந்திர
மடையவேயிரவியாக்ஷி யாகிடவுதித்தசெல்வன்
தடையதேயில்லையில்லை தாரணியாளுவானே.

இ-ள். சென்மலக்னம் ரிஷபமாக ஏழா மிடமான விருச்சிகத்தில் குருவிருக்க சனிகும்பத்திலிருக்க சந்திரன் ரிஷபத்திலிருக்க சூரியன் சிங்கத்திலிருக்கப் பிறந்தவன் அரசனாவான் ஆகக்கூடியது 569-இராஜயோகம்என்பதாம் 26

6-வது சுலோகம். இராஜயோகம்

மகரமேசென்மமாக மந்தனும்லக்னகேத்திரம்
தகரவன்யாழிலேற சந்திரன்மீனம்நிற்க
பகருமாலுச்சனாக பசும்பொன்வில்தன்னிற்நிற்க
இகமதிலுதித்தபால னிராசரில்சிரேஷ்டனாமே.

இ-ள்.மகரம் சென்மலக்கினமாகி அதிலேசனி ஆக்ஷியாகியிருக்க செவ்வாய் மிதுனமிருக்க சந்திரன்மீனத்திலிருக்க புதன் கன்னியிலிருக்க குரு தனுசிலிருக்கப் பிறந்தவன் சவுரிய பராக்கிரமமுடையவனாய் கீர்த்தியுள்ள இராஜ சிரேஷ்டனாவான் ஆக 570-இராஜயோகமாம் உதாரணம் பாடாந்தரமும்மாண்டவ்யோக்தியும் சுலோகம்சொல்லப்பட்டதென்பதாம், 27

7-வது சுலோகம். இராஜயோகம்.

குருமதிதிரகமேற குஜனவனுச்சமாக
பிருகுமீன் தன்னிலுச்சம் பெற்றிடகயவில்வந்தான்
திருமகளருளைப்பெற்று திண்புயமுடயனுகி
பெருபவன்செங்கோல்தன்னை பிரபலமுடையவேந்தே.

(இ-ள்) குருவுஞ் சந்திரனும் தனுசு ராசியிலிருக்க செவ்வாய் உச்சம் பெற சுக்ரன் மீனவிராசியிலுச்சனுயிருக்க மீனமே சென்மஞ் கனமானல் லக்ஷிமிவிலாசம்பெற்று வலிவுள்ள புயத்தனுய் பிரபலப்பெற்று செங்கோல் தரித்து அரசனுவா னென்பதாம். ஆக கூடியது 571-இராஜயோகமாகும் என்பதாம். 28

7-வது சுலோகம். இராஜயோகம்.

புலவனுங்கன்னிபுச்சம் பொன்மதிதனுவிலேற
நிலமகன்மானிலுச்சம் நின்றிடக்கன்னிதன்னில்
நலமுடன்வந்தசெல்வன் நாடியகீர்த்தியோங்க
பிலமுள அரச்னுகி பேருலகாள்வான்ருனே.

(இ-ள்.) புதன் கன்னியிலும் குருவுஞ் சந்திரனும் தனுசிலும் செவ் வாய் மகரத்திலு மிருக்க கன்னி சென்மலக்னமானல் கீர்த்திப்பிரதாப முள்ள அரசனுக வுலகையாள்வா னென்பதாம். ஐந்நூற்றெழுபத்திரண்டு இராஜயோகம் என்பதாம். 29

7-வது சுலோகம். இராஜயோகம்.

திங்களும்பொன்னவன்ருன் சேர்ந்துவில்லதனிற்றங்க
மங்கலன்சனிசுறவில் மாலவனுச்சமாகி
நங்கயாமோரைதன்னில் நலமுடன்வந்தபாலன்
துங்கவிப்புவியையாள்வான் சுதனெந்தக்குலமானலும்.

(இ-ள்.) சந்திரனுங் குருவுங்கூடி தனுசிருக்க செவ்வாய் சனிகூடி மக ரத்திலிருக்க புதன் கன்னியிலிருக்க கன்னியாலக்னத்தில் செனனமானல் எந்த குலமானலும் அரசனுவானென்பதாம். 30

8-வது சுலோகம். இராஜயோகம்.

கதிரவன்சிங்கந்தங்க கரியவன்குடத்திலாக்ஷி
மதியவன்மீனம்நிற்க மங்கலனுச்சம்சென்மப்
பதியதும்கயலதாகப் பாரதிலுத்தசெல்வன்
நிதியுடன்செங்கோற்ருங்கும் நிருபனுமாவான்ருனே.

(இ-ள்.) சூரியன் சிங்கவிராசியிலாக்ஷியாயிருக்க சனி கும்பவிராசியில் ஆக்ஷியாயிருக்க சந்திரன் மீனவிராசியில் கேந்திரமாயிருக்க செவ்வாய் மகர விராசியில் உச்சம்பெற்றிருக்க மீனத்தில் செனனமானல் தன் சம் பத்துடைய செங்கோலரசனும். ஆக 574 இராஜயோக மென்பதாம், 31

8-வது சுலோகம். இரண்டு இராஜயோகம்.

சேயவன்மறியிலாக்ஷி செம்பொனுங்கடகமேற
ஆயதோர்தகரும்நண்டும் சுதன்சென்மவீடதானல்
நேயமாயுலகையாளும் நிருபனேயாவானென்று
சேயவன்தனக்குயோகம் செப்பிடுதிரமாக.

(இ-ள்.) செவ்வாய் மேஷவிராசியில் சுயக்ஷேத்திரமாயிருக்க குரு கடக விராசிலு லுச்சமாயிருக்க மேஷலக்னமே சென்மலக்னமானல் அரசனும் செவ்வாய் மேஷவிராசியில் ஆக்ஷியாயிருக்க குரு கடகவிராசியி லுச்சமா யிருக்க கடகஞ் சென்மலக்னமானல் அரசனும் ஆக 576 இராஜ யோகம் என்பதாம். 32

9-வது சுலோகம். இராஜயோகம்.

மதியன்புகரோன்புந்தி மகிழுடன்விடையில்நிற்க
கதிரவன்மறியிலுச்சங் கனதனுங்கடககஞ்சென்ம
பதியதுநண்டதாகப் பாரதிலுதித்தசெல்வன்
சதியிலாலக்னமானற் சமர்த்துளவேந்தனுமே.

(இ-ள்.) சந்திரன் புதன் சுக்கிரன் ரிஷபவிராசியிலும் சூரியன் மேஷ விராசியிலும் குரு கடகவிராசியிலும் இருக்க கடகத்தில் சென்மமானல் சமர்த்துள்ள அரசனும் ஆக 577-வது இராஜயோகமென்பதாம். 33

10-வது சுலோகம். ஒரு இராஜயோகம்.

இரவியும்மதியுமாக்ஷி யினியமால்யாழிலாக்ஷி
திரமுளபுகரோன்கோவில் சேயவன்மறியிலாக்ஷி
கரியவன்மகரமாக்ஷி கலையதுசென்மமானல்
தரணியையாளுமிக்க சர்க்குணகீர்த்திவேந்தே.

(இ-ள்.) சூரியன் சந்திரன் தங்கள் வீட்டி லாக்ஷியாகி செவ்வாய் மேஷத்திலும் புதன் மிதுனத்திலும் சுக்கிரன் துலாத்திலும் சனி மகரத் திலு மிருக்க மகரமே சென்மலக்னமானல் கீர்த்தியுடைய அரசனுவான். இந்த காலத்தில் சுக்கிரனுக்கு புதன் அடுத்த மூன்று வீட்டிற்கு ளிருப் பானே தவிர அரம்போகமாட்டான் அதை யூகித்துப் பார்க்கவும் ஆகக் கூடியது 578 இராஜயோக மென்பதாம். 34

11-வது சுலோகம். ஒரு இராஜயோகம்.

மதிகுருமீனந்தங்க மங்கலன்சவுரிபுல்வாய்
துதிகொளுஞ்சங்கன்வீணை அதுவனுச்சம்சென்மம்
பதியதுகன்னிதன்னில் பாலகனுகவந்தான்
அதிபுகழ்சவுக்யவானு மரசனுயுலகாள்வானே.

(இ-ள்.) குருவுஞ் சந்திரனுங்கூடி மீனத்திலிருக்க சனியுஞ் செவ்வா யுங்கூடி மகரத்திலும் கன்னி சென்மலக்னமாய் புதன் உச்சகேந்திர மிருக்

சப்பிறந்தவன் கீர்த்தியுள்ளவனும் சுகபோகங்களை யநுபவிக்கக்கூடிய அரசன் ஆகக்கூடியது. 579-இராஜயோகமாகு மென்பதாம். 35

12-வது சுலோகம்.

இதுவரையில் சொல்லிவந்த இராஜயோகவிபரம் வசனம்.

இப்போது சொல்லிவந்த இராஜயோகத்தில் பிறந்தவன் அன்னிய குலத்தனானாலும் இராஜ்யாதிபதி ஆவார்கள் இனிமேல் சொல்லப்போகிற யோகத்தில் பிறந்த க்ஷத்ரிய வம்சர்கள் மாத்திரமே இராஜ்யாதிபதியான வர்கள். இதுவரையில் சொல்லப்பட்டிருக்கும் இராஜயோகங்கள் நீசவம்சத்தில் பிறந்தவரானாலும் இராஜ்யாதிபதியாவார்கள். க்ஷத்திரிய வம்சத்தில் பிறந்தவர் இராஜாதிபதி ஆவாரென்று சொல்லாததினால் அவசியம் இராஜ்யாதிபதியாவார்கள்.

இனிமேல் சொல்லப்போகிற இராஜயோகங்களால் க்ஷத்ரிய வம்சத்தில் பிறந்தவர் இராஜராவார்கள் இந்த இராஜயோகங்களில் க்ஷத்திரியரின்றி அன்னிய குலத்தில் பிறந்தவர் ஐஸ்வரியாதிகளினால் இராஜசமானமாவா ரென்பதாம். 36

13-வது சுலோகம். வசனம்.

தங்கள் தங்கள் உச்சம் மூலத் திரிகோணங்களி லடைந்த ஸ்தானாதி காலாதி பலவந்தர்களாம் மூன்று நாலு கிரகங்களைக் கொண்டு க்ஷத்ரிய வம்சத்திற் பிறந்தவர் இராஜராவார்கள். உச்ச மூலத் திரிகோணங்களில் ஸ்தானாதி பலவான்களாய் ஐந்து ஆறு கிரகங்களினால் அன்னிய குலத்திற் பிறந்தவனும் இராஜ்யாதிப்தியாவான்.

ஆனால் மூன்று கிரகம் உச்சம் மூலத்திரிகோணத்தி லிருந்து ஸ்தானாதி பலவீனமாயிருந்தாலும் ஒன்று இரண்டுகிரகங்கள் உச்ச மூலத்திரிகோணங்களில் பலவானாக விருந்தாலும் க்ஷத்ரிய வம்சத்தான் அதிக தனவந்தராவார்களே தவிர இராஜ்யாதிபதியாகமாட்டார். ஐந்து ஆறுகிரகம் உச்சம் மூலத்திரிகோணங்களில் பலவீனராயிருந்தாலும் மூன்று நாலுகிரகம் உச்சமூலத் திரிகோணத்தினும் பலவானாகவிருந்தாலும் க்ஷத்ரியர்களைத் தவிர அன்னியகுலத்தான் அதிக தனவந்தனா யிருப்பானே தவிர அரசனாகமாட்டான் என்று தாற்பரியமாம். முன்சொன்ன கிரகங்களில் சிலர் உச்சராயும் சிலர் மூலத்திரிகோணராயும் இப்படியிருக்க சொல்லிய சங்கியைகளுக்கு குறைவுபடாதிருக்க உள்ளபலனையே அடைவனாகுமென்று தெரியத்தக்கது.

14-வது சுலோகம். க்ஷத்ரியன் அரசன் மற்றோர் இராஜயோகம்.

தகர்தனிலிரவிதிங்கள் தனுசதிற்குருவுமாக்ஷி
பகர்சனிகுடத்திலாக்ஷி பார்மகன்தலையிலுச்சம்

தகர்தனிற்செனனமான க்ஷத்ரியனரசனுவன்
செகந்தனில்மறுகுலத்தான் செல்வவந்தனுமாவானே.

இ-ள். சூரியன் சந்திரன் மேஷத்திலும் குரு தனுசிலும் சனி கும்பத்திலும், செவ்வாய் மகரத்திலுமிருக்க மேஷலக்னத்தில் க்ஷத்ரியன் பிறந்தால் அரசனுவான். அன்னிய குலத்தில் பிறந்தவன் இராஜயோகமடைவான் ஆகக்கூடியது இராஜயோகம் 580-ஆகு மென்பதாம். 37

5-வது சுலோகம். க்ஷத்ரியன் அரசன் மற்ருேர் இராஜயோகம்.

செனனமுங்கும்பமாகத் திங்களுந்துலேயில்தங்க
இனமுளபுகரோனேறி றிரவிசேய்மால்பொன்சுன்னு
தனுகுடமறியில்நிற்க க்ஷத்ரியனரசன்மற்ருேர்
தனபதியாவரென்று சாதகம்பலனேக்கூறே.

இ-ள். சென்மலக்னம் கும்பமாகி துலாத்தில் சந்திரனிருக்க ரிஷபத்தில் சுக்கிரனிருக்க மற்ருெரு சூரியன் செவ்வாய் புதன்குரு சனி இவர்கள் தனுசு கும்பம் மேஷம் இந்தராசிகளிலிருக்க க்ஷத்ரிய வமிசத்தில் பிறந்தவன் அரசன் அன்னிய குலத்தான் தனபதியாகி இராஜயோகத்தை அடைவான் ஆகக்கூடியது 581-இராஜயோகமாம். 38

15-வது சுலோகம். க்ஷத்ரியன் அரசன் மற்ருேர் இராஜயோகம்.

கடகமேசென்மமாகக் கலேயவன்மீனமேற
திடமுளபுகரோன்கோலில் தினகரன்சேய்மால்பொன்சுன்
படிமிசைபெண்ணண்டேறில் பற்றக்ஷத்திரியன்வேந்தாம்
தடமதில்மற்ருேர்வந்தால் தனபதிராஜயோகம்.

இ-ள். கடகம் சென்மலக்னமாகச் சந்திரன் மீனராசியிலும் சுக்கிரன் ரிஷபராசியிலும் இருக்க மற்ற சூரியன் செவ்வாய் புதன் குரு சனி இவர்கள் கன்னி கடகம் ரிஷபத்திலிருக்க க்ஷத்ரியகுலத்தில் பிறந்தவன் அரசன் மற்றகுலத்தில் செனனமானுல் தனமுடையவனுய் இராஜயோகத்தை யடைவான். ஆகக்கூடியது 582-இராஜயோக மாகுமென்பதாம். 39

16-வது சுலோகம். க்ஷத்திரியன் அரசன் மற்ருேர் இராஜயோகம்.

புந்திதான்வலிதாய்சென்மம் பொன்புகர்பாக்கியத்தில்
சந்திரனுதியைவர் தனமுடனுபசெயத்தில்
சொந்தமாயமருங்காலில் சுதனுஞ்க்ஷத்திரியன்வேந்து
வந்தவன்மறுகுலத்தான் மன்னனேர்யோகவானே.

இ-ள். ஷட்பல சம்பன்னனான புதன் லக்னமிருக்க சுபர்களாகிய குருவாவது சுக்கிரனாவது ஒன்பதாமிடமாகிய தர்மஸ்தானமிருக்க சந்திரன் முதலாகிய ஐந்துபேரும் இரண்டாமிடம் மூன்றுமிடம் ஆறுமிடம் பத்தாமிடம் பதினோராமிடத்திலிருக்க க்ஷத்ரிய குலத்தில் பிறந்தவன் அரசனும். மற்ற அன்னிய குலத்தில் பிறந்தவன் இராஜயோகத்தை யடைவான். ஆகக் கூடியது 583-இராஜயோகமாகு மென்பதாம். 40

17-வது சுலோகம். க்ஷத்ரியன் அரசன் மற்றோர் இராஜயோகம்.

மதிசனிபுகரோனுச்சம் மன்னவன்மிதுனம்நிற்க
கதிரவன்சேய்மால்மீனம் காணக்ஷத்திரியன்னேரில்
சுதனெனவந்தான்வேந்தன் சொல்லுமன்னியகுலத்தான்
நிதிபுகழ்யாவும்பெற்று நிருபனோர்யோகவானே.

இ-ள். ரிஷபம் சென்மலக்னமாகி அதில் சந்திரன் லக்னகேந்திரமாயும் உச்சனாயுமிருக்க மிதுனத்தில் குருவிருக்க சனிதுலாத்தில் உச்சம்பெற்றிருக்க லாபஸ்தானமாகிய மீனத்தில் சூரியன் புதன் சுக்கிரன் செவ்வா யிருக்க க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவன் அரசன் மற்ற அன்னிய குலத்தில் பிறந்தவன் இராஜயோகமடைவான் ஆக 584-இராஜயோக மென்பதாம். 41

17-வது சுலோகம். க்ஷத்ரியன் அரசன் மற்றோர் இராஜயோகம்.

சந்திரன்கதிரோன்பத்தில் சனியவன்லக்னகேந்திரம்
புந்திசேய்புகரோன்லாபம் பொன்சுகதானம்தங்க
எந்தவங்கிசமானாலும் ராஜயோகத்தனாகும்
வந்ததநற்க்ஷத்ரியன்றான் மாநகராளும்வேந்தே.

இ-ள். சனி சென்மலக்னமாயிருக்க குரு நாலாமிடத்திலும் சூரியன் சந்திரன் பத்தாமிடத்திலும் புதன் சுக்கிரன் செவ்வாய் பதினோராமிடத்திலிருக்க க்ஷத்ரிய குலத்தில் பிறந்தான் அரசன் அன்னிய குலத்தில் பிறந்தான் இராஜயோக மடைவான். ஆகக் கூடியது 585 இராஜயோகமாகு மென்பதாம். 42

18-வது சுலோகம். க்ஷத்ரியன் அரசன் மற்றோர் இராஜயோகம்.

பொன்னுதயத்தினிற்க புந்திசேய்தனத்திலேற
சுன்னவன்லாபத்தானம் சுக்கிரன்கதிரும்நாலில்
நன்னயமதியீரைந்தில் நாடும்க்ஷத்திரியன்வேந்தன்
அன்னியகுலத்தில்வந்தா லரசனோர்யோகத்தானே.

இ-ள். சென்மலக்கினத்தில் குருவும் இரண்டாமிடத்தில் புதன் செவ்வாயும் சனி பதினோரா மிடத்திலும் சுக்கிரன் சூரியன் நாலாமிடத்திலும் சந்திரன் பத்தாமிடத்திலுமிருக்க க்ஷத்திரிய குலத்தில்பிறந்தவன் அரசனும் மற்ற அன்னியகுலத்தில் பிறந்தவன் இராஜயோகனுவான் ஆகக்கூடியது 586-இராஜயோகமாகு மென்பதாம். 43

18-வது சுலோகம். க்ஷத்ரியன் அரசன் மற்றோர் இராஜயோகம்.

மங்கலநீலன்சென்மம் மன்னவன்மதனுறில்லம்
திங்கள்நாலிரவிபத்தில் தேர்ப்பாகன்லாபமேற
சுங்கனூர்தருமந்தங்க தோன்றும்க்ஷத்திரியன்வேந்து
துங்கவான்பறுகுலத்தான் சுகமுளராஜயோகன்.

இ-ள். சென்மலக்னத்தில் செவ்வாய் சனியிருக்க ஏழாமிடத்தில் குருவிருக்க சந்திரன் நாலிலிருக்க சூரியன் பத்திலிருக்க புதன் லாபமென்னும் பதினோராமிடமிருக்க சுக்கிரன் ஒன்பதாமிடமிருக்க க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவன் அரசன். மற்ற அன்னியகுலத்தில் பிறந்தவன் இராஜயோகமடைவான். ஆக 587-இராஜயோகமாகு மென்பதாம். 44

19-வது சுலோகம். இராஜயோகத்தில் பிறந்தவருக்கு இராஜ்யப் பிராப்திகாலமும் பிராப்த இராஜனுக்கு ராஜ்யம் நீங்கும் காலமும் சொல்லப்படும்.

புரவலயோகமீயும் புகழுளகோள்கடன்னில்
திரமுடன்சென்மத்துற்றோர் செய்யகருமத்திலுள்ளோர்
தருதிசையந்தரத்தில் தனசவுபாக்யஞ்செங்கோல்
பிரபலங்கீர்த்திபெற்றுப் பெரும்புவியாளும்வேந்தே.

இ-ள். இராஜயோகத்தைக் கொடுக்கும் கிரகங்களில் சென்மலக்னமிருந்தவர் பத்தாமிடத்திலுள்ள கிரகங்கள் திசை புத்தி அந்திரங்களில் தனம் சம்பத்தும் செங்கோல் புகழ் கீர்த்தி முதலிய துண்டாகி அரசனுவானென்பதாம். 45

19-வது சுலோகம். இராஜ்யப்பிராப்தி.

சென்மமீரைந்துவென்று செப்பிடுமிரண்டிடத்தும்
மின்னியவிருகோள்நிற்க மேவுபல்கோளுற்றாலு
முன்னுமக்கோளில்மிக்க வுயர்வலிதுள்ளோர்புத்தி
மன்னுமாதிசையந்த்ரத்தில் மன்னனுயுலகாள்வானே.

இ-ள். சென்மலக்னம் பத்தாமிடம் இந்த இரண்டிலும் கிரகமிருந்தாலும் அல்லது பலகிரகம் இருந்தாலும் அந்த கிரகங்களில் எவர் பலவானுகவிருப்பாரோ அந்தக் கிரகதிசை புக்தி அந்திரத்தில் அரசனுவானென்பதாம். 46

19-வது சுலோகம். இராஜ்யப்பிராப்தி.

பத்திலுஞ்சென்மந்தன்னில் பகர்ந்திடுங்கோளிலாது
சுத்தசூன்னியமதனுல் சுதனவன்செனிக்கும்போது
மெத்தவேவலிவுள்ளோரின் மேவியதிசையும்புத்தி
உத்தநாளந்திரத்தி லுலகினையாளுவானே.

இ-ள். பத்தா மிடத்திலும் சென்ம லக்னத்திலுங் கிரகமில்லாதிருக்குமானல் சென்னகாலத்தில் எந்தக் கிரகம் பலவானு யிருப்பானே அந்த திசை புக்தி அந்திரகாலத்தில் இராஜனுவா னென்பதாம். 47

19-வது சுலோகம். யோககாலம்.

பலகோளின்திசையந்திரத்தில் பார்த்திபயோகம்வந்தால்
நலமுளகோட்சாரத்தில் நாடுங்கோட்டிசையந்திரத்தில்
பலமுடனிருந்தபோது பாக்கியஞ்சம்பத்தேற்று
நிலமதிற்செங்கோற்றாங்கி நிருபனுயரசுசெய்வான்.

இ-ள். பல கிரகங்களின் திசை புக்தி யந்திரங்களில் இராஜயோகம் வந்தால் கிரகங்கள் சாரவசத்தைக் கொண்டும் திசையந்திரத்தினுல்வலிது பெற்றிருந்தபோது சகல சம்பத்துகளையும் பெற்று அரசனுனவா னென்பதாம். 48

19-வது சுலோகம். இராஜ்யம் தவருறுதல்.

சாதகன்செனிக்கும்போது சத்துருநீசமாகி
நீதியில்லாதுகோள்கள் நின்றவந்திரத்திசையில்
போதவேவலிதுகுன்றும் பொன்பொருள்விரயமாகும்
வேதனைமிகவுண்டாகும் வெற்றிராஜ்ஜியமும்போமே.

இ-ள். செனனகாலத்தில் பகைநீசம் பெற்றிருந்த கிரகத்தின் திசை புக்தி யந்திரத்தில் தனவிரயமும் தனக்கு துன்பமுண்டாகும் இராஜ்ஜியமும் பிறர்கைக்கொள்வார்க ளென்பதாம். 49

19-வது சுலோகம். இராஜ்யம் திரும்பகிடைத்தல்.

கோளதேவீனமாகிக் கொண்டிடுந்திசையில்ராஜ்யம்
ஆளுவோன்றனக்குத்துன்ப மவதியால்மிகவும்நொந்தன்
னுளுமேயமடுநீங்கி நலமுளார்புத்தியந்திரம்
மீளுமேமுன்விதம்போல் மேன்மையுமடைவான்காணே.

இ-ள். கிரகங்கள் ஈனபலமாகிய பகைநீசம் பெற்ற திசை அந்திரத்திரத்தில் ராஜ்யாதிபதிக்குத் துயரமுண்டாகி பின்பு நல்ல கிரகதிசை புத்தியில் மறுபடியும் இராஜ்யம் கிடைக்கும். துன்பமும் நீங்கும் இதற்கு உதாரணம் கார்க்கியரால் சுலோகஞ் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 50

20-வது சுலோகம். போகவந்தன்.

பொன்னனும்பிருகுமாலோன் புகழுமிவர்களிலோர்கோள்
மன்னியவுதயந்தங்க மந்தனேழிரவிபத்தில்
இன்னவாறிருக்கவந்தா னேற்றிடுதனமில்லானும்
நின்னயசுகபோகங்கள் நிலைமையாயனுபவிப்பான்.

இ - ள். குரு சுக்ரன் புதன் இவர்களில் ஒருவர் சென்மலக்னமிருக்க சனி ஏழாமிடத்திலும் சூரியன் பத்தாமிடத்திலுமிருக்கப் பிறந்தவன் தனமில்லாதவனுயிருந்தபோதிலும் எப்போதும் சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டேயிருப்பான் ஆனதாலிந்த சாதகனை போகவந்தனென்றே சொல்லவேண்டியதென்பதாம். 51

20-லது சுலோக வசனம்.

சூரியன் தசமமிருக்க புதன் சுக்ரன் லக்னமிருக்கமாட்டா ரானதால், ரவி-புதன்-சுக்ரன்—சம்பந்தமான சிம்மம் விருஷபம் துலாம் மிதுனம் கன்னியென்றும் அர்த்தம் சொல்லுவார்கள் வஜ்ராதியோகங்களில் சூரியன் தசமஸ்தானமிருக்க லக்னத்தில் புதன் சுக்கிரனுக்கு சொல்லப்பட்டிருப்பதினலே முன் சாஸ்த்ரானுசாரமாகவே வராகிமிகிராச்சாரியார் சொல்லியிருக்கிறார். இதற்கு உதாரணம் கார்க்கியரால் சுலோகம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 52

20-வது சுலோகம். போகிசோரர்கட்கு தலைவன்.

நல்லகோளிராசிதானும் நலமுளவலிதாய்கேந்திரம்
செல்லவும்பாபக்கோள்கள் தீயராசியில்நின்றாலும்
பல்லக்குபோகிகட்கும் பாரதிற்சோரர்கட்கும்
வல்லதன்றலைவனாகும் மாதனவந்தனாமே.

இ-ள். சுபர்களுடைய இராசிகள் கேந்திரஸ்தான மிருக்க பாபக்கிரகம் பாபராசிகளிலிருக்கப் பிறந்தவன் பல்லக்குப்போகிகட்காவது திருடருக்காவது தலைவனாவன் தனவந்தனு மாவனென்பதாம். 53

2௦-வது சுலோகம். போகிசோரர் தலைவன்.

கோலதுவில்பெண்மீனம் குளிரதுமிதுனமேறில்
சீலமுள்ளவர்பொன்மாலுந் திங்களும்புகரும்கேந்திரம்
ஞாலமீதரிதேள்சிங்கம் நற்குடம்மகரந்தீயர்
சாலவுமிருந்தபோதே தனபதிதலைவனாமே.

இ-ள். துலாம்-விருஷபம்-தனுசு-மீனம்-மிதுனம்-கன்னி-கடகம்-இந்த ராசிகளில் சுபராகிய பொன் சுக்ரன் புதன் சந்திரனிருக்க அது கேந்திரஸ்தானமானாலும் மேஷம் சிங்கம்-விருச்சிகம்-மகரம்-கும்பம் - இந்த ராசிகளில் சூரியன் செவ்வாய் சனி இருக்க சோரர்கள் போகிகளுக்குத் தலைவனாய் தனபதியாகவிருப்பான் உதாரணம் கார்க்கிவசனம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 54

(படலச்செய்யுள் தொகை.)

நரபதியோகந்தானும் நவின்றனன்வசனஞ்செய்யுள்
திரமொடுவறுபான்மூன்று தேசிகரடிவணங்கி
திருமலைநகரில்வாழும் சிறுறுவயித்திலிங்கம்
பரவியவுலகினோர்க்கு பாடினேன்விளங்கத்தானே.

பன்னிரண்டாவது இராஜயோகப்படலம்

முற்றிற்று.

---

உ

கணபதி துணை.

# மங்களேஸ்வரீயம்.

பதின்மூன்றவது

## இரஜ்வாதியோகப் படலம்.

கிரந்த கர்த்தா இந்த அத்யாயத்தில் நாபசாக்யா யோகங்களை விவரித்து சொல்பவரை முதல் சங்கியை தெரியச்செய்கிறார்.

அந்த நாபசயோகத்திற்கு 4-விகற்பமாகும் அதில் ஆக்ருதியோகங்களை 1-விகற்பம் ஆக்ருதியோகமும் சங்கியா யோகங்களாம் 2 விகற்பம் ஆக்ருதி யோகமும் சங்கியாயோகமும் ஆஸ்ரமயோகமமென 3 விகற்பமாம் ஆக்ருதியோகம் சங்கியாயோகம் ஆஸ்பரயோகம் தளயோகம் என 4-விகற்பங்களாம் இதின் சங்கியை விபரமெப்படி யென்றால் 9-10-8 இந்த சங்கியை விபரம் 3-3-4 இந்த சங்கியைக்கொண்டு குணிக்கப்பட்டது 2-3-4 விகற்பத்தைக் கொண்டு பிறக்கும் யோகங்களாம் நவாங்கிசையை மூன்றினால் குணிக்க 27-ஆகுமானால் த்விகற்பத்தினால் 27-யோகங்கள் ஏற்படும் பத்தை மூன்றினால் குணிக்க 30 - ஆகுமானால் திரிவிகற்பத்தினால் 30-யோகமேற்படும் எட்டை நாலினால் குணிக்க 32-ஆகுமானால் சதுர் விகற்பத்தினால் 32-யோக மேற்படும் என்று தாற்பரியம் அதெப்படி என்றால்.

ஆக்ருதியோகம் 20-சங்கியாயோகம் 7-இந்த இருபத்தேழும்திவிகற்ப யோகம் ஆக்ருதியோகம் 20-சங்யாயோகம் 7-ஆஸ்ரயோகம் 3-இந்த முப்பது திருவிகற்பயோகங்கள் ஆக்ருதியோகம் 20-சங்யாயோகம் 7-ஆஸ்ரயோகம் 3-தளயோகம் 2-இந்த 32-ம் சதுர்விகற்ப யோகங்கள் இவ்விதமாக 32-யோகமேற்படும்.

புராதனயவனரைக்கொண்டு 3-றைக்கொண்டு குணிக்கப்பட்டது 600-ஆனால் 1800 நாபசயோகங்கள் சொல்லப்பட்டது. சிசுத்வசனால் உதாரணம் சொல்லப்பட்டதென்று நாபசயோகங்களுக்கு ஆனந்யம் சொல்லப்பட்டிருப்பதால் புராணாதிகளுக்கு 1800-என சங்கியை நிர்ணயம் கொண்டேற் படாததினால் பலவிபரஞ் சொல்லப்பட்டது.

சகல கிரகமும் 4-7-லிருந்தால் சங்கயோகம்
சகல கிரகமும் 7-10-லிருந்தால் பப்ருயோகம்
சகல கிரகமும் 10-4-லிருந்தால் த்விசனயோகம்
இந்த மூன்றேடுகூட ஆக்ருதியோகங்கள் 23
சங்கியாயோகம் 127-அதெப்படியென்றால்.





ஏகவிகற்பம் 7-த்விஜவிகற்பம் 21-த்ரிவிகற்பம் 35-சதுர்விகற்பம் 35-பஞ்சம் விகல்பம் 21-ஷட்விகற்பம் 7-சப்த விகற்பம் 1-இந்த விகற்ப கணிதத்தால் சுனபாதி யோகத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன இது எந்த விவாகபடலத்தில் வராகமிகிராசாரியரால் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி பூர்வோக்தமாகிய 23-ஆக்ருதி யோகங்களோடேகூடி 150-ஆகும் இந்த சங்கியை 12-ல் குணிக்க த்வாதச லக்னஜனனயோகம் 1800-இப்படி பூர்வயவனர்களால் 1800-நாபசயோகங்கள் சொல்லப்பட்டதென்பதாம் இந்த யிருகஜ்ஜாதகத்தில் அந்த 1800-யோகங்களை சங்கிரகித்து சொல்லப்பட்டது. ஆனால் 32-யோகங்களைக்கொண்டே அந்த 1800-யோகங்களில் சொல்லப்பட்ட யாவற்றையும் தெரியும்படியாய் சொல்லப்பட்டதென தாத்பரியம்.

1-வது சுலோகம். வசனம்.

இரண்டாவது சுலோகத்தில் ரஜ்ஜுமுசலம் நல தளாக்யம் பகுமாலா யோகம் சர்ப்பயோகம் கிரகசர்ப்பயோகமும் மூன்றுவது சுலோகத்தில் அந்தயோகவிபரமும் நாலாவது சுலோகத்தில் கதாயோகம் சகட விஹக சிருங்காடஹல யோகமும் ஐந்தாவது சுலோகத்தில் வஜ்ரம் யவ கமலவாபி ஆறுவது சுலோகம் அதின் விபரமும் ஏழாவது சுலோகத்தில் யூப இஷுசக்தி தண்டயோகமும் எட்டாவது சுலோகத்தில் நௌ கூட சத்ர தனுர் யோகமும் எட்டு அர்த்தசந்திரயோகமும் பத்தாவது சுலோகத்தில்சங்கியா யோகமாகிய வல்லகி தாமணி பாசகேதார சூல யுக கோள யோகமும் சொல்லப்பட்டிருக்கிறது.

பதினோராவது சுலோக முதல் பத்தொன்பது சுலோகம் வரையில் யோகபலனைச் சொல்லப்பட்டது. அதினால் பாட்டுகளுக்கு சுலோகம் போடவில்லை.

சிலர் கிரந்தகர்த்தா பூர்வோக்தமான ஆஸ்ரயோக திரயங்களையு தள யோகத்வயங்களைச் சொன்னவரல்ல அப்படிச் சொல்லாததற்குக் காரணம் இந்த சுலோகத்தில் தெரியப்படுத்துகிறார்.

3-வது சுலோகம் வசனம்.

ஆக்ருதியோகமான யவ பத்மவஜ்ர விஹாக-யோகங்களோடு கூட முன்சொன்னகதா சகடா இவைகளோடு சங்யா யோகமான கோளக சூல கேதாரங்களோடும் ஆஸ்ரயோகமான ரஜ்ஜு முசல நலயோகமான சமானத்வம் அடையும் ஆனதினால் சிலர் இந்த ஆஸ்ரயோகங்களை சொன்னவர்கள் அல்ல ஆனால் இந்த கிரந்தத்தில் சொல்லப்பட்ட ரஜ்வாதி விதி ஆஸ்ரயோகங்களுக்கு அவகாசமில்லை ஆனதால் இந்த ரஜ்வாதி யோகத்திற்கு வராகமிகிரா சாரியரால் சொல்லப்பட்டதை தெரிந்துக்கொள்ள விபரம்.

கேந்திரஸ்தான மடைந்திருந்த கிரகத்திற்கு சொல்லப்பட்ட பலனே பலனாகவுண்டான தளநாமங்களான அந்தகிரகசர்ப்பயோகம் பின்னபலன்

களானதென்று சிலர்சொல்வார்கள், ஆனால் வராகமிகிராசாரியர் சொன்ன பிரகாரமே கேந்திரஸ்தானத்திலிருந்த சுபர்கள்சுபப்பலனையுமகேந்திரத்திலிருந்த பாபிகள் அசுபப்பலனையு முள்ளவரென்று சகல சோதிஷ கிரந்தங்களும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப்பலன்களே இந்தகிரகஸ்சர்ப்பயோகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. தவிர விசேஷம் எதுவும் சொல்லாதபடியினால் இந்த தளாக்யத்திற்கு கிரக சர்ப்பயோகமும் இந்தஇரண்டு சிலரால் சொல்லப்படவில்லை யென்று தாற்பரியம். ஆனால் இந்தகிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிற கேந்திரஸ்தான மடைந்த கிரகங்கள் சுயதிசாகாலத்தில் மாத்திரமே பலன் தருவாரே தவிர சர்வ திசையிலும் பலன்தருபவரல்ல நாபசயோகத்தில் சொல்லப்பட்ட இந்த யோகங்கள் சர்வதிசையிலும் பலன் தருமென்று பராசராத்துய்க்த பிரகாரமாய் வராகமிகிராசாரியரால் கிரக சர்ப்பயோகம் சொல்லப்பட்ட தென்றறியவும்.

### ரஜ்ஜுயோகம்.

நிறைமறிபுல்வாய்கொண்டல் நேருமிவ்வோரைதன்னில்
பிறைரவிசேய்மால்பொன்னன் பிருகுடன் சனியாமின்னோர்
குறைவிலாதமர்ந்தபோது கூறுவதுரஜ்ஜுயோகம்
தறையதில்பொறுமையுற்று தான்பரதேசஞ்செல்வான்.

இ-ள். சராராசியாகிய மேஷம்-கடகம்-துலாம்-மகரம்-இந்த நான்குராசியிலும் சூரியன் முதலேழுகோளுமிருக்க ரஜ்ஜுயோகம் அதில் பிறந்தவர் குணங்களாவன. ஈரிஷையும் பொறுமையுமுள்ளவன் தேசாந்தரவரசன் வழிநடக்க பிரியமுள்ளவனு யிருப்பானென்பதாம். 1

### முசலயோகம்.

குடம்விடையரியுந்தேளில் குலவுமேழ்கோளேநிற்க
திடமுடனுதித்தபேர்க்கு செப்பினேம்முசலயோகம்
திடமுறுகுணனும்பாரில் செல்வமுமிகவுள்ளோனாய்
கடவுளுமமைத்தானுகும் காரியசீலன்கர்வி.

இ-ள். ஸ்திரராசியாகிய ரிஷபம் சிம்மம் விருச்சிகம் கும்பத்தில் எழுகிரகமுமிருக்க முசலயோகம் கருவமும் தனமுள்ளவன் வெகுகார்ய சீலனுமாயிருப்பனென்பதாம். 2

### நலயோகம்.

மங்கையாழ்தனுமீனத்தில் மருவுமேழ்கோளேநிற்க
இங்கிதநலயோகந்தா னெழிலுளநிபுணனுகி
தங்குசெல்வத்தைப்பெற்று தாட்டிகனறிஞன்றீரன்
அங்கமேயீனனென்று வயனமைத்திட்டதாமே.

இ-ள். உபயராசியாகிய மிதுனம் கன்னி-தனுசு-மீனத்தில்-சூரியனுதியேழுகிரகமிருக்க நலயோகமாம். அதில் பிறந்தவர்களின் நற்குணங்களா

வன அழகுள்ளவன் காரியங்களிலே சூட்சுமமான புத்தியுள்ள நிபுணனும் செல்வவந்தன் தீரத்தனத்தையும் அறிவையுமுள்ளவன் ஆகிலும் சரீரத்தில் ஊனமுள்ளவனு யிருப்பானென்பதாம். 3

சிரகயோக அம்சம்.

பொன்புதன்புகரோன்றனும் புக்கிடமூன்றுகேந்திரம்
உன்னிடுபாபர்தானும் ஒருகேந்திரமில்லாவிட்டால்
மன்னிடுசிரகயோகம் மனையுண்டுமனைவிமக்கள்
நன்மையுஞ்சுகமுண்டாகி நாடதிலிருப்பனுமே.

இ-ள். குரு-புதன்-சுக்ரன்-இவர்கள் மூவரும் இராசி சக்ரத்தில் கேந்திரிக்கமாட்டார்கள். அமிசத்தில் கேந்திரமிருக்க ஒரு கேந்திரத்தில்பாவரில்லாதபோனல் கிரகயோகம் அதின்பலன் வீடுகளும்மனையாளும் புத்திரரும் சுகமுமுண்டாகி வாழ்ந்திருப்பா னென்பதாம். 4

சர்ப்பயோகம்.

தினகரன்குருதிமந்தன் செப்புமூவர்களுமூன்று
மனையதில்கேந்திரிக்க மருவியசுபரோர்கேந்திரம்
கனமுடனில்லாவிட்டால் கட்செவியென்னும்யோகம்
மனமதுதுயரத்தோடு மானிலத்திருப்பான்றனே.

இ-ள். சூரியன் செவ்வாய் சனி மூன்றுபேர்களும் மூன்றுகேந்திரமிருக்க சுபர்கள் ஒரு கேந்திரத்தி லில்லாவிட்டால் கட்செவி யென்னப்பட்ட சர்ப்பயோகம் அதின்பலன் எப்போதும் துக்கப்பட்டுக்கொண் டிருப்பவனு மென்பதாம். 5

கதாயோகம் நாலு.

எழுவருமுதயம்நாலி லிருந்திடகதையோகந்தான்
பழுதிலாநாலேழ்யோகம் பத்தேழும்யோகமாகும்
இழிவிலாவுதயம்பத்து மிவ்விதநாலுயோகம்
அழிவிலாதனத்தைத்தேட வாசையான்தனவான்சீலன்.

இ-ள். கதையோகமென்பது நாலுவிதமாகும் அதெப்படி யென்றால் சூரியனுதி எழுகிரகமும் சென்மலக்னத்திலும் நாலிலும் இருக்க யோகம் 1-நாலிலும் ஏழிலுமிருக்கயோகம் (2) ஏழிலும் பத்திலுமிருக்க யோகம்(3) பத்திலும் சென்மத்திலுமிருக்க யோகம் (4) இதன் பலன் தனவான் சிசுபுள்ளவன் எப்போதும் தனந்தேட விச்சையுடையவனு யிருப்பானென்பதாம். 6

சகடயோகம்.

கதிர்மதிசேய்மால்பொன்னுங் கரியவன்பனிங்குதானும்
உதயமேழதிலேநிற்க வுரைப்பதுசகடயோகம்

நிதியதுசகடைதன்னால் நீள்தனமிகவுந்தேடி
பதியதில்நோயால்வாடி பாரதிலிருப்பனாமே.

இ-ள். சூரியனாதி யேழுகிரகமும் ஜென்மலக்கின மத்தியிலும் ஏழாமிடத்திலும் இருக்க சகடயோகம் இதன் பலன் சகடையினால் சீவனம் அதாவது சக்கரத்தினாலும் வண்டியினாலும் தனந்தேடி இருப்பான் வியாதியினால் துன்பப்படுவன் என்பதாம். 7

விஹகயோகம்.

மதிரவியாரலாசான் மழைகோளுஞ்சனிபின்னோனும்
துதிசுகம்கருமந்தங்க சொல்லுவோம்விஹகயோகம்
பதிதனலுதித்தபாலன் பலருக்குந்தூதுசெல்வான்
விதியுளன்கலகஞ்செய்வான் வீணாய்த்திரிவான்தானே.

இ-ள். சூரியனாதி யெழுகோளும் நாலாமிடத்திலும் பத்தாமிடத்திலுமிருக்க விஹகயோகம் இதன் பலன் தூது செல்பவன் சுய இச்சையாகத் திரிபவன் கலகஞ் செய்யவனாயு மிருப்பானென்பதாம். 8

சிருங்காடயோகம்.

ஒன்பதஞ்சுதயமென்று வுரைக்குந்திரிகோணந்தன்னில்
இன்புறவெழுகோள்நிற்க வெழில்சிருங்காடயோகம்
துன்பமுமிகவுமுள்ளோன் சுகமதுவயோதிகத்தில்
அன்பொடுவெகுநாளிந்த வவனியிலிருப்பதாமே.

இ-ள். ஜென்மம் அஞ்சாமிடம் ஒன்பதா மிடந்தனில் சூரியனாதி ஏழுகிரகமிருக்க சிருங்காடயோகம் பால்யம் எவ்வனத்தில் நஷ்டமும் அந்தியகாலத்தில் சுகமு முள்ளவன் வெகுகாலம் சீவித்திருப்பன் அற்பாயுளுள்ளவனல்ல வென்பதாம். 9

ஹலயோகம் மூன்று.

பத்துடனாறிரண்டில் பகருமேழ்கோளிருக்க
உத்திடுங்கலயோஹந்தா னேங்குமூன்றேழிலாபம்
சித்தியாயோகம்ரண்டு செப்புநாலெட்டீராறும்
பத்தியாமூன்றாமியோகம் பயிர்த்தொழில்செய்வான்றானே.

இ-ள். சூரியனாதி யேழுகோளும் பத்தாமிடம் ஆறாமிடம் இரண்டாமிடமிருக்க ஹலயோகம் 1-மூன்றாமிட மேழாமிடம் பதினோராமிடமிருக்க யோகம் 2-நாலாமிடம் எட்டாமிடம் பன்னிரண்டாமிடமிருக்க யோகம் 3-இந்த 3-யோகத்தில் பிறந்தவன் பூமியைத் திருத்தி ஏர் உழுது தானிய விர்த்தி யென்னும் கிருஷிதொழில் செய்பவனா யிருப்பவ னென்பதாம். 10

வஜ்ரயோகம்.

பத்துடன்நாலிற்றீயர் பட்சமற்றிடத்தில்நல்லோர்
உத்திடவஜ்ரயோக முறுமவன்சௌர்யத்தோடும்

மத்திமவயதில்கஷ்டம் வாலிபவயோதிகத்தில்
மெத்தவுஞ்சுகமேயுற்றான் மேவலர்தனக்குநேசன்.

இ-ள். நாலாமிடத்திலும் பத்தாமிடத்திலும் பாபக் கிரகமிருக்க மற்ற விடங்களில் சுபர்களிருக்க வஜ்ரயோகம் இதில் பிறந்தவர்கள் சவுரிய வானாய் பாலியத்திலும் விர்த்தாப்பியத்திலும் சுக சௌக்கியம் சர்வசனப் பிரியனாயிருப்பன். மத்திமமான எவ்வனத்தில் கொஞ்சம் கஷ்டத்தை யடைவ னென்பதாம். 11

யவயோகம்.

உதயமேழதிலேதீய ருயர்சுபர்நாலிடத்தில்
பதியமற்றிடத்தில்கோள்கள் பற்றாதிருக்கவந்தோன்
அதிபராக்கிரமவந்த னாஞ்சிறுவயதில்துககம்
மதிதனம்மூப்பெவ்வனம் மாசுகம்யவயோகந்தான்.

இ-ள். சென்மலக்னத்திலும் ஏழிலும் பாபர்களும் நாலுபத்தில் சுபரும் மற்ற விடத்தில் கிரகமில்லாதிருக்க யகயோகம் ஆகுமாம். இதில் பிறந்தார். குணங்களாவன அதிக பராக்ரமவந்தன் சிறுவயதில் கஷ்டமும் எவ்வனத்திலும் வயோதிகத்திலும் அதிக சுகத்தை யடைந்திருப்பவனா மென்பதாம். 12

பத்மயோகமென்னும் கமலயோகம்.

இரண்டுகண்டத்தில்நல்லோ ரிரண்டுகேந்திரத்திற்றீயர்
திரமுறகமலயோகம் சேயதிகுணத்தானாகி
விரவிடுபலபேருக்கும் மேவுநற்புகழுங்கீர்த்தி
சரபமுஞ்சவுக்யமுற்று தரணியிலிருப்பனாமே.

இ-ள். நாலு கேந்திரங்களிலும் சுபரும்பாபருங் கலந்திருக்கவேண்டியது. அதெப்படி யென்றால் சுபரிருக்கவேண்டிய லக்னம் சப்தமம் என்னப்பட்ட இரண்டிடத்தில் ஓரிடத்தில் பாபியும் ஓரிடத்தில் சுபருமாம் அசுபரிருக்கவேண்டிய சுகம் கருமமென்னப்பட்டஇரண்டில் ஒருஸ்தானம் பாபரும் ஒருஸ்தானஞ் சுபருமிருக்க கமலயோகமாம். அதாவது சென்மத்தில். சுபரும் ஏழில் பாபியிருந்தாலும் சரி அல்லது சென்மத்தில் பாபரும் ஏழில் சுபரிருந்து நாலாமிடம் பாபியும் பத்தாமிடம் சுபரிருந்தாலும் இந்த விதமாக யூகித்துக்கொண்டு கமலயோக மேற்படும் இதன் பலனானது சர்வ சனங்களும் புகழப்பட்ட கீர்த்தியுள்ளவனாயுங் குணவந்தனாயும் சரச வானாகவும் அதிக சவுக்கிய வந்தனாயும் இருப்பானென்பதாம். 13

வாபியோகம் இரண்டு.

இரண்டைந்துலாபமெட்டி லெழுகோளால்வாபியோகம்
பரவுமூன்றாறென்பானும் பண்டிரண்டில்வாபியோகம்
திறமுறுசுகவானற்பதிரவியம் நிக்ஷேபிப்பான்
உறவினர்மற்றோர்க்கியாவு லோபியாயிருப்பனாமே.

இ-ள். கமலயோகத்திற்குச்சொன்ன சுபரும் பாபரும் ஏழுக்கு ஏழாக இரண்டு எட்டிலும் ஐந்து பதினொன்றிலுமிருக்க வாபியோகம் 1 மூன்று ஒன்பது ஆறு பன்னிரண்டிலும் நேருக்கு நேராக சுபரும் பாபரும் இருக்க வாபியோகம்-2 இதில் பிறந்தார்க்கு பலன் ஸ்திரமாகவும் சொற்பமான தனமும் சுகமுமுள்ளவன் ஈகையில்லாதவன் லோபி பூமியில் தனத்தைப் புதைத்து வைத்திருப்பவனு மென்பதாம். 14

## யூபயோகம்.

சுகமொடுமூன்றிரண்டு தூயநற்சென்மந்தன்னில்
பகலவன்முதலேழ்கோளும் பற்றிடயூபயோகம்
மகமுடன்யாகஞ்செய்து மகிழவிற்பாகமீவோன்
மிகுவிதரணையினோடு மேவுமிங்கிதகுணத்தான்.

இ-ள். சென்மலக்னம் மூன்று இரண்டு நாலில் சூரியனாதி யேழுகிரக மிருக்க யூபயோகம் யாக யக்யங்களினாலே தேவர்களுக்கு அவிற் பாகம் கொடுத்து அதினால் நன்மையுடையவன். இங்கித குணமும் விதரணையான குணமுடையவ னென்பதாம். 15

## சரயோகம்.

நாலுடனைந்தாறேழில் நாடுமேழ்கோளேகிற்க
ஞாலமீதுதித்தசேய்க்கு நண்ணுடுசரயோகந்தான்
சாலவுமரசரில்லில் தங்குவான்வில்பழக்கம்
சீலனும்கொலைஞன்மர்ம திகழ்சாலைகாவலோனே.

இ-ள். சூரியனாதியா யேழுகிரகமும் நாலாமிடம் ஐந்தாமிடம் ஆறு மிடம் ஏழாமிடம் இருக்க சரயோகம் இராஜகிரகத்தில் வசிப்பவன் ஆயு தங்களில் பழக்கமும் வில்லம்பு பழக்கமு முள்ளவன் பந்தன சாலைக்கும் மர்மசாலைக்கும் அதிகாரி. கொலை செய்பவன் சரயோகமென்னும் சூரிய கலை சந்திரகலையில் பழகுபவனும் ஆசாரம் சுசியுடையவனுமிருப்பா னென் பதாம். 16

## சக்தியோகம்.

காமமோடாயுள்லாபம் கருமத்திலெழுகொள்தங்க
தீமைசேர்சக்தியோகம் திரவியமில்லான்மந்தன்
நேமமாஞ்சுகமுமீனம் நீசகிர்த்தியமேசெய்வன்
தாமதகுணத்தனென்றே சதுர்முகனமைத்ததாமே.

இ-ள். சூரியனாதி ஏழுகிரகமும் ஏழாமிடம் எட்டாமிடம் ஒன்பதா மிடத்திலும் பத்தாமிடத்திலுமிருக்க சக்தியோகம் சுகமும் தனமுமில் லாதவன் மந்தமான புத்தியுள்ளவன் தன் சுயசாதி கிருதத்தை விட்டு தாழ்மையான கருமம் செய்பவன் அதே நீசகிர்த்திய மெனச் சொன்ன தாகு மென்பதாம். 17

## தண்டயோகம்.

செனனமீராறுலாபம் செப்பிடுகருமந்தன்னில்
தினகரன்முதலேழ்கோளும் திரமுடனிருக்கவர்தான்

கனமுறுதண்டயோகம் கதியதுபாவஞ்செய்து
இனமுளநேயர்தம்மை யிகலினால்விலக்குவானே.

இ-ள். சூரியனாதி யேழுகிரகமும் பத்தாமிடம் பதினோராமிடம் பன்னிரண்டாமிடம் இதிலிருக்க தண்டயோகம் பாபம் செய்பவன் அதாவது அதமகிர்த்தியமாம். இஷ்டசனங்களை விலக்குபவனாயிருப்பானென்பதாம்.

நௌயோகம்.

சகலருமுதயந்தொட்டு தனியாயேழிடமிருக்க
இகமதில்நௌயோகந் தானெழில்சுகம்சற்றுமில்லா
தகமையான்லோபியாகும் சம்பத்துகீர்த்திசெல்வம்
புகழொடுபுண்யம்மற்றோன் பூவினிலிருப்பனாமே.

இ-ள். சூரியனாதி யேழுகிரகமும் தனித்தனியாக சென்மம் 2-3-4-5-6-7-இந்த இடத்திலிருக்க நௌயோகம் அதின் பலன் அழகு சுகமில்லாதவன் லோபி சம்பத்து கீர்த்தி செல்வம் புகழ் புண்யம் அற்பமாயுள்ளவனாயிருப்பான் இது உரைபாடமாக கொள்ளவு மென்பதாம். 19

கூடயோகம்.

சுகமுதற்கருமமட்டும் சுடராதியெழுவர்நிற்க
சகமதிலுதித்தோர்க்கெல்லாம் சாற்றினேன்கூடயோகம்
பகருவன்கடுஞ்சொல்மிக்க பண்பதும்சத்யமற்றோன்
அகமுளன்காவற்கூட வதிகாரிலோபியாமே.

இ-ள். சூரியனாதி யேழுகிரகமும் நாலாமிடம் 5-6-7 8-9-10-இதிலிருக்க கூடயோகம் கடுஞ்சொல் பேசுபவன் இனிமையான வார்த்தையும் உண்மையுமில்லாதவன் அகங்கார முள்ளவன் காவற்கூடம் சிறைகூடத்திற்கு அதிகாரியாயும் லோபமுள்ளவனாயு மிருப்பனென்பதாம். 20

க்ஷத்ரயோகம்.

காமனாகத்தைத்தொட்டு கருதியசென்மமட்டும்
நேமமாயெழுவர்நிற்க நிலைபெருக்ஷத்ரயோகம்
தீமையில்லாதான்பந்து சினேகரால்சுகமேபெற்று
தாமதன்மூப்பில்மிக்க தனசவுக்கியவானாமே.

இ-ள். சூரியனாதிஏழுகிரமுகம் ஏழாமிடம் எட்டாமிடம்ஒன்பதாமிடம் பத்தாமிடம்பதினோராமிடம்பன்னிரண்டாமிடம் சென்மத்திலிருக்கக்ஷத்ரயோகம்பாபம் செய்தவன் சிநேகிதரால் சுகமடைந்தவன் ஆகிலும்தன்மையான குணத்தன் விர்த்தாப்பியகாலத்தில் தனமும் சவுக்கியமு முடையவனாயிருப்பா னென்பதாம்.

தனுர்யோகம்.

பத்தாதிசுகம்வரைக்கும் பகல்முதலெழுவர்தங்க
இத்தலமுதித்தபேர்க்கு வெழிலுறுதனுசுயோகம்

உத்ததோர்பிலவான்சூரன் னுருநடுவயதில்துக்கம்
மெத்தவும்பால்யமூப்பில் வெகுசுகவந்தனுமே.

இ-ள். சூரியனாதி யேழுகிரகமும் பத்து பதினொன்று பன்னிரண்டு சென்மம் இரண்டுமூன்று நாலுவரையிலிருக்க கார்முகயோகமென்றும் தனுசு யோகமென்னப்படும் திடமான சரீரமும் கலங்காதநெஞ்சுள்ளவன் எதிரியை யுத்தத்தில் செயிக்க சூரன்உள்ள பரமாயுசை மூன்றுகூறு செய்தால் முதலும் கடையும் சுகம் நடுவயதில் கொஞ்சம் கஷ்டப்படுவா னென்பதாம். 22

அர்த்தசந்திரயோகம் ஒன்று இரண்டு.

தனமுதலாயுள்மட்டும் சண்டனாதியதாங்கோள்கள்
இனமுடனிருந்தாலர்த்த விந்துவின்யோகமொன்று
கனசகோதரத்தைத்தொட்டு கதிராதிகோள்கள்தங்க
பனிமதியர்த்தயோகம் பகருவதிரண்டதாமே.

அர்த்தசந்திரயோகம் மூன்று நான்கு.

புத்திரனாதிலாபம்பொர்ப்புறு மெழுவர்நிற்க
சித்தமாயர்த்தசந்திரன் செப்பியயோகமூன்றும்
சத்துருமுதலேழ்மட்டும் சண்டனாதியவேழ்கொள்கள்
அத்தலமுறையிலர்த்த வம்புலியோகம்நாலே.

அர்த்தசந்திரயோகம் ஐந்து ஆறு எழு எட்டு.

மாரகமுதலேழ்கோளு மருயிடயோகமைந்து
தீரமாந்தன்மமாதி தினகரன்றங்கவாறும்
கூருபன்னொன்றுதொட்டு கொண்டிடயோகமேழு
சீருலாவியங்தொட்டெண்ண செப்பியயோகமெட்டே.

இ-ள். சூரியனாதி யேழுகிரங்களும் சென்மத்திற்கு இரண்டு மூன்று நாலு ஐந்து ஆறு எழு எட்டு இந்த எழிலும் எழுகிரகமிருகக யோகம்-1 எழுவரும் மூன்று நாலு ஐந்து ஆறு எழு எட்டு ஒன்பதிலிருக்க யோகம்-2 எழுவரும் ஐந்து ஆறு எழு எட்டு ஒன்பது பத்து பதினொன்றிலிருக்க யோகம்-3 எழுவரும் ஆறு எழு எட்டு ஒன்பது பத்து பதினொன்று பன்னிரண்டிலிருக்க யோகம்-4 எழுவரும் எட்டு ஒன்பது பத்து பதினொன்று பன்னிரண்டு ஒன்று இரண்டிலிருக்க யோகம்-5 எழுவரும் ஒன்பது பத்து பதினொன்று பன்னிரண்டு ஒன்று இரண்டு மூன்றிலிருக்க யோகம்-6 எழுவரும் பதினொன்று பன்னிரண்டு ஒன்று இரண்டு மூன்று நாலு ஐந்திலிருக்க யோகம்-7 எழுவரும் பன்னிரண்டு ஒன்று இரண்டு மூன்று நாலுஐந்து ஆறிலிருக்க யோகம்-8 இப்படி அர்த்தசந்திர யோகமென்பதாம். 23

அர்த்தசந்திரயோக பலன்.

குலவியசவுந்தரீயம் கொண்டிடுந்தேகத்தோடு
உலகத்திலுள்ளயோர்க்கு வுயர்வுளன்றிலேவனுகி

நிலமிசைபலபேர்கட்கு நேசனாயிருப்பவன்றான்
நலமுளவர்த்தசந்திர னுடியயோகத்தானே.

இ-ள். அழகான சரீரமும் சகலபேர்களுக்கும் மேன்மை யுள்ளவனும் சர்வசனப் பிரியனுயுங் கீர்த்தியுள்ளவனுயு மிருப்பனென்பதாம் இந்த யர்த்தசந்திர யோகபலன். 24

சமுத்ரயோகம்.

இரண்டுநாலாறெட்டு மீரைந்துவியந்தன்னில்
பரவுமேழ்கோள்கள்நிற்க பகர்வதுசமுத்ரயோகம்
தரணியாள்வேந்தருக்கு சமசுகமதுகளோடும்
சரசவானுகுமிந்த சாதகன்னறிவாய்நீயே.

இ-ள். சூரியனுதி யேழுகிரகங்களும் இரண்டாமிடம் நாலாமிடம் ஆறுமிடம் எட்டாமிடம் பத்தாமிடம் பன்னிரண்டாமிடத்திலிருக்க சமுத்ரயோக மென்னப்படும். அதின்பலன் ராசர்களுக்கு சமதையானவனுய் தனம் சுகம் சரசகுணத்தோடுங் கூடினவனு யிருப்பார். 25

சக்ர யோகம்.

உரைத்திடுஞ்சென்மமூன்று மயைந்தேழுந்தன்மம்
விரைவுறுலாபமேழ்கோள் வீற்றிடசக்ரயோகம்
குறைவிலாவரசர்தாமுங் கொற்றவர்சக்ரவேந்தாம்
பரைசிவஞானமேற்ற பகர்தவமுனியாம்பாரே.

இ-ள். சூரியனுதி யேழுகோளும் சென்மம் மூன்று அஞ்சு ஏழு ஒன்பது பதினென்றிலிருக்க சக்ரயோகம் அதாவது அரசர்கள் வணங்கும்படியான ராஜாதி ராஜனென்றும் சக்ரவர்த்தியா யிருப்பவன் சக்ரவர்த்தி யென்பவன் உண்மையாக நடப்பவனு மென்பதாம். ராஜாக்களும் மற்ற மனிதர்களும் வணங்கும் தபசிஞானி முனிவர்களென்றும் சொல்லப்படு மென்பதாம். 26

வல்லகி யோகமென்னும் வீணையோகம்.

ஏழ்வீட்டிலேழுகோளு மிருக்கவீணையோகத்தில்
தாழ்விலாதுதித்தசேய்க்கு சாற்றுவதென்னவென்றால்
கேழ்வியும்சங்கீதத்தில் கேடிலாநாட்டியத்தும்
பாழ்படாநிபுணனென்றே பங்கயனமைத்ததாமே.

இ-ள். சூரியனுதி யேழுகிரகமும் ஏழுவீட்டிலிருக்க வல்லகியென்னும் வீணையோகம் இதில் பிறந்தவன் சங்கீதவாத்தியம் ஆடல் பாடல்களில் சிறந்தவன் புத்தி கூர்மையுள்ளவன் ஞானமுள்ளவனுமாயிருப்பா னென்பதாம். 27

### தாமயோகம்.

ஆறிராசியிலேழ்கோளு மமர்ந்திடதாமயோகம்
நேருமிவ்வுலகுதன்னில் நிலபெறவுதித்தபாலன்
ஆருக்குமுபகாரத்த னுந்தனந்தானசீலன்
சீருளன்பசுக்கடம்மை திரமுடன்காப்பான்காணே.

இ-ள். சூரியனுதி யேழுகிரகமும் ஆறிராசியிலிருக்க தாமயோகம் இதன் பலன் சர்வ சனங்களுக்கு முபகாரஞ்செய்பவன் தருமஞானஞ்செய்பவன் சிறப்பும் ஆசாரமுமுள்ளவன் பசுக்களை ரக்ஷிப்பவனு யிருப்பானென்பதாம். 28

### பாசயோகம்.

அஞ்சிராசியிலேழ்கோளு மமர்ந்திடப்பாசயோகம்
மிஞ்சுமிப்புவியுதித்தான் மேவுபந்துக்களுள்ளான்
வஞ்சகத்துடனுமெந்த வகையிலும்பொருளைத்தேட
அஞ்சுவன்சன்மார்க்கத்தா லருந்தனந்தேடுவானே.

இ-ள். சூரியனுதி யேழுகிரகமும் ஐந்திராசியிலே யிருக்க பாசயோகம் இதின் பலன் பந்துசனங்களை கூடினவன் வஞ்சத்திலும் மற்ற துர்விஷயத்தினால் பிறரிகழாதிருக்க பொருள்தேடுவனே யிருப்பனென்பதாம்.

### கேதாரயோகம்.

நாலிராசியிலேழ்கோளும் நண்ணக்கேதாரயோகம்
சீலனும்குணவானென்போன் திரமுடன்பூமியுள்ளான்
ஞாலத்தில்கிருஷிதன்னில் நலமுடன்பொருளைச்சேர்ப்பான்
சாலவும்சுபகார்யத்தில் தானுபகாரியாகும்.

இ-ள். சூரியனுதி யேழுகிரகமும் நாலிராசியிலிருக்க கேதாரயோகம் இதன் பலன் குணவந்தன் பூமியுள்ளவன் கிருஷியென்னும் பயிர் தொழில் செய்பவன் புத்திகூர்மையுள்ளவன் சுபகாரியத்திற்கு உபகாரஞ்செய்பவனு யிருப்ப னென்பதாம். 30

### சூலயோகம்.

மூன்றிராசியிலேழ்கோளு முற்றிடச்சூலயோகம்
தோன்றினன்சூரனுகித் துய்தனத்திச்சையுள்ளான்
ஊன்றிடுகத்திக்காய முள்ளவன்தரித்ரவானுய்
தான்றிரிபவனுயிம்சை நாளுளனுயுள்மட்டே.

இ-ள். சூரியனுதி யேழுகிரகமும் மூன்றிராசியி லிருக்க சூலயோகம் இதிற் பிறந்தவன் குணங்களாவன அதிக சூரனுயிருப்பவன் தனத்தின்மேலிச்சை யுள்ளவன் சரீரத்தில் தழும்புள்ளவன் தரித்திரன்தான்சுய இச்சையாகத் திரிபவன் ஆயுளுள்ள பரியந்தம் துன்பப்படுவனு யிருப்பா னென்தாம். 31

யுகயோகம்.

இரவிதொட்டேழுகோளு மிரண்டிராசியிலேயிற்க
தரணியில்வந்தபேர்க்கு சதியுறுயூகயோகம்
பரவியவேதசாஸ்திரப் பயின்றவன்தனமிலாதான்
சுரர்தமைதுதியான்மூர்க்கன் சுகமிலாதலேவன்காணே.

இ-ள். சூரியனாதி யேழுகிரகமும் இரண்டிராசியிலே இருக்க யுகயோகம் இதில்பிறந்தவன் வேதசாஸ்திர முணர்ந்தவன் தனமிலாதவன்தெய்வ வணக்கமில்லாதவன் நாஸ்தீகனும்சுகமில்லாதவனுயிருப்பானென்பதாம்.

கோளயோகம்.

ஒருராசிதனிலேழ்கோளு முற்றிடகோளயோகம்
தருபுவிவந்தான்மிக்க தரித்திரன்மந்தன்மூர்க்கன்
மருவியசிற்பவல்லன் மலினவஸ்திரந்தரித்து
இருப்பவனசனமில்லா னிவனையுமுலகுதூற்ற.

இ-ள். சூரியனாதிஏழுகிரகமும் ஓரிராசியிலிருக்க கோளயோகம்இதில் பிறந்தவன் தரித்திரன் மந்தன் மூர்க்கன் சிற்பசாஸ்திரமும் இன்னம் பல பல சாஸ்திரங்களுமுணர்ந்தவன் அழுக்காயும் கந்தையாயுமுள்ளவஸ்திரம் தரித்தவன் சிறப்பிலாதவன் உலகத்தார் தூஷணிக்க விருப்பவனு மென்ப தாம். 33

வசனம்.

இப்படி சங்யா யோகப்பலன் சொல்லப்பட்டது இந்தவித மாய் இந்த அத்யாயத்தில் நாபாசாக்யமானயோகம்பலத்தோடு கூட சொல்லப்பட்டதுஇந்த நாபாசாயோகபலன்சகலதிசையிலும் சர்வகாலபலனும் தருமென்றறியவும் யாருக்காவது சுகமாவது அடையவேண்டியது ஒருவிதமல்ல சிலர்சுகந்தனுகியும் மனோதுக்க பரிதராயிருந்தும்சிலர் பிச்சைக்காரராகியும் சந்துஷ்டியில்லாதிருப் பார் இப்படி இருக்க இந்த நாபாசமென்னும் ரஜ்வாதியோகங்கள் சகல திசையிலும் பலனடைவது.

அதெப்படி யென்றால்.

திசாஷ்டவர்க்கப் பலன்களைத் தவிர கொடுக்கமாட்டாராதலால்அஷ் டவர்க்கானுசாரமாய் சுபாசுபப்பலன் உண்டாகுமாதலால் தற்கால உசித மாகசர்வகிரக திசையிலும்தன்பலனைத்தரும்ஆனதால் சுகதுக்கமிஸ்ரபலன் தனவந்தரும் தரித்திரரும் இருவர்களுக்கும் சாமானியமாய் சம்பவிக்கும்.

முன் சொன்ன படலத்தில் விவரிக்கப்பட்டதென்று சொல்லியிருக் கப்பட்ட விஷயமேதென்றால் தளயோகாக்ருதி யோகமும்தளயோகஆஸ்ர யோகமும் ஏககாலத்தில் சம்பவிக்குமானால் தளயோக சங்கியாயோக தள யோகமே பலனைக் கொடுக்கும் சங்கியாயோகம் பலன்தராது ஆக்ருதியோ

காஸ்ர யோகங்கள் கூடினது ஆக்ருதியோக சங்கியாயோகங்கள் கூடியும் ஆக்ருதியோகப்பலன் தருமேதவிர மற்றபலன் தருவதல்லாமல் ஆஸ்ரயோகம் சங்யாயோகம் கூடினல் அப்போது சங்யாயோகத்திற்கு அவகாசமில்லை அதெப்படி யென்றல் சாஸ்திர உபயராசியேதாவது ஓரிராசியில் சர்வகிரக மிருந்ததானல் ஆஸ்ரயோகமாகு மானதால் சங்யாயோகார்த்தமானல் கோளகயோகத்திற்கு அவகாசமில்லை இந்த விஷயத்தில் புத்திவந்தர் யூகித்துச் சொல்லவேண்டியது.

படலச்செய்யுள் தொகை.

உலகமதில்மானிடர்க் குண்டாகும்பலன்கடன்னை
பிலமுடனேழுகோளால் பிரபலராஜ்ஜயோகம்
நலமுடன்வசனப்பாவும் நாற்பதுவயித்திலிங்கம்
நிலமதிற்குருவைப்போற்றி நிகழ்த்தினேவனியோர்க்கே.

பதின்மூன்றுவது

இரஜ்வாதியோகப் படலம் முற்றிற்று

---

# மங்களேஸ்வரீயம்.

பதினன்காவது

## சந்திரயோகப் படலம்.

---

1-வது சுலோகம். கேந்திரபணபர ஆபோக்லீப யோகப்பலன்.

பகலவன்றனக்குமூன்றுஆறென்பான் பன்னிரண்டினில்மதியமர
மிகுதனம்புத்திவினையநல் ஞாலமேவுபல்காரியூகி
இகலருமதியம்பணபரமிருக்க வியம்பியயோகமத்தியமாம்
தகைபெறுகேந்திரந்தனில்மதியிருக்கசாற்றியபலனிலையாமே.

இ-ள். சூரியன் இருந்த ஸ்தானத்திற்கு 3 6 9-12 இந்த இடங்களில் சந்திரனிருக்க பிறந்தவனுக்கு உண்டான பலன்கள் தனம சாஸ்திரஞானம் புத்தி காரியங்களில்யூகமும் உடையவனும் சூரியனுக்கு கேந்திரத்தில் சந்திரனிருக்க இந்த பலனிருக்காது. சூரியனுக்கு பணபர ஸ்தானமாகிய 2-5-8-11 இந்த ஸ்தானங்களில் சந்திரனிருக்க இப்போது சொன்னபலன் மத்தியமாயிருக்கும் உதாரணம் யவனேஸ்வரர் சொல்லியிருக்கிறர். 1

1-வது சுலோகம். சந்திர நவாம்சைப் பலன்.

மதியவன்தனதுநவாங்கிசை பதனில்மற்றுமித்திரநவாம்சையினும்
திதிபெறவிருக்கபகலதிற்பிறந்த தூயசாதகத்திலம்மதியை

நிதிபெறுமரசர்நோக்கிடுங்காலில் நிள்தனவானதிபோகி
விதிபெறுநிசியில்பிறக்கிலம்மதியை வெள்ளிநோக்கிடினுமவ்விதமே

இ-ள். சந்திரன் தன்னவாமிசையிலாவது மித்திர நவாமிசையிலாவதிருக்க பகலில் பிறந்த சாதகத்தை குரு பார்க்க தனவானும் போகியாயுமிருப்பான் சந்திரன் தன்னவாம்சையிலாவது அல்லது மித்திர நவாமிசையிலாவதிருக்க இரவில் பிறந்த சாதகனை சுக்கிரன் பார்க்க தனவந்தனும் போகவந்தனுமிருப்பான். உதாரணம் கார்க்கியும் யவனேஸ்வரருஞ் சொல்லியிருக்கிறா ரென்பதாம். 2

2-வது சுலோகம். அதியோகம்

சசிதனக்கிருமூன்றேழிருநாலில் தனித்தனி யாயலமொன்ருய்,
உசினன்மால்சரர்கோனுரைந்திடில் மிக்கவுயர்பெரும் யோகமென்
றுரைப்பார்,பிசியுணர்வல்லஞானிகளிதனைப்பிரித்தனரேழ்பிரிவாக
விசிதமாயவற்றின்விதிவழுவாதுவிரித்துரைத்திடுவன்யான்மிகவே.

இ-ள். சந்திரனுக்கு ஆறு ஏழு எட்டில் தனித்தனியாகவாவது ஒன்ருய்க்கூடியாவது இருக்க அதியோக மென்னப்படும் அதைப் பிரிக்க ஏழுவிதயோகமாகும் அதைப் பின்வரும் கவியில் சொல்வோம் உதாரணம் சுரகீர்த்தி சொல்லியிருக்கிருர். 3

2-வது சுலோகம். அதியோக மேழுக்குவிபரம்.

உரைதருஞ்சுபர்கள்மூவருமொன்ருயுயரிருமூன்றிலேழெட்டில்
நிரைவுடனிருக்கயோகமூன்ருறேழ் நிலமதினுறிலதுநான்காம்
விரைவுளவாறெட்டிடமுறிலைந்து விளங்குமேழெட்டதுவாரும்
தரைதனின்மூன்றுவிடங்களில் சுபரும்தங்கிடில்யோகமுமேழே.

இ-ள். சுபர்கள் சந்திரனுக்கு ஆறிலிருக்க யோகம்-1 ஏழிலிருக்க யோகம்-2 எட்டிலிருக்க யோகம்-3, 6-8-லிருக்க யோகம் 4, 6-7-லிருக்க யோகம்-5, 7-8-லிருக்க யோகம்-6, 6-7-8-லிருக்க யோகம்-7, இந்த விதமாக அதியோகங்களைப் பிரிக்க ஏழாகு மென்பதாம். 4

2-வது சுலோகம். அதிமிஸ்ரயோகம்.

செப்புமூவிடத்தும்சுபர்களேல்யோகச் செழிப்பதுமிகுநலந்திகழும்
ஒப்புமவ்விடத்தினுயாறும்பாவருறினுறுமரிட்டவெட்டவெம்பனைத்
தப்பிலாச்சுபரும்பாபருங்கூடி தங்கிடப்பலனுமிஸ்ரமாம்
எப்புவியதிலும்பிறந்தசாதகற் கிவ்விதியறிந்திடல்முறையே.

இ-ள். சந்திரனுக்கு ஆறு ஏழு எட்டாமிடத்தில் சுபரிருக்க நன்மையான யோகம் அந்த மூன்று ஸ்தாணங்களிலும் பாபரிருக்க பாபயோகம் பாபரும் சுபருமிருக்க மிஸ்ரயோகம் இது எந்த சாதகர்களுக்கும் பார்க்க வேண்டிய தென்பதாம். 5

2-வது சுலோகம். இராஜன்யோகம்.

எண்ணர்களேற்றசுபர்கள்மூவர்களுமிந்துவுக்கேழிருமூன்றெட்
டொண்ணிடுதலத்திலுயர் வலியவராயுற்றிடுகாலதிலுதித்தான்
மண்ணினிலாயுள்வளர்தனமேன்மை மாற்றலர்தனைசெயித்திடுதல்
புண்ணியனுலகையாண்டிடுமரசன் பூரணன்நோயிலாதவனே.

இ-ள். சந்திரனுக்கு 6-7-8 இந்த இடங்களில் சுபர்கள் வலிவுள்ளவரா யிருக்கப் பிறந்தவன் தீர்த்த ஆயுளும் தனமும் கீர்த்தியும் சத்ரு செயமும் தருமஞ்செய்தலும் நோயில்லாமையு மிருந்து அரசனுவான் என்பதாம். 6

2-வது சுலோகம். மந்திரியோகம்சேனுபதி.

மதிதனக்காறேழெட்டினில் சுபர்கள்மத்தியபலமுளராகிப்
பதிதனிலிருக்கப்பிறந்த சாதகனும்பாரதில்மந்திரியோகம்
விதியதாய்ச்சுபரும்பலமிலராகில் மேதினியதிற்புகழ்சேனைக்
கதிபதியென்னும்யோகமதாகு மம்புலியால்வரும்பலனே.

இ-ள். சந்திரனுக்கு ஆறு ஏழு எட்டில் சுபர்கள் மத்திம பலவானுய் இருக்கப் பிறந்தவன் மந்திரியாவான் சந்திரனுக்கு ஆறு ஏழு எட்டில் சுபர் கள் ஈனபலமாயிருக்க சேனுதிபதியாகு மென்பதாம். உதாரணம் சாரா வளியிலும் மாண்டவ்யரும் சொல்லியிருக்கிறு ரென்பதாம். 7

3-வதுசுலோகம். சுனபாயோகம்அனபாயோகம்துருதுராயோகம்

சந்திரற்கிரண்டுநாலில் தரணிநீங்கிடமற்றைவர்
உந்திடசுனபாயோக முறுமவர்வியமீரைந்தில்
தந்திடிலனபாயோகம் சாரிருபுறத்துமின்னோர்
சொந்தமாயுறையும்போது துருதுரையோகமாமே.

இ-ள் சந்திரனுக்கு இரண்டாமிடத்திலாவது நாலாமிடத்திலாவது சூரியன் நீங்கமற்ற ஐந்து கிரகயிருக்க சுனபாயோகம் சந்திரனுக்கு பன் னிரண்டு பத்தில் சூரியனீங்கலான கிரகமிருக்க அனபாயோகம் சந்திரனு க்கு இரண்டு பன்னிரண்டில் சூரிய நீங்கலான ஐந்து கிரகமிருக்க துரு துரை யோகமாம் என்பதாம். 8

3-வது சுலோகம். துருதுரையோகம். கலிவிருத்தம்.

சந்திரர்க்குத் தனம்வியரந்தனில்
புந்திசேய்பொன் புகருஞ்சனியவர்
அந்தமாக வடைந்திடுங்காலத்தில்
சொந்தசேய்க்கு துருதுரையோகமே.

இ-ள். சந்திரனுக்கு இரண்டாமிடத்திலும் பன்னிரண்டாமிடத்திலும் சூரியன் நீங்கலான செவ்வாய் புதன் குரு சுக்ரன் சனி இவர்கள் இருக்கும் காலத்தில் பிறந்த சாதகனுக்கு துருதுரா யோகமாகு மென்பதாம். 9

3-வது சுலோகம். கேமுத்ரத்துக்கு மாற்று.

உதயலக்னதிபற் குறைக்கும்கேந்திரஸ்தானத்தில்
மதியவன்பலரைக்கூடி வந்துமேயிருந்தபோது
கதிபெறுகேமுத்திரங்கள் கழறவேயாகாதென்று
சதியிலாதுரைத்துவிட்டேன் தாரணியோர்க்குத்தானே.

இ-ள். செனன லக்னதிபதிக்கு கேந்திரஸ்தானங்களில் சந்திரன் கிரகங்களைக் கூடியிருந்தபோது கேமுத்ர யோகமென்று சொல்லக் கூடாதென்பதாம். 10

3-வது சுலோகம். சுனபா அனபா துருதுரா கேமுத்ரம்.

சந்திரர்தனக்குநாலில் தாரைக்கோள்சுனபாயோக
சந்திரர்தனங்கீரைந்தில் தாரைக்கோளனபானபாயோகம்
சந்திரர்க்கன்னைக்கர்மம் தாரைக்கோள்துருதுருவாம்
சந்திரர்க்கன்னைகர்மம் தான்சூன்யுங்கேமுத்ருவே.

இ-ள். தாரைக்கிரக மென்பது குஜாதிபஞ்சக்கிரகமாம் அது யாரென்றால் செவ்வாய் புதன் குரு சுக்ரன் சனி இவரேயாகும் இந்த ஐவரில் யாராவது ஒருவரிரண்டுபேர் மூன்றுபேர் நாலுபேர் ஐந்துபேர்கள் சந்திரனுக்கு நாலிலிருக்க சுனபாயோகம் பத்திலிருக்க அனபாயோகம் நாலிலும் பத்திலுமிருக்க துருதுராயோகம் நாலிலும் பத்திலு மில்லாவிட்டால் கேமுத்ர யோகமாம் உதாரணம் சாரகீர்த்தி சொல்லி யிருக்கிறு ரென்பதாம். 11

3-வது சுலோகம் - அமிசயோகம்.

சந்திரநவாம்சைதனத்திற்றுரைக்கோள் தங்கிடச்சுபானயோகம்
சந்திரநவாம்சைதனத்திற்றுரைக்கோள் தங்கிடவனபாயோகம்
சந்திரநவாம்சைதனவியமிக்கோள் தங்கிடதுருதுருயோகம்
சந்திரநவாம்சைதனம்வியஞ்சூன்யம் தானெனில்கேமுத்ருவே.

இ-ள். சந்திரன் எந்த விராசியி லிருந்தாலும் நவாம்சத்தில் சந்திரனுக்கு இரண்டாமிடத்தில் தாராக்கிரகமிருக்க சுனபாயோகமாம். சந்திரனுக்கு பன்னிரண்டாமிடமிருக்க அனபாயோகமாம். சந்திரனுக்கு இரண்டு பன்னிரண்டிலிருந்தால் துருதுராயோகமாம். சந்திரனுக்கு இரண்டிலும் பன்னிரண்டிலும் தாராக்கிரக மில்லாதிருக்குமானல் கேமுத்ர யோகமாம். உதாரணம் ஜீலசர்மாவினுல் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 12

4-வது சுலோகம் வசனம்.

இச்சா விகற்பத்தினுலேற்படும் இந்த யோகத்தின்
சங்கியைகளைச் சொல்லுகிறுர்.

ஆனல் சுனபாயோகம் 31 - அனுபாயோகம் 31 - துருதுராயோகங்களின் பேதம் 180-இந்த சங்கியைகள் ஏற்படும் குஜாதி கிரகாதி சம்ஸ்தாபு

லக்ஷணமான இச்சையாலும் விகற்பத்தினலும் கிரகமாக சந்திரனுக்கு துதிய த்வாதசங்களில் குஜாதி கிரகங்கள் பிரத்யேகமாகவிருந்தால் யோகபேதந் தெரியாதபடியாலும் முன் சம்ஸ்தாபித கிரக நிவர்த்தி செய்யப்பட்டது. மறுபடியும் ஒருவிதமாக கிரக சம்ஸ்தாபனஞ் செய்யத்தக்கது இந்தவிதமாக குஜாதி பஞ்சகிரகங்கள் ஒன்றொன்றுவது இரண்டிரண்டாவது மூன்றுவது நாலாவது ஐந்தாவது சந்திரற்குதுதியத்தினல்கணிக்க 31-சுனபாயோகம்துவாதசத்தினல் கணிக்க 31-அன்பாயோகம் ஏற்படும் இந்தஸ்தானத்வியங்களை ஏககாலத்தில் கணிக்க 180-துருதுராயோக மேற்படும் இந்த விகற்பந்தெரியும் விதமெப்படி யென்றல். 13

கணிதம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 5 | 4 | 3 | 2 | 1 |

குஜாதிகிரகங்கள் 5-கிரகத்தினல் இந்த யோகமேற்படும்ஐந்து முதல் ஒன்றுவரையில் சங்கியைகளையெழுதி இதர்க்குங்கீழ் ஒன்று முதல் ஐந்துவரையிலெழுதி அதே ரூபமாக செய்யத்தக்கது இப்படிச்செய்ய முதல் ஏற்படும் விகற்பம் 5-இந்த ஐந்தினல் துதியஸ்தான மிருக்கிறதை நாலில்பெருக்க இருபதாகும். அந்த இருபதை கீழிருக்கும் இரண்டினல் வகுக்க பத்து ஆகுமானதால் த்விகற்பம் 10-இந்த பத்தினல் திருதியஸ்தானமிருக்கும் மூன்றினல் பெருக்கி அதின்கீழிருக்கு மூன்றினல்வகுக்க பத்து ஆகும் ஆனதால் திரிவிகப்பம் பத்து இந்த பத்தினல் சதுர்த்தஸ்தான மிருக்கிற இரண்டினற்பெருக்கி அதின் கீழிருக்கும் நாலினல் வகுக்க ஐந்து ஆகுமானதால் சதுர்வி கற்பம் ஐந்து இந்த ஐந்தினல் பஞ்சம ஸ்தானமிருக்கிற ஒன்றைபெருக்கி அதின் கீழிருக்கும் ஐந்தினல் வகுக்க ஒன்றகு மானதால் பஞ்சவிகற்பம் ஒன்று இதுவும் தவிர சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது இந்த விதமாகவேகணக்கேற்படுகின்றது.

4-வது சுலோகம். யோகவிவரம்.

சந்திரனுக்கு இரண்டாமிடத்தில்குஜன் 1-புதன்-2-குரு-3 சுக்ரன் 4-சனி 5-இப்படி ஏகவிகற்பம் ஐந்தாகும் குஜன் புதன்-6குஜன் குரு 7-குஜன் சுக்கிரன்-8 குஜன் சனி-9 புதன் குரு-10 புதன் சுக்கிரன்-11 புதன் சனி-12 குரு சுக்கிரன்-13 குருசனி-14 சுக்கிரன் சனி 15-இவர்களினல் ஆகியபோகமாம் குஜன் புதன் குரு 16-குஜன் புதன் சுக்கிரன்-17 குஜன் புதன் சனி-18 குஜன் குரு சுக்கிரன்-19 குஜன் குரு சனி-20 குஜன் சுக்கிரன் சனி-21 புதன் குரு சுக்கிரன்-22 புதன் குரு சனி-23 புதன் சுக்கிரன் சனி-24 குருசுக்

கிரன் குஜன் புதன் குரு சனி-27 குஜன் குரு சுக்கிரன் சனி 28 குஜன் புதன் சுக்கிரன் சனி-29 புதன் குரு சுக்கிரன் சனி 30-இவர்களினுல் சதுர் விகற்பம் ஆகும். குஜன் புதன் குரு சுக்கிரன்சனி இது பஞ்சவிகற்பம் 1-இப்படிசுனபாயோகம் முப்பத்தி ஒன்றென தெரியத்தக்கது இந்தவிதமே அனபாயோகம் 31-ஆகும். 14

4-வது சுலோகம் யோகவிபரம்.

துருதுரா யோகபேதம் எப்படியென்றுல் குரு புதன் குரு சுக்கிரன் சனி இந்த ஐவரில் சந்திரனுக்கு 2·12-ல் ஒவ்வொரு கிரகமிருக்க 20-பேதம் ஏற்படும் சந்திரனுக்கு 2-ல் ஒரு கிரகமும் 12-ல் இரண்டுகிரகமிருக்க 36-பேதம்சந்திரனுக்கு 2-ல் இரண்டுகிரகமும் 12-ல் ஒருகிரகமுமிருக்க 30-பேதமேற்படும் சந்திரனுக்கு 2-ல் மூன்றுகிரகமும் 12-ல் ஒரு கிரகமுமிருக்க 20-பேதம் ஏற்படும்சந்திரனுக்கு 12-ல் மூன்றுகிரகமும் இரண்டில் ஒருகிரகமுமிருக்க 20-பேதம் ஏற்படும் சந்திரனுக்கு-2-ல் நாலுகிரகமும் 12-ல் ஒருகிரகமுமிருக்க யோகம் ஐந்து பேதம் ஏற்படும் சந்திரனுக்கு 12-ல்நாலு கிரகமும் 2-ல் ஒருகிரகமுமிருக்க யோகம் ஐந்து பேதம் ஏற்படும் சந்திரனுக்கு 2-ல் இரண்டு கிரகமும் 12-ல் இரண்டு கிரகமுமிருக்க 30-பேதம் ஏற்படும் சந்திரனுக்கு 2-ல் மூன்று கிரகமும் 12-ல் இரண்டு கிரகமுமிருக்க 10-பேதம் ஏற்படும் 12-ல் மூன்று கிரகமும் 2-ல் இரண்டுகிரகமுமிருக்க 10-பேதம் ஏற்படும் இந்தவிதமாகவே துருதுராயோகம் 180-ஆகுமென்றறியவும். 15

5-வது சுலோகம் சுனபாயோகபலன்.

தன்புயவலியால்தனமதைத்தேடி சம்பத்துகீர்த்தியைப்பெற்று
மன்னநேர்தனவான்ராஜதுல்லியனும் மதியுளன்பிரபலத்துடனே
உன்னிதகுணவான்சுனபநல்யோக முற்றிடவுதித்திடும்பாலன்
தன்குணமதனைவிபரமாயுரைத்தோம் தாரணியுற்றிடும்பேர்க்கே.

இ-ள். சுனபாயோகத்தில் பிறந்தவன் குணங்களாவன தன்னுடைய சுயபலத்தினுல் சம்பாதிக்க கூடியன் தனம் முதலான சகலசம்பத்துக்களையும் பெற்று ராஜசமானனுயும் புத்திவந்தனுயுங் கீர்த்தியுடையவனுயும் சற்குணமுள்ளவனுயு மிருப்பன் சுனபாயோக பலவனென்பதாம். 16

5-வது சுலோகம் அனபாயோகபலன்.

திடமுளதேகன்துக்கநோயற்றுத் தீரனுய்த்துட்டரைவதைத்தல்
உடலதிற்சுகந்தலேபனமாடை யுயரணியாரமும்பூண்பான்
இடாறுங்குணத்தான்வினைய ப்ரசித்தனேந்திழைவிடயசுகத்தன்
படாலங்காரன்பரிமளமணியும் பாலகன்னனபயோகத்தான்.

இ-ள். வலிவான புஜபலபராக்ரமமுடையவன் வியாதியில்லாதவன் அதிகோர ஆக்ஞையுடையவன் சுகந்தத்திரவியமும் நல்லவஸ்திரமும்ஆபரண

மாலைகளும் அணிபவன் சர்க்குணவந்தன் வினையன் கீர்த்தி பிரதாபனும் ஸ்திரீலோலனும் அலங்கார பரிமளபுஷ்ப மணியும் பாலனுமென்பதாம்

6-வது சுலோகம். துருதுராயோகபலன்.

விதரணைகுணமுள்ளானால் விதியதுதீர்க்கமான
சுதனதிதனமும்பாக்யம் துரகங்குஞ்சரமோந்தோளி
நிதியதுமுலகிலுள்ள நிகழ்சுகமனுபவிப்பன்
மதியுளன்துருதுரையின் மகிழ்ந்திடுயோகத்தானே.

இ-ள். விதரணையான குணமும் தீர்க்காயுசும் தனம் பாக்கியமுமுள்ளவன் வாகனமுள்ளவன் அதாவது யானை குதிரை பல்லக்கு முதலியதுள்ளவன் பூர்வீகதனமுள்ளவன் உலகத்திலுள்ள சகலவிதசுகங்களையுமனுபவிப்பவன் புத்திகூர்மையும் சந்தோஷ சுபாவ முள்ளவன் துருதுரை யோகத்திற் பிறந்தவ னென்பதாம். 18

6-வது சுலோகம். கேமுத்ரயோகபலன்.

அரசர்வங்கிசம்வந்தோனு மழுக்காடைசுசியில்லாதான்
பிறருவருப்புக்கொள்ள பேணுவானதர்மன்துட்டன்
விரவுநோய்சஞ்சலத்தன் வெருபேர்களிகழவின்னோன்
தரணியிற்சீவிப்போனும் தரித்திரன்கேமுத்ருவே.

இ-ள். இராஜகுலத்தில் பிறந்தவனாக விருந்தபோதிலும் தரித்திரவந்தனும் அழுக்குவஸ்திர முடுத்திக்கொள்பவன் ஆசாரமில்லாதவன் பிறர் அருவருப்பு கொள்ள நீசகிர்த்தியம் செய்பவன் துஷ்டன் நோயுள்ளவன் சஞ்சலமுள்ள நெஞ்சமுள்ளவன் உலகிலுள்ள யாவரும் இகழும்படியாகசீவனம் செய்பவன் நல்ல சாப்பாடு சாப்பிடாதவனுயு மிருப்பன் கேமுத்ர யோகத்தில் பிறந்தவ னென்பதாம். 19

6-வது சுலோகம். செவ்வாய் யோகபலன்.

இந்தநல்யோகந்தன்னை யீபவர்குஜனேயாகில்
விந்தையனுச்சாகத்தன் விஷயாதிசுகப்பிரியன்
தந்திரன்சரசவானும் சவுரியம்தனமுமுள்ளான்
சுந்தரன்குணமீதென்று சொல்லிடுங்கணிதநூலே.

இ-ள். இந்த யோகபலனை யுண்டாக்குங் கிரகம் செய்வையானதால் வினோதப் பிரியனும் உச்சாகவந்தனும் விஷயா சுகத்தில்பிரியமுள்ளவனுந் தந்திர முள்ளவனும் சரசமான குணமுள்ளவனும் சௌரியம்தனமுள்ளவனு மிருப்ப னென்பதாம். 20

7-வது சுலோகம் புதன் யோகபலன்.

பண்டிதன்தரும்யோகமதாகில் பால்மொழிசாதுர்யவாக்கும்
மண்டலம்புகழுங்கீதவாத்தியமும் மற்றுமேயெட்டெட்டுகலையும்

விண்டலத்தோர்கள்கண்டதி சயிக்கவிற்பனனுருவன்மிக்க
தண்டமில்வல்லன்குணமதுவாகுஞ் சாற்றியகணிதநூலாமே.

இ-ள். இந்த யோகபலனைத்தரும் கிரகம் புதனாயிருந்தால்நயமாகவும் மதுரமாயும் சாதுரியமாகவும் பேசக்கூடியவன். யாவரும் சந்தோஷப்படும் படியாக கீதவாத்தியம் அறுபத்திநாலு கலைக்கியானங்களை யறிந்தவன் உலகில் யாவரும் சந்தோஷப்படும்படியாக கல்விதேர்ந்த விற்பனன்சமர்த் தன் இந்தகுணமுடையவனா யிருப்பா னென்பதாம். 21

7-வது சுலோகம். குருயோகபலன்.

தருமதானங்கள்செய்வன் தனமதுவுடையான்மிக்க
பெருமையான்சுகவான்போகி பிரபலனரசர்நேசம்
திருமகளருளுண்டாகும் செம்பொன்னுஞ்சம்பத்துண்டாம்
குருபலனிதுவாமென்று கூறியகணிதநூலே.

இ-ள். இந்த யோகப்பலனைக் கொடுப்பவர் பிரகஸ்பதியானால்தானம் தருமம் செய்தலும் தனம்சுகம் பெருமை போகம் கீர்த்தி பிரதாபம் அரசர் நேசம் லட்சுமி விலாசம் உண்டாகி பொன் சம்பத்துக ளுண்டாகி வாழ்வ னென்பதாம். 22

7-வது சுலோகம். சுக்ரயோகபலன்.

மங்கையர்மோகியாவான் மகிழ்பரஸ்திரீகள்லோலன்
இங்கிதன்தனவானாகு மிந்திரியசுகமுள்ளோனும்
தங்கம்பொன்வெள்ளிரத்னம் தன்னதால்செட்டுளோனும்
சுங்கனுரீயும்யோகம் சொல்லியகணிதநூலே.

இ-ள். இந்த யோகப்பலனைக் கொடுப்பவர் சுக்ரனாகில் அதிககாமத் தினால் ஸ்திரீ சங்கமம் உடையவனா யிருப்பன் நன்மையானகுணம் உள்ள வன் தனவந்தன் விஷயா சுகத்தில் இச்சையும் சுகமுள்ளவன் தங்கம் பொன் வெள்ளி ரத்தினங்கள் முதல் பலவற்றால் செட்டடைந்து அவை களினால் தனத்தைப்பெற்று வாழ்பவனா மென்பதாம். 23

7-வது சுலோகம். சனியோகபலன்.

பரரயிஸ்வரியம்வீடு பரிவாரம்வாகனத்தை
திரமுடனனுபவித்தும் செய்குவன் பலவாங்காரியம்
சரசவானன்னியர்க்கு சமவதிபதியாயிந்த
தரணியிலிருப்பனென்று சாற்றுமிக்கணிதநூலே.

இ-ள். இந்த யோகப்பலனைக் கொடுப்பவர் சனியானால் பிறருடைய அயிஸ்வரியம் கிரகம்வஸ்திரம் வாகனம் பரிவாரங்களைத்தான் சொந்தமாக அனுபவிப்பவன் பலவிதமான காரியங்களைச் செய்யப்பட்டவனாயும் சரச மான குணத்தனாயு மன்னியஜாதிக்கு சமமுள்ள அதிபதியா யிருப்பா னென்பதாம். 24

8-வது சுலோகம். யோகவிபரம்.

சந்திரற்கிரண்டிராறில் தங்குவோரிருபேர்மூவர்
வந்தவர்பலனறிந்து வருநவாங்கிசையும்நீசம்
அந்தகோள்பகைக்கண்டே யதன்வலிதறிந்துகொண்டும்
சொந்தமாயுரைப்பதென்று சொல்லினர்கணிதவல்லோர்.

இ-ள். சந்திரனுக்கு இரண்டு மன்னிரண்டில் இரண்டுகிரகம் மூன்று கிரகம் இருந்தால் அவர்களில் வலிதறிந்து பலன் சொல்லவேண்டியது வலிதாவது நவாங்கிசாதிபதியினுடைய ஸ்திதிகளும் பகை நீசங்களைத் தெரிந்து யோகபலன் சொல்லவேண்டிய தென்பதாம். 25

8-வது சுலோகம். யோகபலன்.

பகலதிற்செனித்தபேர்க்கு பால்மதிநோக்கமுற்ற
மிகுவட்டமுன்னர்த்தத்தில் தானுமேபார்க்கதரித்ரனாகும்
தகுமதிபின்னர்த்தத்தில் தானுமேபார்க்கானாகில்
பகல்வந்தோனயிஸ்வரியம் பாக்கியம்பெறுவான்றானே.

இ-ள். பகலில் பிறந்த சாதகர்க்கு சந்திரன் பார்க்கப்பட்ட ராசிச்சக்கரத்தில் முற்பாதியில் காணப்பட்டால் தாரித்ராதி அசுபப்பலனை அடைபவனும் சந்திரன் பிரபாதியை பார்க்கக்கூடாமலிருந்தால் பகலில் பிறந்த சாதகற்கு ஐஸ்வரியம் பாக்கியம் யடைவனென்பதாம். 26

8-வது சுலோகம், யோகபலன்.

நிசிதனிலுதித்தபேர்க்கு நிலவுபின்வட்டம்பார்க்கில்
இசைதனமயிஸ்வர்யாதி யேற்றிடுபவனுமின்னேன்
வசமுடன்னிராவந்தோனை மதியுமுன்வட்டங்காண
திசையதிலசுபனென்று செப்பினர்கணிதவல்லோர்.

இ-ள். இரவில் பிறந்தவனுக்கு சந்திரன் பின்வட்டத்தைப் பார்க்க தனம் ஐஸ்வரியங்களைப் பெற்றிருப்பவன் ராத்திரியில் பிறந்தவனுக்கு சந்திரன் முன்வட்டத்தைப்பார்க்க அசுபனென்னப்படுமென்பதாம். 27

9-வது சுலோகம், உபஜெயயோகம்.

சென்மலக்கினமதற்கு செப்பிடுமுபசெயத்தில்
பொன்புகர்மாலோனிற்க புகழுதிதனவானுவான்
தன்னவர்க்குபசெயத்தில் தங்கிடதனவானென்போம்
மன்னியவிருகோள் தங்கமத்திமதனவானுமே.

இ-ள். சென்ம லக்னத்திற்கு 8-6-10-11 என்னப்பட்ட உபசெய ஸ்தானத்தில் குருசுக்ரன் புதனிருக்க தனவந்தனும் சந்திரனுக்கும் உபசெய ஸ்தானமாகிய மூன்று ஆறு பத்து பதினொன்றாமிடத்தில் சுபக்கிரகமாகிய புதன் குரு சுக்கிரனிருக்க தனவந்தனும் இரண்டுபேரிருக்க மத்திமமான தனவந்தன் ஒருவருக்கு அற்பதனவந்த னென்பதாம். 28

9-வது சுலோகம், உபஜெயயோகம்.

சந்திரன்சென்மத்திற்கும் சாற்றியவுபசெயத்தும்
விந்தையாமொருகோள்நிற்க விளம்புவேன்தனமுமற்பம்
இந்துவினுபசெயத்தி லெழில்சென்மமுபசெயத்தும்
சுந்தரகோளிலாதேல் சுதனுமேதரித்ரவானுன்.

இ-ள். சந்திரனுக்கும் லக்னத்திற்கும் மூன்று ஆறு பத்து பதினொன்றில் சுபர்கள் ஒருவரிருக்க அற்பதனவந்தன். சந்திரன் சென்மத்திற்கு உபசெயத்தில் பாபரிருந்தாலுஞ்சரி தரித்திரவா னென்பதாம். 29

9-வது சுலோகம், உபஜெயயோகம்.

இலக்கினத்துபசெயங்களிந்து வுக்குபசெயத்தும்
நலமுறுசுபரேநிற்க நற்றனமயிஸ்வரியம்
பிலமுடனியாவுமேற்று பிரபலத்துடனேயிந்த
நிலமதிலிருப்பரென்று நிகழ்த்திடுங்கணிதநூலே.

இ-ள். லக்ன உபசெயத்திலும் சந்திர உபசெயத்திலும் புதன் குரு சுக்ரனிருக்க தனமயிஸ்வரியங்களை வலிமையாகப்பெற்று கீர்த்தியுடனே உலகில் வாழ்பவனென்று கணிதநூலாகிய சோதிடத்தில் சொல்லப்பட்டதாம். 30

படலச்செய்யுள் தொகை.

சந்திரயோகந்தன்னைத் தாரணியுள்ளபேர்க்கு
அந்தமாய்செய்யுள்தானு மரைந்ததேழைந்தாகும்
சுந்திரதிருமலையன் தூயபட்டணத்தில்வாழும்
புந்திபோலறிவில்தேர்ந்த புகழ்வயித்திலிங்கந்தானே.

பதினுன்காவது

சந்திரயோகப் படலம் முற்றிற்று.

---

# மங்களேஸ்வரீயம்.

பதினைந்தாவது

## கிரகசேர்க்கைப் படலம்.

1-வது சுலோகம். சூரியன் சந்திரன் கூடியபலன்.

கதிரொடுமதியுங்கூடி கலந்தொருராசிநிற்க
துதிபெறுபலவாயெந்திரம் சூட்சுமக்கருவியாலும்
அதிவிதிபாஷாணங்க ளமைத்திடும்வல்லோனுகி
விதியுடனிருப்பனின்னேன் மேன்மையாமறிவுள்ளோனே.

இ-ள். சூரியனும் சந்திரனும் எந்த இராசியிலாவது கூடியிருக்கப் பிறந்தவன் நாலுவிதமான எந்திரக்கருவிகளும் செய்பவனும் பாஷாணம் வைப்பு சரக்கு முதலியவைகள் உண்டு பண்ணுகிறவனும் மிகவும் புத்தி கூர்மையுள்ளவனு யிருப்பா னென்பதாம். 1

1-வது சுலோகம். சூரியன் செவ்வாய் கூடியபலன்.

அரியொடுபவுமனென்று யமர்ந்திடுகாலந்தன்னில்
விரிபுவிவந்தபேர்க்கு விதித்திடுபலனேதென்றால்
சூரியுடனுரைப்பனின்றேன் சூலைவிபசாரம்சோரம்
புரிமதுபானிவஞ்சம் புகலுசண்டாளன்பாபி.

இ-ள். சூரியன் செவ்வாய் எந்த இராசியிலாவது கூடிப்பிறந்தவன் கொலை விபசாரம் திருட்டு மதுபானம் வஞ்சகம்பேசல் இந்தகுணங்களுள்ள வனனபடியினாலே சண்டாள னென்றும் பாபியென்றும் சொல்லப்படு மென்பதாம். 2

1-வது சுலோகம். சூரியன் புதன் கூடியபலன்.

சண்டனும்புலவன்கூட சமர்த்தனாளனிபுணன்கார்யம்
கொண்டிடுமயூகவானும் கோதறுகுணனுமெங்கும்
அண்டிடுங்கீர்த்தியோடு மதிசுகவான்னல்லோனாய்
மண்டலம்புகழவாழ்வான் மலரயன்விதித்தவாறே.

இ-ள். சூரியனும் புதனும் கூடிநிற்கப் பிறந்தவன் சமர்த்துள்ளவன் காரியங்களினாலே சூட்சுமமான புத்தியுடையவனும் குணவானும் உலகத்தில் சுகவானும் கீர்த்தியாய் வாழ்வா னென்பதாம். 3

1-வது சுலோகம். சூரியன் குரு கூடியபலன்.

விதியுறுமிரவிபொன்னன் மேவியோரிராசிதன்னில்
கதியொடுகூடிநிற்க காசினியுதித்தசெல்வன்
மதியிலான்பிறர்கார்யத்தில் மகிழுடனிச்சையுள்ளோன்
பதிதனிற்குரூரனென்றே பகருவாய்ப்பலனைத்தானே.

இ-ள். சூரியனும் குருவும் கூடிநிற்கப் பிறந்தவன் புத்தி கூர்மை யில்லாதவன் தன்காரியங்களில் அபேட்சை யில்லாமலும் பிறர்க்காரியங்களைப் பார்க்க அபேட்சை யுடையவன் கொடுமையான சுபாவமுள்ளவனு யிருப்பானென்பதாம். 4

2-வது சுலோகம். சூரியன் சுக்கிரன் கூடியபலன்.

பகலொடுமழைக்கோளொன்றாய் பற்றிடவுதித்தபாலன்
செகமதில்பரதநாட்டியம் திரமுளமல்யுத்தம்
மிகுபலவாயுதங்கள் மேன்படவாண்மையாலும்
அகமதிற்பொருளைத்தேடி. யவனியில்வாழ்வன்காணே.

இ-ள். சூரியனுடனே சுக்கிரன் கூடப் பிறந்தவன் நாட்டியங்கள் தெரிந்தவன் மல்யுத்தம் செய்பவன் கத்திமுதலான ஆயுதங்களாலும் சரீர பலத்தினாலும் பொருள்தேடி வாழ்பவ னென்பதாம். 5

1-வது சுலோகம். சூரியன் சனி கூடிய பலன்.

சூரியன்சனியுஞ்சேர சுகமொடுவுதித்தபாலன்
பாரினில்வியாபாரத்தில் பண்டிதன்சமர்த்துளோனாய்
தேரியதாதுவர்க்கம் செம்புபொன்வெள்ளிலோகம்
கூரதுபரிக்ஷைசெய்து குறைவிலாதனத்தைச்சேர்ப்பன்

இ-ள். சூரியனும் சனியும் கூடப்பிறந்தவன் வியாபாரம் செய்வதிலும் கணக்கு முதலானவைகளில் மிகவும்சமர்த்தன் பொன் வெள்ளி செம்பு பித்தளை முதலான தாதுவர்க்க லோகங்களைப் பரிட்சைசெய்து அதினாலே தனத்தை மிகுதியாகத் தேடிவைத்திருப்பவனும் பாண்ட வியாபாரஞ் செய்பவனென்றும் சொல்லப்படு மென்பதாம். 6

2-வது சுலோகம். சந்திரன் செவ்வாய் கூடியபலன்.

குறைவிலாமதிசேய்கூட கூட்டுவர்க்கங்கள்செய்து
நிறைவுடன்மறுபேரிட்டு நீள்பலவஸ்துவாலும்
விரைவுடனதுவியாபாரம் மெல்லியர்மண்பாண்டங்கள்
தறைதனிற்செட்டாய்விற்பன் தாய்தனக்கன்பிலானே.

இ-ள். சந்திரனும் செவ்வாயும் கூடப்பிறந்தவன் ஒரு வஸ்துவுக்கு மற்றொரு வஸ்துவின் ரூபத்தை உண்டாக்கி விற்பனை செய்பவன் அதாவது சூடம் சாம்பிராணி ஊதுவத்தி குங்குமம் இவைகளைப்போல அனேக வஸ்துக்களை யுண்டாக்கி அதேவியாபாரம் செய்பவனும் இன்னும் ஸ்திரீகளை விற்பதும் மண்பாண்டம் விற்பதும் இன்னமும் பற்பல விதமான வஸ்துக்கள் வியாபாரமும் செட்டாகச்செய்து அதினால் தனத்தைச் சம்பாதிப்பவன் ஆகிலும் தாய்க்கு அன்பில்லாதவனா யிருப்பா னென்பதாம். 7

2-வது சுலோகம். சந்திரன் புதன் கூடியபலன்.

அன்புளமதிமால்கூட வவனியிலுதித்தபாலன்
இன்புறும்வார்த்தைசீல னெழில்தனமக்கள்பெண்டீர்
தன்பதியதனிற்கூடி சற்குணயூகியாகி
தென்புடகீர்த்தியோங்கச் சீர்புகழாகவாழ்வன்.

இ-ள். சந்திரனும் புதனும் கூடப்பிறந்தவன் யாரித்திடலும் நயமாகப் பேசுவன் தனம் களத்திரம் புத்திரன் கீர்த்தி சிறப்பு புகழ்சற்குணம் புத்திகூர்மை இவைகளுடனேகூடி இருப்பவனா மென்பதாம். 8

2-வது சுலோகம். சந்திரன்குரு கூடியபலன்.

மதிகுருவொன்றாய்க்கூடில் மதுரமாம்வாக்குண்டாகும்
பதியதில்வந்தபாலன் பராக்ரமவந்தனாகி

நிதிதனமதிலேயிச்சை நீடுசௌபாக்யம்கீர்த்தி
அதிதனையடைவனென்று வன்புடன்கூறுவாயே.

இ-ள். சந்திரனும் குருவும் கூடியிருக்கப் பிறந்தவன் பராக்ரம வந்தனாகவும் பந்துக்களில் பிரதான முள்ளவனாகவும் தனவந்தனாகவும் சகல சித்தமுள்ளவனாயு மிருப்பா னென்பதாம். 9

2-வது சுலோகம், சந்திரன் சுக்ரன் கூடியபலன்.

தானவன்சுங்கன்கூட தாரணியுதித்தான்மிக்க
தீனனாயுலகுதன்னில் சீருளபட்டுவஸ்திரம்
ஆனதாற்பொருளைத்தேடு மவன்பிறர்தமையேமாற்றி
நானிலமதனிற்செட்டாய் நற்றனந்தேடிவாழ்வான்.

இ-ள். சந்திரனும் சுக்கிரனும் கூடியிருக்கப் பிறந்தவன் உலகத்திலே பட்டும் வஸ்திர வியாபாரம் செய்வதிலும் வியாபாரத்திலும் மற்ற விஷயத்திலும் பிறரையே மாற்றவல்லவன் தனந்தேடப்பட்டவன் சமர்த்தனாமென்பதாம். 10

2-வது சுலோகம், சந்திரன் சனி கூடியபலன்.

தேடியமதியுநீலன் சேர்ந்தொருராசிநிற்க
நீடியவுலகில்வந்தோன் நினைவுறுதாய்பல்பேரை
கூடியேகருவுண்டான குழவியுமிவனேயென்று
பாடியேபலனைக்கூறு பார்தனிலுறைவும்பேர்க்கே.

இ-ள். சந்திரனும் சனியும் கூடப் பிறந்தவனின் தாயார் விபசாரியாம் அதாவது தாயைக் கலியாணஞ் செய்தவனுக்குப் பிறந்தவனல்ல பரபுருஷனுக்குப் பிறந்தவ னென்பதாம். 11

3-வது சுலோகம், செவ்வாய் புதன் கூடியபலன்.

பார்சுதன்புலவன்கூட பாலகன்வியாபாரத்தன்
கூர்சுகந்தங்கள்புஷ்பம் கோதறுகந்தமூலம்
சேர்வகைவஸ்துவெண்ணெய் செட்டினால்தனமேபெற்று
பேர்பெறுமற்போர்செய்து பிரபலம்பெறுவனாமே.

இ-ள். செவ்வாயும் புதனும் கூடிநிற்கப் பிறந்தவன் சுகந்த புஷ்பம் கிழங்கு கனிவகைகளும் நெய் எண்ணெய் முதலிய கூட்டு சரக்கு வஸ்துக்களை வியாபாரஞ் செய்தும் தனஞ் சம்பாதிப்பவன் மற்போர் செய்பவனாயிருப்பா னென்பதாம். 12

3-வது சுலோகம், செவ்வாய் குரு கூடியபலன்.

பிரபலசேய்பொன்கூடி பேசுமோரிடத்தினிற்க
தாரணியிலுதித்தான்மிக்க சற்குணமறையோனாகி

புரவலநகரதற்கு புகழதிகாரியாகி
விரவியமணிகள்செம்பொன் மிதமிலாத்தனவானுமே.

இ-ள். செவ்வாயும் குருவும்கூடி நிற்கப் பிறந்தவுன் சர்க்குணவந்தனு கவும் பிராமணனுகவும் பட்டணங்களுக்கு அதிபதியாகவும் இராச சமான மானவனும் நவரத்தினங்களும் தங்கம் பொருள் தனமுடையவனு யிருப்பான். எண்ணிக்கைக்கு அகப்படாத தனமுள்ளவனுயிருப்பா னென்ப தாம். 13

3-வது சுலோகம், செவ்வாய் சுக்ரன் கூடியபலன்

மிதமுறுசெவ்வாய்சுங்கன் மேவியேவிருக்கவந்தான்
பதிதனில்கோபாலன்ருன் பலமுறுமல்யுத்தத்தில்
அதிசமர்த்துடையான்சூது வாடுவன்பரஸ்திரீலோலன்
சதியுறுசகடைக்கர்மம் தான்புரிசேயனுமே.

இ-ள். செவ்வாயும் சுக்கிரனும் கூடிநிற்கப் பிறந்தவன் கோபாலனும் மல்யுத்தம் செய்பவனும் சமர்த்துடையவனும் சூதாடுபவனும் பரஸ்திரீ லோலனும் வண்டி யோட்டுபவனு யிருப்பா னென்றுஞ் சொல்லப்படு மென்பதாம். 14

3-வது சுலோகம் செவ்வாய் குரு கூடியபலன்.

சேயவன்சனியுங்கூட செல்வனுதித்தான்மிக்க
தீயவன்துக்கமுள்ளான் செப்புவான்வஞ்சகங்கள்
நேயருமுலகோருந்தான் நிந்திக்குங்கலகக்காரன்
தூயநற்குணமிலாதான் சுதனுந்தந்திரவானுமே.

இ-ள். செவ்வாயும் சனியும் கூடப்பிறந்தவன் சத்தியமான வார்த்தை பேசாதவன் துக்க முள்ளவனும் வஞ்சகம் பேசுகிறவனும் சிநேகரா லும் மற்ற சனங்களாலும் நிந்திக்கப்பட்டவன் கலகக்காரன் நற்குண மில் லாதவன் தந்திரமுள்ளவனு யிருப்பா னென்பதாம். 15

4-வது சுலோகம், புதன் குரு கூடியபலன்.

வானவர்கோனும்மாலும் மருவிடப்பிறந்தபாலன்
தானதிமல்யுத்தன் சமர்புரியிரணசூரன்
நானிலம்புகழுங்கீத நாட்டியமதிலேபிரியன்
தீனனின்குணமிதென்று தெளிவுடனறிவித்தோமே.

இ-ள். குருவும் புதனும் கூடப் பிறந்தவன் மல்யுத்தம் முதலான யுத் தஞ் செய்வதில் இரணசூரனும் கீதவாத்தியம் நாட்டியத்தில் பிரியனும் பரதசாஸ்திர மறிந்தவனு யிருப்பா னென்பதாம். 16

4-வது சுலோகம், புதன் சுக்ரன் கூடியபலன்.

அறிஞனும்புகருங்கூட வவனியிலுதித்தபாலன்
பெரியபூமிகள்சபைக்கும் பிரபலவதிபனுகி

மருவியவார்த்வதகூறி மாற்றலர்தாமொடுங்க
சரிவரவெல்லுமிக்க சமர்த்துளானென்னலாமே.

இ-ள். புதனும் சுக்கிரனும் கூடப் பிறந்தவன் பூமிக்கும் சபைக்கும் அதிபதியாயிருந்து வார்த்தைகளால் மெய்ப்பித்து எதிரிகளைச் செயிக்கும் வல்லமையுடையவன் சமர்த்துடையவ னென்பதாம். 17

4-வது சுலோகம், புதன்சனி கூடியபலன்.

என்னுமால்சனியைக்கூடி யிருந்திடமகமாய்வந்தோன்
மன்னுலகதிற்பல்பேரை மயக்கியேமோசம்செய்து
துன்னுமாபொருள்கைக்கொண்டே சுகமடைந்திடுவானும்
உன்னிதகுருவின்வார்த்தை யுட்கொள்ளான்கர்வியாமே.

இ-ள். புதன் சனி கூடப் பிறந்தவன் உலகத்தில் உள்ள பலபேர் களையுமயக்கி மோசம் செய்து அவர்கள் கையிலிருக்கிற பொருளைத்தான் கைக்கொள்பவனும் சுக முள்ளவனும் சமர்த்தன் குரு ஆச்சாரிமார்கள் வார்த்தையைத்தள்ளி தன் மனம்போல நடப்பவன் கருவமுள்ளவனு யிருப்பா னென்பதாம். 18

4-வது சுலோகம், குரு சுக்கிரன் கூடியபலன்.

கொள்ளுநர்க்குருவும்வெள்ளி கூடிடப்பிறந்தபாலன்
தெள்ளியவித்தையோடும் கீருறுமனையாளோடும்
ஒள்ளியகுணங்கள்செல்வ மோங்கிடுதனமும்கீர்த்தி
உள்ளவனென்றேமிக்க வுரைத்திடுவிலகினோர்க்கே.

இ-ள். குருவும் சுக்கிரனும் கூடிடப்பிறந்தவன் உத்தமமான வித்தை யும் நல்ல களத்திரமும் அனேக சற்குண முடையவனும் தனவானும் கீர்த்தியுள்ளவனு யிருப்பா னென்பதாம். 19

4-வது சுலோகம், குரு சனி கூடியபலன்.

உலகத்திற்குருவுநீல னுற்றிடவுதித்தபாலன்
சிலவிதசுயம்பாகங்கள் செய்பவனினிமையாக
குலமதிலிழிவுள்ளோனுய் கூறும்நாவிதனுமாகி
பலவிதமண்பாண்டங்கள் பண்ணிடுங்குயவனுமே.

இ-ள். குரு சனி கூடப் பிறந்தவன் இனிமையான சமையல் வேலை செய்பவன் அவனீனகுலத்தானுகும் அதாவது நாவிதனென்னும் அம் பட்டனுகவும் அல்லது மண்பாண்டம் செய்யுங் குயவனென்று சொல்லப் படு மென்பதாம். 20

5-வது சுலோகம், சுக்கிரன் சனி கூடியபலன்,

பன்னிடுவெள்ளிநீலன் பற்றியோரிடத்தில்நிற்க
மின்னனையார்கள்தம்மை விருப்பமாயாதரிப்பன்

நன்னுபுத்தகங்கள்சித்ரம் நாடியேமுதலேயாக
வுன்னதத்தொழிலுஞ்செய்வ னுயர்விழிப்பார்வையற்பம்.

இ-ள். சுக்கிரனும் சனியும் கூடிநிற்கப் பிறந்தவன் அற்பபார்வையுள்ளவன் ஸ்திரீகளை யாதரிப்பதினாலும் புத்தகம் சித்திரங்கள் இன்னும் பலவித எழுத்து எழுதுவதினாலும் இவன் தனம் சம்பாதிப்பவன் இவைகளே இவனுக்கு முதலாகுமென்பதாம். 21

5-வது சுலோகம், கிரகம்கூடிய உதாரணம்,

கதிபெறுசெனனகாலங் கருதியமூவரோடும்
துதிபெறுநால்வரைவர் சுகமொடேயிருப்பாராகில்
மதிரவிகுஜனிருக்கில் மதிரவிபலனைக்கூறி
உதிரனற்பலனுஞ்சேர்த் துரைப்பதிவ்விதயூகம்.

இ-ள். செனனகாலத்தில் மூன்று கிரகம் நாலு கிரகம் ஐந்து கிரகம் கூடியிருந்தாலும் அந்தப் பலனைச் சொல்லவேண்டியது தவிரவும் உதாரணம் ஒரு இராசியில் சூரியன் சந்திரன் கூடியபலனும் சூரியன் செவ்வாய் கூடிய பலனும் சந்திரனும் செவ்வாய் கூடியபலனும் சேர்த்து யூகித்துச் சொல்ல வேண்டியதாம். 22

படலச்செய்யுள் தொகை.

கதிரொடுகோள்கள்சேரும் கனமுறுபடலந்தன்னை
பதிதிருமலைராசன்றன் பட்டணம்தன்னில்வாழும்
அதிகுணன்வயித்திலிங்க மறைந்திடுசெய்யுள்தானும்
துதிபெறுமிருபத்திரண்டாய் சொல்லினனவனியோர்க்கே.

பதினைந்தாவது
கிரகசேர்க்கைப் படலம் முற்றிற்று

---

# மங்களேஸ்வரீயம்.

பதினாறவது
## சன்னியாசியோகப் படலம்.

1-வது சுலோகம். சன்னியாசபலன்.

கூரும்மெழுகிரகந்தனில் குலவும்நாலோடைந்தும்
ஆரும்மெழுகோட்கள் ளொருராசியதிற்கூடிற்
றேரும்மதில்பலனுற்றிடு திகழ்கோளதின்விதமாய்
சேருஞ்சனியாசந்தனை செல்வன்பெறுவானே.

இ-ள். சூரியன் சந்திரன் செவ்வாய் புதன் குரு சுக்கிரன்சனியென்று சொல்லப்பட்ட ஏழுகிரகத்தில் நாலு ஐந்து ஆறு ஏழு கிரகமும் கூடியிருக்க சன்னியாசயோகமேற்படும் அதெப்படியென்றால்இவர்களில் வலிதுபெற்ற கிரகத்தினாலே சன்னியாச யோகந்தன்னை சொல்லப்படு மென்பதாம். 1

1-வது சுலோகம் சுக்ரன்யோகம்.

செல்வந்தருபுகரேவலி சேர்ந்தேயிருப்பாரேல்
வல்லவனாய்வேந்த னென்னவாத்தியம்பரிகரியும்
நல்லநரவாகனங்கள் நாடும்பலவிருதும்
யெல்லாமிவனேபெற்றவ னிராஜனெனப்பேசே.

இ-ள். ஒரு இராசியிலிருக்கப்பட்ட கிரகங்களில் சுக்ரன் வலிதாயிருக்கில் அந்த சுக்கிரனாலே ஏற்பட்ட சன்னியாசமானது இராஜனைப்போல வாத்தியங்கள் யானைகள் குதிரைகள் பல்லக்குகள் பலவிருதுகளையுமுடையவனாகிய இராஜசன்யாச மென்பதாம். 2

1-வது சுலோகம், குருயோகம்.

பேசுங்குருவலிதாய்நான்கிற் பேரோடிவனமரில்
தேசம்புகழகாஷாயமும் தெண்டம்மதுகொண்டும்
பூசும்பொடிருத்ரமணி புகழ்குண்டலகவசம்
நேசத்தொடுபூண்டேயிவன் நிமலன்னடிபணிவான்.

இ-ள். ஒரு இராசியிலிருக்கப்பட்ட கிரகங்களில் குருவலிதாயிருக்கில் அந்த குருவினாலேற்பட்ட சன்னியாசமானது காஷாயம்தெண்டம் கவச குண்டலம் விபூதி பூச்சும் ருத்திராக்ஷமாலையும் அணிந்துக்கொண்டு உலக மறிய நிர்மல வஸ்துவாகிய பிரஹ்ம நிலையையறியும் சன்னியாசியாகும்என்பதாம். 3

1-வது சுலோகம், சூரியன்யோகம்.

வானத்துறைகதிரோனவன் வலிபெற்றுடுபோதில்
கானந்தனிலுறைகின்றவன் காய்கிழங்கும்சருகும்
தேனும்பலகனியுண்டிவன் சிவனாரடிபணியுந்
தீனன்தவமுனியென்றுமே செப்பும்பலனிதுவாம்.

இ-ள். ஒரு இராசியிலிருக்கப்பட்ட கிரகங்களில் சூரியன் வலிதாயிருக்கில் அந்த சூரியனாலே கொடுக்கப்பட்ட சன்யாசமானது காடுமலை வனங்களிலிருந்து காய் கனி கிழங்கு சருகு தேன் பச்சிலை பலவிதமான வஸ்துக்களையும் பொசித்துக்கொண்டு தனியாயிருந்து பிரஹ்ம நிலையை யுணரும் பிரஹ்மக்யானி தவமுனியென்றும் சொல்லப்படும் என்பதாம். 4

1-வது சுலோகம். சனி புதன் சந்திரயோகம்.

பலமுற்றவன்சுன்னாகிடில் பகர்வோர்திருவாணி
புலவன்வலியாகப்பெறில் புகழ்தண்டசன்யாசி
நிலவென்னிடின்முதுகாமதனி நேர்குண்டலமாதி
சலபாத்திரமற்றுப்பலதாலஞ் செல்லும்ஞானி.

இ-ள். ஒரு இராசியி லிருக்கப்பட்ட கிரகங்களில் சனி வலிது பெற்றிருந்தால் அந்த சனியினால் கொடுப்பட்ட சன்யாசமானது சுகம் தன் மனைவி மக்கள் மானம் வெட்கம் இலச்சை வமிசாபிமானங்களையும் விட்டு நிர்வாண சன்யாசி யாவானும். புதன் வலிதாயிருக்கில் ஒரு தடிக்கம்புகையில் தரித்தெங்கும் திரிகின்ற சன்யாசியாகும். சந்திரனாகில் விர்த்தாப்பிய காலத்தில் மனைவி மக்கள் தனங்கள் வீடுகள் முதலான சம்பத்திருந்தாலு மதைவிட்டு சிவவேடமாகிய கவசகுண்டலமும் ருத்திராக்ஷவிபூதி காஷாய முதலியவைகளைத் தரித்து ஜலமிருக்கும்படியான பாத்திரத்துடனே பற்பல தேசயாத்திரை தீர்த்தயாத்திரைகளும் செய்து பிச்சை யெடுத்துண்டு திரிபவனாகு மென்பதாம். 5

1-வது சுலோகம். செவ்வாயோகம்.

செல்லுநிலமகனும்மிகு சீர்பெற்றுமேவலிதாய்ச்
சொல்லும்பலகோளோர்டிவன் சுகமாயமர்போதில்
நல்லசிவப்பாம்வஸ்திரம் நலமாகவணிந்தும்
வல்லவனாய்நூலோதியே மகிழுந்தவமுனியாம்.

இ-ள். ஒரு ராசியிலிருக்கப்பட்ட கிரகங்களில் செவ்வாய்வலிதுபெற்றிருந்தால் அந்த செவ்வாயினால் கொடுக்கப்பட்ட சன்னியாசமானது சிவந்தவஸ்திரம் அல்லது காஷாயம் தரித்து வேதசாஸ்திரம் கலைக்ஞானம் பல காவியங்களையு முணர்ந்து தத்துவஞான பிரசங்கமும் சாஸ்திரப் பிரசங்கமும் செய்து மனக்களிப்புடனே யிருப்பவனா மென்பதாம். 6

1-வது சுலோகம். சன்னியாசவிபரம்.

மகிழாயொருவோரைதனின் மருவும்பலகோளில்
மிகவேவலியுறுகோட்களின் மேவும்முறைபோலுஞ்
சகமீதினில்சன்யாசமே தானுள்ளவன்மிகவும்
புகழோங்கியவிகவாழ்க்கையைப் பொருந்தாதவனாகும்.

இ-ள். ஒரு ராசி யெதிலாவது அடைந்த கிரகங்களில் எத்தனை கிரகம் வலிதாகவிருக்குமோ அத்தனைவித சன்னியாசங்களையும் அடைந்திருப்பவனும் மகிழ்ச்சியுள்ள அறம்பொருளின்பமென்னும் குடும்பவாழ்வைவெறுத்தவனா யிருப்பான் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்ட தென்பதாம்.

1-வது சுலோகம், யோகமுறை.

ஆகும்பலமுறுகோளதி லதிகப்பலமுடையோர்க்
கேகும்விதசன்யாசமே யிவனும்முதல்பெறுவான்
யூகத்தொடுவலிவின்முறை யுறும்விதமேபோலும்
யோகங்களைமுன்பின்னுமா யலகிலிவனடைவான்.

இ-ள். அதிக பலவந்தனான கிரகத்துக்குச் சொல்லப்பட்ட பிரவற்சையென்னும் சன்யாசத்தை முதலில் அடைந்து பின்பு அதற்கு அடுத்த கிரகத்தின் சன்னியாசமும் கிரமமாய் இந்த் சன்னியாசயோகங்களை முன் பின்னாக அடைவா னென்பதாம். 8



1-வது சுலோகம், யோகமில்லை.

அடைவானதிலொருராசியி லஞ்சாறேழ்நாற்கோள்கள்
படையாகவேசேர்கோளதிற் பகர்கோளவர்தம்மில்
உடையோருமேநட்பாக்ஷியு முச்சமதிலரேல்
கிடையாதெனசன்யாசமே கீர்த்தியுளனென்பாம்.

இ-ள். இந்தராசியிலாவது நாலு ஐந்து ஆறு எழு கோள்கள் கூடியிருக்க அவர்களில் நட்பு ஆக்ஷி யுச்சம் பெற்றிருந்தால் அவர்களுக்குரிய சன்யாசங் கிடைக்கும் பகை நீசம் அஸ்தமானங்களி லிருந்தால் சன்னியாசங் கிடையாது கீர்த்தியுள்ளவனு யிருப்பா னென்பதாம். 9

1-வது சுலோகம், யோகமும்மாறுதலும்.

என்னும்பலகோட்சேர்ந் திகலதனிற்செயமுடையார்
உன்னும்விதசன்னியாசம துறுவான்முதலென்போம்
சென்மித்திடுகாலிற்கோட்கள் திகழ்நட்பினிலுறுவோர்
மன்னும்சன்னியாசம் பெற்றுமறுகாலிவன்விடுவான்.

இ-ள். கிரகங்கள் சேர்ந்திருப்பதில் யுத்தமாகி செயமடைந்த கிரகத்தின் சன்யாசத்தை யடைவான் முதலில் ஆனல் ஜெனன காலத்தில் எந்த இராசியிலாவது அடைந்த கிரகத்தின் சன்யாச யோகத்தை யுண்டாக்கும் கிரகம்நட்பாயிருக்கில் அவருக்குள்ள சன்யாசத்தையடைந்து அனுபவித்து பின்பு கிரகத்தனுகி பெண்டு பிள்ளைகளுட னிருப்பா னென்பதாம். 10

1-வது சுலோகம், யோகமாறுதல்.

காலந்தனிற்பலகோளுமே கதியாய்க்கூடுவோரில்
மேலும்மவர்நட்போ ருடன்விதியாய்நண்ணியிருப்போர்
சீலத்துடனவரேதரும் திகழ்சன்யாசமடைந்தே
ஞாலத்தினில்விட்டேயிவ னலமாயிருந்திடுவான்.

இ-ள். செனனகாலத்தில் பலகிரகங்கள் ஒரு இராசியில் கூடியவரில் நட்புபெற்றிருக்கிற கிரகத்துடன் கூடியிருக்கிற கிரகம் எத்தனை பேராகு லும் அவருக்கு உள்ள சன்னியாசங்களை யெல்லாமனுபவித்து பின்புவிட்டு விடுவானென்று சொல்லப்படு மென்பதாம். 11

1-வது சுலோகம். சன்யாசி.

திடமாய்சென்மகாலந்தனிற் றிகழ்நாலைந்தாறுகோட்கள்
இடமாகியதற்றேநட் போடிருந்தாலவர்பொருதும்
துடராகியசன்யாசமே சுகமோடிவன்பூண்டும்
சடமேயுளவரையுஞ் சன்னியாசியெனப்பேரான்.

இ-ள். சென்மகாலத்தில் பகைநீசம் ஆக்ஷியுச்சம்யில்லாது நட்பாகவே நாலு ஐந்து கிரகமிருக்க அப்படி நட்போடிருக்கும் கிரகத்துக்கு உள்ள சன்னியாசத்தை மரணகாலம்வரையிலும் அனுபவித்திருப்பானென்பதாம்

உதாரணம்.

ரிஷபராசியில் சனி செவ்வாய் புதன் குரு இவர்கள் கூடினலும், மிதுன ராசியில் சுக்கிரன் சனி சந்திரன் குரு செவ்வாய் கூடினலும், கன்னியாராசியில் சனி சந்திரன் குரு செவ்வாய் கூடினலும், கும்பராசியில் புதன் செவ்வாய் சுக்கிரன் குரு கூடினலும் சன்னியாசி யோக மென்பதாம்.

1-வது சுலோகம், சன்யாசி.

பேராகியகோளிநட்பு பெறுவோர்தொகையதனில்
ஆராகிலும்வலிதுள்ளவரவர் திசையூணதனில்
நேராகியசன்யாசமே நிசமாயடைபவன்பின்
கூராகியகிரமப்படி குலவீயிவன்மரணம்.

இ-ள். கூடியிருக்கப்பட்ட கிரகங்களின் தொகையைப்போல பலவான்களாயிருக்கப்பட்டவர்கள் திசைபுத்தி அந்திரத்தில் அவருக்குடைய சன்னியாச யோகத்தை அனுசரித்து அதற்கடுத்த பலவானுயிருக்கப்பட்ட சன்னியாசமடைவான். உதாரணம் சத்யாசாரி சொல்லி யிருக்கிறூர் என்பதாம். 13

1-வது சுலோகம், சன்னியாசி

குலவும்நட்பிலுறுகோளுமே கூடிவிரண்டுமூன்றும்
நலமாகியநால்வரெனில் நண்ணும்முறையிதுவும்
நிலமீதிலேசன்யாசங்கள் நேருமுன்பின்முறையில்
பெலனுயிருள்ளவும் பெறுவான்சன்னியாசம்.

இ-ள். நட்புபெற்று கூடி யிருப்பவர்கள் இரண்டுமூன்று நான்கு பேர்களில் சிலகிரகத்தின் வலிதின் முறைபோலும் அவர் திசைபுத்தி யந்திரத்தில் அந்தவித சன்னியாசம் அடைவார் இந்த விதமாக வெத்தனேபேரிருந்தாலும் சரியே அத்தனை விதமும் அடைவான் அந்தசன்னியாசத்துடனே யிருந்து மரணமாவா னென்பதாம். 14

2-வது சுலோகம், சன்னியாசயோகம்

பெருயோகத்தனஸ்தமானம் பெற்றிருந்திடுவோர்
மருகோளுடன்கூடினுலு மல்லநோக்கமுறிற்றுன்
வருமேசன்னியாசம் வழுத்தியதுமுன்போல்
தருபூமியிலடைவானென சாற்றும்முறைதானும்

இ-ள். சன்னியாசயோகம் கொடுக்கப்பட்ட கிரகம் அஸ்தங்கதமானும் அல்லது சூரியனைத் தவிர மற்றொருடன் கூடியாவது இருந்தாலும் அன்னிய கிரகம் இந்த கிரகத்தை நோக்கினலும் சன்னியாச முண்டாகுமென்றுசொல்லப்படும். சூரியனுடனே சம்பந்தப்பட்டவர்கள் அஸ்தமானவர்கள் அதே அஸ்த்தங்கத மென்னப்படும் ஆனல் பலமுள்ள கிரகமான பிறவற்றை புருஷனுக்கு தள்ளப்படும் ஆனல் ஏகராசியிலடைந்த சதுரா

திக்கிரகங்களில் பலயுக்த கிரகங்கள் சன்னியாசத்தைக்கொடுப்பாரென்று சொல்லப்படும் அதில் அந்த பலயுக்த கிரகங்களில் எத்தனை கிரகம் அஸ்தங்கதமாகி யிருப்பாரோ அத்தனைபேரும் தங்கள் தங்கள் சன்னியாசத்தைக் கொடுக்கமாட்டாரென்பதாம். 15

2-வது சுலோகம், சன்னியாசியைச்சேரல்

சாற்றும்மிகுபலவானொடு சார்ந்தும்மஸ்த்தமாகில்
ஏற்றச்சன்னியாசந்தன்னை யிகமீதிற்பெற்றோர்பால்
போற்றிப்பணிந்திடுவானென புகல்வோமவன்குணங்கள்
ஆற்றல்லடையானென்ன வறைவோமதன்குறிகள்.

இ-ள். பலவானான கிரகங்களில் அஸ்தமான கிரகமிருக்கப் பிறந்தவன் அந்த கிரகத்துக்குடைய சன்னியாசம் அடைந்தவர்களிடம் நேசமாகியும் பக்தி விசுவாசம் உடையவனா யிருப்பா னென்பதாம்.

2-வது சுலோகம், சன்னியாசியாக எண்ணம் 16

அதிலுமொருராசிதனி லமர்பிலவான்றானும்
இதரக்கோளின்சமரிற் செயமேற்றுமற்றோர்நோக்க
பதியிற்சன்னியாசம் பெறபாலனெண்ணமுறுவன்
கெதியுள்ளவிப்பாலனுக்கே கிட்டாதுசன்னியாசம்.

இ-ள். ஏகராசியிலடைந்த சதுராதி கிரகங்களில் பலவானாயிருந்தவர் கிரகயுத்தத்தினாலே செயமடைந் திருந்தாலும் மற்ற கிரகத்தினுடைய பார்வையடைந்திருந்தாலும் சன்னியாசியாக வேண்டுமென்கிறவெண்ணம் இருக்குமே தவிர சன்னியாசியாக மாட்டா னென்பதாம். 17

2-வது சுலோகம், யோகமாறல்

கிட்டுஞ்சமர்புரிவோருடன் கேடற்றுமேயிருந்தும்
இட்டத்துடன்மற்றோர்நோக்கு மிருந்தாலிவன்றனக்கும்
சட்டத்துடன்சன்னியாசத்தைத் தரித்துமனுபவித்தும்
விட்டுப்போகும்விதமென்றுமே விபரத்தொடுகூறுவாம்.

இ-ள். கிரகங்கள் ஒருராசியில் கூடியிருந்தும் கிரகயுத்தத்தில் கூடினாலும் மிதரக்கிரக நோக்கமிருந்த போதிலும் அந்தவிதசன்னியாசத்தையடைந்து சிலகாலமிருந்து பிறகு அந்தசன்னியாசத்தை நீக்கிவிடுவானென்பதாம். 18

2 வது சுலோகம். தெய்வப்பிரார்த்தனை.

கூறும்பலவானுய்கோட்கள் கூடிநிற்கும்பொழுதில்
சீரும்பெருவிதரக்கிரகத் திட்டியுறுவாரேல்
நேறும்தெய்வமதிற்காகவே நிலத்தில்சன்னியாசம்
பேரும்மடைந்தானல்லது புகழ்சன்னியாசம்பொருந்தான்.

இ-ள். பலவானான கிரகங்கள் கூடிநிற்க அவரை நட்புபெற்ற கிரகம்நோக்கில் தெய்வப்பிரார்த்தனைக்காக சன்னியாசிபோலிருந்

ததேதவிர மனச்சம்மதத்திஞ லிருந்தவனல்ல ஆகிலும் உலகத்தார் சன்னியாசியென்று சொல்லபேரெடுத்தானென்று சொல்லுவதாம் உதாரணம் கிரந்தாந்தரம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 19

3-வது சுலோகம் சன்னியாசி.

பொருதுஞ்சென்மகாலங் தனிபுகர்சந்திரன்ருனும்
வருகின்றராசிநாதனின் னுரையேசென்மனென்போம்
வருசென்மனைநோக்குங்கோட்கு மன்னனுஞ்சன்னியாசங்கள்
பெருமென்றெனபார்வைகொண்டு பிசகாமலுரைப்பாம்

இ-ள். சென்மகாலந்தனில் சந்திரனிருந்த ராசியின் அதிபதி யாரோ அவரைசென்மேச னென்னப்படும் அந்த சென்மேசனை நொக்கின கிரகம் யாரோ அவருக்குள்ள சன்னியாசம் அடைவா னென்று சொல்லப்படும் என்பதாம். 20

3-வது சுலோகம் நிர்வாணி.

உறையுஞ்சென்மன்றன்னைச்சனி யுற்றுநோக்குங்காலில்
நிறையம்புவியதில்வந்திடு நீள்சதனுமதிகம்
மறைகளறிந்தவ்வழியில் மருவிமாய்கைநீத்தும்
முறையாய்நிருவாணம்பெற்றே முனியாகுவனின்னேன்.

இ-ள். சென்மனென்பது சந்திரனிருக்க வீட்டோனும் சென் மாதிபதியைச் சனிநோக்க முற்றிருக்கப பிறந்தவன் அனேகம் வேதம் புராணம் சாஸ்திரம் காவியம் கலைக்கியானம் இன்னம்பல விதமான அத்துவிதம் வேதாந்தம் தத்துவவிசாரணை முதலியனவ றிந்து மாய்கைமுதலான பதின் மூன்று கெட்டகுணங்களை மண், பெண், பொன், மானம் லெச்சை, வெட்கம், ரோஷம் பஷர்ஷம் வமிசாபிமானம் முதலியவைகளை விட்டு நீக்கி நிருவாணசன்னியா சம் பெற்ற முனிவனுயிருப்பான் உதாரணம் கிரந்தாந்தரம் சொல் லப்பட்டதென்பதாம் 21

3-வது சுலோகம் சன்னியாசம்.

இன்னேன்சென்மகாலந்தனி லெழிலாகியசணியும்
சென்மசனுமிருவோர்களில் திகழும்வலிவுள்ளோர்
மன்னுந்திசைபுத்தியந்திர மருவுநாட்களதனில்
சொன்னவிதம்சன்யாசத்தின் தொடரேயவன்பெறுவான்.

இ-ள். சென்மகாலத்தில்சனியும் சென்மாதிபதியும் இந்த இரு வர்களில்-எவர் பலவந்தனுகவிருப்பாரோ அவருடையதிசை புத்தி யந்திரங்களில் அந்தவிதமான சன்னியாசங்களை யடைவானென் பதாம். 22

3-வது சுலோகம் திகம்பர சன்னியாசி.

தொடருங்கும்பமகரந்தனிற் றேன்றும்திரேகாணம்
படரும்மதில்நிலவே நிற்கப்பங்குங்குசனிருவோர்
அடரும்நவாங்கிசையில் லுறுமாராகிலுநோக்கம்
திடமும்மற்றுசுன்னேக்கத் திகம்பரசன்னியாசம்.

இ-ள். கும்பம் மகரமென்னும் இந்த இரண்டுராசியின் திரேகாணத்திலிருந்த சந்திரனை குஜன் சனி இவர்களின் நவாங்கிசையிலிருந்த இதரகிரகத்தால் பார்க்கபடாதிருக்க சனியினால் பார்க்கப்பட்டால் திகம்பரனென்னப்பட்ட நிர்வாண சன்னியாசியாவான் உதாரணம் கிரந்தாந்தரம் சொல்லப்பட்டது என்பதாம். 23

4-வது சுலோகம் ராசசன்னியாசம்

பரவுஞ்சென்மம்பொன்மதியைப் பங்குநோக்கமுறவும்
சுரகுருவுமொன்பதுறில் சுகவான்ராஜயோகன்
தரணிதனில்வாழ்வுற்றுப்பின் தான்சன்னியாசம்பெறுகால்
குரவனென நூல்செய் திவன்குணமின்னமுங்கேளாய்.

இ-ள். சென்மலக்கினம் சந்திரன் குரு இவர்கள் சனியால் பார்க்கப்பட்டு குரு ஒன்பதிலிருக்க ராஜயோகம் இதில்பிறந்தவர்கள் ராஜயோகத்தையு மனுபவித்து பின்பு தான் சன்னியாசம் பெற்று ஆசாரி பீடமாகிசாஸ்திரக்கர்த்தா வாவான் அதெப்படியென்றால் பின்வரும் கவியாகிய 29 தாழிசையில் காண்க உதாரணம் கிரந்தாந்தரம் சொல்லப்பட்டதென்பதாம். 24

3-வது சுலோகம், இராஜ சன்னியாசி.

இன்னமிந்தயோகமுற்றோ ரெழிற்சனகரவரும்
மன்னவர்க்குமன்னவராய் மகிழ்சக்கிரமுடையான்
பொன்னுலகுவேந்தனெனப் புகழ்கீர்த்தியைப்பெற்றும்
நன்னூல்தனைமிகசெய்தவன் னுடும்புகழோங்கும்

இ-ள். இந்தவிதமாக ராஜயோகத்தில் பிறந்த சனகராஜரானவர் உலகுகாப்பவர் சக்கிரவர்த்தியாம் சக்கிரவர்த்தி யென்பதற்கு விபரம் முடி குடை கவரி, தோட்டி முரசு, சக்கரம் யானை கொடி மதில்தோரணம் நீர்க்குடம், பூமாலை, சங்கு, கடல், ஆமை, இணைகயல், சிங்கம் தீபம், இடபம், ஆசனம் இந்தஇருபத்தொரு விருதுகளும் பதினெண் படைத்தலைவரும் கூடிதேவேந்திரனைப்போல புகழும் கீர்த்தியும் வெற்றியு முடையவர் சனகராஜர் பதினெண் படைகளென்பதற்கு விபரம் பதாதி சேனுமுகம் குமுதம் கனகம் வாகினி பிரளயம் சமுத்ரம் சங்கம் அனிகம் அக்ரோணி யென்கிற பத்துவித சேனை துணைகளையும் மந்திரியர் கருமாதிக்காரர் சுற்றத்

தார் கடைகாப்பாளர் நகரமாக்கள் படைத்தலைவர் இவுளி மறவர் யானைவீரர் என்கிற எண்வகைதுணைவர் ஆகக்கூடியஇருபத்தொரு விருதும் பதினெட்டு வகைதுணைவருடன் இருக்கிறவன் சனக ராஜன் சாஸ்திரங்களைச்செய்து புகழ்பெற்றவரா யிருந்தவர்போ லாகுமென்பதாம். 25

4-வது சுலோகம். இராஜன் சன்னியாசி.

ஓங்குஞ்சென்மமதிற் கொன்பதிலுயருஞ்சனிநிற்கில்
பாங்குடனேமற்றோர்காண பாரிலுதித்தவனும்
தீங்கிலாதவேந்தவேந்தன் திகிரியுளவரசன்
ஆங்குபலநூல்செய்பவ னறிவுள்ளவனெனலாம்.

இ - ள். சென்மலக்கினத்திற்கு ஒன்பதில் சனியிருக்க அந்த சனியை மற்ற கிரகத்தினால் பார்க்கப்பட்டிருக்கப் பிறந்தவன் ராஜாதிராஜனும் அப்படிப் பிறந்தவனும் சாஸ்திரம் உண்டுபண்ணுபவனு யிருப்பான். இவன் அறிவில் சிறந்தவனும் உதாரணம் கிரந்தாந்தரத்திலும் சாராவளியிலும் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 26

4-வது சுலோகம். சன்னியாச வித்வான்.

அவனியதிலிந்தயோக மரசருக்கேவந்தால்
புவனந்தனையாண்டு பின்னால்பொருந்தும்சன்னியாசம்
தவமுள்ளவன்மதியூகியாம் சாஸ்திரம்மதில்வல்லன்
குவலயத்தில்கீர்த்தியற்று குணசாலியுமாவான்.

இ-ள். உலகத்தில் இராஜயோகத்தில் பிறந்து சன்னியாசயோகமும் கூடியிருந்தால் உலகத்தை யரசுசெய்து பின்பு சன்னியாசியாகி தவம்செய் பவன்-புத்திவான் யூகத்தினாலே சாஸ்திரம் செய்து கீர்த்தி யுடையவனும் சற்குணவந்தனுயு மிருப்பனென்பதாம். 27

படலச்செய்யுள் தொகை.

நாலுடனேந்தாறுகோட்கள் நாடியோரையமரில்
ஞாலமதிற்சன்னியாசமே நவின்றவிந்தப்படலம்
சீலமுடன்இருப்பத்தேழு திகழ்வயித்தியலிங்கம்
பாலமிர்தமெனத்தாழிசை பண்பாகப்பயின்றனனே.

பதினாறுவது

**சன்னியாசியோகப் படலம் முற்றிற்று.**

கடவுள் துணை.

# மங்களேஸ்வரீயம்.

பதினேழாவது

## நக்ஷத்திரயோகப் படலம்.

கலித்துறை. 1-வது சுலோகம். அசுபதியின் பலன்.

சீருள்ள பால னழகாளா தேகனித் தேயமதில்
யாருக்கும் நல்லோ னதியூகி யானவனுஞ்சமர்த்தன்
சூரன்மி குத்தவணியலங் காரனித் தூயசுதன்
பாரிற்பகரு மசுபதி மீனின் பலன்சித்தியே.

இ-ள். சிறப்புள்ளவனுகவும் அழகுள்ளவனுயும் உலகில் யாவருக்கும் அதிக பிரியமுள்ளவன் புத்திவந்தன் சமர்த்துள்ளவன் தைரியமுள்ளவன் அலங்கார முள்ளவனுயு மிருப்பவன், அசுபதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 1

1-வது சுலோகம், பரணியின்பலன்

சித்தந் தனில்நினைந் தேதொட்ட காரியஞ் செய்யவல்லன்
சத்திய மாகுமின் சொல்லே யுரைப்பன் சபலமற்றோன்
மெத்தத் திடமுளன் நோய்துக்க மற்றிந்த மேதினிற்
சுத்தங்க ளற்ற பரணியில் வந்தோன் குணங்களிதே.

இ-ள். மனதில் நினைத்து ஒரு காரியமுடிக்கவேண்டுமென்றால் தூபலிக்காமல் திடமோடு செய்பவன் உண்மையான வார்த்தை பேசுபவன் இனிமையான வார்த்தை சொல்பவன் தீரன் வியாதியும் துக்கமு மில்லாதவன் பரிசுத்தமான பரணி நட்சத்திரத்திற் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 2

2-வது சுலோகம், கார்த்திகையின்பலன்

இதமான சொல்லன் பரமாதர் நேச னெழிலுடனே
சுதனுக வந்தோன் பிரசித்த மாகித் துலக்கமுள்ள
மதனுக்கும் ரூபன் மிகுவுண்டி யுண்பனிம் மானிலத்தில்
பதியான கார்த்திகை தனிலேயு தித்தவன் பண்பிதுவே.

இ-ள். மெதுவாகவும் நயமாகவும் பேசுபவன் பரஸ்திரீகளிடத்தில் இச்சையுள்ளவன் சவுந்தரியமான தேகமும் அதிக ஆகாரம் புசிப்பவன் உலகத்தில் யாவருக்கும் தெரியக்கூடிய பிரசித்தமுள்ளவன் கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்தார்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம்.

2-வது சுலோகம், ரோகிணியின் பலன்

குறியாளன் மிக்கநன் னூலுணர்ந் தேகுண மாய்நடப்போன்
அறிவாளன் மெய்ய னுசாரன் முற்றப்பே ரழகுளனும்
திரமான நெஞ்சன் பரமாதர் நீத்ததீஞ் சொல்லுளனும்
பிரராதி செல்வ மதிலாசை யற்றபே ரோகிணியே.

இ-ள். சாஸ்திரங்கள் உணர்ந்து நல்ல யுக்தமான ஆசாரங்களையும் விரதாதிகளையும் அனுசரித்து நடப்பவன் நல்லபுத்தியுள்ளவன் அழகும் ஆசாரமும் மெய்பேசுதலும் கலங்காத தீரமான நெஞ்சுள்ளவன் மதுரமான வார்த்தை பேசுபவனும் பிறர் செல்வத்திலும் பரமாதர்களிடத்தும் இச்சையில்லாதவன் ரோகணி நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்ல வேண்டிய தென்பதாம். 4

3-வது சுலோகம், மிர்கசித்தின் பலன்.

உற்றிடும் வார்த்தை யதனில்வாய்ச் சாலனுச் சாதகவந்தன்
கொற்றவ னேர்தன சம்பத்து யோகமுங் கொண்ட சுதன்
பற்றுகன் மங்களில் சஞ்சில சித்தம் பயங்களுள்ளான்
வெற்றியு மிக்க சாமார்த்திய மான்றலை தன்வி தியே.

இ-ள். வார்த்தை பேசுவதில் தேர்ச்சியும் சமர்த்துள்ளவன் உச்சாகமும் தனமும் சம்பத்தும் யோகமுள்ளவன் ஏதாகிலும் ஒரு காரியஞ் செய்வதில் சஞ்சலமும் பயமுள்ளவன் வெற்றியுள்ளவன் தீரத்தன்மை யுடையவனுமென்று மிருகசிர நக்ஷத்திரத்திற் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 5

3-வது சுலோகம், திருவாதிரையின் பலன்.

தன்காரி யங்களின் மர்மம்வி டாமலே தான் மறைத்து
சொன்மாரி பேசு மிகுவகங் காரிதுன் மார்க்க முள்ளன்
சன்மார்க்க மேயிலை செய்ந்நன்றி யற்றவன் தாரணியில்
என்னுளும்சீவ யிம்சைசெய் வான்றிரு வாதிரையே.

இ-ள். தன்னுடைய காரியங்களை வெளிவிடாமல் மறைத்து வைத்து அது முடிகிறவரைக்கும் வேறு விதமாகச் சொல்லி வருபவனும் அகங்காரமும் கெர்வமும் உள்ளவன் துர்க்குணமுள்ளவன் செய்ந்நன்றி மறப்பவன் சீவஹிம்சையும் பாபகர்மம் செய்பவனாகவும் இருப்பான் திருவாதிரை நக்ஷத்திரத்திற் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டியது என்பதாம். 6

4-வது சுலோகம், புநர்பூசத்தின் பலன்

திரிகுண மாமதிற் சத்துவ மாங்குணன் சீருடையான்
மருவித் தவத்தின் சிரமங்கள் மற்றும்வி டாயதனால்
வருகும்வ றட்சியை தான்பொறுப்பான் பிணி யால்வருந்தி
புரிகர்ப்ப தேகி புகலற்ப லாபன் புனர்தமேனே.

இ-ள். முக்குணங்களில் ஒன்றாகிய சத்துவகுணம் உடையவன் சிறப்புடையவன் தபசினாலுண்டாகும் சிரமத்தையும் தாகத்தினால்வரும் வறட்சியைப் பொறுத்துக்கொள்பவன் நோயினால் வருந்துபவன் காப்பதேகியாம் அதாவது எப்போதும் சரீரத்தைக்காபந்து பண்ணுவதற்காக மருந்து சாப்பிடுபவனும் அற்பலாபம் கிடைத்தால் அதினால் சந்தோஷப் படுவனுமென்று புனர்பூச நக்ஷத்திரத்திற் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டியதென்பதாம். 7

5-வது சுலோகம், பூசத்தின் பலன்

மகிழும் சமதம சாந்தமா திக்குணன் மாதவத்தோன்
புகழும் படிக்குச் சகலர்க்கு நேயன் பொருளுடையான்
திகழும் நால்வேத சாஸ்திரத் துள்ளநெறி யுணர்ந்தோன்
இகழுங் குணங்களை நீக்கிவன் பூச மெழிற்சுதனே.

இ-ள். சமதம சாந்தகுண சீலனும் நாலுவேதம் சாஸ்திரம் முதலானதையுணர்ந்து காமக்குரோதமென்னும் 13 குணங்களையும் நீக்கி ஒழுங்காக நடப்பவன் தபம் செய்பவன் தானதர்மம் செய்பவன் தனவந்தனுஞ்சகலசனங்களுக்கும் நேசனுமு யிருப்பானென்று பூச நக்ஷத்திரத்தில் பிறந்தார்களுக்குச் சொல்லவேண்டியதென்பதாம். 8

பதின்மூன்று குணங்களின் விபரமாவன.

1-வது (இராகம்) பரஸ்திரீகமனஞ் செய்யவேணு மென்றிருப்பதுவேயாம் இப்படி இராவணனுமிருந்து தன்னுடைய சேனைகளும் புத்திரரும் தானுமரணமானான் அதுவே இராகமாகுமென்பதாம்.

2-வது (துவேஷம்) தனக்கு ஒருவன் அபகாரஞ்செய்தா லவனுக்கு பதில் அபகாரஞ் செய்ய வேணுமென்று இருப்பதே துவேஷமாகு மென்பதாம்.

3-வது (காமம்) நரகாசூரனென்பவன் லக்ஷம் ஸ்திரீகளைக்கலியாணம் செய்து சுகத்துடனிருக்க வேணுமென் றெண்ணி யிருந்தான் அது காமமாம் அந்த நரகாசூரனே தேவஸ்திரீகள் பதினாயிரம்பேரைச் சிறைப்பிடித்து வைத்திருந்தான் அது கிஷ்ணனுக்குத் தெரிந்து அவனைக்கொன்று சிறைமீட்டார் என்பதாம்.

4-வது (குரோதம்) தனக்கு வேண்டியகாரியங்களிலொருவன் விக்கினஞ் செய்தானானால் அவன்மேல் அக்கிரமமாக விருப்பது குரோதமாம் இப்படி இருந்தவன் பகாசூரன் அவன் வீமனாலே உயிர்விட்டான் என்பதாம்.

5-வது (லோபம்) தான் சம்பாதித்த தனத்தையும் மற்ற பதார்த்தங்களையும் வேறொருவருக்கு கொடுக்காமல் தானுமனுப

விக்காமலிருப்பதாம் இப்படியே துரியோதன மகாராஜனுனவன் சூதாடி அநீதியாக்கவர்ந்த பொருளேயும் இராஜ்யத்தையும் கொடுக்காமலிருந்து பிறகு தானும் தன் சகோதரனும் யுத்தத்தில்மாண்டு போனார்கள் அதே லோபகுணமாமென்பதாம்.

6-வது (மோகம்) தசரத மகாராஜனுனவர் இராமன்பேரில் வைத்திருந்த வாஞ்சையே மோகம் அதனாலே தசரதன் இறந்தானென்பதாம்.

7-வது (மாச்சரியம்) சிசுபாலன் தர்மராஜன் இராஜசூய்யாகத்தில் அக்கிரதாம்பூலம் வாங்குபவர் யாரென்றுகேட்கக் கிஷ்ணனுக்கு கொடுக்கலாமென்று சிலர் சொல்ல சிலரும் சிசுபாலனும் கிஷ்ணனுக்கு கொடுக்கப்படாதென்று கோபக்குறியுடன் சொல்லவே கிஷ்ணனுக்கும் சிசுபாலனுக்கும் யுத்தமுண்டாகி சிசுபாலன் உயிரிழந்தான் அதுவே மாச்சரியமென்னப்படு மென்பதாம்.

8-வது (மதம்) ஐஸ்வரியமுடையவர்கள் கருவத்தினாலே காரியாகாரியந்தெரியாம லிருப்பதாம். அதெப்படி யென்றால் கார்த்தவீரியார்ச்சுனன் நாரதரை மதியாம லிருந்ததினாலே பரசுராமனால் யுத்தத்தில் அபஜெய மடைந்து பின்பு மரணமானு னென்பதாம்.

9-வது (ஈரிஷை) தனக்கு வந்த துன்பம் பிறருக்குவரக்கூடாதாவென்றிருப்பதே யீரிஷையாகு மென்பதாம்.

10-வது (அசூயையென்னும்பொறாமை) தனக்கிருக்கப்பட்ட சுகங்களும் மற்ற சம்பத்துகளும் பிறருக்கக் கூடாதென்று நினைப்பதே பொறாமை யென்னப்படு மென்பதாம்.

11-வது (டம்பம்) தான் செய்த தருமத்தையும் மற்ற காரியங்களேயும் தானே பார்த்து சந்துஷ்டி யடைகிறதுதான் டம்பமென்பதாம்.

12-வது (கர்ப்பம்) என்னும் மமதை தனக்கு சமம் ஒருவரு மில்லையென்று இருப்பது சகந்தரன் அப்படியே இருந்து சீதையால் மாண்டான் என்பதாம்.

13-வது (அகங்காரம்) என்னை யறியாயா நான் பிடித்து விடுவேனு நீயா எனக்கு சொல்லுகிறதென்று எதிரியை மதிக்காமல் கொடுமையாக பேசுவதே அகங்கார மென்பதாம்.

இந்த குணங்கள் ஞானிகளுக்கிருக்காது மற்றவர்களுக்குச் சிலதிருக்கும் சிலதில்லாமலு மிருக்குமாம்.

5-வது சுலோகம், ஆயிலியத்தின் பலன்.

எழிலோடு வந்து மித்திர பேத மியற்றுவிக்கும்
பழிகார நன்றி தனைமறந் திட்ட பாபியவன்

மொழிவான் சமர்த்து பிறர்செய்த மோற்று மோசமிக
ஒழியாது செய்பவ னுயில்ய மிந்த வுடுபலனே.

இ-ள். ஒரு மனிதரிடத்தில் நிரம்பவும் சினேகிதனைப்போல நேசித்து மித்திரபேதமும் விரோதமும் செய்துவைப்பன் யாவரும் இவனை கெட்டவனென்று சொல்வார்கள் பாபி செய்ந்நன்றி மறந்தவன் வாய்சமர்த்தாக பேசுபவன் பிறரைமோசம்செய்து பொன் பொருள் முதலானவைகளை துராகிர்த மாக அபகரிப்பவனு மென்று ஆயில்ய நக்ஷத்திரத்தில் பிறந்தார்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 9

6-வது சுலோகம், மகத்தின்பலன்.

இந்திர போகமும் பரிவார செல்வமும் மேற்றவனும்
சுந்தரன் றேவர் பிதுராதி மேற்பத்தி தோன்றியநற்
சிந்தையுள் ளான்மிக்க சந்தோஷ முஞ்செழிப் புற்றவனாய்
சந்தார் மகத்தினர்க் காகும் பலன்மிகச் சாற்றினனே.

இ-ள். இந்திரபோக மனுபவிப்பவன் பரிவாரமும் அதிக தனத்தை யுடையவன் அழகுள்ளவன் தெய்வபக்தியும் பிதுர்களிடத்திலே விஸ்வாசமும் செழிப்பும் சந்தோஷமும் நற்குணமும் முள்ளவன் மகநக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 10

6-வது. சுலோகம் பூர்த்திபலன்.

மிகுநல்ல வார்த்தை யுரையாடு கின்றவன் மேதினியிற்
சொகுசுள்ள பாலன் சமராட வாசைச் சுந்தரனும்
தகுநற் சமர்த்தன் காரிய மீதிலும் தானஞ்செய்ய
அகமுள்ள னும்பூர நக்ஷத்தி ரந்தனி லானவனே.

இ-ள். பிரியமாகவும் மதுரமாகவும் பேசப்பட்டவன் அழகும் சுத்தமும் ஆசாரமும் யுத்தம்செய்ய தீரமானநெஞ்சும் சமர்த்தும்காரியங்களிலும் தானதருமம்செய்யுஞ் சீலனும் நல்லவெண்ணம் உடையவனு யிருப்பானென்று பூரநக்ஷத்திரத்திற் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 11

7-வது சுலோகம், உத்திரத்தின்பலம்.

ஆனபல் வித்தை யதனுற் றனத்தை யடைந்தவனும்
தீனனென் னுஞ்சுக போகம் மதுதனை சேர்ந்துமிகு
மானமுள் ளானிந்த வையகந் தன்னில் வருஞ்சுதர்க்கு
வீனமில் லாப்பல னுத்திர னுளென் றினிதுரையே.

இ-ள். பலவிதமான வித்தையினாலும் தொழிலினாலும் தனத்தைத் தேடப்பட்டவன் இரக்கமான நெஞ்சன்சுகமும் போகபாக்கியத்தை யடைந்து மானமும் கெர்வமு முள்ளவனென்று உத்திர நக்ஷத்திரத்திற் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 12

### 7-வது சுலோகம். அஸ்தத்தின்பலன்.

உரைக்குந் தயவற்று மதுபானஞ் செய்திடு முச்சாகனுங்
குரைக்கும் தகாத விஷயச் செயல்தனை கொண்டவனும்
புரைக்குள் ளூறுகள வேயது செய்வான் புகழிவனும்
நிரைக்கும் புவியினில் நிகழுஸ்த மீனத்தின் நேர்பலனே.

இ-ள். கொடுமையான் வார்த்தை பேசுபவன்தயவு இல்லாதவன் மதுவையுண்பவன் தகாதவினகர்மம் செய்பவன் கன்னம் முதலான களவுசெய்பவன் கீர்த்தியில்லாதவன் உச்சாக முள்ளவனுமென்று அஸ்த நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 13

### 8-வது சுலோகம். சித்திரையின்பலன்.

நேரும் மிருத்த சவுந்தர தேகமும் நீலவிழி
கூரும் மவயவ லக்ஷண முள்ளவன் கோலமலர்
தேரும் பலவித வணியாடையுள்ள செல்வ னிவன்
சாரும் நடுவான சித்திரை தன்பலன் சாற்றுவதே.

இ-ள். நல்ல லக்ஷணமுள்ளவன் கண்ணும் மற்ற அங்கங்கள் பொருத்தமான சவுந்தரியவான் அழகுள்ளவன் பரிமளமு முள்ள மலர்களையும் ஆபரணங்களையும் சுகந்ததிரவியங்களையும் பலவிதமான வஸ்திரம் பட்டு முதலியவற்றால் அலங்கரித்து கொள்பவனு யிருப்பானென்று சித்திரை நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 14

### 8-வது சுலோகம். சுவாதியின்பலன்.

சாற்றும்பிரியவச னங்களுள்ளவன் தருமஞ்செய்ய
வேற்றத்தயவுளன் பிறர்குற்றம் தன்னையிவன்மிகவும்
ஆற்றும்வினையகுணன் வர்த்தகன்விடாவைப் பொறுக்கான்
போற்றும்பல சாஸ்திரமியம்புஞ் சோதிபுண்ணியனே.

இ-ள். இதமாகவும் மதுரமாகவும் பேசுபவன் தான தருமம் செய்பவன் தயை இரக்கமுள்ளவன் பிறர்செய்த குற்றத்தைச் சகிப்பவன் வினயகுண முள்ளவன் அதாவது புத்தி கூர்மை வர்த்தகம் செய்பவன் தாகவிடாய் பொறுக்காதவன் பல சாஸ்திரமுணர்ந்தவன் புண்ணியவானென்னப்படும்சுவாதி நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 15

### 9-வது சுலோகம், விவாகத்தின் பலன்.

இயம்புநல்வார்த்தையதிலும் திரவியமேற்பதிலும்
வயங்குஞ்சினேகத்தை மாற்றுங்கலகத்தில்வல்லவனும்
மயங்கும்முகக்காந்தியுள்ளவன் லோபிமற்றோர்களிட
செயங்கொள்கிதியிற்பொறுமை யுள்ளான்சீர்விசாகனுமே.

இ-ள். வார்த்தை பேசுவதிலும் திரவியஞ் சம்பாதிப்பதிலும் சினேக ரிடத்தில் விரோதம் செய்துக்கொண்டு கலகத்தை யுண்டு பண்ணவும் அதிகசமார்த்துள்ளவன் முகவசீகரமும் லக்ஷணமுள்ளவன் உலோபி பிறர் சம்பத்து தனங்களில் பொருமையுள்ளவன் விசாக நக்ஷத்திரத்தில் பிறந்த வர்களுக்குச்சொல்ல வேண்டியதென்பதாம். 16

9-வது சுலோகம், அனுஷத்தின்பலன்.

கனகங்கள் செல்வம் நவரத்தி னங்களைக் காசினியில்
இனிதாகப் பெற்றோன் பசிபொறுக்காதா னிகல்தனிலே
தனியாய்ச் சமர்த்தன் பரதேச மீதுசஞ் சாரகனும்
அனுஷ மெனுமுடு தன்னில் லுதித்தவ ளுருவனே.

இ-ள். தங்கம் பொன் பொருள் செல்வம் நவரத்தினங்களையும்உள்ள வன் பசிபொறுக்காதவன் யுத்தம் செய்ய தானதிகசமர்த்தும் தீரமுமுள்ள வன் பரதேசசஞ்சாரம் செய்யப்பட்டவன் அனுஷ நக்ஷத்திரத்தில் பிறந்த வர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 17

10-வது சுலோகம். கேட்டையின்பலன்.

ஆகுஞ்சி னேக ரிடந்தனி லுண்மைய தற்றவனும்
வாகுள்ள நல்ல சந்தோஷன் தன்ம மறிந்து செய்வன்
யூகன் னதிகக் குரோதமுள்ளா னிந்த வுலகமதில்
யோகம் இதுவெனக் கேட்டை பலன்க ளுரைசெய்வதே.

இ-ள். சினேகிதரிடத்தில் உண்மையில்லாதவன் அழகும்பல முள்ள வன் சந்தோஷ சுபாவமுள்ளவன் செய்யத் தகுந்த விஷயம் தெரிந்து தரு மம் செய்பவன் புத்திகூர்மை யுள்ளவன் குரோதமுள்ளவன் அதாவது கேட்டை நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்கு இந்த பலனைச்சொல்லவேண் டிய தென்பதாம். 18

10-வது சுலோகம், மூலத்தின்பலன்

செய்யத் தனங்கள் சுகமுடையான் சீவர் தங்களுக்கே
வய்யர் தனிற்றீங்கு செய்யாது காப்பவன் மானமுளன்
துய்யநற் போக முள்ளவிச் சீலன் துயரமற்ற
மெய்யன் திரச்சித்தன் மூல நக்ஷத்திர மேலவனே.

இ-ள். தனவந்தன் சுகமுள்ளவன் சீவராசிகள் தங்களுக்கு இம்சை செய்யாது தன்னுயிரைப்போல் காப்பவன் மானமும் கர்வமும் உள்ளவன் போகபோக்கியமுள்ளவன் ஆசாரசீலம் சுசியுள்ளவன் துக்கமில்லாதவன் மெய் பேசுபவன் கலங்காத திரபுத்தியுள்ளவன் மூலநக்ஷத்திரத்தில் பிறந் தார்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 19

11-வது சுலோகம், பூராடத்தின் பலன்.

மேலுற்ற சற்குண சந்தோஷ சீலியா மெல்லியரை
ஞாலத்தி லேமணம் செய் திடுவா னல்மாயடிமை

சீலத்து டன்கொண்டு கருவமுற் றேயிந்த சீருடனே
பாலன்பூ ராட மதிலேவந் தார்க்குப் பகர்ந்ததுவே.

இ-ள். மனதுக்கு ஏற்றபடி நடக்கும் சற்குணமும் சந்தோஷமும்ஆசாரமுமுள்ள ஸ்திரீயை கலியாணம் செய்து மனக்களிப்புடனே இல்லற தருமம் வழுவாது நடத்துபவன் ஆளடிமையுள்ளவன் சிறப்பும் ஆசாரமுமுள்ளவன் கருவமுள்ளவனும் பூராட நக்ஷத்திரத்திலே பிறந்தார்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 20

11-வது சுலோகம். உத்திராடத்தின் பலன்.

பகருஞ்சருவ சனநேச னுனவன் பரர்தமக்கு
மிகவும் முபகாரி தானதர்மங்களை மேவிசெய்து
புகழும் வினையாதி சற்குண முள்ளவ னும்புவியிற்
றகவே யுதித்தவ னுமுத்தி ராடத்தின் றன்பலனே.

இ-ள். சகல சனங்களுக்கும் நேசமுள்ளவன் பிறர்களுக்கு உபகாரஞ் செய்பவன் தானதர்மங்களைச் செய்பவன் கீர்த்தியுள்ளவன் வினயகுணமும் சற்குணமுமுள்ளவன் உத்திராட நக்ஷத்திரத்திற் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 21

12-வது சுலோகம், திருவோணத்தின் பலன்

பலமேற்ற கீர்த்தி பகர்செல்வ மோடிந்த பார்தனிலே
நலமாகப் பெற்றோ னுதாரத்வ மாதி நற்குணத்தை
நிலையாக வுற்றநன் மாதை மணந்தவ நீள்மறைகள்
பலவாயு ணர்ந்தவன் திருவோணம் தோன்றிட்ட பாலகனே.

இ-ள். கீர்த்தி பிரதாபமுள்ளவன் தனவந்தன் கற்பு நாணம் மடம் அச்சம் தயை அடக்கம் ஆசாரம் ஒழுக்கம் சீலம் உதாரத்வமென்னுங் குணங்களையுடைய மங்கையை மணம்புரிபவன் வேதம் சாஸ்திரம் புராணம் காவியங்களும் கலைக்கானம் இலக்கிய முதலானவைகளை நன்றாய் வாசித்துணர்ந்தவனுய் திருவோண நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 22

12-வது சுலோகம், அவிட்டத்தின் பலன்

பாலன் தனபதி யாம்வீர சூரனற் பாக்கியவான்
சீலத் தொடுந்தான தர்மங்கள் செய்து சிறப்புடையான்
கோலம்பு கழ்கீத வாத்தியமாதி யுங்கொண்டதனம்
மேலும் மதிலிச்சை யுள்ளா னவிட்டநல் விற்பனனே.

இ-ள். தனவந்தனுகவும் ரணவீர சூரனும் சகல பாக்கியங்களையும் பெற்று தானதர்மங்கள் செய்பவன் சிறப்பும் அலங்காரமுடையவன் எல்லாரும் புகழும்படியாகச் சங்கீத வாத்தியமும் முணர்ந்தவன் தனத்தில்

இச்சையுள்ளவன் அவிட்ட நக்ஷத்திரத்தில் பிறந்தாருக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 23

13-வது சுலோகம், சதயத்தின் பலன்

விற்பன வார்த்தையுங் கபடக்கு ணத்தன் விளங்கிழையாள்
அற்பவி சனம் மதுவுள்ள வன்சத்ரு வானவரை
நிற்பய மாகச் செயிப்பவன் துர்க்கிர்த்திய நிபுணன்கலவி
பற்பல வாக பகர்சாக சன்சத யன் பகரே.

இ-ள். தீர்க்கமாகவும் யாவரும் சந்தோஷப் படும்படியான வார்த்தை பேசுவன் ஸ்திரீகளால் விசனப்படுவன் தன் பகைவரை தைரியத்தினலே சங்கரிப்பவன் துர்கர்ம்மங்களைச் செய்பவன் கபடகுணத்தன் கல்வியில் தேர்ச்சியுள்ளவன் வார்த்தைகளினலே ஸ்திரீ புருஷர்களை வசப்படுத்து பவன் சதயநக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென் பதாம். 24

13-வது சுலோகம், பூரட்டாதியின் பலன்

கருவிழி மாதர் தனத்தை யடைந்துமக் காரிகையை
மருவா திகழப் படுவன் தனபதி வாய்ச்சமர்த்தன்
வெருவும் மதிக மனத்துய ரான்லோப மேற்றவனும்
பெருமீகை யற்றேன் பூரட்டாதி தன்னிற் பிறந்தவனே.

இ-ள். ஸ்திரீகளிடத்திலிருக்கும் தனத்தை அபகரிப்பன் ஸ்திரீகளால் தாழ்மையடையப் பட்டவன் தனவந்தன் வாக்கு சாதுர்யமாகப் பேசு பவன் மனேதுக்கமுள்ளவன் உலோபியென்று பூரட்டாதி நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 25

14-வது சுலோகம், உத்திரட்டாதியின் பலன்

தவமுளன் புத்ர பவுத்திரர் சந்ததி தன்னையுற்றுன்
அவையில் பயமற்று திரமாக பேசிடு மாண்மையுளன்
புவனத்தில் சத்துரு தம்மை செயிப்பவன் புண்ணியவான்
அவன் தர்மசீல னுத்திரட்டாதி யடைப்பனே.

இ-ள். தவஞ்செய்ததினல் பிறந்தவனுனதால் ஆயுசு தீர்க்கமுள்ளவன் புத்திர பவுத்திரர் மற்றும் சுற்றத்தார்களை யுள்ளவன் சபைகளில் தைரியத்தோடு பேசுபவன் ஆண்மையுள்ளவன் சத்துருக்களை செயிப்பவன் புண்ணியமும் தருமமும் செய்பவன் சுகிகரமும் சிறப்புமுள்ளவனுக விருப்பானென்று உத்திரட்டாதி நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 26

14-வது சுலோகம், ரேவதியின் பலன்

அடைவான் பரிபூ ரணமான வாயுளு மாண்மையுளான்
படையான் ரணசூரன் சுத்தன் தனபதி பாரதனில்

உடையோர் திரவியம் பரமாத ராசை யுன்னுதால்ல
நடையான் சகல சனநேசன் ரேவதி நாட்பலனே.

இ-ள். பூரணமான வயதுடையவன் சர்வசனப்பிரியனுகவும் ஆண்மையும் ரணசூரனுகவும் பரதார பரதிரவியத்திலும் ஆசையற்றவன் நல்லநடையுள்ளவன் சுசியுள்ளவன் தனபதியாமென்று ரேவதி நக்ஷத்திரத்திற் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 27

14-வது சுலோகம், சந்திர பலன்

பலவித மாய்ப்பலன் நக்ஷத்தி ரத்தால் பகருவது
நிலவும் வலிதா யிருந்திடு போதில் நிசழ் பலனும்
அலவன் பலன்குறைந் தாலே பலன்க ளதுகுறையும்
குலவும் பலாபலன் யூகித் துணர்வொடு கூறுவதே.

இ-ள். இந்த இருபத்தேழு நக்ஷத்திரத்துக்கும் பலன் பலவிதமாகச் சொல்லி யிருப்பதால் சந்திரன் ஆறு எட்டு பன்னிரண்டில் இல்லாது இருக்க வலிதோடிருந்தால் இந்த பலன் சம்பூரணம் இல்லாவிடில் பலன் குறையும் மற்ற கிரக நிலைமைக்கொண்டு யூகித்துச்சொல்லுவதென்பதாம்.

நக்ஷத்திர அதிதேவதைகள் ஆசிரிய விருத்தம்.

சீரிலகு பரிவாணி பரணிதூர்க் கையிருல் தேர்ந்தவக் கினி ரோகிணி
செய்யயன் மான்றலைத் திங்களாதிரையான்றிரளம் ராங்குடம்பொன்
னேரிலகு பாம்பாதி சேடன்மக மாம்வெள்ளி யெழில்புர மாம்பார்ப்பதி
யெண்ணுமுத் திரமதோ சாத்தனுங் களிறுசுதி ரெழிற் கன்னிவிசுவகரு
பாரிலகு சோதிலக் குமிசுளகு வேலனும் பனைவாயு வாளியிந்திரன்
பகர்மூல மசுரர்பூ ராடமே வருணன் முடி பன்னுநற் கணபதியினே
டாரிலகு சோனைமால் பரவைச்சி செக்கிய மனுங்கொடுங் கோல்குபோ
னரியவேர் தன்காம தேனுரே வதிசனிக் கானநாள் தேவதைகளே

படலச்செய்யுள் தொகை.

வானதிலுறையுமீன்கள் வழங்கிடுமூவொன்பானே
ஆனநற்படலந்தன்னி லெனியிலிருபத்தொன்பான்
தானதுறையதாகசாற்றினேன்வயித்திலிங்கம்
தீனனுங்குருவின்பாதம்சென்னியிற்சூட்டிக்கொண்டே.

பதினேழாவது

நக்ஷத்திரயோகப் படலம் முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# மங்களேஸ்வரீயம்.

பதினெட்டாவது

## இராசிசீலப்படலம்.

14-வது சுலோகம், மேஷசூரிய பலன்

உற்சனாய்ரவிமேடநின்றிட வுலகுதித்திடுபாலகன்
அச்சமில்புகழோடுங்கீர்த்தியு மறிவுகல்வியுமுள்ளனும்
நிச்சமயப்புவிதனில்சஞ்சாரக நிதிதனங்களுமற்பமாம்
எச்சமில்லாயுதம்பூண்டிவன் சீவனஞ்செய்வனென்னவே.

இ-ள். மேஷராசியில் சூரிய உச்சனாயிருக்கப்பிறந்தவன் பயமில்லாத கீர்த்தியும் யூகமும் கல்வியும் சஞ்சாரமுள்ளவன் சொற்பதனமுள்ளவன் ஆயுதங்களணிந்து ஜீவனம் செய்பவன் பரம உச்சபாகத்துக்கும் பத்து பாகைக் குள்ளாகப் பிறந்த சாதகருக்கென்றறிய வேண்டியது 20-வது பாகையிலிருக்க பலன் வேறு என்பதாம். 1

14-வது சுலோகம், ரிஷபச் சூரிய பலன்

என்னும்விடையதிலிரவி நின்றிடவிளவலாகவுதித்தவன்
துன்னுமாடைசுகந்தவஸ்துவின்றொழிலினுற்மிகச்செட்டினோன்
மன்னுமங்கையர்பாலில்வர்மியாம் மகிழுங்கீதமாதிகளிலும்
பன்னுவாத்தியந்தன்னிலேமிக பண்டிதன்சமர்த்துள்ளனே.

இ-ள். ரிஷப விராசியில் பகையாய் சூரியனிருக்கப் பிறந்தவன் வஸ்திரம் வாசனை திரவிய வியாபாரத்தினால் தனம் தேடப்பட்டவன் ஸ்திரீகளுக்கு விரோதியாயும் சங்கீதம் வாத்தியம் இவைகளில் பழகி தேர்ச்சியடைந்த சமர்த்துள்ளவன் பண்டிதனாகு மென்பதாம். 2

15-வது சுலோகம், மிதுனச்சூரிய பலன்

உள்ளதோர்மிதுனத்தினிற் பகலுற்றிடப்பிறந்திடு
வள்ளலுமினிலக்கினங்களும் மகிழுங்கணிதம்சாஸ்திரம்
கள்ளமின்றியுணர்ந்துமிக்க கலைக்கியானமறிந்திடுந்
தெள்ளறிவுளபாலனின் குணச்சீரிதாமெனச்செப்பவே.

இ-ள். மிதுன விராசியில் சூரியன் பகையாயிருக்கப்பிறந்தவன் இலக்கனம் சோதிடம் வியாகரணம் கலைக்கியானம் தெரிந்தவன் அறிவுள்ளவனுகு மென்பதாம். 3

15-வது சுலோகம், கடகச் சூரிய பலன்

அலவன்மிதினிலலரிநின்றிட வவனிவந்திடுபாலகன்
உலகுதன்னிலேசகலபேருக்கு முதவிசெய்மதிகூர்மையுஞ்
சலனமுற்றுவழியேநடந்திட தானுந்துயரமுறுவனும்
பலவிதத்திலுந்துக்கமே மிகபாலகன்மிகனடைவானெனே.

இ-ள். கடக விராசியில் சூரியன் பகையாயிருக்கப் பிறந்தவன் பலபேர்களுக்கும் உபகாரம் செய்பவனும் வழிநடப்பதற்கு கஷ்டப்படுபவனும் புத்தி தீக்ஷண்ய முடையவனும் எந்த விதத்திலாவது துக்கத்தை அனுபவிப்பவனுமா யிருப்பனென்பதாம். 4

15-வது சுலோகம், சிங்கச் சூரியபலன்.

சிங்கராசியிலிரவிநின்றிட செல்வனுகவுதித்தவன்
பொங்குகோபமுடையனுகுவன் புரவலரகமீதிலுந்
தங்குவான்வனமலைகடன்னிலும் சஞ்சரித்திடநெஞ்சுளன்
அங்கமேமிகவலிவதுற்றிடு வாண்மையான்மிகுதீரனே.

இ-ள். சிங்கராசியில் சூரியன் ஆக்ஷியாயிருக்கப்பிறந்தவன் முன்கோபமும் சரீரபலமும் ஆண்மையும் கலங்காத நெஞ்சமுமுள்ளவன் அரசர்கள் கிரகத்தில் வாசஞ் செய்பவன் மலைகளிடத்தும வனங்களிடத்தும் சஞ்சரிக்கப் பிரியமுடையவனுக விருப்பா னென்பதாம். 5

15-வது சுலோகம், கன்னிச் சூரியபலன்

கன்னிதன்னிலேகதிரிருந்திட காசினியிலுதித்தவன்
உன்னிதமுளகவியுரைப்பவ னேரைகணிதமறிந்தவன்
துன்னிடுஞ்சித்திரம்வரைபவன் தூயனுத்மவிசாரணை
தன்னையேமிகவறியவல்லவன் தையல்தேகமுடையனே.

இ-ள். கன்னியிராசியில் சூரியன் பகையாயிருக்கப்பிறந்தவன் யாரும் சந்தோஷப்பட கவிப்பிரசங்கம் செய்பவன் சோதிட சாஸ்திர மறிந்தவன் பலவித விசித்ரமான சித்திரங்கள் எழுதவும் யோக சாதனமென்னப்பட்ட இயம நியமாதிகளை யுணர்ந்து ஆத்தும விசாரணை செய்பவனுயிருப்பானென்பதாம். சரீரமானது ஸ்திரீகளைப் போலொத்த தாக விருப்பானென்பதாம். 6

16-வது சுலோகம். துலாச்சூரியன் பலன்.

நீசனுய்ரவிநிற்குங்காலினில் நீள்புவியதில்வந்தவன்
தாசனுய்ப்பலபேர்தமைச்சமா தானஞ்செய்திடயூகனும்
தேசமேசெலவிச்சையான்தனம் சேர்ப்பனுமிவனீனமாய்
ஆசையால்மதுவுண்டுவிற்பவனுன விச்சுதனுவனே.

இ-ள். துலா ராசியில் சூரிய னீசனாயிருக்கப் பிறந்தவன் மத்தியஸ்த மாயிருந்து சமாதானஞ் செய்பவன் புத்தி தீவிரமுள்ளவன்வழிநடையிலும் தேசசஞ்சாரம் செய்யவும் இச்சையுள்ளவன் தங்கத்தையும் திரவியத்தை யும் சேர்த்து வைத்திருப்பவன் ஈனகர்மம் செய்பவன் மதுவுண்பவன் மது வியாபாரம் செய்பவனாயு மிருப்பா னென்பதாம். 7

16 வது சுலோகம், விருச்சிகச் சூரியபலன்.

இரவிதேளினிற்சிறந்துவந்தவ னிடும்பைமூர்க்ககுணத்தனும்
சரசமற்றுமேஸ்திரீயைச்சேருவன் சத்துருவாமவிழ்தத்தினால்
பொருளுந்தேடுவன்சாஸ்ரதீரனும் போகுமாந்தனம்சோரமே
தரணியிலிவன்சிட்சைபெற்றிடு தனயநாசனுமாவனே.

இ-ள். விர்ச்சிகத்தில் சூரியன் பகையாயிருக்கப் பிறந்தவன் கொடுமை யும் மூர்க்கமும் இடும்பையு முடையவன் யுத்தாயுக்தம் தெரியாதபடி மனோ திடத்தினால் ஸ்திரீயைச் சேருபவன் சத்துருவா யிருக்கப் பட்டவரையும் வசப்படுத்த அவிழ்த முதலியவை செய்து கொடுத்து அதினால் வரப்பட்ட திரவியத்தைச் சேகரித்து வைத்திருப் பவன் கத்தி தடிமுதலிய ஆயுதத் தில் பழகிதேர்ச்சியடைந்தவன் இவன் தேடிவைத்ததிரவியத்தை சோரர்க ளபகரிப்பார்கள் அதினால் சிட்சை யடைபவன் இவன் சம்பாதிப்பது வீணே தவிர இவனனுபவிக்கமாட்டா னென்பதாம். 8

16-வது சுலோகம். தனுர்ச்சூரியபலன்.

வில்லினிற்சுடருற்றபோதினில் மேதினியதில்வந்தவன்
நல்லவர்பெரியோரினாற்புகழ் நலமடைந்திடுபாலகன்
சொல்லுமாயுள்வேத மறிந்தவன்சுகவனுந்தனபதியுமாய்
வல்லசிற்பமுணர்ந்ததீரனு வருவனதிகுணசீலனே

இ-ள், தனுசிராசியில் சூரியன் நட்போடிருக்கப் பிறந்தவன் சத்புரு ஷர்களினால் பூசிக்கப்பட்டவன் குணசாலியாம் அவர்களினாலே நன்மை யடையப் பட்டவன் ஆயுள்வேத மென்னப்பட்ட சித்து நூல்கள் வைத்தி யம் வாகடமும் சிற்பசாஸ்திரமு மறிந்தவனும் சுகமும் தனமு முள்ளவனும் கோபமுடையனாயு மிருப்பா னென்பதாம். 9

16-வது சுலோகம், மகரச்சூரியபலன்,

மகரராசியிற்பருதிநின்றிட மாநிலத்துலுதித்தவன்
பகருநீசகன்மங்களேமிகப் பண்ணிமூர்க்கசுபாவனும்
செகமதில்நிலையற்றுவர்த்தகம் செய்பவனற்பதனத்தனும்
சுகமதாய்ப்பிறர்தனமதாள்பவன் சொல்லுவோமிகலோபியே

இ-ள், மகரராசியில் சூரியன் பகையாயிருக்கப் பிறந்தவன் நீசகன்மஞ் செய்பவன் மூர்க்ககுண முள்ளவன் நலமில்லாத வியாபாரஞ் செய்பவன் சொற்பதன முள்ளவன் பிறர்தனத்தைத்தான் சுதந்திரமாக அனுபவிப்பன் லோபகுண முடையவனா யிருப்பானென்பதாம், 10

17-வது சுலோகம், கும்பச்சூரியபலன்.

கலசமீதினிற்கதிரிருந்திட காசினியிலுதித்தவன்
புலயனின்னிகர்கீர்த்தியங்களை புரிபவனிவனுருமே
நலமுறுமனையாளுமக்களை நாட்டினிலிவன்விட்டுமே
தலமதிலிவன்நடனநிர்த்தனந் தானறிந்திடுவானெனே.

இ-ள், கும்பவிராசியில் சூரியன் பகையாயிருக்கப் பிறந்தவன் அதமகிர்த்தியங்களைச் செய்பவன் புத்திரனாலும் களத்திரத்தினாலும் விடுபடப் பட்டவன் நடனநிர்த்தன நாட்டிய முதலியவைகளை யுடையவனாயு மிருப்பானென்பதாம், 11

17-வது சுலோகம் மீனச்சூரியபலன்.

பகலவன்கயலுறவுதித்தவன் பாவையாவசப்பட்டவன்
சுகமுனான்சலமதிலுதித்திடு தூயமுத்துநற்பவளமும்
செகமதிற்பலசெட்டுசெய்து மேதேடுவான்தனமிக்கவே
புகழுதோங்கிடவாழுகின்றவன் பூவுலகதுதன்னிலே,

இ-ள், மீனராசியில் சூரியன் நட்பாகவிருக்கப் பிறந்தவன் சத்திலுண்டாகிய வஸ்துக்களான முத்து சங்கு பவளம் உப்பு இன்னம் மச்சமுதலியன வாலும் ஜலத்திலுற்பவிக்கும் வஸ்துவின் செட்டினால் தனமும் ஐஸ்வரியமும் பெற்றிருப்பானென்பதாம், 12

17-வது சுலோகம் வசனம்.

சந்திரன் சூரியன ஏகராசியடைந்திருக்க எந்த ராசியில் கூடியிருப்பானோ அந்தராசியினுடைய நக்ஷத்திரமான காலபுருஷனுக்குசொல்லப்பட்ட சரீரத்துக்குச் சமானமான அங்கங்களில் மச்சம் சொல்லவேண்டும் அதெப்படியென்றால் சந்திரன் சூரியன் மேஷத்தில் கூடியிருக்க மேஷாங்கமான சிரசில் மச்சமிருக்கும் ரிஷபத்தில் கூடியிருந்தால் ரிஷபாங்கமான முகத்தில் மச்சமிருக்கும் என்றுசொல்லவும் இந்த விதமாகவே மற்ற இராசிகளில் ரவி சந்திரன் கூடியிருக்க அந்தந்த ராசிகட்கு சொல்லப்பட்ட அங்கங்களில் மச்சமிருக்கு மென்பதாம், 13

1-வது சுலோகம், மேஷச்சந்திரபலன்,

பதினறு நீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்.

கங்கைதானுறையுமீசனார்முடியில் கருதிநிறிடுமதியவன்
காணுமேடமுறவந்தபாலகனின் கண்கள்வட்டம்சிவப்பதாம்
மங்கையர்க்குமேநேசன்லோலனுமல்லும்போர்புரியும்வீரனும்
மதிநிகர்த்ததனமருசிரசிலுளன் மானமும்கருவமுள்ளவன்
சங்கதிர்பலமற்றுசொத்தை நிகம்சத்திரேகையதுகரமதில்
சலமதைக்கண்டச்சமுற்றிடு சபலனுண்ணுவன்சுடுகையாய்
தங்குபூவதில்பிறரையாள்பவன் தன்குலமதில்சிரேட்டனும்
தன்மையற்றவனற்பகோபனுந் தரணியற்றிடுபாலனே,

இ-ள், மேஷராசியில் சந்திரனிருக்கப் பிறந்த சாதகன் வட்டமாக சிவந்தநேத்திர முள்ளவன் ஸ்திரீகளுக்கு நேசனும் ஸ்திரீலோலனும்மல் யுத்தமுதலியது செய்யதீரனும் சிலகாலம் ஏற்றமும் சிலகாலம் தாழ்வு முள்ள தனமுள்ளவன் சிரசில் மருவுள்ளவன் கர்வமும் மானமுமுள்ளவன் முழங்கால் பலமில்லாதவன் கையில் சொத்தையாள நகமுடையன் உள்ள ங்கையில் சத்திரேகையுள்ளவன் சபலசித்தமும் சலத்தைக்கண்டு பயப் படும் தன்மையும் சுவைகையான பதார்த்த முண்ணபிரியமும் முள்ளவன் பிறரை ஆளுகைசெய்ய வல்லனுமாய் தன்குலத்தில்சிரேட்டமானவனுமாய் தன்மையான குணமில்லாதவனும் அற்பமான கோபமுள்ளவனுமிருப்பா னென்பதாம், 14

2-வது சுலோகம், ரிஷபச் சந்திரபலன்.

சந்திரன்விடையில்தானிருந்திடவே தரணிவந்திடுபாலகன்
சௌந்திரீயமுளன்பெருமுகந்துடையு சாற்றுபக்கமுதுகில்மரு
விந்தைதன்னிலேயிச்சையுள்ளவன் மேலதாம்வதிகாரியாம்
விசனதுக்கமதுதான்பொறுத்திடு வினையபுத்தியுதாரவான்
பந்துமக்கலேநீக்குகின்றவன்பாரில் பெண்மகவுபெற்றவன்
பக்குநேசரிடமிவனுநேசமுளன்பா வியந்துன்புறுதீரனும்
சுந்தரன்முதுமையெவ்வளத்திலுமேசுகமாய்சம்பத்தேற்றுமே
சுகமடந்தையர்நேசருகிடு மிச்சுதனுமேபசிபொறுத்திடான்.

இ-ள், ரிஷபராசியில் சந்திரனிருக்கப் பிறந்த சாதகன் நல்ல லக்ஷண முடையவனும் பெருத்தமுகமும் துடையும் முதுகு விலாப்புறத்தில்மருமச் சமுள்ளவனும் விநோதம் வேடிக்கைகளில் பிரியமுள்ளவனும் புத்திகூர் மையுடையவனும் உதாரதத்துவமுடையவனும் பந்து சனங்கள் மனைவி மக்களை நீக்கப்பட்டவனும் பெண் குழந்தைகளை யுடையவனும் சினே கரிடத்திலே அதிக அன்பும் பக்ஷமுள்ளவனும் வாலிபகாலத்தில் துன்ப முடையவனுந் தீரத்தன்மை யுடையவனும் முதுமைப் பருவம் எவ்வண பருவத்தில் சுகமாக சகல சம்பத்துகளையும் பெற்று ஸ்திரீகளுக்கு நேசமு டையவனாகியு மிருப்பவன். சுத்தமுள்ளவன் பசிபொறுக்கக் கூடாதவனுமா யிருப்பா னென்பதாம், 15

3-வது சுலோகம் மிதுனச்சந்திர பலன்.

மிதுனராசியில்சோமநட்புற மேதினியதில்வந்தவன்
மேதையான்மதநூலுங்கல்விகளும்வேதசாஸ்திரமுணர்ந்தவன்
நிதிபெறும்மடவாரின்லோலனுந் ஆயவிழியுஞ்சிவந்ததாம்
சுருளுரோமமதுமதுரவாக்குளனும் சுதனுமாண்மைமிகுசேவகன்
இதமாய்புன்னகையுநாசிகூர்மை யதுமேற்றவன்வினையன்சூதனும்
யென்னுமதிகமாயுண்டியுண்பவ னிலக்கணம்மறியும்பண்டிதன்
மதியுளன்கீதவாத்யநடனமு மறிபவன்விந்தையதில்மிக
மனமதுள்ளவனுமிவன்னென மானிலத்திலுரைத்ததே.

இ-ள். மிதுனராசியில் சந்திரன் நட்பாயிருக்கப் பிறந்த சாதகன் புத்தியூகமுள்ளவனும் மதனநூல் கொக்கோ முதலியதும் இன்னும் பலவிதமாகிய வேதசாஸ்திரங்களையுணர்ந்தவனும் ஸ்திரீலோலனும் சிவந்தகண்ணும் சுருண்டுவளைந்ததலைமயிருள்ளவனும் யாவரும் சந்தோஷப் படும்படியாக இனிமையாக பேசுபவனும் தீரமுள்ள சேவகனும் புன்னகை யுள்ளவனும் கூர்மையான மூக்குடையவனாகியும் வினயபுத்தி யுள்ளவனும் சூதுதெரிந்தவனும் அதிகமாக ஆகாரம் புசிப்பவனும் இலக்கண சாஸ்திரமறிந்தவனும் புத்திசாதுர்யமுள்ளவனும் கீத வாத்திய நடனம் வேடிக்கை முதலானவைகளில் பிரியமுடையவனுமு மிருப்பா னென்பதாம். 16

4-வது சுலோகம். கடகச் சந்திரபலன்.

நண்டினில்மதிநிற்கவந்தவன் நாரியர்புகழ்சீலனும்
நண்பர்கட்கிவன்நேயன்சோதிடம் நன்மையாயுணர்கின்றவன்
கண்டமேயழுத்தங்களுள்ளவன் காளைகுள்ளனும்தனபதி
கலைநிகர்த்ததனத்தால்சந்திரன் காணிபூமிவீடுகளுளான்
அண்டுநேயர்மேலன்புபக்ஷமொ டதிகுணன்விசுவாசியாம்
அருவிசலமதைகண்டபோதுமே வாசையுங்கழப்புற்றவன்
விண்டுவின்மகன்நிகரும்ரூபவான் வேந்தனின்னிலைமையாங்குணன்
விந்தையானவுத்யானவனத்திலும் வீற்றிருக்கமனமுள்ளனே.

இ-ள். கடகத்தில் சந்திரன் ஆக்ஷியாயிருக்கப் பிறந்த சாதகன் உன்னதமான கடிதடப் பிரதேச முள்ளவனானதால் ஸ்திரீகளால் புகழப்பட்டவன் நேசர்களிடத்து அதிக விஸ்வாச முள்ளவனும் சோதிட சாஸ்திர முணர்ந்தவன் அழுத்தமான கண்டத்தையுள்ளவன் குள்ளனுகிருப்பன் சிலகாலம் ஏற்றமும் சிலகாலம் தாழ்வுமுள்ள தனத்தை சுதந்திரமாகப் பெற்றவன் பூமியும் அனேக வீடுகளையு முள்ளவன் சினேகம் செய்பவரிடத்து பக்ஷமுள்ளவன் நல்ல குணவந்தன் சலத்தைக்கண்டு சந்தோஷப்படுபவன் நல்ல சவுந்தரமான ரூபமுள்ளவன் அரசர்களைப்போல நிலைமையும் சிங்கார வனத்திலிருந்த தான் பிரியமுள்ளவனு யிருப்பா னென்பதாம். 17

5-வது சுலோகம். சிங்கச் சந்திரபலன்.

சிங்கமதியுறவந்தபாலகன் செப்பும்தெளிவுளசீருளான்
செல்வனுக்குமேவட்டமாமுகம் திகழும்விழியதுபசுமையாம்
மங்கையர்க்கிவன்வர்மமுள்ளவன் மாமிசங்களதுவுண்பனும்
மலையில்வாழ்விவனெண்ணமுள்ள வனற்றுந்தியாகியுதாரவான்
எங்குமேதகாகருமத்தாலிவனேற்று காலங்கழித்துமே
இகலுங்கோபமதுள்ளவன்மிகவு முகியன்பசிவிடாவேற்றிடான்
அங்கிவன்றனதுபீடையுற்றிடு வன்னைசொல்தவராதவன்
ஆணவங்களுளன்சலனமற்றிடுவனர்ப்பசந்ததியுள்ளனே.

இ-ள். சிங்கராசியில் சந்திரன் பகையாயிருக்கப் பிறந்த சாதகன் தெளிந்த சீலனும் பரந்து வட்டமான முகமும் பசுமையான கண்களுடையவன் ஸ்திரீகளுக்குத் துவேஷமுள்ளவன் மாமிசமுண்பவன் மலைகளில் வசித்திருக்க பிரியமுள்ளவனீகையுள்ளவன் உதாரணகுண முள்ளவன் செய்யத்தகாதக்காரியங்களைச்செய்து காலங்கழித்து கோபித்துக்கொள்பவன் இணிமையான குணத்தன்வயிறு பற்கள் மனசு தாபத்தினலுண்டான உபாதையாய் பீடிக்கப்படுவன் தாய்சொல் தவரிடாதவன் சலனமற்றபுத்தியும் ஆண்மைப்பராக்ரமமுள்ளவன் அற்பமான புத்திரர்களை யுடையவனு யிருப்பானென்பதாம். 18

6-வது சுலோகம் கன்னிச் சந்திரபலன்.

அரிவைமதியுறவந்தபாலகனழகு பார்வையும்நடையுளான்
அகலமார்பினெடுதிண்புயமிருது வானதேகனும்சத்தியன்
நெறிமுறைபிசகிடாதசீலனும் நிர்த்தகீதவாத்தியமதில்
நிபுணன்சாஸ்திரதாரணையதினு நேருங்காமலீலைதன்னினு
தருமஞ்செய்தலினுவெட்க மாலஸ்யம்தானடைந்தமதிதீரன்
தரணியதில்பெண்சேய்களுள்ளவன்சற்குணன்மதுரவாக்கனும்
பரநகரதனில்வாசம்செய்பவன் பாவியைச்சேர்ந்துபரதனம்
பற்றுஒற்றுமையில்பலபொருளறியும்பலனதாமிதுவறிந்திடே.

இ-ள். அழகுள்ளபார்வையும் நடையுமுள்ளவன் விசாலமானமார்பும் வலிவானபுயமும் மெல்லியசரீரமும் சத்தியவாக்குமுள்ளவன் முறைதவருது ஒழுங்கானநடையும் நிர்த்தனகீதவாத்தியத்திலும் சாஸ்திர விசாரணையிலும் தாரணை முதலிய யோகனசாதன பழக்கத்திலும் காமலீலையிலும் அதிக சூட்சுமமான புத்தியுள்ளவன் தர்மத்திலிச்சையுள்ளவன் வெட்கமும் சோம்பலும் உள்ளவன் தீரத்தன்மையும் உடையான் பெண்களைப் பெற்றிருப்பவன் சர்க்குணவான் இனிமையாக பேசும் தன்மையுடையான் பரநகரில் வாசம் செய்பவன் பாவிகளிடத்து சேர்ந்திருப்பான் பிறர்தனத்தை அபகரிக்க எண்ணமுள்ளவன் அற்ப சந்ததியுடையவனு யிருப்பானென்பதாம். 19

7-வது சுலோகம் துலாச்சந்திரபலன்.

துலைமதியமுறவந்தபாலகன் தூயசற்குணவேதியரினல்
துதிபெறுபவன்புத்திசாலியாம் துடர்பற்றுன்பரமாதர்மேல்
நிலைபெறுமழகுநாசியுன்னதமா நீட்சிமெலிவொடுவொற்றுமை
நிரந்தரவவயமுளானிவனு நெறிபிசகிடாததன்மையன்
தலைவனும்தனபதிசமர்த்தனும் சாற்றுநாமமதிருக்கவே
தன்குலமதின்தெய்வபேருளன் சதியுறும்நோய்களுற்றுமே
குலைபவன்சுயபந்துதங்களால் குலவுபோஷணைப்பட்டபின்
குவலயமதில்விடுபடுவன் கூறிஞேமிப்பலன்களே.

இ-ள். துலா ராசியில் சந்திரன் பகைபெற்றிருக்கப் பிறந்தவன் சர்வ குணவந்தராலும் பிராமணர்களாலும் பூசிக்கப்பட்டவன் விவேகமுள்ளவன் பரதாரவிச்சையற்றவன் பரிசுத்தனும் அழகு சவுந்தரிய முள்ளவன் நாசி நீண்டிருப்பவன் நீட்சிமெலியு பருமனில்லாது சமமான தேகமுள்ளவன் ஸ்திரீகளுக்கு வசப்படாதவன் அதிகாரியாகும் தனவந்தனும் சமர்த்துள்ளவனும் முதல் பேரல்லாதபடி மறுபேரும் தெய்வ பிரசாதத்தினல் வைத்திருக்கப்பட்டவன் நோயில்லாதவன் மனச்சஞ்சலத்தினல் உபத்திரப்பட்டவன் பந்துக்களால் ஆதரிக்கப்பட்டவன் பந்துக்களுக்கு உபகாரிசில நாளில் பந்துக்களால் விலக்கப்பட்டவனு யிருப்பானென்பதாம். 20

8-வது சுலோகம், விருச்சிக சந்திரபலன்.

அம்புலிநீசமாகவந்தவனு அகலமார்பினெடுதிண்புயன்
அரிநிகர்த்தபெலனழல்நிகர்விழியு மழகனுந்துடையுங்காலதும்
நம்புங்குருதாய்தந்தையால்மிகவு நற்புகழபிமானியாம்
நரபதிக்கிவநேசனுகிடுவன் நலமுடைவனும்பூபாலரால்
அம்புவியதிலேவாலிபந்தனிலே வடைவன்நோயினுற்றுன்பமும்
அகமாங்கைதனிலேவஜ்ரபுள்ளிரேகை யமரும்பாதமதுதன்னிலும்
வம்பன்மூர்க்ககுணத்தினேடுமிகு வல்லமைகளுளதீரனும்
வளருமதியெனிப்பலன்களாம் வலிகுறையிலதுகுறையுமே.

இ-ள். விருச்சிகராசியில் சந்திரன் நீசம்பெற்றிருக்கப் பிறந்தவன் அகன்றமார்பும் வலிவானபுயமும் சிம்மத்தைப்போலபலனும் சிவந்த கண்ணும் திரண்டதுடையும்காலும் அழகுசவுந்தரியமுள்ளவனும் தந்தை தாய்ஆசிரியரால் நற்புகழும் அபிமானிக்கப்பட்டவன் அரசருக்கு நேசனும் அரசரால் பூசிக்கப்பட்டவன் பாலியத்தில் வியாதியினல் பீடிக்கப்பட்டவன் கையில் வஜ்ஜிர பக்ஷரேகை யுடையவன் காலிலும் வஜ்ரபுள்ளி ரேகையாகவுடையவன் வம்புத்தனமும் மூர்க்ககுணமும் சரீரவலிதும் கலங்காத நெஞ்சமுமுடையவன் இந்தபலன் பூர்வபக்ஷ சந்திரனுக்கு அமரபக்ஷமானல் இப்போது சொன்னவைகளின் சில குறையு மென்பதாம். 21

9-வது சுலோகம் தனுசு சந்திரபலன்.

தனுவில்மதியுறவந்தசெல்வனுமே தந்தமுஞ்சிரபுயங்களுந்
தன்வலியுடையவன்குருகுமார்பதுவும் தந்தையின்னிதியுள்ளவன்
இனியபந்துவிரோதமுள்ளவ னியற்றுவான்பலகாவியம்
இயம்புவர்க்குசாதுரியன்சிற்பியா மேற்றவர்க்கீயுந்தியாகியாம்
தனியன்காரியசீலன்கர்வியாம் தன்கையில்நமம்சொத்தையாம்
தருமன்சாமவுபாயத்தாலது தான்வசப்படாதநெஞ்சனும்
இனியகுணமுளனென்றுலகி லெல்லவருங்கொண்டாட்டவே
ஏற்றபுகழுளன்யூகவானிவனு மிவ்வுலகுதனில்வாழ்வனே.

இ-ள். தனுசுராசியில் சந்திரன் நட்பு பெற்றிருக்கப் பிறந்தவன் சிரசுமுகம்தந்தம்புயங்கள் பருத்தும்வலிதுபெற்றிருக்கும் குறுகியமார்பும்பிதுர்

தனங்களுமுடையவன் பந்துக்களுக்கு விரோதமுள்ளவன் பலநூல்சாஸ்திரம் புராணம் காவியம் முதலானவைகளைத்தானுண்டு பண்ணுவான் வார்த்தைப்பேசுவதில் சாதுரியமாகவும் சமயோசிதமாகவும் பேசுபவன். சிற்பம் தெரிந்தவன் எளியோர்களுக்கும் யாசகம் செய்பவருக்கும் தனம்கொடுப்பவன் தனியாக விருப்பான் காரியங்களில் அதிகசூட்சமுள்ளவன் கர்வம் உள்ளவன் ஆனதால் இதரமனுஷரை மதிக்கமாட்டான் கையில் நகம் சொத்தையுடையவன் தானம் தருமஞ்செய்பவன் வார்த்தையினாலும் சாமபேத தானதண்ட மென்பதில் சாமவுபாயத்தினால் வசப்படுவானல்லது மற்றவற்கு வசப்படான் கலங்காத தீரமுடையநெஞ்சனும், உலகத்திலெல்லோரும்நல்லவன் என்றுசொல்லக்கூடியவனாகவும் கீர்த்தியுடையவன்சூட்சமமானபுத்தியுடையவனும் அதனாலே யூகவானென்னப்படுவனென்பதாம்-

10-வது-சுலோகம், மகரச் சந்திரபலன்.

மதிகலையினுறவந்தபாலகனு மனைவிமக்களொடுசுற்றமும்
மருவிவாழ்பவன்தருமநிதியதை மனமகிழ்ந்தனுபவிப்பனும்
துதிபெறுமுகமும்விழிகுறுகியதுந் தூயவானலைவனின்குணம்
சுதனுஞ்சோம்பலுள்ன்புத்திதீவரமுஞ்சுகசௌபாக்கியசம்பன்னனும்
இதமாய்கூறுநல்வார்த்தை யுணர்பவனேற்றிடான்குளிர்சீதள
மீனமாமுதுகுவயிருமுள்ளவன் னேந்திழையாதுநேசனும்
அதிகுணம்முன்தயவுவெட்கம தற்றவன்மிகுவுலோபியே
அருமையாகியதமிழில்வல்லவ னனவிச்சுதன்தன்மையே

இ-ள். சந்திரன் மகரத்திலிருக்கப்பிறந்தவன்மனையாள்புத்திரன்பந்துக்களைக்கூடியிருப்பவன் தர்மத்தின்திரவியங்களைதன்பொருளைப்போலஅனுபவிப்பான் பெருத்த சிரசும் சிறுத்தவிழியும் குணமுள்ளவன் எங்கும் அலைந்துகொண்டிருப்பவன் சோம்பன் புத்தி தீக்ஷண்யமுள்ளவன் சுகம் சௌபாக்கியங்களைப்பொருந்தி நயமாகப்பேசும் வார்த்தை கேட்பவன் குளிர் சீதளம் பொறுக்காதவன் முதுகு வயிறு ஈனம் உள்ளவன் ஸ்திரீகளுக்கு நேசனாகவிருப்பான் நற்குணமுமுள்ளவன் தயைவெட்கம் இல்லாதவன் லோபி தமிழில் வல்லமையுடையவனா யிருப்பானென்பதாம். 23

11-வது சுலோகம் கும்பச் சந்திரபலன்.

சாடியில்நிலவேறவந்தவன் சடமதில்நரம்பேவெளி
சவுரியங்கடினவலிதுமுன்னச் சாருந்தேகமதுகூனனும்
நீடியதுடைபாதமுதுகொடு நிதம்பம்நெஞ்சொடுவாக்குமே
நிகரறுபருமன்செவியுமந்தமாம் நேரிழையர்பரமோகனும்
நாடியதிவன்பாபகன்மமே நண்ணுவான்பரதனமதை
நன்மதிநிகர்தனமதுள்ளவ னறுமலர்பரிமளங்களை
தேடியணிபவன்நேயருள்ளவன் சேரும்வழிசகிலேசமே
தெரிந்துபொறுப்பவன்றன்மையீதெனசெப்பிடுங்கணிதநூலதே

இ-ள். கும்பத்தில் சந்திரன் பகை பெற்றிருக்கப் பிறந்தவன் சரீரத்தில் நரம்புகள் தெரியக்கூடியதாகவும் உரத்தமயிரும் வலிதுள்ளவன் கூன் முதுகும் துடை பாதம் முதுகு நிதம்பம் நெஞ்சு இவைகள் பெருத்திருக்கும் காது மந்தம் அதாவது செவிடனும் ஸ்திரீ மோகமுள்ளவன் பாப கருமங்களைச் செய்பவன் பிறர் திரவியத்தை அபகரித்துக்கொள்ளுவான் சில காலம் விர்த்தியாகவும் சிலகாலம் குறைவாகவும் தனமுள்ளவன் அதாவது சந்திரனைப்போலாகும் சுகந்தமென்னும் வாசனைத் திரவியங்களும் புஷ்பம் முதலானவைகளைப் பிரியமாக அணிபவன் சிநேகருள்ளவன் குடும்பங்களிலுள்ள குற்றம் கிலேசம் முதலியவைகளைப் பொறுத்துக்கொள்பவன் இந்த குணங்களை யுடையவனாகு மென்பதாம். 24

15-வது சுலோகம் மீனச் சந்திரபலன்.

தானவன்கயல்தங்கவந்தவன் சலமுறையும்பலவஸ்துவால்
தானும்செட்டுளன்பிறர்தனமதை தானனுபவித்திடுவனும்
தீனன்தன்மனையாளிடத்திலும் திகழும்வஸ்திரபிரியனும்
திரமாநாசியும்காந்திதேகமும் திஷ்டிரண்டதும்முன்னதம்
மானிகர்விழியாள்வசப்படான் மாற்றலர்தமைவெல்லுவன்
மன்னுசீலன்நிக்ஷேபத்தாலுமே மகிழுவான்தனமிகுதியால்
ஆனவேதமுஞ்சாத்திரம்வலது மாய்ந்தவன்மதியூகவான்
அவனிதன்னிலேசற்குணத்தொடு வாண்மையுற்றிடுபாலனே.

இ-ள். மீனத்தில் சந்திரன் நட்பு பெற்றிருக்கப்பிறந்தவன் ஜலத்திலுண்டான வஸ்துக்களாகிய முத்து பவளம் சங்கு சிப்பி மச்சம் உப்பு இன்னம் வந்த வஸ்துகள் சலவஸ்துவோ அவைகளை வியாபாரஞ்செய்து தனம் தேடுவன் பிறர்தனத்தையுந் தானனுபவிப்பான் களத்திரத்தினிடத்திலும் வஸ்திரத்தினிடத்திலும் பிரியமுள்ளவன் மூக்கும் கண்ணும் அழகுள்ளவனும் சரீரமும் அழகுளளவனும் ஸ்திரீகளுக்கு வசப்படாதவன் எதிரிகளை செயிப்பான் நற்குணமும் ஆசாரமுமுள்ளவன் புதை பொருளுள்ளவன் அதினால் சந்தோஷமுள்ளவன் தனமிருப்பதினாலே கல்வியில்தேர்ச்சியுள்ளவன் புத்தி கூர்மையுள்ளவன் சற்குணன் பலமுள்ளவனாகு மென்பதாம்.

13-வசனம்.

இப்படிச் சொல்லப்பட்ட சந்திரதிஷ்டி சுபாவத்தினுடையதும் சொல்லப்போகிற சூர்யதிஷ்டி சுபாவத்தினுடைய பூர்ணபூர்ணத்வங்களும் சொல்லுகிறார்.

சென்மகாலத்தில் சந்திரனிருந்த ராசியும் அந்த ராசி நாதனும் பலவானாகவிருந்தாலும் ஸ்தானாதி பலங்களுடன் கூடினவனாக விருந்தாலும் இதுவரையில் சொன்னபலன் சம்பூர்ணமாக கொடுப்பவனும் ஆனால் செனன காலத்தில் சந்திரனிருந்த ராசியும் ராசியாசிபதியும் சந்திரனும் இந்த மூன்றும் பலமாயிருந்தால் இப்போது சொல்லிவந்தபலன் பூரணமாகும் இவை

களில் இரண்டு பலமாயிருக்கக்கொஞ்சம் குறையும் ஒன்று பலமாயிருந்தால் அதிகமாகக் குறையும் இந்த மூன்றும் பலமில்லாதிருந்தால் ஒரு பலனும் சரியாக நடக்காதென்று தாற்பரியம்.

சந்திரனைப் பார்க்கிலும் மற்ற ரவிகுஜாதிகிரகங்கள் முன் சொன்னப் பிரகாரமே எந்த ராசியிலிருப்பாரோ அந்த ராசியும் ராசியாதிபதியும் ராசியிலிருந்த கிரகமும் இந்த மூன்றும் பலமாயிருந்தால் சொல்லப்போகிற ரவிகுஜாதி ராசி சுபாவமும் சம்பூர்ணமாகும் 1-2-பலமாக விருந்தால் உக்தப்பிரகாரம்போல மத்யமமாகும் எல்லாம் பலவீனமானால் அந்த ராசி சுபாவம் போலே யிருக்குமென்று தாற்பரியம். 27

18-வது சுலோகம். மேஷம் விருச்சிகச் செவ்வாய்ப்பலன்.

நிலமகன்றகர்தேளில்நின்றிட நீணிலத்தினில்வந்தவன்
பெலமுளான்படைக்கதிபன்காமியாம்பின்னமானதழும்புளா
குலமறையவர்சீலன்வர்த்தகன் கொற்றவர்புகழுள்ளனும்
நலமிலாதவன்சோரன்றனபதி நற்சுதன்குணமிவைகளே.

இ-ள். மேஷவிர்ச்சிகத்தில் செவ்வாயிருக்கப் பிறந்தவன் ராபூஜிதனும் பிராமண சீலனும் சேனாதிபதியாயுமிருப்பன் வியாபார விஷயந் தெரிந்தவன் தழும்புடையதேகன் தனவந்தன் சோரனும் காமத்தில் அதிக விருப்பமுள்ளவனுயு மிருப்பானென்பதாம். 28

18-வது சுலோகம், ரிஷபதுலாச் செவ்வாய்ப்பலன்

அவனியின்சுதனேறுகோலிலமர்ந்த காலிலுதித்தசேய்
இவன்மிகுத்திடவானலங்கிருத னிந்திரசாலமறிந்துமே
குவலயத்தில்பரமாதர்தங்களைக் குணமுடன்வசமாக்குவான்
கவலையுற்றவர்பந்துமித்ரரைக் காதலற்றுவெறுப்பனே.

இ-ள். ரிஷபதுலாத்தில் செவ்வாயிருக்கப்பிறந்தவன் திடமுள்ளவன் அலங்காரஞ்செய்துகொள்பவன் இந்திரசாலம் செப்பிடு வித்தைமுதலான வைகளை யறிந்து ஸ்திரீகளை தன் வசப்படுத்திக்கொள்ள சமர்த்தனானதால் பந்துக்களுக்கு குரூரசுபாவமுள்ளவன் பயமுடையவர்கள் சிநேகத்தை வெறுப்பவன் இந்த குணங்களையுடையவனு யிருப்பானென்பதாம்.

19-வது சுலோகம், கடகச் செவ்வாய்ப் பலன்.

ஆரல்நீசமடைந்துநின்றிட வவனிதோன்றியபாலகன்
நீரமோடுமேவாழிசென்றுமே தேடுவான்தனமிக்கவே
சூரனுமிவனங்கவீனரு தூர்க்குணம்மதுவுள்ளவன்
தாரணியதில்புகழுங்கீர்த்தியும் தனமும்சம்பத்துடையனே.

இ-ள். கடகத்தில் செவ்வாயிருக்கப் பிறந்தவன் சமுத்திர யாத்திரை செய்து சம்பாதித்த பொருளுள்ளவன் கீர்த்தனமும் அங்கத்தில் தழும்பும்

பழுதுள்ளவன் துர்க்குண முள்ளவன் கீர்த்தி தனம் சம்பத்துள்ளவனு மென்பதாம். 30

19-வது சுலோகம், சிங்கச்செவ்வாய்ப் பலன்.

சிங்கராசியிற்குஜனிருந்திட செகமுதித்திடுபாலகன்
இங்கிதமுளனற்பபுத்ரவா னிவனும்வனசஞ்சாரியாம்
தங்கிடாநகரச்சமற்றவன் சாற்றுமக்களதுவற்பமாம்
பொங்குசெல்வமும்பூமியிற் றவன்புதல்வரும்மிகநட்டமே.

இ-ள். சிங்கத்தில் செவ்வாயிருக்கப் பிறந்தவன் நற்குணமுள்ளவன் நட்டமான அற்ப புத்திரருள்ளவன் நகரத்தில் சஞ்சரிக்காமல் ஆரண்யத்தில் வாசஞ்செய்பவன் தைரியமுள்ளவன் கஷ்டத்தைச் சகிப்பவன் பூமி செல்வம் சம்பத்தில்லாதவன் தரித்திரனு மென்பதாம். 31

19-வது சுலோகம், மிதுனகன்னி செவ்வாய்ப் பலன்

மங்கையாழினிற்குருதி நின்றிடமதலையாகவுத்திதவன்
இங்கிதமுறுகீதவாத்திய மிகச்செயித்திடதீரனும்
தங்குபுத்திரவந்தனுகுவன் தனமிலாதவுலோபனும்
சங்கையற்றுயாசகஞ் செய்பவன்சாருநேசர்பகைஞனே.

இ-ள். மிதுனம் கன்னியில் செவ்வாயிருக்கப் பிறந்தவன் சங்கீதம் வாத்தியத்திலும் யுத்தஞ்செய்வதிலும் சமர்த்தன் சந்ததியுள்ளவன் தனமிருந்தும் உலோபகுணமுள்ளவன் யாசகம்செய்பவன் சினேகரை விரோதம் செய்துகொள்ளுவன் என்பதாம். 32

19-வது சுலோகம், மிதுனகன்னி செவ்வாய் பலன்

ஓதுவோமிவனங்கவீனனு மொருவர்செய்யுதவிக்குமே
காதலோடுசெய்திடுவனும்பதில் கவலையுற்றிடுநெஞ்சமும்
பாதகம்மிகசெய்யும்லோபியாம் பண்பிலாதவலக்ஷணச
சாதகன்னிவன்தன்மையீ தெனச்சாற்றுவாய்தனியாகவே.

இ-ள். அங்கப்பழுதுள்ளவன் ஒருவர் செய்த வுதவிக்கு பதில் உதவி செய்யக்கூடியவன் கவலையுற்ற நெஞ்சுள்ளவன் பாபகர்மம் செய்பவன் பிறத்தியாரால் பார்க்கக்கூடாத அவலக்ஷண தேகமுள்ளவன் என்பதாம்.

20-வது சுலோகம், தனுசு மீனச்செவ்வாய்ப் பலன்.

மங்கலன்றனுமீனுறைந்திட மன்னுபூவிலுதித்தவ
னெங்குமேபுகழ்கீர்த்தியோங்கிட விலகுமந்திரியாகுவன்
இங்கிதமுளனற்பபுத்ரவா னிவனும்வலிவுறுந்தீரனும்
தங்குவானுலகதிலேமிக்கவும் சத்துருக்களாமென்றிடே.

இ-ள். தனுசுமீனத்தில் செவ்வாய் இருக்கப்பிறந்தவன் உலகத்திலே கீர்த்தியுள்ளவன் மந்திரியாகும் அற்பசந்ததிகளுள்ளவன் வலிவான தேகமும் கலங்காதநெஞ்சும் உள்ளவன் இவனுக்கு உலகத்தில் சத்துருக்களதிகமுண்டென்பதாம். 34



2?-வது சுலோகம், கும்பச்செவ்வாய்ப் பலன்.

சாடிதன்னிலேபூபதின்றிட தரணிவந்திடுபாலகன்
நாடியேமிகதுக்கமுற்றவன் நலமிலாதகுரூரனு
மீடிலாதபல்வார்த்தைகூறுவா னிவன்தரித்திரனாகவே
ஓடியேயலைகின்றநன்மையை ஞேதிஞேமிப்பலனதே.

இ-ள். கும்பராசியில் செவ்வாயிருக்கப் பிறந்தவன் எப்போதும் மன துக்கமுள்ளவன் குரூரன் பொருத்தமில்லாத வார்த்தை பேசுகிறவன் தரித்திரன் எங்கும் ஓடியலைப் பட்டவனுகு மென்பதாம். 35

20-வது சுலோகம், மகரச்செவ்வாய்ப் பலன்.

தரணிமைந்தனுமகரநின்றிட தனையனுகவுதித்தவன்
நரபதிநிகராயிருப்பவன் நன்மைசேர்மிகுபுத்ரவான்
திரவியங்களையுள்ளசீலனும் சீருடன்புகழேற்றவன்
பரவுசாதகன்குண மிதென்னவே பகருவாயதியூகமாய்

இ-ள். மகரத்தில் செவ்வாயிருக்கப் பிறந்தவன் ராஜசமானனாயும் அனேக புத்ரன் திரவியங்களுள்ளவன் கீர்த்திப் பிரதாபனுகியு மிருப்பா னென்பதாம். 36

21-வது சுலோகம், மேஷவிருச்சிக புதன்பலன்.

ஆடுதேளதில்புந்திநின்றிட வவனிதன்னிலுதித்தவன்.
தேடுவான்கடனுக்குமோசமும் செய்யுந்திருடனுஸ்திகனுஞ்சூ
தாடுவான்மதுபானிவஞ்சகன் தரித்திரன்கபடத்தனும்
கேடுளமனையாளையுள்ளவன் கீர்த்தியற்றிடும்பொய்யனே.

இ-ள். மேஷ விருச்சிகத்தில் புதனிருக்கப்பிறந்தவன் கடன் வாங்கிக் கொண்டு மோசம் செய்பவன் திருடன் தெய்வமில்லையென்றும் பரலோக மில்லையென்றும் நாஸ்திகனைப்போல தர்க்கம் பேசுபவன் சூதாடுபவன்மது பானஞ் செய்பவன் வஞ்சகன் தரித்திரவான் குணவீனமும்கெடுதியுமுள்ள ஸ்திரீயை மனையாளாக வுள்ளவன் கீர்த்தியில்லாதவன் உண்மையானவார் த்தைப் பேசாதவனுயு மிருப்பா னென்பதாம். 37

21-வது சுலோகம், ரிஷப துலா புதன்பலன்

பிருகுவீட்டினில்புந்திநின்றிட புவியுதித்திடுபாலகன்
அருமையாங்குருதந்தைதாய்கட் கன்புடையவன்செல்வனும்
பெருமையாய்தனந்தேடவிச்சையும்பிள்ளைபெண்டீரதிகமாம்
குருவுமாயுபதேசஞ்செய்பவன் குணவானீகையுமுள்ளனே.

இ-ள். ரிஷபம் துலாத்தில் புதனிருக்கப் பிறந்தவன் தாய்தந்தைகுரு இவரிடத்தில் பக்தி விசுவாசமுள்ளவன்தனவந்தன் திரவியஞ் சம்பாதிக்க விருப்பமுள்ளவன் அனேக களத்திரம் புத்திரர்களை யுள்ளவன் உபதேச கர்த்தாவாக விருந்து குருவுபதேசம் செய்பவன் சற்குணவந்த னீகையுள் ளவனுக விருப்பா னென்பதாம். 38

22-வது சுலோகம், மிதுன புதன்பலன்

புந்தியாழிலிருந்தகாலினிற் புவியுதித்திடுபாலகன்
சந்தமுற்றிடுகீதவாத்ய சாதுரீயன்சுகப்பிரியன்
விந்தையாய்மொழிகூர்வாய்ச்சாலகன் வியாகரணமதறிந்தவன்
இந்தசேயுமசத்யனுகுமா மிவன்குணமிதுதானெனே.

இ-ள். மிதுனத்தில் புதனிருக்கப் பிறந்தவன் கீதவாத்தியத்தில் சாதுர்யமானவன் சுகப்பிரியன் வாச்சாலன் வியாகரண சாஸ்திரம் அறிந்தவன் அசத்தியவந்தனுகியு மிருப்பானென்பதாம். 39

22-வது சுலோகம் கடகபுதன்பலன்

அலவன்றன்னிலேமாலடைந்திட வவனிமீதிலுதித்தவன்
சலமீதுற்றுமவ்விதத்திறுற்றனம் சம்பாதித்தவன்றன்னது
பலமதாலும்பராக்ரமத்தினுல் பாரினிற்றனந்தேடுவன்
குலமதிற்சிலபந்துகட்கிவன் குணமிலாதவன்பகைவனே.

இ-ள், கடகத்தில் புதனிருக்கப் பிறந்தவன் சலத்தில் யாத்திரையும் சல சம்பந்தமானதினுல் சம்பாத்யமுள்ளவனும் தனது பராக்ரமத்தினுல் சம்பாதிக்கும் தனத்தையுடையவன் பந்துக்களுக்கு விரோதியாகவேயிருப்பானென்பதாம். 40

23-வது சுலோகம், சிம்ம புதன்பலன்

இரவிவீட்டினில்புலவனின்றிட விளவலாகவுதித்தவன்
திரபுளான்சுகதனமும்புத்ரரைத் தீரமோடுவெறுத்தவன்
பரவுநாரிகள்தங்களுக்கிவன் பண்பிலாததுவேஷியாம்
தரணியிலிவன்மூர்க்ககுணமுளன் தையல்மீதுமேமோகியே.

இ-ள், சிங்கத்தில் புதனிருக்கப் பிறந்தவன் சுகம் தனம்புத்திரர்களை வெறுத்தவன் ஸ்திரீகளிடத்து மோகமுள்ளவன் ஸ்திரீகளுக்கு துவேஷமுள்ளவன் அலையப்பட்டவன் மூர்க்கனுகு மென்பதாம். 41

23-வது சுலோகம், கன்னிப் புதன்பலன்.

உச்சனுய்ப்புதன்கன்னி நின்றிடவுலகுதித்திடுபாலகன்
அச்சமற்றவன்சௌரியமுள னுகுவானீரைதியாகியாம்
மெச்சவேமதியூகிவித்துவான் மேலாய்கவியுரைப்புலவனும்
இச்சகத்தினில்வேதசாஸ்திர மிலக்கணம்மதில்தேர்ந்தவன்.

இ-ள்- கன்னியில் புதனிருக்கப் பிறந்தவன் சௌரியகுணமும் தைரியமுமுள்ளவன் தாதாவாகுமாம் புத்திநுட்பமுள்ளவன் பண்டிதன் கவி சொல்பவன் புலவன் வேதசாஸ்திர முதலான பலநூல்களிலுணர்ந்துதேர்ச்சியடைந்தவனுகு மென்பதாம். 42

24-வது சுலோகம், மகரகும்ப புதன்பலன்

சனியன்வீட்டினில்புலவனின்றிடச் சகமுதித்திடுபாலகன்
இனிமையாய்பிறர்நேசமற்றவ னேற்றசற்குணவானெனுந்

தனயன்கடனதுவாங்குவான் மிகத்தரித்ரன்வீணனுமாம்
இனியசித்திரம்சிற்பநூலது வெழுதிடமிகத்தீரனே.

இ-ள், மகர கும்பத்தில் புதனிருக்கப் பிறந்தவன் பிறருக்குப் பிரிய மற்றவன் சற்குணமுள்ளவன் கடன் வாங்கத்துணிவுள்ளவன் தரித்திரன் வீண்வேலை செய்பவன் சிற்பத்தொழில் செய்யத்திறமையும் அபேட்சையுமுடையவனுகு மென்பதாம். 43

24-வது சுலோகம் தனுசில் புதன்பலன்

தாரகராசியில்புலவனின்றிட தோன்றிடுஞ்சுதனனவன்
அரசராற்புகழேற்றுவாழ்பவ னும்வித்தையில்வல்லவன்
பரவுமுலகத்திலுளளஞாயமும் பகருவான்மதியூகியாம்
திரமுளான்குணசீலனுமெனச் செப்புங்கணிதநூலதே.

இ-ள், தனுசில் புதனிருக்கப் பிறந்தவன் ராஜபூஜிதன் வித்தையில் வல்லவன் விவகாரம் தெரிந்துஞாயம் சொல்பவன் குணசீலனுகவுமிருப்பானென்பதாம். 44

24-வது சுலோகம், மீனப்புதன் பலன்.

ஈசமாலெனில்பிறந்திடுஞ்சக நெறியறிந்துநடந்திடும்
வீசுசேவகர்தன்னைபார்க்கிலும் வெகுசிரேஷ்டனும்வெற்றியை
தேசமீதுபெற்றோரையுள்ள விச்சீலன்சருமத்தொழிலது
நேசமோடுசெய்திடுவனுமென நீணிலத்தினிற்கூறவே.

இ-ள். மீனத்தில் புதனிருக்கப் பிறந்தவன்பிரத்தியார் அபிப்பிராயம் தெரிந்து நடக்கும் விஷயத்தில் சேவர்களைப் பார்க்கிலும் சிரேஷ்டமானவன் வெற்றிபெறும் சேவர்களை யுடையவன் சரும மென்னப்பட்ட மிருகத்தின் தோல்களினால் செய்யக்கூடிய வியாபாரமும் செய்பவனென்பதாம். 45

25-வது சுலோகம் மேஷவிருச்சிககுருபலன்,

பொன்னவன்றகர்தேளில்நின்றிடப் புவியுதித்திடுபாலகன்
மன்னர்சேனைகட்கதிபனுகுவன் மைந்தருந்தனமுள்ளவன்
கன்னனென்னவேதானம்செய்பவன்காந்தியுடையசரீரனும்
பின்னமில்மனையாள்சுகந்தனைப் பெறுமுதாரனும்பிரபலன்.

இ-ள். மேஷ விருச்சிகத்தில் குருவிருக்கப் பிறந்தவன் சேனாதிபதியாகியும் வெகுதனம் புத்திரர்களை உடையவன் தானஞ்செய்பவன் அழகுள்ள சரீரமுள்ளவன் களத்திரத்தினால் சௌக்கிய முடையவன் உதாரகுணமும் கீர்த்திப் பிரதாபமும் பொறுமையான குணமுமுள்ளவனுகு மென்பதாம்.

25-வது சுலோகம் ரிஷபதுலாம் குருபலன்,

இறைவன்கோளுடனேறில்நின்றிடவிளவலாகவுதித்தவன்
குறைவிலாதனமாதியேற்றுமே குலவுமித்திராதியை

யுறைபவன்மிகத்தானஞ்செய்யு முதாரன்சுகசரீரனும்
அறைகுவோமதிகுணமுளானென லாகும்யூகவான்மந்திரி,

இ-ள். ரிஷப துலாத்தில் குருவிருக்கப் பிறந்தவன் குறைவிலாத தனம் சுகம் புத்திரர் மித்திர பரிவாரத்துடன் இருப்பவன் சர்வஜனப் பிரியன் தானஞ்செய்பவன் உதாரத்வகுண முள்ளவன் சுகசரீரமுள்ளவன் சற்குணவந்தன் புத்தி நுட்பமுள்ளவன் மந்திரித்வ முள்ளவ னென்னப்படும் என்பதாம் 47

26-வது சுலோகம் கடகக் குருபலன்,

மதியின்வீட்டினில்மன்னனின்றிட மதலையாகவந்தவன்
நிதியுளான் சுகமிகவுடைய நேருமைஸ்வரியத்துடன்
பதிபிலேநவரத்தினங்களும் பாரியாளுடன்மக்களும்
துதிகொளும்படியுலகில்வாழுவன்றாயவானென்னச்சொல்லவே

இ-ள். கடகத்தில் உச்சமாகக் குருவிருக்கப்பிறந்தவன் தனம் சம்பத்து சுகம் அயிஸ்வரியம் நவரத்தினம் புத்திரர் மனையாளுடனிருந்து சகலரும் நல்லவனென்று சொல்லும்படியாகக் கீர்த்தியோங்கிட இருப்பானென்பதாம் 48

26-வது சுலோகம் சிங்கக்குருபலன்,

இரவிவீட்டினில்குருவுறைந்திட விளைஞனும்புவியுற்றிட
அரசர்சேனைகட்கதிபனுகுவ னளவிலாதசெல்வங்களும்
திரமிகும்நவரத்தினங்களும் செல்வரும்மனையாட்டியும்
நிரணயத்துடன்கூடிவாழ்பவன் நீணிலத்தினில்யூகியே.

இ-ள். சிம்ஹத்தில் குருவிருக்கப் பிறந்தவன் சேனாதிபதியாகியும் அளவிலாத செல்வமும் நவரத்தினங்களும் சகல சம்பத்தும் மனைவி மக்களும் புத்திரனையும் கூடி வாழ்பவன் நுட்பமான புத்தியுள்ளவனுகு மென்பதாம் 49

26-வது சுலோகம் தனுசு மீனகுருபலன்,

கெண்டைவில்லதில்சீவனின்றிடக் கீர்த்தியோங்கிடவந்தவன்
தண்டுசேனைகட்கதிபனுகியும் தனவானுகவிருப்பனும்
மண்டலாதிபனுயிருப்பதும் மந்திரியெனச்சொல்வதும்
பண்டுளபனிரண்டுபாவமும் பார்த்துரைத்திடல்யூகமே,

இ-ள். தனுசு மீனத்தில் குருவிருக்கப் பிறந்தவன் கீர்த்தியுள்ளவன் சேனாதிபதி தனவந்தனும் மண்டலாதி பத்தியமாவது பூபதியென்னும் அரசனுவதும் யூகமுள்ள மந்திரியாவதும் ஜாதகத்தைப் பார்த்து பன்னிரண்டு பாவங்களு மறிந்து யூகமோடு சொல்லவேண்டியதாம். ராஜயோகமுள்ளவனென்னப்பட்டதும் பாவபலனைக் கொண்டு சொல்வதாகு மென்பதாம்

26-வது சுலோகம் மகர குருபலன்,

அந்தணன்கலைமீதுறைந்திட வவனிதன்னிலேவந்தசேய்
சந்ததமிகதுக்கியாமிவன் சாருநீசனுய்சாற்றுவோம்
சொந்தமாய்க்குலதொழில்விருத்தியும் சொற்பமாய்தன்வந்தனும்
இந்தவாறெனகுருவுநீச மிருக்கவிப்பலனுமெனே.

இ-ள். மகரத்தில் குருவிருக்கப் பிறந்தவன் சதாகாலமும் துக்கவந்தனும் நீசனுகவுமிருப்பன், தன்குலத் தொழில் செய்பவன் அற்பமான தனவந்தனுக விருப்பா னென்பதாம் 51

26-வது சுலோகம் கும்பக் குருபலன்;

வேதியன்குடமீதுறைந்திட விளங்கும்இப்புவிவந்தவன்
மேதினியதில்தாரபுத்திரர் மித்ராதிதனத்தொடும்
நீதிலாசுகவந்தனுமவன் செல்வம்பாக்கியமிகவுளான்
நீதியாமதியூகியாமிவன் நெடியபுவியதில்வாழ்வனே,

இ-ள். கும்பத்தில் குருவிருக்கப்பிறந்தவன் மனைவிமக்கள் தனத்துடன் சுகவந்தனுகவிருப்பான் செல்வம் பாக்கியமுள்ளவன் நியாயம்தெரிந்து நடப்பவன் புத்தி கூர்மையுள்ளவனுகு மென்பதாம். 52

26-வது சுலோகம் மிதுனகன்னி குருபலன்

புந்திவீட்டினிற்பொன்னுறைந்திட பூவுதித்திடுபாலகன்
மந்திரியெனயூகியாமிவன் மக்கள்பரிவாரமித்ரரை
சொந்தமாகவேகூடி வாழ்பவன் சுகமுளானிவனுகுமே
அந்தணன்நன்பானதாலுமே வாகுமிப்பலன்கண்டிடே,

இ-ள். மிதுனம் கன்னியில் குருவிருக்கப் பிறந்தவன் புத்தி கூர்மையுள்ளவன் மந்திரியென அபிமானிக்கப்பட்டவன் புத்திரர் பரிவாரங்களைக் கூடி வாழ்பவன் சுகவந்தனுக விருப்பா னென்பதாம் 53

27-வது சுலோகம் மேஷ விருச்சிக சுக்கிரபலன்,

வே று.

தகரோடுதேளில்மழைகோளுநிற்கத் தரணீயுதித்தபாலன்
சகமாகுநாரிதனமுங்கைக்கொள்ள சூதானவார்த்தைபாடி
அகமீதிருக்குமிகவாந்தனத்தை யடைவன்னெனவுரைத்தோம்
இகமீதுகுலநிந்தையடைகின் றமைந்த னென்னும்பரஸ்திரீலோலன்

இ-ள். மேஷ விருச்சிகத்தில் சுக்ரனிருக்கப்பிறந்தவன் பரஸ்திரீலோலன் பரஸ்திரீகளிடத்தில் வஞ்சகமான வார்த்தைகளைப்பேசி அவர்களிடத்திலிருக்கும்தனத்தையபகரிப்பவன் குலநிந்தை யுடையவனுகுமென்பதாம்

27-வது சுலோகம் ரிஷபதுலா சுக்கிரபலன்,

நிறையோடுயேறில்கவியேயிருக்க நிலமீதுதித்தசேயும்
தறையாளுமன்னர்மிகுநேசமுள்ள தனையன்குலச்சிரேஷ்டன்
விறைவாகவுந்தன்வலிவாலு மிக்கவெகுவாந்தனந்தேடியே
குறையாதகீர்த்திமிகவோங்கி வாழுங் குமரன்குணகளிவையே,

இ-ள். ராஜபூஜிதனும் பந்துக்களுக்குள்ளாக தான் சிரேஷ்டனும் தன்னுடைய புஜபல பராக்ரமத்தினாலும் புத்தியினாலும் தனம் தேடுபவன் கீர்த்தியுள்ளவன் பயமற்றவனாகு மென்பதாம் 5

28-வது சுலோகம் மிதுனச் சுக்கிரன்பலன்,

புகரோனும்யாழில்மகிழ்வாயிருக்கப் புவிமீதுதித்தபுதல்வன்
இகமீதுகீதயாழ்வாத்யவல்ல னிலகுந்தனங்களுடையான்
செகமீதுராசர்மிகுகார்யமேற்று சீருற்றிருக்குஞ்செல்வன்
சுகவானுமாகிமிகுகீர்த்தியோங்குஞ் சுதனின்குணங்களிதுவே,

இ-ள். மிதுனத்தில் சுக்கிரனிருக்கப் பிறந்தவன் கீததாத்தியத்தில் வல்லவன் தனவந்தன் ராஜகாரியம் செய்கிறவன் சுகவான் கீர்த்தியுள்ளவனாகுமென்பதாம் 56

29-வது சுலோகம் கடக சுக்கிரன்பலன்,

மதியோனகத்தில்புகரோனுநிற்க மகவாயுதித்தபேர்க்கு
நிதியற்றுதுக்கமிகவுற்றிருக்கு நினைவற்றவச்சமுளனும்
விதியாலமைத்தமனையாளிரண்டு மிகுயாசகஞ்செய்பவனும்
கதியாமிவற்குசுகமில்லையென்று கமலன்னமைத்ததுவே,

இ-ள். கடகத்தில் சுக்ரனிருக்கப் பிறந்தவன் தனமில்லாதவன் துக்கவந்தன் பயமுள்ளவன் இரண்டு மனையாட்டியுள்ளவன் யாசகஞ் செய்பவனாக விருப்பானென்பதாம் 57

29-வது சுலோகம் சிம்க சுக்கிரன்பலன்,

பகலோன்றன்வீட்டில்புகரோனு நிற்கபடிமீதுதித்தபாலன்
பகலின்றிபாவையவராலிகத்தில் பகருந்தனங்களுடையான்
மிகரூபமாகுமனையாள்சுகத்தை மிகவும்மடைந்தசீலன்
சுகமுள்ளமைந்தர்மிகவில்லையற்பம் சுகமுள்ளபாலனிவனே

இ-ள். சிம்ஹராசியில் சுக்ரனிருக்கப் பிறந்தவன் நயமாக ஸ்திரீகளிடத்திற்பேசி அவராலளிக்கப்பட்ட தனத்தையுடையவன் ரூபசவுந்தரியமுள்ள ஸ்திரீயை மனையாளாக அடைந்தவன் அவளால் சுகமடைந்தவன் அற்பமான சந்ததியை யுடையவனாகு மென்பதாம். 58

29-வது சுலோகம், தனுசு சுக்கிரபலன்

மறையோனகத்தில்புகரோனிருக்க மதலையுதிக்குமாகில்
குறையாதசெல்வமிகுசம்பத்தோடு குலவியிருக்குமைந்தன்

விறைவாகுமேசற்குணவானுமாகி விரிவானகீர்த்தியேற்று
நறைமீதிலுள்ளோரனைவோரும் போற்றசகமீதுவாழுபவனே.

இ-ள். தனுசில் சுக்ரனிருக்கப் பிறந்தவன் செல்வம் சம்பத்துடன் கூடியிருக்கிறவன் சற்குணவந்தன் கீர்த்தியுள்ளவன் யாவராலும் பூசிக்கப் பட்டவனுயிருப்பானென்பதாம். 59

29-வது சுலோகம். கன்னிச் சுக்கிரபலன்.

புகரோனுங்கன்னிதனில்நீசமேற புவியிற்பிறந்தசெல்வ
மகனுந்தன்வர்ணமுறைதப்புவானு மனிதர்கள்தூஷிக்கவே
சகமீதுமிக்கதானீசகன்மம் காணேபுரிவனின்னோன்
தகமைகனீதுயென்றுங் கணிதர்சாற்றும்விதங்களிதுவே.

இ-ள். கன்னியில் சுக்கிரனிருக்கப் பிறந்தவன்வர்ணாசிரமமுறைதவறி நீசகன்மம் செய்பவன் மனிதர்கள் தூஷிக்கவென்பதாம். 60

29-வது சுலோகம், மகரகும்பச் சுக்கிரபலன்.

கரியோனகத்தில்கவியேயிருக்க சன்மாயுதித்தபாலன்
விரிவானபூவிலனேவோர்கள்நேசம் மிகவுண்டெனப்பகருவோம்
பரிபோலநெஞ்சமுளமாதர்சட்குப் பணியான்வசப்படாநன்
னெறியோயிலாதமடவாரிடத்து நினைவுள்ளபாலனிவனே.

இ-ள். மகரகும்பத்தில் சுக்ரனிருக்கப் பிறந்தவன் சர்வஜன பிரியனு யும் ஸ்திரீகளுக்கு வசப்படாதவனுயும் துஷ்டஸ்திரீ சேர்க்கையுடையவனு கியு மிருப்பா னென்பதாம். 61

29-வது சுலோகம். மீனச்சுக்கிரன் பலன்.

புகரோனுமுச்சங்கயம்மீதிருக்க புவிமீதுதித்தபாலன்
நகராளும்வேந்தருலகோர்துதிக்க நற்கீர்த்திபெற்றனிவனே
பகர்வானவேதமறுசாஸ்ரகாவ்யம் பலநூலுணர்ந்ததீரன்
நிகரற்றசெல்வமதிசம்பத்தோடு நிதிமிக்கபெற்றனிவனே.

இ-ள். மீனத்தில் சுக்கிரனிருக்கப் பிறந்தவன் அரசர்களாலும் சர்வ ஜனங்களாலும்பூஜிக்கப்பட்டு கீர்த்திபெற்றிருப்பான். வேதசாஸ்திரகாவிய முதலானது அறிந்து பண்டிதனுயிருப்பவன் செல்வம் சம்பத்துதனங்களை யுடையவனுகு மென்பதாம். 62

30-வது சுலோகம். மேஷச்சனிபலன்.

ஆரவில்லதிற்சவுரிநீச மடையவுலகிலுதித்தவன்
தீரமாகவுமூர்க்கமோடுமே தேசமெங்குந்திரிபவன்
கூறுவான்மிகுவஞ்சகங்களைக் கொடியன்நேசமறுப்பவன்
பாரதிற்சனிமேஷம்நின்றிடப் பகருமிந்தப்பலனதே.

இ-ள். மேஷத்தில் சனியிருக்கப் பிறந்தவன் தைரியமுள்ளவன்மூர்க்கன் அலைச்சலுள்ளவன் வஞ்சகம்பேசுபவன் கொடியன் சினேகத்தைமறுப் பவனுகவிருப்பா னென்பதாம். 63

30-வது சுலோகம். விருச்சிகச் சனிபலன்.

மந்தன்தேளதிலமருங்காலத்தில் மதலையாகவுதித்தவன்
பந்தமென்னுஞ்சிறையிருப்பவன் படுவனுமுடல்தாடனம்
சந்ததமிகச்சஞ்சலமுளான்.தயையுமீகையுமற்றுமே
வந்தபாலன்குணங்களாமென வல்லகணிதர்கள்சொன்னதே.

இ-ள். விர்ச்சிகத்தில் சனியிருக்கப் பிறந்தவன் சிறையிருப்பவன் அடி படப்பட்டவன் சதா துக்கமும் சஞ்சலமு முள்ளவன் தயவு ஈகையற்றவ னாக விருப்பா னென்பதாம். 64

30-வது சுலோகம். மிதுனம் கன்னியிற் சனிபலன்.

மங்கையாழினில்நீலனின்றிட மதலையாகவுதித்தவன்
சங்கையுஞ்சுகமானவெட்கமும் தனமும்புத்திரரற்றவன்
எங்குமேபுகழ்சிற்பசித்திர மெழுதுவான்மிகவல்லவன்
தங்குபூவதிலிக்குணங்ளென சதுர்முகனுமமைத்ததே.

இ-ள். மிதுனம் கன்னியில் சனியிருக்கப் பிறந்தவன் சங்கை சுகம் மானம் வெட்கம் தனம் புத்திரர் இவைகள் இல்லாதவன் யாவரும் விருப்ப டையக்கூடிய சிற்பமுணர்ந்து சித்திரமெழுத வல்லவன் ரக்ஷணாதிகாரியா யிருப்பவனாகு மென்பதாம். 65

31-வது சுலோகம். ரிஷபச் சனிபலன்

புல்லமீதினிற்சனியிருந்திட புவியுதித்திடுபாலனும்
செல்வமற்றவன்வேசிநேசனும் சீரிலாததரித்திரன்
இல்லம்விட்டநாரிதன்மே விட்டமுடையானாகுமே
வல்லவனதிமனையுளானென வாழுவான்புவிதன்னிலே.

இ-ள். ரிஷபத்தில் சனியிருக்கப் பிறந்தவன் அற்பதனவந்தன் பரஸ் திரீநேசன் சிறப்பில்லாதவன் தரித்திரன் விலக்கப்பட்டஸ்திரீகளிடத்தில் பக்ஷமுடையவன் அதிகமாகிய களத்திரமுள்ளவனாகவிருப்பானென்பதாம்.

31-வது சுலோகம் துலாச்சனி பலன்

உச்சனாய்சனிகோவில்நின்றிட வுலகுதித்திடுசெல்வனும்
நிச்சயத்தனவந்தனாகவும் நேரும்பட்டணஞ்சமுகமும்
மெச்சுசேனைபுங்கிராமநாட்டிலும் மேன்மையுற்றிடும்பேருக்
கிச்சையோடும்பூசிக்கப்பட்டவ னிவனுமேபிரசித்தனும்.

இ-ன். துலாத்தில் சனியிருக்கப் பிறந்தவன் தனவந்தனாகவிருப்பான் பட்டணம் சமுகம் கிராமம் நாடுகளிலுள்ளவர்களினாலும் பெரியமனிதரினு லும் பூஜிக்கப்பட்டவன்பிரசித்தம்கீர்த்தியுள்ளவனாகவிருப்பானென்பதாம்.

31-வது சுலோகம் கடகச் சனிபலன்

நீலனண்டினினின்றபோதுமே நீள்புவியதில்வந்தவன்
சாலவன்னையதற்றபாலகன் தனமிலான்கீர்கேடனும்

தாலமீதுசுமையெடுப்பவன் தந்தசுத்தியில்லாதவன்
சீலமற்றிமூர்க்கனுருவன் சீருலாமகவுள்ளனே.

இ-ள். கடகத்தில் சனியிருக்கப் பிறந்தவன் தாயில்லாதவன் தரித்திரன் சிறப்பில்லாதவன் சுமை எடுப்பவன் பற்றுலக்க மில்லாதவன் மூர்க்கன் சுகமில்லாதவன் அற்ப புத்திரர்களை யுடையவனுருமென்பதாம். 68

31-வது சுலோகம் சிங்கச்சனி பலன்

சீயமேற்சனிபகையாய்நின்றிட செல்வனாகவுதித்தவன்
தீயனுங்குணமற்றமூர்க்கனும் செம்புவான்வீண்வார்த்தைகள்
தூயநற்சுகமைந்தரற்றவன் துலங்குமிப்புவிதன்னிலே
சேயதாகவுதித்தபேர்க்குமே திசைமுகன்னமைத்திட்டதே.

இ-ள். சிங்கத்தில் சனியிருக்கப் பிறந்த தன் நற்குணமில்லாதவன் மூர்க்கன் வீண்வார்த்தை பேசுபவன் சுகமுள்ள புத்திரரில்லாதவனுகவிருப்பா னென்பதாம். 69

32-வது சுலோகம் தனுசு மீனச் சனிபலன்

நாகமீனதில்காரியன்னின்றிட சுதன்தாகவேவந்தவன்
அரசர்தன்மனைவாழுந்திருப்பவ னந்தியச்சுகமுள்ளவன்
திரமதாம்மனையாளுமக்களும் செல்வமுஞ்சுகமேற்றுமே
பரவுசேனையும்நாடுகிராமமும் பட்டணத்ததிகாரியே.

இ-ள். தனுசு மீனத்தில் சனியிருக்கப் பிறந்தவன் இராஜக்கிரகத்தில் வசித்திருப்பவன் அந்தியகாலத்தில் சௌக்கிய முள்ளவன் மனைவிமக்கள் செல்வம் சுகம் தனம் இவைகளை யுடையவன் சேனைநாடுகிராமம் பட்டணத்துக்கும் அதிபதியா யிருப்பா னென்பதாம். 70

32-வது சுலோகம் மகர கும்பச் சனிபலன்

மந்தனுகூடியதாயிருந்திட மாநிலத்திலேவந்தசேய்
அந்தமாம்பரநாரிசெல்வ மடைந்தவன்மிகுதன்பதி
சொந்தநேத்திரபார்வையற்பமாய்த் தூலமேமெலிவுள்ளவன்
விந்தையாய்நகர்சேனைகிராமங்கள் மேவுமதிபதியாவனே

இ-ள். மகரகும்பத்தில் சனியிருக்கப் பிறந்தவன் பரஸ்திரீகள் தனத்தையுடையவன் தனவந்தன் அரைப்பார்வையுள்ளவன் மெலிந்த தேகத்தையுமுடையவன் நகரம் பட்டணம் சேனைக்கிராமங்களுக்கு அதிபதியாகி யிருப்பானென்பதாம். 71

33-வது சுலோகம், வசனம்.

சந்திரன் மேஷாதி ராசியுக்த சுபாவமும் லக்னத்திற்குஞ் சொல்லுகிறார். சந்திரனுடைய சம்யோக வீக்ஷண்யத்திற்கு சமானமான பலன்களை லக்னத்திலுல் உண்டாகும் அதையுஞ் சொல்லுவார் அதெப்படியென்றால்.

மேஷத்திற்கு சந்திரசம்யோக பலனும் முன்படலத்திலும் இனிசொல்லப்போகிற விதமாக குஜாதிரவியாதிகள் திருஷ்டிபலன்களும் மேஷலக்கினத்தில் பிறந்தவர்களுக்குச் சொல்லவேண்டியது இந்தவிதமாகவே விருஷபாதி லக்னத்திற்கும் யூகிக்கவேண்டியது.

மறுபடி யெவ்விதமென்றால் லக்னத்விதியாதிகளில் தனகுடும்பாதி பாவமும் ஆகும் எதுவுண்டாகுமோ அந்தந்தபலன் அதிகம் அந்த பாவங்கள் தன்வாதி பாவங்களினாலும் பாவாதிபதிகளாலும் ஷட்பலன்களைக் கொண்டு அறியவும் அதெப்படியென்றால்,

லக்னம் பலமாகியும் லக்னாதிபதி பலமாயுமிருந்தால் சரீரபுஷ்டி யுண்டாகும் துதியம்பலமாகியும் துதியாதிபதி பலவந்தனாகியுமிருக்க தனசம்பத்துண்டாகும் திரிதியமும் திரிதியாதிபதியும் பலமாகவிருக்க அந்தப் பலன் விர்த்தியாயிருக்கும் இந்தவிதமாக மற்றபாவங்களுக்கும் தெரியத்தக்கது.

இந்த பாவாதிபதிகளிலொருவர் பலவானும் மற்றொருவர் பலவீனமாயுமிருக்க பாதிபலனாகும் இரண்டும் பலவீனமாகியிருந்தால் அந்த பாவ பலனே குறையுமென்று சொல்லவேண்டியது. இந்தவிதமாகவே சத்யாசாரி சொல்லியிருக்கிறார் என்பதாம்.

படலச்செய்யுள் தொகை.

ராசிசீலங்களென்று நவின்றிடுபடலந்தானும்
தேசிகரடிவணங்கிச் செய்யுளுமெழுபத்தொன்று
நேசமாய்வயித்திலிங்கம் நிகழ்த்தினேனீணிலத்தில்
வாசமாயிருக்கும்பேர்கள் மனமதுகளிக்கத்தானே.

பதினெட்டாவது

இராசி சீலப்படல முற்றிற்று.

---

# மங்களேஸ்வரீயம்.

பத்தொன்பதாவது

## கிரகநோக்குப்படலம்.

1-வது சுலோகம், மேஷலக்னப்பலன்

தகரிலக்கினத்தையல்லதுநிலவை தரைமகனேக்கிடவேந்தன்
இகலருபுத்திபண்டிதவனுவ னிரணியன்ராஜதுல்லியனும்
புகரவன்காணவதிகுணனுகும் புகல்சனிகாணவேசோரன்
பகலவன்காணத்தரித்திரனெனவும் பகர்வதுகணிதநூலிதுவே.

இ-ள். மேஷலக்கினத்தையாகிலும் அல்லது மேஷத்திலிருந்த சந்திரனையாகிலும் செவ்வாய்பார்க்க அரசனும் புதன்பார்க்க கல்வியில்தேர்ச்சியடைந்தவனும் குருபார்க்க ராஜதுல்லியனும் சுக்கிரன்பார்க்க சற்குணமுடையவனும் சனிபார்க்க திருடனும் சூரியன்பார்க்க தரித்திரனென்னப்படுவனுகு மென்பதாம். 1

1-வது சுலோகம், ரிஷபலக்னபலன்

விடையிலக்கினத்தையல்லாதுசந்திரனை வெள்ளியும்நோக்கிடவரசன்
சுடரவனேக்கதாசனுயிருப்பான் தூதுவன்கண்படச்சோரன்
முடவனேதனவான்சேய்தரித்திரனும் முனியவநோக்கிடவந்தோன்
அடர்புவிகாக்குமரசரில் சிரேஷ்டனுகுவனகிலமேபோற்ற.

இ-ள். இடப லக்னத்தையாகிலும் இடபத்திலிருந்த சந்திரனையாகிலும் சுக்கிரன்பார்க்க அரசனுவன் சூரியன்பார்க்க பரிசாரவேலை செய்பவனுக விருப்பான் புதன்பார்க்க திருடனும் சனிபார்த்தால் தனவந்தன் செவ்வாய்பார்க்க தரித்திரன் குருபார்க்க சர்வஜன பூசிதனும் ராஜர்களில் சிரேஷ்டமுள்ளவனுக விருப்பா னென்பதாம். 2

1-வது சுலோகம், மிதுன லக்னபலன்

மிதுனலக்கினத்தையல்லதுசந்திரனை வெள்ளியும்நோக்கிடத்திடவான்
புதனவனேக்கபூபதியாகும் பொன்னவன்காணபண்டிதனும்
கதிரவன்மிடியன்காரியும்நோக்க கருமமும்பஞ்சநூலதனுல்
உதிரனேகத்தியாயுதம்யாவு முற்றிடும்வர்த்தகனிவனே.

இ-ள். மிதுன லக்கினத்தையாகிலும் மிதுனச்சந்திரனையாகிலும் சுக்கிரன் பார்க்க தைரியமுள்ளவன் பயமில்லாதவனும். புதன்பார்க்க பூபதியென்னும் அரசனும் குருபார்க்க கல்வியில்தேர்ந்தவனும் சூரியன்பார்க்க தரித்திரனும் சனிபார்க்க பஞ்சுவியாபாரம் நூல் நெசவு தொழில் முதலியதைச் செய்பவனும் செவ்வாயால் பார்க்க கத்தி முதலான ஆயுதங்கள் வைத்து வியாபாரம் செய்பவனுக மென்பதாம். 3

1-வது சுலோகம் கடகலக்ன பலன்

நண்டிலக்கினத்தையல்லது சந்திரனைநற்குருநோக்கிடப்புலவன்
சண்டனும்பார்க்கநேத்திரரோகி தரைமகன்யுத்தமேபுரிவோன்
பண்டிதன்காணபுலவனேயாவான் பார்க்கவன்பூபதியாகும்
அண்டியசனியேலாயுதங்கொண்டே யடைந்திடுகருமஞ்செய்பவனே.

இ-ள். கடக லக்கினத்தையாகிலும் கடகச் சந்திரனையாகிலும் குரு பார்க்க கல்வியில் தேர்ச்சியடைந்து கவிபாடி பிரசங்கஞ்செய்யும் புலவனும் சூரியன் பார்க்க நேத்திரங்களிலே ரோகமுள்ளவனும் செவ்வாய் பார்க்க யுத்தம் செய்வதில் அதிக சமர்த்தன் புதன் பார்க்கக் கல்வியில்தேர்ந்து சுயக்கவிபாடும் புலவனும் சுக்கிரன் பார்க்கப் பூபதியென்னும் அரசனுவான் சனிபார்க்க ஆயுதங்களினுலே ஜீவிப்பான் என்பதாம். 4

2-வது சுலோகம், சிங்கலக்கினபலன்

அரியிலக்கினத்தையல்லது மதியையாராலுநோக்கநரேந்திரன்
அறிஞனேகாணசோதிசாஸ்திரி யாதவன்நோக்கப்பூபதியாம்
கரியவன்காணநாவிதனுகுங் கனகனே தனபதியாவான்
சரியுரைவெள்ளிநோக்கிடவந்தான் சற்குணனரபதியாமே.

இ-ள். சிம்மலக்கினத்தையாகிலும் சிம்மச் சந்திரனையாகிலும் செவ்வாய் பார்க்க நரேந்திரனென்னும் அரசனுகும் புதன்பார்க்க சோதிடசாஸ்திரமுணர்ந்தவன் சூரியன்பார்க்க பூபதியென்னும் அரசனுகும் சனிபார்க்க நாவிதனென்னும் அம்பட்டனுகும் குரு பார்க்க தனபதியென்னும் பிரபுவாகும் சுக்கிரன்பார்க்க சற்குணமுடைய அரசனுகு மென்பதாம். 5

2-வது சுலோகம், கன்னி லக்னபலன்

கன்னியையலதுபசுங்கதிரவனை கணக்கனேகாணப்பூபதியாம்
மன்னவனுக்கசேனைக்குத் தலைவன்மதமுறுபளிங்குமேகாண
தன்னிடசகலகாரியந்தனிலும் சூட்சுமவறிவுடையவனும்
சுன்னரிகுசனும்நோக்கிடவந்தான் ஸ்தோரை[illegible]வசமுளனுமே

இ-ள். கன்னியா லக்கினத்தையாகிலும் கன்னியிலிருந்த சந்திரனையாகிலும் புதன்பார்க்க அரசர்கள் படைகளுக்குத் தலைவனுகும் சுக்கிரன் பார்க்க சகல காரியங்களிலும் சூட்சுமமான புத்தியுடையவன் சூரியன் செவ்வாய் சனி இவர்களிலே யார்பார்த்தாலும் ஸ்திரீகளிடத்தில் வசப்பட்டு அவர்களாதரிக்க ஜீவனம் செய்பவனுகுமென்பதாம். 6

2-வது சுலோகம் துலாலக்ன பலன்

நிறைதனையலதுபசுங்கதிரவனை நீள்புதன்நோக்கப்பூபதியாம்
இறைவனும்நோக்கத்தங்கம்பொன்செழுழிலாமெழில்புகர்நோக்க வியாபாரி
கரியவனிரவிசேயவன்காண காரியம்பார்த்திடான்றனக்கு
குறைவறப்பிறர்காரியமதைப்பார்க்குங் குணமதுள்ளவனிவனே.

இ-ள். துலா லக்கினத்தை யாகிலும் துலாச் சந்திரனையாகிலும் குரு பார்க்க தங்கம் பொன் வேலை செய்யும் கம்மாள னென்னப்படும் சுக்கிரன் பார்க்க வியாபாரியாகும் புதன் பார்க்க பூபதி யென்னப்பட்ட அரசனுகும் சூரியன் சனி செவ்வாய் இவர்களி லொருவர் பார்க்க தன் காரியம் பார்க்காமல் பிறர் காரியங்களைக் குறைவில்லாது பார்த்துவருபவன் இந்த குணமுடையவனுகு மென்பதாம். 7

2-வது சுலோகம் விருச்சிக லக்னபலன்,

தொடர்மணியதனையல்லதம்புலியை சுரகுருநோக்கிடவலியாம்
இடங்கொளும்வெள்ளிபார்க்கில்வண்ணுனும் திகழ்சனிகாணவேதரித்ரன்
அடர்குசனுக்கபூபதியாகு மறிஞனேதத்துபுத்திரனும்
[illegible]தக்ஷதயிருவராமென் றியம்பிடநூல்வழியாமே.

இ-ள். விர்ச்சிக லக்னத்தையாகிலும் விர்ச்சிகத்திலிருந்த சந்திரனையாகிலும் குரு பார்க்க அலியாகும் சுக்கிரன் பார்க்க வண்ணானாகும் சனி பார்க்கத் தரித்திரன் செவ்வாய் பார்க்க அரசன் புதன்பார்க்க ஸ்திரீ குழந்தைகளுக்கு தகப்பனென்றும் இரண்டு தகப்பனுள்ளவனென்றும் சொல்லப்படு மென்பதாம். 8

3-வது சுலோகம் தனுசு லக்னபலன்,

கார்முதமதனையல்லதிராக்கதிரை கனகனுநோக்கநரேந்திரன்
பார்க்கவனேக்கசனமனதக்காக்கும் பகர்விசுவாசனுந்தலைவன்
ஏர்க்குமால்காணச்சுயசுனப்பிரிய னென்னுஞாதிகள்பலவுளனும்
பார்மகன்ரவிசுன்பார்த்திடடம்பன் பலருக்கும்கெடுதிசெய்பவனே.

இ-ள். தனுசு லக்கினத்தை யாகிலும் தனுசு சந்திரனையாகிலும்புதன் பார்க்க சுயஜனப் பிரியனாய் பந்துக்கள் தாயாதிவர்க்கங்கள் மிகுதியாக வுள்ளத்தில் தலைவனாகும் சுக்கிரன் பார்க்க ஜனங்களை விசுவாசிப்பன் தலைவனாகவிருப்பான் குருபார்க்க நரேந்திரனென்னும் அரசன் சூரியன் செவ்வாய் சனி இவர்களில் யார்பார்த்தாலும் டம்பன் தலைவன் அதிகாரமுள்ளவன் பிறருக்குக் கெடுதி செய்பவன் சமர்த்துள்ளவனு மென்பதாம். 9

3-வது சுலோகம் மகரலக்னபலன்,

மகரலக்னத்தைமதியைமால் பார்க்கில்மன்னவர்தமக்குமன்னவனும்
பகரவன்காணவித்துவாமிசனும் பூமகன்பார்த்திடவரசன்
பகலவன்காணமிடிபடுடவனும் பங்குமேநோக்கிடத்தனவான்
சகமுறுபொன்னும்பார்க்கநரேந்திரன் தூயநல்லுலகுகாப்பவனே.

இ-ள். மகர லக்கினத்தையாகிலும் மகரச் சந்திரனையாகிலும் புதன் பார்க்க ராஜாக்களுக்கு ராசன் அதாவது சிற்றரசர்கள் பகுதி கட்டவும் வணங்கவு முள்ளவன் சக்கிரவர்த்தியாம் சுக்கிரன் காண வித்துவானாகும் செவ்வாய் பார்க்க அரசன் சூரியன் பார்க்க தரித்திரமுள்ளவனும் சனிபார்க்க தனவந்தன் குருபார்க்க நரேந்திரனென்னும் அரசன் பரிசுத்தமுள்ளவன் நகரத்தை காப்பவனாகும் என்பதாம். 10

3-வது சுலோகம் கும்பலக்னபலன்

கலசலக்கினத்தையல்லது நிலவைக்கணக்கனுநோக்கப்பூபதியாம்
நலமுறுபொன்னன்கண்ணிடில் காணநரபதிசமமுளனும்
குலவியவெள்ளிகோதையர்க்கன்பன் குணவதிபரஸ்திரீலோலன்
நிலமகன்ரவிசுன்னோக்குறநீச நேரிழைசங்கமுள்ளவனே.

இ-ள், கும்ப லக்கினத்தையாகிலும் கும்பச்சந்திரனையாகிலும் புதன் பார்க்க பூபதி யென்னப்பட்ட அரசனாகும் குருபார்க்க நரபதி யென்னும் ராசர்களுக்குச் சமமுள்ளவன் சுக்ரன் பார்க்க ஸ்திரீகளுக்கு அன்புள்ள குணமுள்ளவன் பரஸ்திரீகள் சம்போகமுள்ளவன் சூரியன் செவ்வாய் [illegible]

களிலொருவர் பார்க்க நீசஸ்திரீ சம்போகம் செய்பவனாக விருப்பான் என்பதாம். 11

3-வது சுலோகம், மீனலக்ன பலன்.

மீனலக்கினத்தையல்லது மதியைமேதையேநோக்கிடமூடன்
வானவர்குருவும்நோக்கமுற்றிடவே வல்லவன்நரபதியாகும்
தீனனும்புகரோன்னோக்கிடுபோது செப்புவான்கவிகளுமிக்க
பானுசேய்சனியும்நோக்கிடிலவனும் பாபகர்மந்தனிற்சிறந்தோன்.

இ-ள், மீனலக்கினத்தையாகிலும் மீனச்சந்திரனை யாகிலும் புதன் பார்க்கமூடன் ஞானமில்லாதவனும் குரு பார்க்க வல்லமைகளுடையவனாகும் அரசனும் சுக்கிரன் பார்க்க கல்வியில் தேர்ச்சியடைந்து சுயம்பாடவல்லவனாகும் புலவன் பண்டிதனாகும் சூரியன் செவ்வாய் சனி இவர்களிலொருவர் பார்க்க பாபகர்மம் செய்யுங் குணத்தனாகு மென்பதாம். 12

4-வது சுலோகம், ஓரை திரேக்காணம் துவாதசாம்சபலன்.

ஓரைதிரேகாணம்துவாதசாம்சையிலே வுடுபதியமர்ந்திடவறுகோள்
சீருடன்னோக்கும்பலனதுமிகவும் தெளிவுறக்கூறுவேனறிவாய்
ஓரையாதிபனின்ராசியார்த்தத்தி லுற்றிடுங்கோள்களேமதியை
தேரியேநோக்காதிருந்திடும்போது திங்களும்சுபகரனுமே.

இ-ள். ஓரை திரேகாணம் துவாதசாம்சம் இவைகளிலிருந்த சந்திரனைச் சூரியன் செவ்வாய் புதன் குரு சுக்ரன் சனி இவர்கள் நோக்கிடும்பலனை விபரமாகச்சொல்வோம் ஓரையாதிபதியுடையராசி அர்த்தத்தில்அடைந்த கிரகங்களால் அந்த ஓரையிலடைந்திருந்த சந்திரனை ஆறுகிரகங்களில் ஒருவரும் பார்க்காதிருந்தால் சந்திரன் சுபகரனுவனா மென்பதாம். 13

4-வது சுலோகம், ஓரைதிஷ்டி பலன்

எந்தராசியிலுமிரவியோரையிலே விருந்திடுமெதிதனைமற்றோர்
சொந்தமாயிரவியோரையிலிருந்தோர் தூய்மதிதனைகாணில்சுபனும்
சந்திரன்தனதுவோரையிலமரச் சாற்றுமவ்வோரையிலுள்ளோர்
இந்துவைநோக்கசுபகரனுவானென்றுமே யறிந்திடாயினியே.

இ-ள்- எந்த ராசியிலாவது சூரியன் ஓரையிலிருந்த கிரகம் பார்க்கப்பட்டால் சுபகரனுவான் சந்திரன் ஓரையிலிருந்த சந்திரனை எந்த ராசியானாலும் சந்திரன் ஓரையில் இருந்த கிரகத்தினாலே பார்க்கப்படுமானால்சுபகரனுவா னென்பதாம். 14

4-வது சுலோகம், ஓரை திஷ்டிபலன்

தினகரனோரைதனிலுறுமதியைச் செழுமதியோரையினின்றோர்
கனமுடன்பார்க்கமதியனும்சுபனும் கலைசுயவோரையிலமர
அனலவனோரையமர்ந்திடுகோள்க ளம்புலிதன்னையேநோக்க
இனமிலாவசுபனாகுவானென்றே யியற்றுவயுலகுளோர்தமக்கே.

இ-ள். சூரியன் ஓரையிலிருந்த சந்திரனைசந்திரன் ஓரையிலிருந்தகிரகங்களினாலே பார்க்கப்பட்டால் சந்திரன் சுபனாகும் இன்னும் சந்திரன் ஓரையிலிருந்த சந்திரனைச் சூரியன் ஓரையிலிருந்த கிரகத்தினாலே பார்க்கப்பட்டால் சந்திரன் அசுபனாகுவா னென்பதாம். 15

அலகிரையமதியைசென்மலக்கினத்திலமர்ந்திடுகோள்கள்சென்மத்தை
பலமுடன்னோக்கசுபகரமாகும் பின்னும்மற்றோர்காணவசுபம்
நிலவதுவுரையந்திரேகாணத்ததிபன் நிலவையுநோக்கிடசுபனாம்
நலமுளநவமும்துவாதிரிம்சாம்சம் நன்மதிதனைக்காணச்சுபரே.

இ-ள். சூரிய சந்திர ஓரைகளில் எந்த ஓரை உதயமாகுமோ அந்த ஓரையிலிருந்த கிரகங்களால் லக்னத்தைப்பார்க்கப்பட்டால் சுபகிரனாவன் மற்ற ஓரையிலிருந்தோர் ஜென்மலக்னத்தைப்பார்க்க அசுபகரனாம் சந்திரனிருந்த திரேகாணத் ததிபதியானவன் சந்திரனைப்பார்க்க சந்திரன்சுபகரனாவான். நவாங்கிசம் துவாதசாங்கிசம் திரிம்சாம்சத்தின் அதிபதி அவர்களால் சந்திரனைப் பார்த்தால் சந்திரன் சுபகரன் அந்தவிதமாக லக்கினத்திற்கு யூகித்துச் சொல்லவும் உதாரணம் லகுசாதகம் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 16

4-வது சுலோகம், சுபாசுபர்

நல்லகோள்தம்மைதிரேகாணத்ததிபன் னாடியேநோக்கவுத்தமந்தான்
அல்லதீயோரைதிரேகாணபதியு மன்பொடுகாணமத்திபமாம்
சொல்லுநட்பாக்ஷியுற்றகோனோக்க சுபகரன்பகையுளார்காண
வல்லவனல்லமசுபனுமிலக்கினம் வருபலனிவ்விதமுறையே.

இ-ள். சுபக்கிரகங்களுக்கு திரேகாணத் ததிபதியினால் பார்க்கப்பட்டால் உத்தமமாகும் பாபக் கிரகங்களுக்கு திரேகாணதிபர்களால் பார்க்கப்பட்டால் மத்திபமாம் நட்பு ஆக்ஷி உச்சக் கோள்களால் பார்க்கப்பட்டால் சந்திரன் சுபகரனாவான் பகைபெற்ற கிரகம் சந்திரனைப் பார்க்க சந்திரன் அசுபனும் லக்கினத்தையும் நட்பாக்ஷியுள்ள கோள்பார்க்க உத்தமம் பகைநீசம் பெற்றோர் பார்க்க மத்திபமாகு மென்பதாம். 17

4-வது சுலோகம். நவாம்ச பலன்

மேடமேமுதலாய்மீனமேகடையாய் விளங்கிடுராசியீராறில்
கூடியவமிசம்தனிலுறைமதிக்குக் கூறியபலனதுபோலே
நாடியேநோக்கமுற்றகோள்பலனு நாளரசனுக்கெனநவில
தேடியேசென்மதுவாதசமதற்கும் செப்பிடுவிதியதாமறியே.

இ-ள். மேஷ முதலாக மீனம் அந்தமான பன்னிரண்டுராசி அம்சையிலிருந்த சந்திரனுக்குச் சொன்னபலன் போலவே எந்த திஷ்டி பலன் அடைவானோ அந்தப் பலன் சந்திரனுக்குச் சொல்லப்படும் ஜென்ம லக்னத்திற்கு துவாத சாம்சத்திற்குச் சொல்லுவ தென்பதாம். 18

5-வது சுலோகம். மேஷவிருச்சிக நவாமிச பலன்.

மங்கலனம்சைமேவிர்ச்சிகத்தில் மதியுறவந்தமாமதியை
செங்கதிர்நோக்ககரைாகூதிப்பான் சேய்கொலைபுரிந்திடுநெஞ்சன்
துங்கமால்காணச்சமர்புரிபவனும் சுரகுருநோக்கநரேந்திரன்
சுங்கனேபார்க்கத்தனபதியாவன் சின்னெனில்கலகியாயுரையே.

இ-ள். குஜன் நவாங்கிசையாகிய மேடத்திலாகிலும் விர்ச்சிகத்திலாகிலும் சந்திரனிருக்க அந்தச் சந்திரனை சூரியன் பார்க்க பிராமண இம்சை செய்யக்கூடிய புத்தியுள்ளவனும் புதன் பார்க்க யுத்தம் செய்வதில் அதிக சமர்த்தன் குருபார்க்க நரேந்திரனென்னும் அரசனும் சுக்ரன் பார்க்க தனவந்தனும் அதாவது பிரபுவாகும் சனிபார்க்க கலகஞ் செய்பவனாக விருப்பானென்பதாம். 19

5-வது சுலோகம் ரிஷபதுலாம் நவாமிசை பலன்

துலைவிடையம்சந்தனிலுறு நிலவைசூரியன்னோக்கிடமூர்க்கன்
நிலமகன்பார்க்கவன்னியமாதர்கினைவது மிகவுமுள்ளவனும்
புவவன்பொன்காணக்கவியுடன்காவ்யம் புகன்றிடுவித்துவானும்
நலமுளபுகரோன்சுகப்பிரியனுமாம் நடையிலான்பரஸ்திரீயடைவான்.

இ-ள். சுக்கிரன் அம்சமாகிய துலாத்திலும் ரிஷபத்திலுமிருந்த சந்திரனை சூரியன் பார்க்க மூர்க்க குணமுள்ளவனாகும், செவ்வாய்பார்க்க அன்னியதாரத்தின்மேல் அபேட்சை யுடையவன் புதன் பார்த்தாலும் குருபார்த்தாலும் சுயக்கவி செய்பவன் காவியங்களை யுண்டாக்குவான் வித்துவானென்று சொல்லப்படுமோம். சுக்கிரன் பார்க்க சுகத்திலே இச்சையுடையவன் சனிபார்க்க பரஸ்திரீகளை யடைவா னென்பதாம். 20

6-வது சுலோகம் மிதுன கன்னி நவாமிசபலன்.

மாதுயாழம்சந்தனிலுடுபதியு மமர்ந்திடுபோதிலம்மதியை
ஆதவன்னோக்கமல்யுத்த சமர்த்தனுராலேதிருடனுயிருப்பான்
தூதுவன்காணக்கவீஸ்வரனுவன் சுரகுருமந்திரிபிரதானி
கோதறுபுகரோன்கீதமதறிந்தான் கொம்பிசிற்பத்திலேநிபுணன்.

இ-ள். புதன் அம்சையாகிய மிதுனங் கன்னி நவாங்கிசையிலிருந்த சந்திரனைச் சூரியன் பார்க்க மல்யுத்தம் குத்துச்சண்டை முதலானது செய்யச் சமர்த்தன் செவ்வாய்ப் பார்க்க திருடனாக விருப்பான் புதன் பார்க்க கவீஸ்வரனாகும் குருபார்க்க மந்திரி பிரதானியாகும் சுக்கிரன் பார்க்க சங்கீத முதலானவைகளும் நிர்த்தனம் நடன முதலானவைகளு மறிந்தவன் சனிபார்க்க சிற்பகாரியங்களில் தேர்ச்சியும் புத்தி கூர்மையு முள்ளவனாக விருப்பா னென்பதாம். 21

6-வது சுலோகம் கடகநவாமிசை பலன்.

தன்னவாம்சையிலேயடைந்திடுமதியை சண்டன்னோக்கிடமெலிந்தவனு
மன்னுசேய்பார்க்கவற்பமாந் தனவான்மாலெகில்தவமுளான்லோபி

பொன்பிரதானிதபசிரேஷ்டனுமாம் புகரரிவையர்வசப்படுவோன்
சன்னவன்காரியங்களிலே சூட்சுமனிச்சையுள்ளவனே.

இ-ள். சந்திரனுடைய வீடாகிய கடக நவாம்சை தனிலே யிருந்த சந்திரனைச் சூரியன் பார்க்க மெலிந்த தேகமுள்ளவன் செவ்வாய் பார்க்க அற்பமான தனவந்தன் புதன் பார்க்க தபசியாகும் ஆகிலும் லோபியாம் குருபார்க்க தபசிரேஷ்டனும் பிரதானியாகும் சுக்கிரன்பார்க்க ஸ்திரீகள் வசப்பட்டு அவர்கள் போஷணைக் குட்பட்டிருப்பவனும் சனிபார்க்க எந்த காரியங்களிலும் சூட்சுமமான புத்தியும் அபேட்சையு முடையவனுகுமென்பதாம். 22

7-வது சுலோகம், சிங்க நவாம்சைபலன்,

சிங்கநவாம்சதனிலுறுமதியை தினகரன்நோக்கிடகோபி
மங்கலன்காணவரசரிநேசன் மால்நிக்ஷேபத்திறற்றனவான்
துங்கபொன்காணதினமேற்று தூயநல்பிரபுவாயிருப்பான்
சங்கனேகாணபுத்திரவினன் சுன்மிகவம்சையுள்ளவனே

இ-ள். சிங்க நவாம்சையிலிருந்த சந்திரனை சூரியன் பார்க்க கோபமுள்ளவன் செவ்வாய் பார்க்க ராஜனுக்கு பிரியமுள்ளவனாக விருப்பான் புதன் பார்க்க பூமியிலிருக்கப்பட்ட திரவியத்தையெடுத்து அதனாலே தனவந்தனாகவிருப்பான் குருபார்க்க தனவந்தன் பிரபுவாகும் சுக்கிரன்பார்க்க புத்திரனில்லாதவன் சனிபார்க்க அத்தியந்த இம்சையை உடையவனாக விருப்பன் என்பதாம். 23

7-வது சுலோகம், தனுசு மீனம் நவாம்சைபலன்,

மீனவில்லம்சம்தனிலுறுமதியை வேந்தனுநோக்கிடவமைச்சன்
தீனனும்செவ்வாய்நோக்கிடசமரில்தெரிவிக்கும்தன்மையதுடையா
பானுமேபார்க்கவலிபிரக்யாதி பண்டிதனுஸ்யமதறிந்தோன் [ன்
ஊனகண்புகரோன்காமமேயற்றோனுயர் சனிதருமவானுமே,

இ-ள். மீனராசி நவாம்சமும் தனுராசி நவாம்சத்தில் இருந்த சந்திரனை குருபார்க்க மந்திரியாகும் செவ்வாய் பார்க்க யுத்த காலத்தில் நெருங்கி சேதி சொல்லப்பட்டவனும் சூரியன் பார்க்க சரீரபலமும் பிரக்யாதியுமுள்ளவன் புதன் பார்க்க ஆஸ்யமறிந்தவனும் சுக்கிரன் பார்க்க காமமற்றவன் நபுஞ்சகனை போலுள்ளவனாகுமென்பதாம், சனிபார்க்க தருமஞ்செய்பவனாக விருப்பா னென்பதாம், 24

8-வது சுலோகம், மகர கும்ப நவாம்சைபலன்,

மகரகும்பத்தினம்சையிலுற்ற மதிதனைநோக்குவர்பலன்கேள்
பகலவன்னோக்கவற்பபுத்திரவான் பார்மகன்தனபதியாகும்
செகம்புகழரசன்குலமுறைதவரான்செய்யமால்கருமமதுடையான்
புகர்கெடுமாதின்மேலும்மே யிச்சைபங்குமேரோஷவான்புகலே

இ-ள். மகரகும்ப நவாமிசையி லிருந்த சந்திரனைச் சூரியன் பார்க்க அற்பமான புத்திரருடையவன் செவ்வாய் பார்க்க தனவந்தன் அப்படிதன மிருந்தும் துக்கத்தை யடைந்தவனாக விருப்பானும் குருபார்க்க குலாசார கீர்த்தியங்கள் தவராது நடப்பவன், புதன்பார்க்க கருவமுடையவனும் சுக்கிரன் பார்க்க துஷ்ட ஸ்திரீகளிடத்தின் மேலிச்சை யுள்ளவன் சனிபா ர்க்க ரோஷமுள்ளவனாகு மென்பதாம். 25

### 9-வது சுலோகம், நவாமிசை திருஷ்டி விசேஷம்

இந்தநல்விதமாசென்மலக்கினத்திற் கேற்றநவாமிசமதனில்
சொந்தமாயமர்ந்தகோளதின்னேக்கம் சுகமுறும்பலனதுமிதுவாம்
சந்திரன்கடகநவாங்கிசமுற்றால் சசியதின்னேக்கமும்தீதாம்
அந்தமாய்பலன்களுரைத்திடுவிதத்தை யறிந்துநீயூகமாய்க்கூறே.

இ-ள். இந்த விதமாகவே ஜென்ம லக்னத்திற்கும் நவாங்கிசத்திற்கும் இந்த பலனைச் சொல்லவேண்டியதாம். சந்திரன் தனது நவாங்கிசையான கடகராசி நவாங்கிசை யடைந்த சந்திரன் நோக்கம் சுபமாகும் மற்ற ராசி நவாங்கிசையடைந்தசந்திரநோக்கம் அசுபமென்றுபலன்சொல்லும்போது யூகமாய்க் கூட்டிச் சொல்லுவதா மென்பதாம். 26

### 8-வது சுலோகம், திஷ்டி விசேஷம்

இலக்கினமதனையிரவிசந்திரனு லேற்றிடுபார்வையின்பலனை
நலமுடன்முன்னற்கூறியவிதமே நாட்டுவாயமிசலக்கினத்தும்
பலமுறுமமிசைதனிலுறுஞ் சுடரைபிறையவனேக்கிடும்பலன்கள்
நிலமதிலுள்ளோரறிந்திடுவிதங்கள் நிகழ்த்தினேன்கணிதமறிந்தே.

இ-ள். லக்கினத்தைச் சூரியன் சந்திரன் முதலான கிரகங்களால் பார்வை யடைந்தாலும் முன்னாலே சொன்னவிதமாய் நோக்கும் பலனைச் சொல்லவேண்டியது அதெப்படி என்றால் ஒவ்வொரு ராசிகளிலும் எந்த நவாமிசையிலாவதிருந்த சூரியனை சந்திரன் நோக்கும் பலன்களை விபரமா கச் சொல்லவேண்டியதாம் சூரியன் திருஷ்டியால் சந்திரனுக்கு சொல்லப் பட்டதோ அதே சந்திர திருஷ்டியால் சூரியனுக்குச் சொல்லவேண்டிய தென்பதாம். 27

### 8-வது சுலோகம், அமிசை நோக்குபலன்

ஆடுதேளமிசந்தனிலுறைகதிரை யம்புலிநோக்கவாறெழுத்தன்
பாடியாழ்சேடியதிலுடும்பகலை பனிமதிகாணுமல்யுத்தன்
தேடுகோல்விடையிலமர்சுடரவனைத் திங்களுநோக்கிடமூர்க்கன்
காடுவாழ்சிங்கமிசைரவிதன்னை களங்கனுநோக்கிடக்கோபி.

இ-ள். மேஷவிருச்சிக நவாமிசையிலிருந்த சூரியன் சந்திரனால் பார்க் கப்பட்டால் ஜாதகன் ஆறெழுத்துள்ளவன் ரிஷப துலா நவாங்கிசையிலி

ருந்த சூரியன் சந்திரனால் பார்க்கப்பட்டால் ஜாதகன் மூர்க்கனாவான் மிதுன கன்யா நவாங்கிசையிலிருந்த சூரியன் சந்திரனால்பார்க்கப்பட்டால் மல்யுத்தஞ் செய்பவனும் சிங்க நவாங்கிசையிலிருந்த சூரியன் சந்திரனால் பார்க்கப்பட்டால் அந்த ஜாதகன் கோபமுள்ளவனாகு மென்பதாம். 28

8-வது சுலோகம், அமிசைநோக்குபலன்

கெண்டைவில்கதிரைமதியவன்னோக்க நேடிலாகீர்த்தியதுடையான்
நண்டமிசத்திலுற்றிடுஞ்சூடரை நன்மதிகுஞ்சரதேகன்
அண்டியகுடமானமர்பசலவனை யம்புலியற்பபுத்திரவான்
கண்டனமிசந்தனிலுறநிலவோன் தானுமேநோக்கமுன்பலனே

இ-ள். தனுசு மீன நவாங்கிச மிருந்த சூரியனைச் சந்திரனால் பார்க்கப்படுமானால் கீர்த்தியுடையவன் கடக நவாங்கிசையிலிருந்த சூரியனைச்சந்திரனால் பார்க்கப்படுமானால் யானைபோல தேகமுடையவன் மகரகும்ப நவாங்கிசையிலிருந்த சூரியனைச் சந்திரனால் பார்க்கப்பட்டால் அற்பபுத்திரனுடையவனும் இந்தவிதமாக சூரியனைச் சந்திரன் நோக்கின பலனென்று சொல்லவேண்டிய தென்பதாம். 29

9-வது சுலோகம், திருஷ்டி பலவிசேஷம்

சந்திரன்வர்க்கவுத்தமவமிசைதானுமே யடைந்திடுபலன்கள்
விந்தையாய்மிகவுவிசேஷம தாகும்வெண்மதிசுயநவாங்கிசையில்
வந்திடசுபமாம்பலனதுவாகுமதிபர நவாங்கிசையமர்ந்தால்
அந்தமாய்சுபமும்அசுபமுங்கூடு மாமெனவறிந்திடுவாயே.

இ-ள். சந்திரன் வர்க்கோத்தம நவாங்கிசையிலிருக்க கிரக திருஷ்டி பலன் சுபப்பலன்கள் மிகவும் விசேஷமாகும் சந்திரன் கடகநவாங்கிசையிலிருக்க சுபமாகும் சந்திரன் பரநவாங்கிசையி லிருக்க சுபமும் அசுபமும் சொல்லப்படும் சுயநவாமிசையிலிருந்த சந்திரனுக்கு கிரக திருஷ்டியால் அசுபம் சொல்லப்பட்டாலும் மத்திமமாம் வர்க்கோத்தமம் பெற்ற சந்திரனுக்குச் சொல்லப்பட்ட அசுபப்பலன் சொற்பமாகு மென்பதாம். 30

9-வது சுலோகம், திருஷ்டி விசேஷபலன்

மதியவனுற்றநவர்ங்கிசாதிபனும் வலியதாயுச்சநட்பாக்ஷி
பதிதனிலுற்றால்முன்னமே யுரைத்தபலனதுசரியெனலாகும்
மதியுரைதலத்தோன்நீசமும்பகையு மறைந்திடுபோதிலும்பலனே
அதிகமாய்க்கூறவற்பமாயுரைக்கு மடைவதுமிவ்விதமாமே.

இ-ள். சந்திரனிருந்த அமிசாதிபதி நட்பாக்ஷி யுச்சமாயிருந்தால் இதுவரையில் சொன்னபலன் சரியாகும் சந்திரனிருந்த நவாம்சாதிபதி பகை நீசம் அஸ்தமானமென்னு மறைவிடத்திலிருக்கபலன்கள் அதிகமாகவில்லை அற்ப பலன்களென்று திடமாகச் சொல்லவேண்டிய தென்பதாம். 31

9-வது சுலோகம், திருஷ்டி விசேஷபலன்

ஓரைதிரேகாணம்துவாதசவம்ச முறைந்திடுமதிபதிபலனை
தேரியேயுரைக்கும்விதமதையறிந்து திடமுடன்சொல்வதுயூகம்
சீருளலக்னம்சந்திரனமரும் செப்புராசியினதிபதியும் [போம்
சேருநல்லிடத்தின்கோள்பிலனதையும் திறமுடனறிந்துமே யுரைப்

இ-ள். ஓரை திரேகாணம் துவாதசாம்சங்களில் சந்திரனிருந்த நிலைமைக்கண்டு யூகித்துச் சொல்லவேண்டியதாம், லக்னத்திற்கும்சந்திர லக்கினத்துக்கும் சூரிய திருஷ்டிப்பலனைச் சொல்லாதபடியால்நவாங்கிசதிஷ்டிபலன் எதுவோ அதையே சொல்லவேண்டிய தென்பதாம். 32

படலச்செய்யுள் தொகை.

ஜென்மலக்கினத்தைதிங்களைக்கோள்கள் திஷ்டியாலுறுபடலத்தை
சொன்னயத்துடனேமூலமுமுரையும் சுத்தமாய்தமிழுதந்னால்
நன்மொழியாகவயித்தியலிங்கம் நவின்றனன்குருவடிபணிந்து
உன்னிதசெய்யுள்முப்பத்திரண்டாக வுரைத்தனனவனியோர்தமக்கே.

பத்தொன்பதாவது

கிரகநோக்குப்படல முற்றிற்று.

---

# மங்களேஸ்வரீயம்.

இருபதாவது

## பாவபலப்படலம்.

---

1-வது சுலோகம். லக்ன சூரியபலன்.

கமலத்திறைதனைகதிரி லங்கினத்தினிற்கத்
தமகுணன்காரியத்தில் தன்விழிகுறைந்தபார்வை
சமரதுபுரிவான்றீரன் தயவிலாநெஞ்சமுள்ளான்
குமரனின்குணமிதென்றே கூறினேமிரவியாலே.

இ-ள். சூரியன் செனமலக்கினத்திலிருந்தால் வேலைகளில் ஆலஸ்யமும்சோம்பலும் உள்ளவன் குறைந்த பார்வையுள்ளவன் யுத்தப்பிரியன் இதக்கமில்லாத நெஞ்சமுள்ளவனாக விருப்பா னென்பதாம். 1

1-வது சுலோகம். லக்ன சூரியபலன்.

இரவிதான்விடையாழ்கன்னி யேற்றதேள்வில்மான்கும்பம்
பரவுமீன்தானேலக்னம் பற்றிடப்பாரின்மீது

திரமுடனுதித்தபேர்க்கு செப்பிடும்பலனீதென்று
சரிவரயானுரைத்தேன் தமிழினுலறிந்திடாயே.

இ-ள். சூரியன் ரிஷபம் மிதுனம் கன்னி விருச்சிகம்தனுசு மகரம்கும்பம் மீனம் இந்த எட்டு இராசிகளிலொன்று சென்மலக்னமாக அதில்சூரியனிருக்க முன் கவியில் சொன்னபலன் மற்ற இராசியில் சூரிய னிருந்தால் அதற்கு வேறு பலனைச் சொல்வோ மென்பதாம். 2

1-வது சுலோகம். லக்ன சூரியபலன்.

தங்கிடுமேடச்சூரிய தகரதுசென்மமாக
இங்கிதத்துடனேவந்தா னெழிற்றனமிகுத்தானுகி
மங்கலாம்பார்வையோடு மாலைகண்ணுடையனுகி
பொங்கமாய்வாழ்வனென்று பூவுளோர்தமக்குக்கூறே.

இ-ள். சூரியன் மேஷத்திலிருக்க அதுவேசென்மலக்கினமாகியிருக்க தனவந்தனும் அற்ப பார்வையும் மாலைக்கண்ணு முடையவனுக விருப்பானென்பதாம். 3

1-வது சுலோகம், லக்ன சூரியபலன்.

கூறிடுமிரவியாக்ஷி ருழவியுஞ்சிங்கந்தோன்ற
மாறிடுமாலைக்கண்ணனுய் வசனிப்போம்சாதகர்க்கு
தேரியேகடகந்தோன்ற தினகரன்சென்மம்நிற்க
சேரும்பூவிழுந்தகண்ணுய் செல்வனுமிருப்பானுமே.

இ-ள். சூரியன் சிங்கத்திலிருக்க அதுவே சென்ம லக்கினமானல் மாலைக்கண்ணுள்ளவனுக விருப்பான் கடகம் சென்ம லக்கினமாய் அதில் சூரியனிருக்கில் பூவிழுந்த கண்ணையுடையவனுக விருப்பா னென்பதாம்.

1-வது சுலோகம். லக்ன சூரியபலன்.

இருந்திடநிறையிற்சூரி னெழிலுடனவனிதன்னில்
பெருந்துலையதில்வந்தோர்க்கு பேசியபலனேதென்றல்
உருவிழிபார்வையில்லா னுயர்விலாதரித்திரனுக
கருவதில்ஜன்மித்த னாளைக்குக்கதியீதாமே.

இ-ள். துலாலக்னமாய் அதில் சூரியன் நீசமாயிருக்கப் பிறந்தவன் கண்ணில்லாதவனுகவும் தரித்திர முள்ளவனுகவு மிருப்பா னென்பதாம். 5

2-வது சுலோகம், இரண்டாமிடம் மூன்றுமிடம் நாலாமிடம் சூரிய பலன்.

கதிரிரண்டுறவேவேந்தர் கனகத்தைப்பெறுவான்மிக்க
மதிநிகர்முகத்தில்நோயாம் மார்த்தாண்டன்மூன்றிலேற

அதிகுணன்புத்திவந்த னுண்மைபராக்கிரமத்தோன்,
நாதிசுகமிரவியற்றால் நக்கமான்சுகமில்லானே.

இ-ள். சென்ம லக்னத்திற்கு இரண்டாமிடத்தில் சூரியன் இருந்தால் வெகு தனவந்தன் அரசர்களுடைய திரவியத்தை யுடையவன் முகத்தில் ரோக முள்ளவன் மூன்றாமிடத்திலிருந்தால் புத்திவந்தனுகவும் பராக்ரம முள்ளவனுகியு மிருப்பான் நாலாமிடம் சூரியனிருந்தால் சுகமில்லாதவனுகவும் துக்க முள்ளவனுகவு மிருப்பா னென்பதாம். 6

2-வது சுலோகம். ஐந்தாமிட சூரியபலன் ஆறாமிட சூரியபலன் ஏழாமிட சூரியபலன்.

இல்லெனுமைந்தில் சூரனிருந்திட தனமிலாதான்
செல்வமைந்தர்களிலாதான் தினகரனுறில்நிற்க
வல்லதிண்புயத்தானுகி மாற்றலர்தமைசெயிப்பன்
எல்லுமேழிருந்தபோது யேந்திழைவிளக்குவானே.

இ-ள். சென்மலக்கினத்திற்கு ஐந்தில் சூரியனிருந்தால் புத்திரரில்லாதவன் தனமில்லாதவன் தரித்திரனுகும் ஆறில் சூரியனிருந்தால் வலிவான புயத்தை யுடையவனுகும் சத்துருக்களை ஜெயிக்க தீரமுள்ளவனுகு மென்பதாம். ஏழிலிரவி யிருந்தால் ஸ்திரீகளால் விலக்கப்பட்டவனுக விருப்பா னென்பதாம். 7

3-வது சுலோகம். சூரியன் எட்டாமிடம் ஒன்பதாமிடம் இருந்தபலன்.

விலகுமெட்டிரவிநின்றால் விழியூனம்பார்வையற்பம்
பிலமுளபுத்திரரற்பம் பெறுபலனிதுவின்னோர்க்கு
அலரியொன்பானிருக்க வணிதனம்புத்ரருள்ளான்
நலமுடன்பத்தில்சௌர்யன் நற்சுகமிகவுள்ளோனே.

இ-ள். சென்ம லக்னத்திற்கு எட்டாமிடம் சூரியனிருக்க அற்பபுத்திரனுள்ளவன் நேத்திரபார்வை யீனமுள்ளவன் ஒன்பதிலே சூரியனிருக்க ஆபரணம் சுகம் தனம் புத்திரர் இவைகளுடையவன் பத்தில்சூரியனிருக்க சுகவானும் பலவானும் மிருப்பா னென்பதாம். 8

3-வது சுலோகம், பதினோராமிடம் சூரியபலன் பனிரண்டாமிடம் சூரிய பலன்.

உள்ளலாபத்தில்சூர னுறைந்திடப்பிரபுவாகும்
தெள்ளுபன்னிரண்டாம்வீட்டில் தினகரனுறையும்போது
தள்ளுவான்சுயகன்மங்கள் தன்னடவடிக்கைவேறாய்
கொள்ளுவானென்றுரைத்தோம் குவலயமதிலேதானே.

இ-ள், சென்ம லக்னத்திற்கு பதினோராமிடத்தில் சூரியன் இருக்க அதிக தனவந்தன் அதாவது பிரபுவாகும் பன்னிரண்டாமிடத்தில் சூரியனிருக்க ன வரனுச்சாரமுறை தவறி நடப்பான் என்பதாம், 9

4-வது சுலோகம், லக்ன சந்திரபலன்.

தானவன்சென்மதிற்க தாரணியுதித்தபால
ஹீனகர்மங்கடன்னை யேற்றவன்பரிசாரங்கள்
தானதும்சமையல்செய்வன் தன்விழியூனம்பித்தன்
மோனனுயிருப்பானென்று முறைதனையறிவித்தேனே.

இ-ள். சந்திரன் சென்மலக்னமிருக்க வீனகர்மஞ் செய்பவனூடன் பரிசாரகன் சுயம்பாகி ஊனமான பார்வையுள்ளவன்பயித்தியரோகமுள்ள வன் ஊமையனுயு மிருப்பா னென்பதாம். 10

4-வது சுலோகம் ரிஷபலக்ன சந்திர கடகலக்ன சந்திரமேஷலக்ன சந்திரபலன்.

அறிவதுநிலவுமுச்சமாகவே விரைவில்வந்தான்
பெருகியதனவானுவன் பிறையாகுநிகடகம்வந்தோன்
அரியமாதவத்தினுலே வடைந்தவன்தனங்கள்தன்னை
மதியதுசென்மராசி வந்திடமகவதீகம்.

இ-ள். சென்ம லக்கினம் ரிஷபமாகி சந்திரனுச்சமாகி யிருக்க குபே ரனைப்போல தனவந்தனுக விருப்பான் கடகம் சென்மலக்கினமாகி அதில் சந்திரனிருக்க தனங்களை உள்ளவன் மேஷம் சென்மலக்னமாய் அதில்சந் திரனிருக்க அனேக புத்திரர்களை யுடையவனுக விருப்பா னென்பதாம்.

4-வது சுலோகம். சந்திரனிருந்த பலன் இரண்டாமிடம் மூன்றுமிடம் நாலாமிடம்.

என்னவேயிரண்டில்சோம னிருந்திடக்குடும்பந்தன்னில்
மன்னுபுத்திரபவுத்ரர் மனைதனில்பொருந்திவாழ்வான்
உன்னுசோதிரத்தில் சோமன்னுறில்பிராண ஹிம்சையுள்ளான்
தன்னவன்சுகத்தில்பந்து சவுக்கியம்வீடுள்ளானே.

இ-ள். சென்ம லக்கினத்துக்கு இரண்டில் சந்திரனிருக்க குடும்பமுள் ளவனுகியும் புத்திர பவுத்திரர்களோடு கூடியிருப்பவனுகும். மூன்றுமிட மிருக்கில் பிராணஹிம்சை யுள்ளவன் நாலாமிடத்தில் இருக்க சுகவானுயும் பந்துக்களை கூடினவனுயும் வீடுபூமி யுள்ளவனுகியு மிருப்பா னென்பதாம்.

4-வது சுலோகம். ஐந்தாமிடம் ஆறுமிடம் சந்திரபலன். 12

வீடெனுமைந்தில்சோமன் வீற்றிடத்தன்சேய்சத்ரு
நாடுநோயதிலேநிற்க நாட்டினில்சத்ருமிக்க
வீடிலாமெலிந்ததேக மெழில்சுகன்வேலைசோம்பன்
தேடியமூர்க்கனற்ப தீபனங்காமமாமே.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஐந்தில்சந்திரனிருக்க புத்திரவந்தனு யிருப்பான் அப்படி புத்திரனிருந்துப் புத்திரன் தனக்கு சத்துருவாக விரு ப்பான் ஆறுமிடம் சந்திரனிருக்க அனேக சத்துருக்களையுடையவன்மெலி

ந்த தேகமுள்ளவன் சுகசரீரமுள்ளவன் அற்பமான நீசனுக்கினையும் அற்பமான காமக்கிரீடையும் குரூரமும் மூர்க்கமும் சோம்பலும் உடையவனுக விருப்பா னென்பதாம். 13

5-வது சுலோகம். ஏழாமிடம் எட்டாமிடம் சந்திரபலன்.

காமத்தில்நிலவிருக்க க்ளேபொறுமையுள்ளான்
பூமியிலதிவிகாரம் பொருந்துங்காமத்தையுள்ளான்
சோமனெட்டுறயூகத்தன் துயருளான்சபலச்சித்தன்
தீமையாம்நோயால்வாடி தியங்குவானென்றுசெப்பே.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஏழாமிடம் சந்திரனிருக்கப் பிறர்சம்பத்துகளில் பொறுமையுள்ளவன் அதிகமன்மதவிகாரம் உடையவனுகவிருப்பான் எட்டாமிடமிருக்க வெகு நுட்பமான புத்தியுள்ளவன் ஆகிலும்சபலமான மனதுடையவன் வியாதியினுல் பீடிக்கப்படுவனுகு மென்பதாம்.

5-வது சுலோகம். ஒன்பதில் சந்திரனிருந்த பலன்

செப்புபாக்கியத்திற் சோமன்சேரசௌபாக்கியத்தன்
ஒப்பியசகலர்நேய னுயர்பந்துஞாதிபுத்ரன்
இப்புவியதனில்மித்ர ரெழில்தனமிகவேயேற்று
தப்பறவாழ்வனென்று சாற்றுவாய்கருத்திதாமே.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஒன்பதாமிடத்தில் சந்திரனிருக்க சௌபாக்கியவந்தன் சர்வசனங்களுக்கும் நேசன் பந்து சுயஜனங்களேயும் களத்திரம் புத்திரன் மித்திரர்களேயும் தனங்களேயும் உடையவனுகிவாழ்ந்திருப்பவனுகு மென்பதாம். 15

5-வது சுலோகம், பத்தில் சந்திரனிருந்த பலன்

கருமதித்தில்நிலவிருக்க காசினியுதித்தபாலன்
ஒருவருக்குதவிசெய்தா லுதவியும்வீணதாகி
வருவதுதீங்கேயாகும் மதியுளன்தருமவானும்
பெருதனம்பெற்றசீலன் பிரபலபராக்ரமத்தோன்.

இ-ள், சென்ம லக்கினத்திற்கு பத்தாமிடம் சந்திரனிருக்கப் பிறந்தவன் ஒருத்தருக்கு உதவிசெய்தால் அதுவீணுகி தீங்கு சம்பவிக்கும் தருமம் தனம் புத்தி பராக்ரமம் உடையவனுவா னென்பதாம். 16

5-வது சுலோகம், பதினென்றுமிடம்பன்னிரண்டாமிடம்

சந்திரனிருந்தபலன்.

பலமுளலாபத்தானம் பால்மதிபிருந்தபோது
நலமுளன்பராக்ரமத்தேஜன் லாபமுதுகவேபெற்றோன்
நிலவுவீயத்திருக்கில் நேத்திரமங்கமீனன்
பிலமுளனிமிசைசெய்வான் பில்லிவஞ்சனேயறிந்தே.

இ-ள், சென்ம லக்கினத்திற்கு பதினோராமிடம் சந்திரன் இருக்க நல்லவனாகியும்கீர்த்தி பிரசித்தனாகியும் லாபமுடையவனாகியும்பராக்கிரமம் உள்ளவனாகி யிருப்பானென்பதாம். பன்னிரண்டாமிடம் சந்திரனிருக்க அவயவ வீனமும் நேத்திரவீனமும் உள்ளவனாகி பலவானாகியும் சிவபூசைசெய்பவனாகியும் மந்திரம் சூன்யம்பில்லி வஞ்சனை முதலானவைகளை அறிந்தவனாக விருப்பா னென்பதாம். 17

6-வது சுலோகம், இலக்னம் இரண்டு மூன்றுநாலில்

செவ்வாயிருந்த பலன்.

அறிவிப்போம்சேய்சென்மத்தி லமர்த்திடதழும்பாந்தேகம்
குறிதிரண்டுற்றபோது கோதுறுமெச்சிலுண்பான்
எரியதுமூன்றில்புத்ர ரேற்றபராக்ரமத்தோன்
உரியநற்சுகத்திருக்கி லுயிர்வெனுஞ்சுகமில்லானே.

இ-ள். சென்ம லக்கினத்தில் செவ்வாயிருக்க வெட்டுக்காயம் பட்ட சரீரம் உள்ளவன் இரண்டிலிருக்க எச்சிலுண்பவன் மூன்றிலிருக்க புத்திர வந்தனாகியும் பராக்ரமவந்தனாகிய யிருப்பான் நாலிலிருக்க சுகமில்லாதவனாக மென்பதாம். 18

6-வது சுலோகம் ஐந்து ஆறு ஏழு எட்டு இதில் செவ்வாயிருந்தபலன்.

ஆனசேயைந்திற்றங்க வயிஸ்வர்யம்புத்ரவீனன்
தானமார்செவ்வாய்நிற்க சவுரியன்பகையைவெல்வா
னீனமில்லேழில்நின்று லேந்திழைவசப்பட்டோனும்
தீனனுமெட்டில்நிற்க செல்வர்க்குப்பார்வையற்பம்.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஐந்தில் செவ்வாயிருக்க புத்திரவீனன் தரித்திரனாக விருப்பான். ஆறாமிடம்செவ்வாயிருக்க பலவானாகியும்சத்துருக்களைச் செயிப்பவனாகியும்இருப்பான். ஏழாமிடம்செவ்வாயிருக்க ஸ்திரீகளாலாதரிக்கப்பட்டவன். எட்டாமிடத்தில் இருக்க அற்பபுத்திரனுள்ளவன். நேத்திரபார்வையீன முள்ளவனாக விருப்பா னென்பதாம். 19

6-வது சுலோகம், ஒன்பது பத்து பதினொன்றுபன்னிரண்டில்

செவ்வாய்நின்ற பலன்.

பார்மகன்பாக்யமேறப் பாபகர்மங்கள்செய்வான்
சீர்தருங்கருமந்தங்கத் திண்புயன்சுகவானாகும்
ஏர்தரும்லாபம்நின்று லெழிலுள்ளபிரபுவாகும்
சேர்வியங்குருதிநின்றால் செயல்வரனுச்சாரீத்தோன்

இ-ள், சென்ம லக்கினத்திற்கு ஒன்பதாமிடம் செவ்வாயிருக்க பஹு கர்மம் செய்பவன் பத்தாமிடம் செவ்வாயிருக்க சுகவானாகியும் பலவானாகியு மிருப்பான் பதினோராமிடம் செவ்வாயிருக்க அதிகதனவந்தன் பிரபு

வாகும் பன்னிரண்டாமிடம் செவ்வாயிருக்க சுயசாதிமுறைமைதவறிநடப்பவனாக விருப்பானென்பதாம். 20

6-வது சுலோகம், லக்னம் இரண்டு மூன்று நாலில் இருந்த புதன் பலன்.

சாரும்லக்கினமாலோன் சாஸ்திரமுணர்ந்ததீரன்
பேருறுமிரண்டில்நிற்க பிரபுவாம்தனவானாகும்
தேருமூன்றதில்மாலுற்றால் செயலதுதற்சனன்றான்
சீருளசுகத்தினிற்க திகழ்வித்துவானைச்சொல்வோம்.

இ-ள். சென்ம லக்கினத்தில் புதனிருக்க சாஸ்திரமுணர்ந்த பண்டிதன் இரண்டாமிடத்திலிருக்க தனவந்தன் பிரபுவாகும் மூன்றாமிடத்திலிருக்க அதிக தர்ச்சனனாக விருப்பான் நாலாமிடத்திலிருக்க வித்துவாமிசனாயிருப்பா னென்பதாம். 21

6-வது சுலோகம், ஐந்தாவது ஆறாவது ஏழாவது எட்டாவதில் இருந்த புதன்பலன்.

சொல்லுமாலைந்தினிற்கத் தூயமந்திரியுமாவான்
அல்லலாமாறில்நின்றா லாண்மையான்சத்துருவில்லை
நல்லகாமத்திலுற்றால் நல்லறஞ்செய்வான்யூகி
செல்லுமெட்டுறதர்க்கத்தில் சிறந்தவன்தீரனாமே.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஐந்தில் புதனிருந்தால் புத்திகூர்மையுள்ளவன் ராஜர்களுக்கு மந்திரியாகும் ஆறாமிடம் நின்றால் ஆண்மையுள்ளவன் சத்துருவில்லாதவன் ஏழாமிடமிருக்க தருமஞ்செய்பவன்புத்திசாலியாகும் எட்டாமிடமிருந்தால் ஒருமனிதரிடத்தில் தர்க்கஞ்செய்துவெல்ல சமர்த்துடையவனாக விருப்பா னென்பதாம். 22

6-வது சுலோகம் ஒன்பது பத்துபதினொன்று பன்னிரண்டில் இருந்த புதன்பலன்.

தீரமாலொன்பானேற சேய்தனஞ்சுகமதுள்ளான்
பாரிலீரைந்தில்தங்கப் பலவந்தன்சுகங்களுள்ளான்
தேரியலாபமுற்றால் செல்வனும்பிரபுவாகும்
கூறியவியத்துறைந்தால் குலமுறைதவறிப்போவான்.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஒன்பதில் புதனிருக்க புத்திரன் தனம் சுகமுடையவன் பத்தாமிடத்திலிருக்க சுகவான் பராக்கிரமவந்தன் பதினோராமிடமிருக்க அதிகதனவந்தன் பிரபுவாகும் பன்னிரண்டாமிடமிருக்க வர்ணாச்சிரம முறைதவறி நடப்பவனாகு மென்பதாம். 23

7-வது சுலோகம் லக்னம் இரண்டு மூன்று நாலில் குருபலன்.

தவகுருலக்னகேந்திரம் சார்ந்திடவித்துவானும்
புவியதிலிரண்டிலேற பொற்புளமதுரவாக்கன்
பவமிலாசோதிரத்தில் பசும்பொன்னன்லோபியாகும்
அவமிலாசுகத்திருக்க லவன்மட்டுஞ்சுகவானுமே.

இ-ள். சென்ம லக்கினத்தில் குருவிருக்க வித்துவாம்சன் பண்டிதன் இரண்டாமிடமிருக்க நல்ல மதுரமான வாக்குடையவன் மூன்றுமிடமிருக்க உலோபியாகும் நாலாமிடமிருக்க தன்மட்டில்மாத்திரம் சுகவான் பிறருக்கு இவனாலே ஒரு சுகமும் கிடையாதென்பதாம். 24

7 வது சுலோகம் ஐந்து ஆறு ஏழு எட்டில் குருபலன்.

மட்டிலாபொன்னைந்தேற மதியூகியுறுத்தநெஞ்சன்
சட்டமாயிருமூளரேற சத்துருவிவனுக்கில்லை
இட்டமாயேழிலின்று லிவன்பிதுர்தனிற்சிறந்தோன்
அட்டமங்குருவுறைந்தா லதிநீசகன்மஞ்செய்பே

இ-ள். சென்ம லக்கினத்துக்கு ஐந்தில் குருவிருக்க புத்திவந்தன் தைரியவான் ஆறுமிட மிருக்க சத்துரு இவனுக்கு இல்லை ஏழாமிடமிருக்க தன் தகப்பனை விட தான் சிறந்தவனாக விருப்பான். எட்டாமிடமிருக்க நீசகிர்த்தியங்களைச் செய்பவனாக விருப்பா னென்பதாம், 25

7-வது சுலோகம் ஒன்பது பத்து பதினொன்றில் குரு இருந்தபலன்

செப்பும்பாக்கியத்திற்பொன்னேன் சிறந்திடுந்தபசியாகும்
ஒப்புமீரைந்தினிற்க வுயர்தனமற்றோனாகும்
துப்புருலாபந்தங்க தூய்தனம்செட்டாய்ச்சேர்ப்பான்
தப்பிலாவீராறேழில் தனையன்துர்ச்சனனும்பாரே.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஒன்பதாமிடம் குருவிருக்க தபம்செய்பவனாக விருப்பான். பத்தாமிடம் குருவிருக்க தனமில்லாதவனாகும் பதினோராமிடம் குருவிருக்க லாப்யுக்தனாகியுஞ் செட்டாகத் தனம் சேர்ப்பவனாக விருப்பான் பன்னிரண்டாமிருக்க துர்ச்சனனாக விருப்பானென்பதாம்

8-வது சுலோகம் லக்னமிருந்த சுக்ரபலன்.

பாரதில்லக்னகேந்திரம் பளிங்குறபலனேதென்றால்
நாரியர்பலரைச்சேர்வன் நலமுறுலீலைசெய்ய
தேறியசமர்த்தன்தந்திரி சேல்விழியாட்குநல்லன்
மாறிடாசுகங்கடன்னை மகிழ்ந்தனுபவிப்பானெனவே.

இ-ள். சுக்கிரன் சென்ம லக்கினமிருக்க பல ஸ்திரீகளைச்சேர்ந்து லீலைகள் முதலானது செய்யச் சமர்த்தும் தந்திரமும் உடையவன் ஸ்திரீ சுகனுபவிப்பவனாக விருப்பா னென்பதாம். 27

7-வது சுலோகம் இரண்டு மூன்று நாலு ஐந்தில் சுக்ரன் இருந்தபலன்

என்றுமேயிரண்டிற்சுங்க னிருந்திட மதுரவாக்கன்
வென்றிசோதிரத்தில்வெள்ளி விருப்பிடலோபியாகும்
நன்றெனுநாலினிற்க நற்சுகவான் றன்மட்டில்
என்றுமைந்ததனிலேற வெழிற்சுகவானைச்சொல்லே.

இ-ள். சென்ம லக்கினத்துக்கு இரண்டாமிடத்தில் சுக்கிரனிருக்க நல்ல மதுரவாக்குடையவன் மூன்றாமிடத்திலிருக்க லோபி நாலாமிடத்திலிருக்க தன்மட்டில் சுகவானு யிருப்பான் ஐந்தாமிடத்திலிருக்க சுகவானுக விருப்பா னென்பதாம் 28

8-வது சுலோகம் ஆறு ஏழில் சுக்கிரனிருந்தபலன்.

சுகமிலாவாறில்சுங்கன் றேன்றிடச்சத்ருவற்றேன்
புகருமேழதிலிருக்கில் பொற்புறுமடவார்தம்மை
சகசமாய்மருவிலீலை தானதுசெயச்சமர்த்தன்
இகமதில்கலகப்பிரீய னெந்திழைமாருக்கன்பன்.

இ-ள். சென்ம லக்கினத்துக்கு ஆறாமிடம் சுக்கிரனிருக்க சத்துருவில்லாதவன் ஏழாமிடமிருக்க கலகஞ் செய்துவைக்க பிரியமும் பரஸ்திரீகமனம் காமக்கிரீடை முதலியவைகளில் சமர்த்தனுமாவா னென்பதாம் 29

8-வது சுலோகம் எட்டு ஒன்பது பத்து பதினொன்றில் சுக்கிரனிருந்தபலன்.

பீரகத்தானம்வெள்ளி மருவிடநீசகன்மம்
சீருளபுகருமொன்பான் சென்றிடத்தபசுசெய்வான்
கூரியபத்தில்வெள்ளி கூடிடத்தனமில்லாதான்
தேறியலாபமேறில் செட்டதுவடைவான்றுனே.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு எட்டாமிடம் சுக்கிரனிருக்க நீசகர்மம் செய்பவன் ஒன்பதாமிடமிருக்க தபம் செய்பவன். பத்தாமிட மிருக்க தன மில்லாதவன். பதினோராமிடமிருக்க லாபயுக்தன் செட்டுடையவனுக விருப்பா னென்பதாம். 30

8-வது சுலோகம், பன்னிரண்டிலிருந்த சுக்ரபலன்.

பாலகன்றனக்கீராறில் பளிங்குறத்தூர்ச்சனன்றுன்
மேலதாயுச்சம்பெற்று மேவுமெத்தானமேனும்
சீலமாயிருந்தபோதுந் திரவியமிகுதியுள்ளான்
காலத்தைக்கோளினூலே கழன்றிடுவிதங்களாமே

இ-ள். சென்ம லக்கினத்திற்குப் பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரனிருக்க தூர்ச்சனன். உச்சம்பெற்றிருக்க வெந்தஸ்தானத்திலிருந்தாலும் தனவந்தனுக விருப்பா னென்பதாம். 31



9-வது சுலோகம், சனியிருந்தபலன்.

தங்கிடுமேடம்பா[illegible]ண்டதுகடகம்சிங்கம்
மங்கைதேளதனில்நீலன் மருவநித்தியதரித்ரன்
அங்கத்தில்பால்பு[illegible]மரிவையைசேரத்தந்திரி
துங்கவான்மெலிந்த[illegible]தகன் துயருளான்நோயியம்பே.

இ-ள். மேஷம் ரிஷபம் மிதுனம் கடகம் சிங்கம் கன்னி விருச்சிகம் இவைகளிலொன்று ஜென்மலக்னமாயிருக்க அதில் சனியிருந்தால் நித்திய தரித்திரன் வியாதியுடையவன் மன்மத பரதந்திரனாகியும் மெலிந்த தேகமுடையவனாகியு மிருப்பா னென்பதாம். 32

9-வது சுலோகம், லக்னச் சனியிருந்தபலன்.

இயம்பிடுதுலைவில்மீன்மான் னெழிற்குடம்ஜெனனமாக
தியங்கிடாசனிடனிற்க தேசநாட்டதிபனாகி
வியந்துரைவித்துவாம்சன் வேந்தனாற்பூசிக்கப்பெற்றோன்
செயங்கொளுமழகுள்ளோனும் செப்பிடுசனிதன்னாலே.

இ-ள். துலாம் தனுசு மகரம் கும்பம் மீனம் இந்த ஐந்து ராசிகளில் ஒன்று ஜென்மலக்கினமாய் அதில் சனியிருந்தால் ராஜபூஜிதனும் கிராமம் பட்டணம் நாடுகளுக்கு அதிபதியாகியும் வித்துவாம்சனாகியும் செயமடையக் கூடியவனாகியு மிருப்பான், உதாரணம் சாராவளியில் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 33

9-வது சுலோகம் இரண்டு மூன்று நாலிலிருந்த சனிபலன்.

சனியிரண்டதனிலேற தனபதியாவான்பாரில்
தனியனாய்வேந்தர்செல்வம் தானதுகைக்கொள்வோனும்
இனிய்மூன்றதனிலுற்ற லெழில்பிலன்புத்தியுள்ளான்
கனசனிநாலிலேற கவலையையுடையபுத்ரன்.

இ-ள். ஜென்மலக்னத்திற்கு இரண்டாமிடம் சனியிருக்க தனவந்தன் அரசர் திரவியத்தை யுடையவன் முகத்தில் ரோகமுள்ளவனாகும் மூன்றாமிடமிருக்க அழகன் புத்தியுள்ளவன் பலவானாக விருப்பான் நாலாமிடமிருக்க சுகமில்லாதவன் துக்கம் உடையவனாகு மென்பதாம். 34

9-வது சுலோகம், ஐந்து ஆறு ஏழு எட்டிலிருந்த சனிபலன்.

புத்திரதானம்நீலன் புத்திர[illegible]செல்வமில்லான்
சத்துருவகத்தில்சௌரி [illegible]படையைவெல்வன்
வெத்தியாம்காமமேற [illegible]பட்டோனும்
சுத்தமாமெட்டிற்றங்க சுகம்பு[illegible]நேத்ரமூனம்.

இ-ள். ஜென்மலக்கினத்திற்கு ஐந்தாமிடம் சனியிருக்க புத்திரனும் செல்வமுமில்லாதவன் ஆறுமிடம் சனியிருக்கப் பலவான் பகைவரைவெல்

னுவான் ஏழாமிடம் சனியிருக்க ஸ்திரீகளாலாதரிக்கப் பட்டவன் எட்டாமிடம் சனியிருக்க அற்பபுத்திரனுடையவன் சுகமில்லாதவன்நேத்திரவூன முடையவனுக விருப்பானென்பதாம். 35

9வது சுலோகம், ஒன்பது பத்து பதினொன்று பன்னிரண்டிலிருந்த சனிபலன்.

திறமுளசவுரியொன்பான் சேரவேயுலகில்வந்தோன்
குரவருதனமும்புத்ரன் குலவியசுகவானுவன்
தருமத்தில்சுகவான்திரன் கரிலாபம்பிரபுவாகும்
விரயத்தில்வர்ணாச்சாரம் விலக்கிடுபவனைச்சொல்லே.

இ-ள். சென்மலக்னத்திற்கு ஒன்பதாமிடம் சனியிருக்க அதிக தனமும் புத்ரரும்சுகமுமுடையவனுகும் பத்தாமிடம்சனியிருக்க சுகவானுகியும் பலவானுகியு மிருப்பான் பதினோராமிடம் சனியிருக்க அதிக தனவந்தன் பிரபுவாகும் பன்னிரண்டாமிடம் சனியிருக்க தன் சுயசாதி கிர்த்தியங்கள் தவரி நடப்பவனுகு மென்பதாம். 36

10-வது சுலோகம், விசேஷபலன்.

சொல்லியசென்மந்தேகம் தாய்தனமுடன்பிறப்பு
நல்லமாதுருவும்புத்ரன் நலிசத்ருகாமஸ்தான
கொல்லுமெட்டதுவும்பாக்கியங் குலகர்மம்லாபம்விரயம்
எல்லையாமிவைகளாலே யெவர்கட்குங்கூறுவாமே.

இ-ள். உலகில் பிறந்த யாவருக்கும் சென்மலக்கினம் தேகம் இரண்டாமிடம் வாக்குநேத்திரம் குடும்பம் மூன்றாமிடம் சகோதரம் நாலாமிடம் மாதுருசுகம் ஐந்தாமிடம் புத்திரன் ஆறாமிடம் சத்ருபிணிஎழாமிடம் களத்திரம் காமம் எட்டாமிடம்ஆயுசு ஒன்பதாமிடம்பிதுர்பாக்கியம் பத்தாமிடம் ஜீவனம் பதினோராமிடம் லாபம் பன்னிரண்டாமிடம் விரயம் இவைகளுணர்ந்துகொண்டு எவர்களுக்கும் பலன் சொல்லவேண்டியதென்பதாம்.

10-வது சுலோகம், விசேஷபலன்.

கூறுநட்பாக்ஷியுச்சங் குலவிடும்பகையுநீசம்
தேரியவுச்சமூலத்திரி கோணவகையைக்கண்டு
பாரினிற்சத்துருநீசம் பற்றுந்தானப்பலன்கள்
சாரிடாகுறையுமென்று தன்மையையறிகுவாயே.

இ-ள். நட்பு ஆட்சி உச்சம்பகைநீசம் உச்மூலத் திரிகோணவகைகள் நன்றுபுணர்ந்து பலன்சொல்ல வேண்டியதாம். அதெப்படி யென்றால் சத்துரு நீசம் பெற்றிருந்த கிரகப்பலன்கள் குறைந்து போகும் என்பதாம்.

10-வது ஸ்லோகம், விசேஷ பலன்.

அறிவதுவன்யர்க்ஷேத்திர மடைபலன்சமமேயாகும்
நெறியதுகட்போட்சி நேர்ந்திடுவுச்சமூலத்
திரிகோணமதினுற்றோர்க்கு செப்பிடுப்பலனேவிர்த்திக்
குரியதுவிபரமாகக் கூறிடும்பலன்கடாமே.

இ-ள். அன்னிய க்ஷேத்திரமடைந்த கிரகத்தின் பலன் சமமாகநடக்கும் நட்பு ஆக்ஷி உச்சம் மூலத்திரிகோண மிருந்த கிரகத்தின் பலன் விர்த்தியாகு மென்பதாம். 39

10-வது ஸ்லோகம். விசேஷ பலன்.

பலனதுசுபரும்பாபர் பற்றதன்வாதிபாவம்
தலமதில்குறைவும்விர்த்தி தங்கிடச்சுபருந்தீயர்
நலமுளாருறையுந்தானம் நற்பலனதிகமாகும்
குலவுதீயோரிருந்தால் குறைந்திடும்பலனுமென்னே.

இ-ள். சுபக்கிரகங்களும் பாபக்கிரகங்களும் தன்வாதி பாவங்களில் இருந்தால் குறைவும் விர்த்தியாகும் அதாவது எப்படி யென்றால்சுபக்கிரகமிருந்த விடத்தில் அந்த ஸ்தானத்தின் பலன் அதிகமாகும் பாபரிருந்த ஸ்தானம் பலன்கள் குறைந்துபோகு மென்பதாம். 40

10-வது சுலோகம் விசேஷபலன்

என்னவேவியத்தானத்தி லினியகோளிருந்தபோது
மன்னியவிரயந்தானும் வலியதுகுறைந்துபோகும்
பன்னிரண்டதனிற்றீயர் பற்றிடவிரயந்தானும்
என்னவேயதிகமென்று இயற்றுவாயுலகத்தோர்க்கே.

இ-ள். பன்னிரண்டாமிடத்தில் சுபர்களிருந்தால் விரயம்குறைந்துப் போகும் பாபிகளிருந்தால் விரயம் அதிகமாகு மென்பதாம். 41

10-வது சுலோகம் விசேஷபலன்

உலகதிலாறும்வீட்டி லுயர்சுபரிருந்தபோது
பிலமுளருணமுஞ்சத்ரு பிணிபலன்குறைவதாகும்
நலமிலாராறிற்சேர நலிபகைருணங்கள்தாமும்
குலவியவிருத்தியாகும் குழவியுமச்சமற்றான்

இ-ள். ஆறாமிடமாகிய சத்துருதானத்தில் சுபக்கிரகமிருக்க ருணம் சத்துரு நோய் பகை குறைந்துப்போகும். பாபக்கிரக மிருந்தால் நோய் பகை ருணம் சத்துருக்கள் அதிகமாகும் அப்படி அதிக மானாலும் அச்சப் படாத தீரனாகு மென்பதாம் 42

10-வது சுலோகம் விசேஷபலன்

அச்சமாமெட்டாம்வீட்டி லருஞ்சுபரிருந்தபோது
இச்சகமுதிசுதோர்க்கெல்லா மியம்பிளேமிருத்துவற்பம்
துச்சரும்பாபர்நிற்க துயரமுமிருத்துவிர்த்தி
நிச்சயமறிந்துகொண்டு நீபுகலகிலத்தோர்க்கே.

இ-ள். எட்டாமிடம் சுபர்களிருந்தால் ஆயுளுக்குவரும்விபத்து நீங்கிப் போகும் எட்டாமிடம் பாபர்கள் இருக்க மிருத்து வென்னும் நிரியாணம் உண்டாகும் இவைகளைத் தானுதிபதியை நோக்கினர் இருந்தோர்களில் வலிவுகளை யுணர்ந்து சொல்லவேண்டிய தென்பதாம், 43

11-வது சுலோகம், பலபரிமாணம்

அகிலத்தினுச்சக்கோட் கடைவது பலன்சம்பூர்ணம்
மிகவுமேதருவார்தீய வெம்பலனீயாரென்போம்
பகருமூலத்திரிகோணம் பற்றினோரசுபம்காலும்
சுகமதுமுக்காலீவார் தோய்ந்திடுஞ்சாதகர்க்கே

இ-ள். உச்சம் பெற்றகிரகம் அவர் திசை புசிப்பு அந்திரங்களில்தானி ருந்த பாவபலனையுஞ்சேர்த்து தருவர் முழுப்பலனாக தியப்பலனையீயமாட் டார் மூலத்திரிகோணம் பெற்றக்கிரகம் அவர்திசை புசிப்புஅந்திரங்களில் நல்ல பலன் முக்காலும் தீயப்பலன் காலுமாக வீவார் என்பதாம். 44

11-வது சுலோகம் பல பரிமாணம்

சாதகன்றனக்குவாக்ஷி சார்ந்தவரசுபம்பாதி
கோதறுசுகப்பலன்கள் கொடுப்பராம்பாதியென்றும்
தீதிலாநட்புபெற்றோர் தீப்பலன்நாலிலொன்றும்
காதலாஞ்சுகப்பலன்கள் காலத்திலீவார்முக்கால்

இ-ள். ஆக்ஷிபெற்ற கிரகம் தீயபலன் பாதியும் சுகபலன் பாதியுமாக திசை அஷ்டவர்க்காதி காலத்தில் கொடுப்பார். நட்புபெற்றக் கிரகம்தீய பலன் கால்வரிசையும் சுகப்பலன் முக்கால்வரிசையும் கொடுப்பார் திசை அட்டவர்க்காதி காலத்தி லென்பதாம். 45

11-வது சுலோகம் பல பரிமாணம்

முக்கியநீசமானோர் முழுதுமேவத்தமித்தோர்
எக்காலுநற்பலன்க ளீந்திடாரென்பதாகும்
மக்களுக்கட்டவர்க்கம் வருபலன்கூறும்போது
ஒக்கவேசேர்ப்பதென்று வுரைத்திடல்முடிவிதாமே

இ-ள். நீசம் பெற்ற கிரகமும் அஸ்தமித்த கிரகமும் நற்பலனை யீய மாட்டார் தீயபலன் முழுதும் தருவார் அஷ்டவர்க்க காலத்தில் பலன்கள் தருவா ரென்பதாம். 46

படலச்செய்யுள் தொகை

பரிதியாதியதாயேழு பகர்ந்திடுகோள்கள்தானும்
நெறியொடுபனிரண்டோரை நின்றிடுபடலந்தானும்
குறியொடுநாற்பத்தாறில் குலவியசெய்யுளாக
சரிவரவயித்திலிங்கம் சாற்றினேன்குருவைப்போற்றி.

இருபதாவது

பாவபலப்படல முற்றிற்று.

---



# மங்களேஸ்வரீயம்.

இருபத்தோன்றாவது

## ஆஸ்ரயோகப்படலம்.

1-வது சுலோகம் ஆக்ஷிகிரகபலன்

செனனகாலத்திற்றன்னகமிருக்கும் சீருளகோளதின்பலனும்
கனமுடனொருகோள்சுயகுலதிகரான் கருதிரண்டேற்குலமுக்யன்
இனமுடன்மூன்றுபந்துக்கள்புகழ்வோ னீரிரண்டேதனபதியாம்
தனசுகமைந்தர்ராஜயோகத்தன் சாற்றுமேழரசனுகுவனே.

இ-ள். செனனகாலத்தில் ஒரு கிரகம் ஆக்ஷிபெற்றிருக்க சுயகுலத்தாருக்கு சமானமுடையவனுக விருப்பான் இரண்டுகிரகம் ஆக்ஷிபெற சுயகுலத்தாரில் முக்கியமுடையவன் மூன்றுகிரகம் ஆக்ஷிபெற பந்துக்கள்புகழும்படியாக வாழ்வான் நாலுகிரகம் ஆக்ஷிபெற தனவந்தனு யிருப்பான் ஐந்து கிரகம் ஆக்ஷிபெற சுகவந்தனுக விருப்பான் ஆறுகிரகம் ஆக்ஷிபெற ராஜயோக போகமுடையவனா ஏழுகிரகம் ஆக்ஷிபெற ராஜனுக விருப்பான் என்பதாம், 1

2 வது சுலோகம். மித்ருவீடு நட்புபெற்ற கிரகபலம்.

மித்துருவகத்தில்நட்புடனொருகோள் மேவிடப்பிறர்தனபோக்யம்
அத்தலத்திருகோள்நேயர்போஷணையா மாகுமூன்றேல்சுயஞாதி
மெத்தநால்பந்துபோஷணையுடையான் மேல்குலத்தலைவனைமைந்து
இத்தகையறுகோள்சேனைக்குத்தலைவ னேழெனிலரசராமறியே.

இ-ள். செனனகாலத்தில் மித்துருக்ஷேத்திரத்தில் நட்புபெற்ற ஒரு கிரகமிருக்கில் பிறருடைய ஆதீனத்தை அனுபவித்திருப்பவனுகும். இரண்டு கிரகம் நட்புபெறில் சிநேகரால் போஷணையாம் மூன்றுகிரகம் நட்புபெறில் தன்சுய ஞாதிகளினுலே போஷிக்கப் படுவான், நாலுகிரகம் நட்புபெறில் பந்துக்களாலே போஷிக்கப்படுவான், ஐந்து கிரகம் நட்புபெறில்

தன்குலத்துக்கு தலைவனாக விருப்பன். ஆறுகிரகம் நட்புபெறில் சேனாதி பதியாவான். ஏழுகிரகம் நட்புபெற அரசனாகு மென்பதாம். 2

2-வது சுலோகம். உச்சரும் நட்போரும் கூடியபலன்.

உச்சக்கோள்தானும்மித்ரு வுடன்கூடிநின்றபோதில்
மெச்சுசம்பத்தும்கீர்த்தி மேன்மையும்புகழுமுள்ளோன்
உச்சக்கோடன்னைமித்ரு வுற்றுமேநோக்குங்காலில்
இச்சகம்புகழவேந்தா யிருப்பவன்கூறினோமே.

இ-ள். செனனகாலத்தில் உச்சகிரகத்துடன் மித்துருக்கிரகம் கூடி நிற்கில் சம்பூரணமான தனசமேதனாகவும் சம்பத்துள்ளவனாகியும் கீர்த்தி மேன்மை புகழும் உள்ளவனா யிருப்பான் சர்வசனங்களால் பூசிக்கப்பட்ட வனாகியு மிருப்பான் உச்சக்கிரகத்தை மித்துருக்கிரகம் நோக்க அரசனாகி உலகத்தை காப்பா னென்பதாம் 3

2-வது சுலோகம் பகைநீசகிரகப் பலன்.

ஒருகோட்குதரித்திரனாகும் உயர்சுகமில்லையிரண்டு
திரிகோளேமூர்க்கனாகும் திரமுளரோகியைந்து
பெருஞ்சிறையிருமூன்றுக்கு பேசினோம்பிராணவிம்மை
வருமேழ்கோள்பகையுநீசம் வருபலன்பாவியாமே

இ-ள். செனன காலத்தில் பகைநீசம் பெற்று ஒருகிரக மிருக்க தன மில்லாத தரித்திரனாகும் இரண்டு கிரகமிருக்க சுகமில்லாதவன் மூன்று கிரகமிருக்க மூர்க்கமுள்ளவன். நாலு கிரகமிருக்கில் வியாதி பீடிதனாயிருப் பான் ஐந்து கிரகமிருக்க காவல் கூடமென்றும் சிறையி லிருக்கப்பட்ட வன் ஆறுகிரக மிருக்க பிராண விம்மை யுள்ளவன் ஏழுகிரகமிருக்க பாபி யாகும் ஏழுகிரகங்களும் பகைநீசத்தி லிருக்காது ஆகிலும் முன்னுள்ள சாஸ்திர விதிபோல சொல்லப்பட்ட தென்பதாம். 4

3-வது சுலோகம், கும்ப லக்னபலன்.

கும்பலக்னந்தனக்குக் கூறியபலன்கள்தீதாம்
கும்பத்துவாதசாம்சம் குறைவதுவசுபமாகும்
கும்பத்துவாதசாம்சம் குலவுமற்றோரைகட்கும்
கும்பத்துவாதசாம்சம் குணமுடன்நலமாங்காணே

இ-ள். கும்பலக்கின சாதகருக்கு சுபாசுபம் சொல்லுகிறார், அதெப் படியென்றால் முன்காலத்திலுள்ள சத்யாசாரி யென்பவர் கும்பலக்கினம் ஆனதால் அந்த கும்ப லக்கினமே சுபகரமாகா தென்று சொல்லப்படும், கும்ப லக்கின துவாதச பாவமும் அசுபமென்றே சொல்லப்படும், ஆகிலும் எந்த ராசிகட்கும் அந்தப்பிரகாரம் சொல்லக்கூடாது, கும்பலக்கினத் துக்கு மாத்திரம் இந்தவிதி மற்ற சகலராசிகளுக்கும் கும்பத்துவாதசாம்சம் அசுபகரமல்ல சுபகரமாகும் கும்பலக்கின மாத்திரமே அசுபகரமென்று

சொல்லப்பட்டது இதற்கு உதாரணம் விஷ்ணுபக்தர் சொல்லி இருக்கிறார் என்பதாம் 5

4-வது சுலோகம் ஓரைபலன்.

இரவியினோரைவிஷமராசியிலே யேற்றிடும்பாபக்கோளமர
தரணியிலுதித்தபாலகன்மிக்க சவுரியம்தனமதுவேற்று
விரவுமுச்சாகங்கீர்த்தியுமுடையவன் மேனியோவெகுசவுந்தரமாய்
பரவுமிவ்வுலகில்வாழுவானென்று பலனதுகூறியதாகும்

இ-ள். சூரியன் ஓரையில் விஷபராசி யென்னப்பட்ட புருஷ-ராசியில் பாபர்களிருக்கப் பிறந்தவன் சவுரியம் தனம் உச்சாகங் கீர்த்தி அழகுள்ளவனாக விருந்து வாழ்வா னென்பதாம் 6

4-வது சுலோகம் சந்திரஓரைபலன்.

சந்திரன்தனதுவோரை சமராசிநல்லோர்நிற்க
சுந்தரப்புவியின்மீது தோன்றியமகவுமேதான்
அந்தமாயழகுங்காந்தி பறிவொடுமதுரவாக்கும்
சந்ததம்புகழ்சௌபாக்யம் சவுக்கியன்யூகவானே

இ-ள். சந்திரன் ஓரையில் ஸ்திரீராசியில் சுபக்கிரக மிருக்கப் பிறந்தவன் அழகுடையவனாய் புத்திசாலியாய் இனிமையாகவும் மதுரமாகவும் வார்த்தைப் பேசுபவனாகியும் எப்போதும் மாறாத சவுபாக்கியமும் சவுக்கியமும் யூகமுமுள்ளவனாகி யிருப்பா னென்பதாம் 7

5-வது சுலோகம் சூரியஓரைபலன்.

பருதியோரை பகர்சமராசியில்
வருவார் தீயரேல் வாய்க்கும்பலனற்பம்
திறமையாகவே சேய்க்குப்பலாபலன்
உருதியாக வுரைக்கும்விதங்களே

இ-ள். சூரிய ஓரையில் ஸ்திரீராசியில் பாபக்கிரக மிருக்கப் பிறந்தவனுக்கு முன் சொன்னபலன் அற்பமா யிருக்கு மென்று சொல்லவேண்டியதாம் 8

5-வது சுலோகம் சூரிய ஓரைபலன்.

எல்லவனோரை யேற்றவிடந்தனில்
நல்லகோள்கள் நலமுடனின்றிட
வல்லமைதனம் வாழ்வுமுற்சாகமும்
இல்லனற்பமா யென்றுவுரைத்திடே

இ-ள். சூரிய ஓரை புருஷராசியில் சுபக்கிரக மிருக்கப் பிறந்தவன் மிருதுவான குணமும் வல்லமையும் செல்வமும் உற்சாகமு மில்லாதவனா யிருப்பா னென்பதாம் 9

6-வது சுலோகம் சந்திரன் ஓரை பலன்.

மதியினோரை வரும்வியராசியில்
துதிபெறுஞ்சுபர் தோயவவ்வில்லதில்
ததியதாகமுன் சாற்றும்பலனதில்
அதிகமேயிலை யற்பமாய்க்கூறிடே

இ-ள். சந்திர ஓரையில் புருஷராசியில் சுபக்கிரகமிருக்கப் பிறந்தவனுக்கு முன்சொன்ன பலன்களில் முழுதுமில்லாது அற்பமாக வுடையவனாயிருப்பா னென்பதாம் 10

5-வது 6-வது சுலோகம் சந்திர ஓரைபலன்

சந்திரனோரை சமராசிபாவர்கள்
வந்துநின்றிட வாய்த்தும்பலனது
அந்தமுந்தன மாண்மைபலமிலான்
விந்தையற்றவ னுகவிளம்பிடே

இ-ள். சந்திரன் ஓரையில் ஸ்திரீராசியில் பாபர்களிருக்கப்பிறந்தவன் அழகும் குணமும் சௌரியமும் மனோதிடம் சந்தோஷமில்லாதவனுகவிருப்பானென்பதாம். 11

6-வது சுலோகம், சந்திரதிரேக்காணபலன்.

திங்கள்தன்சுயம் செப்பிடும்மித்துரு
தங்குந்திரேகாணந் தன்னிலிருந்திட
வெங்குமேபுகழ் கீர்த்தியுடையனுய்த்
துங்கசற்குணத் தூயனும்பாலனே.

இ - ள். சந்திரன் தன்சுயத்திரேகாணத்திலாவது அல்லது மித்துருவின் திரேகாணத்திலாவதிருக்கில் புகழும் கீர்த்தியும் சற்குணமுடையவனுயிருப்பா னென்பதாம். 12

6-வது சுலோகம், திரேக்காணபலன்.

திங்களுற்றதிரே காணத்ததிபன்
தங்குமவ்விடந் தானதுமத்தியேல்
மங்கலானபுகழு மகிழ்ச்சியும்
அங்குமத்திம மாகவறைந்திடே.

இ-ள். சந்திரனிருந்த திரேகாணத் ததிபதி யிருந்த ராசியானது சந்திரனுக்கு மத்திபமான ஸ்தானமாக விருந்தால் புகழ் சந்தோஷம் குணம் மத்திமமாக விருப்பா னென்பதாம். 13

6-வது சுலோகம். திரேக்காணபலன்.

உத்ததிரேகாணத் தாதிமதிக்குமே
சத்துருவாகித்தானும் பகையுறில்

மெத்தவும்புகழ் மேன்மையுஞ்சற்குணம்
அத்துகிற்பவன் ளுமெனக்கூறிடே.

இ-ள். சந்திரனிருந்த த்ரேகாணத்ததிபதி சந்திரனுக்கு சத்துருவா யிருக்கில் புகழ் மேன்மை சற்குணம் ரூபமும் இல்லாதவனக விருப்பா னென்பதாம். 14

6-வது சுலோகம், வியாளத்திரேக்காணபலன்.

மதியவன்வியாள மாகியவைந்திடஞ்
சதியுறுஞ்சர்ப்ப தானமர்மவ்விடங்
கதியாய்த்தங்கிடக்காளே குரூரனய்ப்
பதியிற்றங்கிடும் பாலன்குணங்களே.

இ-ள். சந்திரன் வியாளதிரேகாண மென்னப்பட்ட சர்ப்ப திரேகா ணத்திலிருக்கப் பிறந்தவன் குரூரசுபாவமுள்ளவனுயிருப்பானென்பதாம்

6-வது சுலோகம், கர்ப்பத்திரேகாணம்.

மீனமூன்றும்விருச்சிக மூன்றிரண்
டானகொண்டலில் லாகுமிரண்டும்மூன்
றுனவைந்தையும் கர்ப்பத்திரேகாணமா
யீனமாமிதை யேற்றுவதுண்மையே.

இ-ள். மீனராசியில் மூன்றுவது திரேகாணமும் விருச்சிகத்தி லிரண் டாந் திரேகாணமும் மூன்றுந் திரேகாணமும் கடகத்தில் இரண்டாந்திரே காணமும் மூன்றுந் திரேகாணமும் சர்ப்பத் திரேகாண மென்னப்படும் என்பதாம். 16

6-வது சுலோகம். ஆயுதத் திரேகாணப்பலன்.

அறுசீர்க்கழில் நெடில் ஆசிரிய விருத்தம்.

கன்னிராசியிலிரண்டுங் கார்முகமொன்றிரண்டும்
மன்னுயாழிரண்டுமூன்றும் மறியதிலிரண்டுமொன்று
முன்னதசிங்கந்தன்னி லுரைத்திடுமூன்றிரண்டும்
இன்னவைநவபாகங்க ளியம்புமாயுதத்திரேகாணம்.

இ-ள். கன்னியா ராசியில் இரண்டாந் திரேகாணமும் தனுசு முதல் திரேக்காணமும் இரண்டாந்திரேக்காணமும் மிதுனத்தில் மூன்றுந்திரேக் காணமும் இரண்டாந் திரேக்காணமும் மேஷத்தில் முதலும் இரண்டும் சிங்கத்தில் இரண்டாவது திரேக்காணம் மூன்றுவது திரேக்காணமும் ஆகிய இந்த ஒன்பது திரேக்காணங்களும் ஆயுதத்திரேக்காண மென்னப் படுமென்பதாம். 17

6-வது சுலோகம், ஆயுதத்திரேக்காணப்பலன்.

சந்திரனுயுதந் திரேகாணத்தில்
வந்துநின்றக்கால் மாலிலந்தன்னிலே

சொந்தமாய்வந்தான் துன்பமிகுதியாய்
சந்ததமிம்சைதா னடைவானென்னே.

இ-ள். சந்திரன் ஆயுதசகிதத் திரேகாணத்தி லிருக்கப் பிறந்தவன்எப்போதும் பிராணஹிம்சை யுடையவனு யிருப்பன் இவனுக்கு சந்தோஷமே ஒருக்காலு மில்லை யென்பதாம். 18

6-வது சுலோகம் சதுஷ்பாதத்திரேக்காணம்

அறுசீர்க்கழில் நெடிலாசிரிய விருத்தம்.

மதியதிலிரண்டாங்கூறு மாவிடைதனிலும்ரண்டே
அரியதிலொன்றிரண் டருஞ்சாபந்தனிலேயொன்று
பெருகியதேளில்மூன்று பேசியவலவனென்று
சரியிதுயேழுகூறும் சதுஷ்பதத்திரேகாணம்மே,

இ-ள். மேஷத்தில் இரண்டாவது திரேக்காணமும்ரிஷபத்தில்இரண்டாவது திரேக்காணமும் சிங்கத்தில் முதலாவது திரேக்காணமும் இரண்டாவது திரேக்காணமும் தனுசில் முதலாவது திரேக்காணமும் விருச்சிகத்தில் மூன்றாவது திரேக்காணமும் கடகத்தில் முதல் திரேக்காணம் ஆகிய இந்த ஏழுதிரேக்காணங்களையும் சதுஷ்ப்பாதத் திரேக்காண மென்னப்படு மென்பதாம். 19

6-வது சுலோகம் சதுஷ்பாதத்திரேக்காணப்பலன்.

அம்புலியவனுகுஞ் சதுஷப்பதம்
தெம்பாய்நின்றிட சேயெனவந்தவன்
தம்பதியிற்குரு தாரசக்தனாய்
அம்புவியி லமர்ந்திடும்பாலகன்.

இ-ள். சந்திரன் சதுஷ்ப்பாதத்திரேகாணம் ஏழில் ஒருதிரேக்காணத்திலிருக்கப்பிறந்தவன் குருதாரசக்தனாக விருப்பானென்னப்படு மென்பதாம். 20

7-வது சுலோகம் பக்ஷி திரேகாணவிபரம்.

தண்டில்மூன்றிரண்டா மரியிலொன்றும்
கொண்டகோலிரண்டே கும்பந்தானொன்றும்
அண்டத்திரேகாண மம்புலியுற்றிட
மண்டலத்தில்வரும் பக்ஷிசெய்கையே.

இ-ள். மிதுனத்தில் இரண்டாந்திரேக்காணமும் மூன்றாந்திரேக்காணமும் சிம்ஹத்தில் முதல்திரேக்காணமும் துலாத்தில் இரண்டாவது திரேக்காணமும் கும்பத்தில் முதல்திரேக்காணமும் ஆகிய ஐந்துதிரேக்காணங்களும் பக்ஷித்திரேக்காண மென்னப்படும். இந்த பக்ஷிதிரேக்காணத்தில் சந்திரனிருக்கப் பறந்தவன் குணம் பக்ஷிகளைப்போலே திரிபவன் மற்றச் செய்கைகளும் பக்ஷிப்போலவே யாகுமென்பதாம். 21

7-வது சுலோகம் மேஷலக்ன நவாங்கிசையின் பலன்.

சென்மலக்கினம் சீருறும்மேடமாய்
மன்னுமங்கிசமும் மறியாகிட
உன்னிதத்தோ டுதித்திடுபாலகன்
சொன்னயமுளன் சோரர்தலைவனே.

இ-ள். மேஷ லக்கினமாகியும் மேஷ நவாங்கிசையிலும் பிறந்தவன் திருடனுக்கெல்லாம் தலைவனாக விருப்பா னென்பதாம். 22

7-வது சுலோகம் ரிஷபலக்ன நவாங்கிசையின் பலன்.

இடபலக்கனமே யெருதம்சமாய்
தடமுளபுவிதன்னிலே வந்தவன்
திடமுளன்வெகுசீர் சுகபோகமும்
படருமாகீர்த்தி பாலனடைவனே.

இ-ள். இடபலக்கினமாகியும் இடப நவாங்கிசையுமாகி யிருக்கப் பிறந்தவன் வலிவான தேகமும் சிறப்பும் சுகபோகமும் பிரசித்தமான கீர்த்தி யுடையவனாக விருப்பா னென்பதாம். 23

7-வது சுலோகம் மிதுனலக்ன நவாங்கிசையின் பலன்.

மிதுனலக்கினம் வீணையினம்சமாய்
சுதனெனவந்தான் தூயவித்வானுமாய்
மதியளன்மிக மாமறைதேர்ந்தவன்
சதியிலாதான் சாபப்பிரசங்கியே.

இ-ள். மிதுன லக்கினமாகியும் மிதுன நவாங்கிசையுமாக விருக்கப் பிறந்தவன் பரிசுத்தனாகியும் புத்திவந்தனாகியும் வேதம் சாஸ்திரம்புராணம் காவியம் கலைக்கியானங்களையுமறிந்த வித்துவானாகியும் கெடுதிகுணமில்லாதவனாகியும் சற்குணவந்தனாகியும் சபாப்பிரசங்கியுமாக விருப்பானென்பதாம். 24

7-வது சுலோகம் கடகலக்ன நவாங்கிசையின் பலன்.

கடகலக்கினம் கர்க்கடாங்கிசம்
படருபூமியில் பாலனாய்வந்தவன்
அடருமாமணி யைஸ்வரியங்களைத்
திரமாயேற்றிடுந் தீரன்றனபதி.

இ-ள். கடக லக்னமாகியுங் கடக நவாங்கிசையுமாக விருக்கப்பிறந்தவன் நவரத்தினங்களையும் அயிஸ்வரியங்களையு மடைந்தவன் தனவானாகும் கலங்காத நெஞ்சமுள்ள தீரனாகியு மிருப்பா னென்பதாம். 25

7-வது சுலோகம் சிம்மலக்ன நவாங்கிசையின் பலன்.

அரியிலக்கின மங்கிசமும்மதில்
விரியும்பூமியில் மேவவுதித்தவன்
அரிநிகர்பில ஞண்மைகளேற்றிடும்
புரவலனிந்த பூவினைக்காப்பனே.

இ-ள். சிம்ம லக்கினமாயும் சிங்க நவாங்கிசையுமாக விருக்கப் பிறந்தவன் சிம்மத்தைப்போல பலமும் ஆண்மை சவுரியங்களுடையவனுகி உலகத்தையாளும் அரசனுக விருப்பா னென்பதாம். 26

7-வது சுலோகம் கன்னியாலக்ன நவாங்கிசையின் பலன்.

கன்னிலக்கினங் காரிழையங்கிசம்
துன்னுபூமியிற் ருேன்றும்மகவது
மென்னுமாண்மைக ளில்லாநபுஞ்சனுய்
நன்னிநிற்பவ னுகவுரைத்திடே.

இ-ள். கன்னி லக்கினமாகியும் கன்னி நவாங்கிசையுமாக விருக்கப் பிறந்தவன் புருஷர்களைப்போல ஆண்மை சவுரிய மில்லாதவனுய் அலியாக விருப்பா னென்பதாம். 27

7-வது சுலோகம் துலாலக்ன நவாங்கிசை பலன்.

துலையெனும்மோரை தோன்றுமமிசத்தில்
நலமதாகவே நானிலம்வந்தவன்
பிலமிதேற்று பெருஞ்சமர்வென்றிடும்
தலைவனவன் தான்சமர்த்துள்ளனே

இ-ள். துலா லக்கினமாகியும் துலா நவாங்கிச மாகியும் இருக்கப்பிறந்தவன் சிம்மத்தைப்போல சரீரவலிவும் உடையவனுகிய யுத்தஞ்செய்து வெற்றியை யடையும்ரணசூரன் சமர்த்துள்ளவனுக விருப்பானென்பதாம்.

7-வது சுலோகம் விருச்சிகலக்ன நவாங்கிசைபலன்

வீரமேயுறும் விர்ச்சிகலக்னமாய்
தீரமாமதே செய்யவமிசத்தில்
காரணியதிற் ருனேபிறந்தவன்
பாரந்தூக்கியே பாரிற்சீவிப்பனே

இ-ள். விருச்சிக லக்னமாகவும் விருச்சிக நவாங்கிசமாகியு மிருக்கப் பிறந்தவன் சுமைமுதலாகியபாரங்களைத் தூக்கிச் சீவிப்பனுகுமென்பதாம்

7-வது சுலோகம் தனுசுலக்ன நவாங்கிசைபலன்

தனுசுவிலக்கினம் சாபவமிசமாய்
இனிமையாகவே யிப்புவிவந்தவன்

புனிதமற்றோன் புகல்வேலைக்காரனாய்
தனியனாமிவன் றாரணிதன்னிலே

இ-ள். தனுசு லக்கினமாகியும் தனுசு நவாங்கிசையுமாகி யிருக்கப்பிறந்தவன் பொருளில்லாதவனாகியும் இனி ஒருவருக்குக் கீழ்ப்படிந்தேவல் பணிவிடை செய்யக் கூடியவனாகியு மிருப்பா னென்பதாம். 30

7-வது சுலோகம் மகரலக்ன நவாங்கிசைபலன்

மகரலக்கினம் மானேயமிசமாய்
செகமுதித்தவன் றீயகன்மங்களை
மிகவேசெய்பவன் மேதினிதன்னிலே
அகமுடையவ னாகுமிப்பாபியே.

இ-ள். மகாலக்னமாகவும் மகர நவாங்கிசையுமாக விருக்கப் பிறந்தவன் கெடுதியான காரியங்களைச் செய்பவன் ஆணவமுடையவன் பாபியென்று சொல்லப்படு மென்பதாம். 31

9-வது சுலோகம் கும்பலக்ன நவாம்சைபலன்

சாடிலக்னம் நான்குடவங்கிசம்
நீடியபூவில் நேர்பெறவந்தவன்
தேடியேகொலை செய்திடுநெஞ்சகங்
கூடிவாழ்பவன் குணமிலாச்சேயனே.

இ-ள். கும்ப லக்கினமாகியுங் கும்ப நவாங்கிசமாகியும் இருக்கப்பிறந்தவன் கொலை செய்கிறவன் கடினமாகவும் இரக்கம் தயவு மில்லாத நெஞ்சம் உடையவனாக விருப்பா னென்பதாம். 32

7-வது சுலோகம் மீனலக்ன நவாங்கிசைபலன்

மீனலக்கனம் மேவுமங்கிசம்
நானிலத்தில் நலமொடும்வந்தவன்
மானமற்றவன் மந்தன்மதியிலான்
தானதிசூரன் சற்றும்பயமிலான்.

இ-ள். மீனலக்கின மாகியும் மீன நவாங்கிசையாகியு மிருக்கப் பிறந்தவன் மானமில்லாதவன் பக்தி இல்லாத மூர்க்க குணத்தன் யுத்தம் செய்யச்சூரன் பயமில்லாதவன் தைரியமுள்ளவ னென்பதாம். 33

7-வது சுலோகம். வசனம்.

இந்த மேஷாதி ராசிகளில் மேஷாதி நவாமிசை வர்க்கோத்த மாம்சையும் கூடி வர்க்கோத்த மாம்சையில் பிறந்தவர்களுக்காம் அதெப்படி என்றால் மேஷ லக்கினமாய் மேஷ நவாமிசமாயிருக்கப் பிறந்தவன் இருட்டுக்கு தலைவனாகியுஞ் சிரேஷ்டன் இந்தவிதமாகவே மற்றராசிகளுக்கும் தெரியவேண்டியது. 34

7-வது சுலோகம் பலாபல விபரம்

சந்திரன்னீராறு தானராசிப்பலன்
அந்தமாய்த்துவாதச வங்கிசத்திற்குமே
சொந்தமாயுரை சொற்சோர்விலாமலே
இந்தவாறுபலனே யுரையூகமே,

இ-ள். மேஷமதியாகப் பன்னிரண்டு இராசிகளுக்குப் பலன்களும் துவாதசாமமிசைகளும் அதுபோலவே பலன்சொல்லவேண்டியது அதெப்படியென்றால் மேஷத்தில் சந்திரனிருக்கப் பிறந்தவனுக்கு எந்தப்பலன் சொல்லப்பட்டதோ அந்தப்பலனே மேஷ துவாதசாம்சைக்கும் சொல்லவும்மற்ற இராசிகளுக்கு இந்தவிதமே யூகித்துச்சொல்லவேண்டிய தென்பதாம். 35

8-வது சுலோகம் குஜதிரிம்சாம்சைப்பலன்

குருதியுந்தனதுசுயத்திரிசாம்சம் கொண்டிடவுதித்திடும்பாலன்
மருவியமனையாள்சுகிதனுமாகி மாதிரம்வீரியத்தோடும்
திருவணிபூண்பான்குணமுதாரத்வம் தேசுளசடமதுவேற்று
வருபவன்மிக்கசரசமதுடனே வாழ்பவனுமெனப்பகரே.

இ-ள். குருதி யென்னப்பட்ட செவ்வாய் தனது சுயதிரிம் சாம்சையிலிருக்கப் பிறந்தவன் குணங்களாவன மனையாள் சுகிதனுகியும் வீரியம் பூஷணம் சௌரியம் அழகும் சரசமான குணமுமுள்ளவனுக விருப்பானென்பதாம். 36

8-வது சுலோகம் சனிதிரிம்சாம்சைபலன்

மந்தனுந்தனதுசுயத்திரிம்சாம்சம் மருவிடத்தோன்றியபாலன்
சந்ததந்துக்கிமலினனுமாவான் சார்ந்திடும்நோயுறுந்தேகம்
விந்தையாய்மனையாள்மரணமுமாவாள் விரும்புவனும்பரதாரம்
அந்தமாய்க்கிரகந்தனிற்பரிவார மதிலமர்குருரனுயறியே

இ-ள். சனி தனது சுயத்திரிம் சாம்சையில் இருக்கப் பிறந்தவன் சதாகாலமும் துக்க முள்ளவன் நோயுள்ள தேகன் மலினமானவன் மனையளும் மரணமாவாள் பரதாரகமனனுக விருப்பான் ஆகிலும் கிரகமும் பரிவாரங்களையு முடையவனுக விருப்பானென்பதாம். 38

9-மது சுலோகம் குருதிரிம்சாம்சைபலன்,

பொன்னவன்றனதுசுயத்திரிம்சாம் சம்புக்கிடப்பூமியினுதித்தான்
நன்மொழியுடையான்தேஜசும்போகம் நாடுமுற்சாகமுங்கீர்த்தி
உன்னிடுந்தனமும்சவுக்கியநினைவு முடையவன்நோயிலாவாழ்வு
என்றிடவுலகில்சகலரும்போற்ற வியல்போடுமிருப்பவனிவனே

இ-ள். குரு தனது சுயத்திரிம் சாம்சையிலிருக்கப் பிறந்தவன் குணங்களாவன நன்மையான வார்த்தையும் நயமாக பேசுபவன் அழகுங் காந்தியு

முள்ளவன் போகவந்தன் உற்சாகமுங் கீர்த்தியுமுள்ளவன் தனவந்தன் சவுக்கியவான் ஞாபக சக்தியுள்ளவன் ரோயில்லாத சரீரமுள்ளவன் சர்வஜன பூஜிதனுகவு மிருப்பா னென்பதாம். 39

9-வது சுலோகம் புத்திரிம்சாம்சைபலன்,

மேதையான்றனதுசுயத்திரிம்சாம்சம் வீற்றிடப்பிறந்திடுமகவும்
நீதமதறிந்துகாவியமுரைப்பான் கேடிலாபுத்திமானுகும்
வேதசாஸ்திரங்களறிந்துமேநடக்கும் வித்தகன்வாக்குசாதுரியன்
சாதகன்சரசன்சிற்பநூலாய்ந்தும் தர்மநூல்வழிநடப்பவனே

இ-ள். புதன் தனது சுயத்திரியம் சாம்சையிலிருக்கப் பிறந்தவன் நீதவாத்தியங்களறிந்தவன் புராணகாவியம் வேதசாஸ்திரம் தெரிந்தபுத்திவான் ஞானமுள்ளவன் சாதுரியமான வாக்கு உடையவன் சாத்மீக குணம் உள்ளவன் சரசன் சிற்பசாஸ்திர மறிந்தவன் தர்மசாஸ்திரமறிந்து அந்தவழியே நடக்கக்கூடியவனுக விருப்பா னென்பதாம் 40

10-வது சுலோகம் சுக்ரதிரிம்சாம்சைபலன்

புகரவன்தனதுசுயத்திரிச்சாம்சம் புக்கிடவவனியிலுதித்தான்
சுகமுமாரோக்யம்தனசவுபாக்யம் சுந்தரமாஞ்சுகதேகன்
மிகசுதருடையான்காமமாதிகளில் விருப்புறுநெஞ்சனுமாவான்
இகமதிற்குரூரனுயிவனிருப்பா னென்றுமேபலனதியம்பே

இ-ள். சுக்கிரன் தன்சயத்திரிம் சாம்சையிலிருக்கப் பிறந்தவன் சுகமும் ஆரோக்கியமும் தனம் சவுபாக்கியம் அழகு சவுந்தரியமும் அனேகபுத்திரரும் காமத்தில் ஆசையுள்ளவனுகியும் குரூரனுக விருப்பா னென்பதாம்

10-வது சுலோகம் குஜதிரிம்சாம்சையில் சூரியசந்திரனிருந்தபலன்

சேயவன்றிரிம்சாமிசை சேருங்கோள்
நாயரென்றிடில் ரணசூரனுகுவன்
நேயமாய்மதிநிற்க வாலஸ்யனும்—
ஓயவிப்பலன் சொல்வதுயூகமே

இ-ள். செவ்வாயின் திரிம்சாம்சையில் சூரியன் இருக்கில் யுத்தஞ்செய்பவன் ரணசூரனு யிருப்பான் சந்திரனிருக்கில் ஆலஸ்ய முள்ளவன் சோம்பேரியாக விருப்பா னென்பதாம் 42

10-வது சுலோகம் சனிதிரிம்சாம்சையில் சூரியசந்திரனிருந்தபலன்

சனியவன்றிரிம் சாங்கிசைதானதில்
பனியதின்பனை பற்றக்குரூரனும்
இனியதிங்களுக் கிம்சைபடுபவன்
தனியதாகும்பலனதைச் சாறுவாம்

இ-ள். சனியின் திரிம்சாம்மிசை தன்னில் சூரியனிருக்கப் பிறந்தவன் குரூரனுக விருப்பவனும் சந்திரனிருக்க இமிசைபடுபவனுக விருப்பா னென்பதாம். 43

10-லது சுலோகம் குருதிரிம்சாம்சையில் சூர்யசந்திரனிருந்தபலன்

பொன்னனுர்க்கு புகல்திரிம்சாம்சையில்
நன்னுங்கோட்குமே நாட்டும்பலன்களும்
துன்னுசெங்கதிற் றாயனுஞ்சற்குணன்
தன்னவன்றுகில் தனபதியாவனே

இ-ள். குரு திரிம்சாம்சையில் சூரியனிருக்கில் நல்ல சற்குணவந்தன் சந்திரனிருக்கில் தனவந்தன் பிரபுவாக விருப்பா னென்பதாம் 44

10-வதுசுலோகம் புதன்திரிம்சாம்சையில்சூர்யசந்திரனிருந்தபலன்

தூதனுர்க்குறுந் தூயத்திரிம்சாம்சையில்
ஆதவன்செல வதிகசவுக்யனும்
நீதமாய்மதி நின்றிடப்பண்டிதன்
கீதவாத்தியங் கீர்த்தியடைவனே

இ-ள். புதன் திரிம்சாம்சையில் சூரியனிருக்கப் பிறந்தவன் அதிக சவுக்கிய முடையவன் சந்திரனிருக்கப் பண்டிதன் கீதவாத்திய வல்லவன் கீர்த்தியுடையவனுக விருப்பா னென்பதாம் 45

10-வதுசுலோகம் சுக்ரதிரிம்சாம்சையில் சூரியசந்திரனிருந்தபலன்

சுக்கிரன்திரிம்சாம்சை தனிலுறும்
பக்கரையெனில் பாலனழகுளான்
மிக்கமாமதிமேவ வுலகதில்
தக்கபேர்க்குமே தானிவன்னேசனே

இ-ள். சுக்கிரன் திரிம் சாம்சையில் சூரியனிருக்கப்பிறந்தவன் அழகு சவுந்தரீய முடையவன் சந்திரனிருக்கப் பிறந்தவன் உலகத்தில் சர்வ ஜனப்பிரியனுக விருப்பா னென்பதாம். 46

படலச்செய்யுள் தொகை.

ஆசிரயோகந்தானு மவனியில்மானிடர்க்காய்
நேசமாய்செய்யுளாக நிகழ்த்தினேனுற்பத்தாராக
தேசமாம்மலையிராசன் சிறந்தபட்டணத்திற்சீராய்
வாசமாய்வாழுகின்ற வயித்தியலிங்கந்தானே.

இருபத்தொன்றுவது

ஆஸ்ரயோகப்படலம் முற்றிற்று.

# மங்களேஸ்வரீயம்.

இருபத்திரண்டாவது

# காரகயோகப்படலம்.

### 1-வது சுலோகம், வசனம்

இந்தப் படலத்தில் கிரக மிஸ்ரம பலன் சொல்லப்படும். முதலாவது ஸ்வக்ஷேத்திர மூலத்திரிகோண உச்சமாயிருந்த கிரகங்கள் எத்தனையோ அத்தனையும் லக்னாதி கேந்திரங்களிலிருந்தால் அந்த கிரகத்திற்கு அன்யோன்யகாரகராவார்கள் ஒருவருக்கொருவர் என்பதாம்.

பத்தாமிடத்திலிருந்த கிரகம் அதிகமாக காரகத்துவமடைந்தவர் ஆனால் ஸ்வக்ஷேத்திர உச்சமூலத் திரிகோணத்தில் இருந்த ஒரு கிரகம் லக்னாதி கேந்திரங்களில் ஒரு கேந்திரத்திலிருக்க மற்றொரு கிரகம் இந்த விதமாகவே ஸ்வக்ஷேத்திர உச்சமூலத்ரிகோணங்களில் ஒரு ஸ்தானத்திலிருந்து மற்றொரு கேந்திரத்திலிருந்தாலும் இந்த இரண்டு கிரகமும் ஒருவருக்கொருவர் காரகராவார்கள்.

இப்படி எத்தனை கிரகமிருக்குமோ அத்தனை கிரகத்திற்கும் ஒருவருக்கொருவர் காரகர் இந்த காரகர்களில் எந்த கிரகம் தசம கேந்திரமிருக்குமோ அந்த கிரகவிசேஷமாக காரகத்தைவகித்திருந்து கொடுக்கும் என்பதாம். 1

### 2-வது சுலோகம், வசனம்.

இந்த காரகயோகத்திற்கு ஒரு உதாரணஞ் சொல்வோம் சந்திரன் ஜென்மலக்கினமான கடகத்தில் இருக்க குஜன் சனி சூரியன் பிரகஸ்பதி இந்த நாலுபேரும் உச்சம் பெற்றிருக்க இந்த ஐந்துபேரும் ஒருவருக்கொருவர் காரகராவாரென்று சொல்லப்படும்.

இந்த யோகத்தில் ஸ்வக்ஷேத்திர மூலம் லக்கினம் ஆன கடகத்தில் சந்திரனும் ஏழில் குஜனும் நாலில் சனியும் பத்தில் சூரியனும் லக்கின கேந்திரத்தில் குருவும் இப்படியிருக்க ஒருவருக்கு ஒருவர் காரகராவார்கள் என்பதாம்.

லக்கினத்திலிருந்த கிரகத்திற்கு பத்தாமிடத்திலிருந்த சமஸ்த கிரகமும் காரகராவார்கள் ஆனால் ஸ்வக்ஷேத்திர மூலத்ரிகோணத்திலிருந்து லக்கினத்திலிருந்த கிரகத்திற்கு நாலு பத்தில் இருந்த கிரகங்கள் ஸ்வக்ஷேத்திர உச்ச மூலத்ரிகோணங்களிலிருந்தாலும் காரகத்தை கொடுக்கும். லக்கினத்திலிருந்த கிரகத்திற்கு நாலுபத்திலிருந்தவர்கள் காரகராவார்களென்பதாம்.

## 3-வது சுலோகம், வசனம்

மற்றொரு காரகலக்ஷியத்திற்கு உதாரணஞ்சொல்வோம் அதெப்படியென்றால் ஆக்ஷி உச்சம் மூலத்ரிகோணம் இந்த ஸ்தானங்களிலொருதானத்திலிருந்த கிரகம் காரகத்தின் எண்ணிக்கைக்குகாரணம் கேந்திரஸ்தானத்திலிருந்த கிரகம் காரணமல்லாதானதால் லக்ஞதி கேந்திரத்திற்கு அடைப்பாகவிருந்தாலும் ஆக்ஷி உச்சமூலத்ரிகோணங்களிலிருந்த கிரகங்களுக்கு பத்தாமிடத்திலிருந்த ஸ்வக்ஷேத்திரமில்லாதிருந்த கிரகமாவது பத்தாமிடத்ததிபதிக்கு மித்ரக்கிரகமாவது தக்காலமித்ரத்வம் அடைந்த கிரகமாவது அப்படிக்கிருக்கும் கிரகமாவது காரகக்கிரகமென்று சொல்லப்பட்டது.

இந்தவிதமாக ஆக்ஷி உச்சமூல த்ரிகோணமடைந்த கிரகத்திற்கு ஸ்வக்ஷேத்திராதிகளில்லாத கிரகத்திற்கு ஸ்வக்ஷேத்ராதியடைந்த கிரகம் காரகம் அல்லவென்று தெரியவும்,

## 4-வது சுலோகம், வசனம்

இந்த காரக வெண்ணிக்கைக்குப் பிரயோசனம் சொல்லப்படும் அதெப்படியென்றால் எந்த புருஷ ஜெனனத்திற்கும் லக்கினத்தில் வர்க்கோத்தமாங்கிசையிலாகுமோ எவன் ஜெனனகாலத்தில் சந்திரன் வர்க்கோத்தமாங்கிசையிலிருப்பானோ அந்த புருஷஜெனனம் சுகமானதென்பதாம்,

சூரியனிருந்த இராசிக் கிரண்டாமிடம் வேசிஸ்தான மென்னப்படும் அந்த வேசிஸ்தானத்தில் புதன் குரு சக்ரனிவர்களி லொருவரிருந்தாலும் அந்த செனனம் சுபமென்று சொல்லப்படு மென்பதாம்,

லக்ஞதிபதிக்கு கேந்திரம் நாலிலும் கிரகங்களிருந்தால் அந்த சாதகம் சுபமென்னப்படும் அப்படி கேந்திரங்களில் சுபக்கிரக மிருந்தாலும் சுபம் எவன் சென்மகாலத்தில் காரக்கிரகம் சம்பவித்திருக்கிறதோ அந்த சாதகம் சுகமென்னப்பட்டது இந்தவிதமாக குணதிக்கத்தையறிந்துசுபாதிக்கத்தை சொல்லுகிறதென்பதாம். 4

## 5-வது சுலோகம், வசனம்

எவ்வனகாலத்தில் சுகமுண்டாகும் யோகமும் திசாதிபதி பலபாகத்தின்காலமும் சொல்லப்படும் அதாவது சென்மகாலத்தில் சந்திரனிருந்த ராசியி னதிபதியும் சென்மலக்கினதிபதியும் குரு இந்தமூவரில் ஒருவர் கேந்திரமிருந்தால் எவ்வனத்தில் சுகம்கொடுப்பார் இந்தமூவரும் கேந்திரத்திலிருந்தால் அதிக சுகத்தைக் கொடுப்பாரென்பதாம்,

பிருஷ்டோத்யராசி சிரவுதயராசி உபயோத்யராசிகளிலிருந்த கிரகம் கிரமமாக திசாந்தத்திலும் திசாரம்பத்திலும் திசாமத்தியிலும் பலன்கொடுப்பார் ஆனால் திசாநாதன் திசைப்பிரவேசகாலத்தில் பிருஷ்டோதய

ராசியாகிய மேஷரிஷபம் தனுசு மகரம் இவைகளிலிருந்தால் அந்ததிசை சுபமாகிலும் அசுபமாகிலும் அந்த திசை அந்தியத்தில் கொடுப்பார் உபய உதயமான மீனத்திலிருந்தால் திசைமத்தியில் கொடுப்பார். சிரோதயராசியிலிருந்தால் திசை ஆரம்பத்தில் கொடுப்பார் அந்ததிசைவருஷத்தைமூன்றுபாகம்செய்து பிரித்துக்கொள்ளவும் இதுகார்க்கேயர்வாக்கு என்பதாம்.

6-வது சுலோகம், வசனம்

அஷ்டவர்க்க காலமாவன சூரியன் செவ்வாய் பிரவேசகாலத்தின் சாரவசத்தினு லெந்தராசியிருந்தாவது சுபமாவது அசுபமாவது அஷ்டவர்க்கபல னீவாரோ அந்தராசியில் முதல் திருதியாம்சத்திலிருந்தால் அப்போது ரவிகுஜன் பலனீவார் குரு சுக்கிரன் அந்த ராசியில் உள்ள மத்திய திரிதியாம்சையில் பலனீவார்கள் சனி சந்திரன் அந்தராசியில் கடைசி திரிதியாம்சத்திலிருந்து பலனீவார் புதன் எப்போதும் பலனீவார் அந்த ராசியி லெத்தனை தின மிருந்தாலும் அத்தனை தினமும் பலனீவார், 6

இருபத்திரண்டாவது

காரகயோகப்படலம் முற்றிற்று.

---

# மங்களேஸ்வரீயம்.

இருபத்து மூன்றுவது

## அரிஷ்டாயோகப்படலம்.



1-வது சுலோகம் களத்திர புத்திரபலன்.

செனமலக்கினத்தினுலுந் திங்களாரிராசியாலும்
நன்மையேழைந்தாம்ராசி நாதனல்லதுநாதன்றன்
உன்னிதப்பார்வையாலு லுண்டாகுந்தாரம்மக்கள்
தன்னுலுஞ்சம்பத்தோங்கும் தாரணிதனிலேதானே.

இ-ள். செனமலக்கின முதலாகியும் சந்திரலக்கினத்தையும் ஐந்தாமிராசி ஏழாம் ராசியதிபதியாலும் ஏழாம்ராசி ஐந்தாமிராசியதிபதி இந்தஇருவரில் ஒருவரால் பார்க்கப்பட்டால் களத்திர புத்திர சம்பத்துண்டாகுமென்பதாம். 1

1-வது சுலோகம், களத்திர புத்திரபலன்.

இவ்விதமில்லாவிட்டா லெழிற்முரமக்களில்லை
அவ்விதம்திசென் மத்திற் காகுமேழாமிடத்தை
எவ்விதசுபர்நோக்கல்லா லேழாதியேழைநோக்க
அவ்விதமணமேயுண்டா மல்லாதுமணங்களில்லை,

இ-ள். இந்தவிதமாக இல்லாதிருக்கில் புத்திர களத்திரமில்லை, சென்மலக்கினத்திற்காவது சந்திரலக்கினத்திற்காவது சப்தசமஸ்தானம் சுபதிருஷ்டியிருந்தாலும் சுயராசியாதிபதி திருஷ்டியிருந்தாலும் கலியாணமுண்டாகும். அப்படி இல்லாதபக்ஷத்தில் கலியாணமில்லை, உதாரணம் யவனேஸ்வரரால் சொல்லியிருக்கிறதென்பதாம். 2

1-வது சுலோகம் யோகபலன்

இந்தநற்கதிய்தாக வீராறுவோரைகட்கும்
சந்திரன் தன்னைக்கொண்டும் சாற்றிடுமுதயங்கொண்டும்
சுந்தரப்புவியிலுள்ள தூயநல்மானிடர்க்குச்
சொந்தமாய்ப்பலனுரைக்க சூக்குமவழியிதாமே.

இ-ள். இப்போது சொன்னவிதமாகவே பனிரண்டு ராசிகளின்பாவத்துக்கும் லக்ன சந்திரனைவைத்து பலன்சொல்லவேண்டியது இந்தப் பிரகாரம் என்பதாம். 3

1-வது சுலோகம் களத்திரமரணம்

உதயலக்கினமேகன்னி யொளிகதிரதனிற்பற்ற
முதுமகன்கயல்மீதேற மொழிகுவேனதின்பலன்கள்
பதியறில்மனையாளுக்குப் பற்றிடுமரிட்டமென்று
விதியமைத்திட்டான்பிரமன் விபரத்தையறிந்திடாயே.

இ-ள். சென்மலக்கினம் கன்னியாகி அந்தக்கன்னியில் சூரியனிருக்க மீனத்தில் சனியனிருக்கப் பிறந்த சாதகன் களத்திரம் மரணமாகுமென்பதாம். 4

1-வது சுலோகம் புத்திரமரணம்

கங்கையாமோரைதன்னில் நலமுடன் செனித்தபேர்க்கு
அங்குசனுச்சமாக வாதனுதயம்நிற்க
இங்கிதமகவுதித்தா லிறந்துமேபோகமுன்னாள்
பங்கயனமைத்தானென்று பகருவாயகிலத்தோர்க்கே.

இ-ள். கன்னியாராசி சென்மலக்கினமாய் அதில் சூரியனிருக்க மகரத்தில் செவ்வா யுச்சமாயிருக்கப்பிறந்தவனுக்கு புத்திரன்பிறந்து மரணமாகுமென்பதாம். 5

2-வது சுலோகம் களத்திரமரணம்.

சுக்கிரன்றனக்குநாலில் துயருறுமட்டமத்தில்
வக்கிரன்முதலாம்பாபர் வகைபெறவிருக்கவந்தோன்
மிக்கதோர்மனையாளுக்கு விதியதுமுடிந்ததாலே
அக்கினியதனற்சாக வயனுமேயடைத்திட்டானே.

இ-ள். சுக்கிரனுக்கு நாலிலாவது எட்டிலாவது குஜன்சனியிருந்தால் அக்கினியால் பாரிமரணம். ஆனால் சுக்கிரனுக்கு நாலிலும் எட்டிலும் செவ்

வாய் சனி பாபர் இருக்கப்பிறந்தவன் தான் ஜீவித்திருக்க தன்மனையாள் அக்கினியினால் மரணமாவாளென்பதாம். 6

2-வது சுலோகம் களத்திரம் மேட்டிலிருந்துவிழ மரணம்.

சுக்கிரன்றனக்கிரண்டில் தயருறும்விரயந்தன்னில்
பக்கரைசனியனேடும் பார்மகனிவரேநிற்கில்
தக்கதன்மனையாள்தாமும் சதியினால்மேட்டினின்று
உக்கிரத்துடனேவிழ்வா ளுயிரதுநீங்குந்தானே

இ-ள். சுக்கிரனுக் கிரண்டாமிடம் பன்னிரண்டாமிடத்தில் சூரியனா வது சனியாவது செவ்வாயாவதிருக்கப் பிறந்தவன் களத்திரம் மேட்டி லிருந்து கீழேவிழுந் துயிர்விடுவாள் என்பதாம். 7

2-வது சுலோகம் களத்திரம் கயிற்றால் மரணம்.

புகரவன்சுபரைச்சேர்ந்து புகழுடனிருக்கும்போது
புகரவன்றன்னைநல்லோர் பொற்புறநோக்குங்காலம்
புகலுவோமுலகுவந்த புண்ணியன்களத்திரந்தான்
புகலுறுங்கயிறுதன்னால் போக்குவாளுரைத்தானே.

இ-ள். சுக்கிரன் சுபக்கிரகத்தை கூடியிருக்க சுபக்கிரகமேசுக்கிரனைப் பார்க்கப்பட்டிருக்கப் பிறந்தவனுடைய மனையாள்கயிற்றினால் கட்டுப்பட் டாவது அல்லது கயிற்றினால் அக்குப்போட்டுக்கொண்டாவது மரணமா வாள் உதாரணம் கார்க்கியரால் சொல்லப்பட்டிருக்கிற தென்பதாம். 8

3-வது சுலோகம் நேத்திரவீனர்கள்

இரவியுமதியுமாறு மீராறில்மாறிநிற்க
திரமுடனுதித்தபோக்கும் செல்வனின்மனையாளுக்கும்
விரவிடுமொருகண்பார்வை வேறுகண்ணூனமாகத்
தரணியிலிருப்பாரென்று சதுர்முகனமைத்ததாமே.

இ-ள். சந்திரன் ஆறிலும் சூரியன் பன்னிரண்டிலாவது அல்லது சந்தி ரன் பன்னிரண்டிலும் சூரியன் ஆறிலுமாவது மாறியிருக்கப் பிறந்தவன் களத்திரத்துக்கும் தனக்கும் ஒருகண்பார்வையும் மற்றொருகண் ஊனமா கியு மிருப்பா னென்பதாம். 9

3-வது சுலோகம் அங்கவீன களத்திரபலன்

செங்கதிர்பளிங்கைக்கூடித் திரமுடனேழினிற்க
தங்குமிப்புவியுதித்த சாதகன்றனக்குப்பெண்டீர்
அங்கமேவூனமாக வவனுக்குவுண்டோமென்று
பங்கயத்தேவன்முன்னாள் படைத்திட்டான்பாரின்மீதே.

இ-ள். சூரியன் சுக்கிரனைக்கூடி ஏழாமிடத்திலிருக்கப் பிறந்தவனுக்கு அங்கம் ஊனமுள்ள பெண்ணே இவனுக்கு களத்திரமாகவந்து சேரு மென்பதாம் 10

3-வது சுலோகம் அங்கவீன களத்திரம்,

கோணத்திலிரவிவெள்ளி கூடியேயிருக்கும்போது
காணுமிப்புவியுதித்த காளைக்கியோகந்தானும்
ஊனவேவங்கவீனத் துடனுறுமனையாள்தாமும்
பூணவேகிடைக்குமென்று புகலுவாய்புவியுளோர்க்கே,

இ-ள். சுக்கிரன் சூரியர்கள் ஐந்தாமிடத்திலாவது ஒன்பதாமிடத்திலாவது கூடிநிற்கப் பிறந்தவனுக்கு அங்கவீனமான களத்திரம் கிடைக்கும், உதாரணம் கார்க்கிவசன மென்பதாம் 11

4-வது சுலோகம் களத்திரமலடி செனனம்,

மந்தனேயுதயம்நிற்க மகிழுந்தேன்மீனண்டம்சம்
அந்தியமதிலேவெள்ளி யமர்ந்திடவைந்தேழாகில்
விந்தையாய்சுபரைவெள்ளி விரும்பியேகூடாக்காலில்
வந்தவள்மலடியாகும் மான்சேடியிடபத்தோரே,

இ-ள். சென்மலக்கினத்தில் சனியிருக்க விருச்சிகம் மீனம் கடகராசியின் அந்திய நவாங்கிசையில் சுக்கிரன்இருக்க லக்கினத்திற்குஐந்தாமிராசியல்லது ஏழாமிராசியாயிருந்தாலும் சுபக்கிரகத்தை சுக்கிரன்கூடாமலிருக்கப் பிறந்தவனுக்கு களத்திரம் மலடாகுமென்பதாம், இந்தயோகம் மகரம் கன்னி ரிஷப லக்கினத்தாருக் கென்பதாம் 12

4-வது சுலோகம் இருகளத்திரயோகம்,

கன்னிமான்விடையில்வந்த காளையின்களத்திரந்தான்
மன்னியமலடியென்று வகுத்தனன்முன்றேவிக்குப்
பின்வருபவட்குபிள்ளை பிறந்திடுமென்றுவேதன்
உன்னதமாயமைத்தா னெண்டொடியிரண்டாமொன்றே,

இ-ள். பதினோராவது கவியில் சொன்னபடி கன்னி மகரம் ரிஷபம் இவைகள் சென்மலக்கினமாகப் பிறந்தபேர்களுக்கு களத்திர மலடேதவிர சாதகன் மலடன் அல்லவென்பதாம். முன்வந்த களத்திரம் மலடாகும்பின் வருங் களத்திரத்திற்கு புத்திரவிர்த்தி யுண்டாகுமென்றறிய வென்பதாம்

4-வது சுலோகம் பிரமசாரி,

மதியவன்கலைகுறைந்து மக்கள்தானத்திருக்க
கதியினல்பாபர்சென்மம் களத்திரம்விரயந்தன்னில்
அதிபலமாகநிற்க வவனியிலுதித்தபேர்க்கு
பதியதில்களத்திரமில்லான் பகருவோம்பிரமசாரி,

இ-ள். அமரபக்ஷசந்திரன் சென்மலக்கினத்திற்கு ஐந்தாமிடத்திலும் பாபக்கிரகம் சென்மலக்கினம் ஏழாமிடம் பன்னிரண்டாமிடத்திலிருக்கப் பிறந்தவன் கலியாணஞ்செய்யாமல் பிரமசாரியாக விருப்பானென்பதாம்

5-வது சுலோகம் பரஸ்திரீயுள்ளவன்,

சனியவன்செவ்வாயவர்க்கம் தங்கிடபிருகுதானும்
இனியலக்கினத்துக்கேழுக் கிறைவனுயிருந்தபோது
சனிநோக்கவலதுசெய்நோக்க தாரணியுதித்தபேர்க்கு
வனிதையர்மிகவாமென்று வழுத்துவாயவனிமீதே,

இ-ள். சனி குஜனுடைய வர்க்கத்திலிருக்க லக்கினத்துக்கு ஏழாமி டத்ததிபதி சுக்கிரனுனபோது அந்த சுக்கிரனைச் சனிநோக்க அல்லது செவ்வாய்நோக்கப் பிறந்தவனுக்குப் பரஸ்திரீகள் அதிகமாக விருக்குமென் றறிய வென்பதாம். 15

5-வது சுலோகம் விபசார பரஸ்திரீலோலன்,

சந்திரன்சனிசேய்கூடி சனிகுஜன்வர்க்கமேழில்
சொந்தமாயமர்ந்தபோது தூய்புகர்குருதியலது
மந்தனேக்கில்லாக்காலில் மானிலமதிலேசேயாய்
வந்தவன்பரஸ்திரீலோலன் மனையவள்சோரநாரி,

இ-ள். சந்திரன் சனி குஜனைக்கூடி ஒரு ராசியிலிருப்பாராகிலும் அப்படி சனி குஜனுடைய வர்க்கத்திலும் லக்கினத்துக்கு சப்தமத்திலுமிருந் தாலும் சுக்கிரனைக் குஜனாகிலும் சனியாகிலும் பார்க்கப்படா திருக்கப் பிறந்தவன் பரஸ்திரீ சம்போகமுள்ளவன் அவன் மனையாளும் பரபுருஷ சங்கமம் செய்பவளாக விருப்பாளென்பதாம் 16

5-வது சுலோகம் பிரமசாரி,

குருதிசுன்கூடிநிற்க குளிர்மதிபுகருக்கேழில்
குருதிசுன்னிருந்தகாலில் குழவியுற்பவிக்குமானல்
திருமணமில்லானுகி சீருளபிரமசார்யம்
உறுதியாயடைவாயென்று வுரைத்திடாயுலகிேனார்க்கே,

இ-ள். குஜன் சனிகூடி ஒருராசியிலிருக்க எந்தஸ்தானமாயிருந்தாலும் சுக்கிரனுக்கு அல்லது சந்திரனுக்கு ஏழாமிடத்தில் சனி குஜனிருக்கப் பிறந்தவன் விவாகமில்லாதவனுக விருப்பான் ஆனதினுலே பிரமச்சாரி யென்று சொல்லப்பட்டதென்பதாம் 17

5-வது சுலோகம் விர்த்தாப்பிய விவாகம்,

ஒருபெண்கோளொரு வாண்கோளுமோரிராசியிலேநிற்க
இருவர்க்குமேழிடந்தி லெரிவண்ணன்சனியுநிற்கில்
குருதிசுன்னவனைநல்லோர் குணமொடுகாணமுப்பில்
திருமணமுண்டாமந்தத் தேவியுமுபசரிப்பாள்,

இ-ள். ஒரு புருஷக் கிரகமும் ஒரு ஸ்திரீ கிரகமும் ஒரு ராசியிலிருக்க அது எந்த ஸ்தானமான போதிலும் அதற்கேழா மிடத்தில் சனிகுஜனி

ருக்க அவர்களை சுபர்கள் பார்க்கப் பட்டால் வாலிப யெவ்வனம் தவறி விர்த்தாப்பிய காலத்தில் விவாகமாகும் ஆனால் யெவ்வனகாலத்தில் பாரி இல்லாதிருந்த புருஷன் தன்பாரியாளால் விர்த்தாப்பிய காலத்தில் உப சரிக்கப்படுவான் என்பதாம். 18

5-வது சுலோகம் விர்த்தாப்பிய விவாகம்,

ஒரிராசியிலேசுங்கனுடு பதிதன்னைச்சார்ந்து
தேரிடவிவர்க்குவேழில் செவ்வாயுஞ்சனிநிற்க
கூறிடுமிவரைநலலோர் குறிப்புடன்னோக்காராகில்
பாரதில்பாவர்காண பகருஷிப்பதில்விவாகம்,

இ-ள். எந்தராசியாவது ஒருராசியில் சுக்கிரன் சந்திரனைக்கூடியிருக்க இவர்களுக்கேழில் சனிகுஜனிருக்க இந்த சனிகுஜனை சுபக்கிரகத்தினால் பார்க்கப்படாதிருக்க பாபியினால் பாரக்கப்பட்டால் விர்த்தாப்பியத்தில் விவாகமுண்டாகு மென்பதாம். 19

6-வது சுலோகம் புத்ரமரணம்,

பத்தினில்நிலவுதங்கப் பளிங்குவேழதிலேநிற்க
உத்ததோர்சுகத்திற்பாப ருற்றிடவுதித்தபேர்க்கு
நித்தியமகவுண்டானல் நிரியாணமாகுமென்று
சத்தியலோகம்வாழும் சதுர்முகன்சமைத்திட்டானே.

இ-ள். சென்ன லக்கினத்திற்கு பத்தாமிடத்தில் சந்திரனும் ஏழா மிடம் சுக்கிரனும் நாலாமிடம் பாபர்களும் இருக்கப் பிறந்தவனுக்கு உண் டாகும் சந்ததிகளெல்லாம் நசித்துப்போகு மென்பதாம். 20

6-வது சுலோகம் சித்திரக்காரன்,

புந்தியினுடனேகூடும் புகல்திரேக்காணந்தானு
மெந்தராசியிற்சம்பந்த மேற்குமோவந்தவோரை
விந்தையாய்லக்னகேந்திர மேவிடச்சனியன்னோக்க
வந்தவன்சிற்பமாய்ந்து வரைபவன்சித்ரந்தானே.

இ-ள். புதனுடன் கூடின திரேக்காணம் எந்தராசி சம்பந்தமானதோ அந்தராசி லக்கினகேந்திரங்களில் இருந்த சனியினால் பார்க்கப்பட்டிருக் கப்பிறந்தவன் சிற்பசாஸ்திரம் வாசித்துணர்ந்து சித்திரமெழுதி அதினால் ஜீவனம் செய்திருப்பா னென்பதாம். 21

6-வது சுலோகம் தாசிமகன்,

சென்மலக்கினந்தனக்குச் செப்புமீராறில்வெள்ளி
சுன்னவாங்கிசையிற்றங்கத் தோன்றினன்றனதுகோத்ரம்
மன்னியவடிமைவேலை வகையுடனேசெய்கின்ற
உன்னிததாசிக்தோதா னுதித்திடுமகவுதானே.

இ-ள். சென்ம லக்கினத்திற்கு பன்னிரண்டா மிடத்தில் சுக்கிரன் சனியின் நவாங்கிசையி லிருக்கப்பிறந்தவன் வமிசமானது பிரபு வீட்டில் வேலை செய்து ஏவற்பணிகள் செய்யும் வெள்ளாட்டியென்னும் தாசிக்குப் பிறந்தவனிவ னென்பதாம். 22

6-வது சுலோகம் நீசகருமம்,

உதயத்துக்கேழாமோரை யுடுபதிகதிரோன்னிற்க
கதிரவன்மதியை நீலன்கண்படவுதித்தகாளை
விதியதால்நீசகன்மம் மெத்தவும்புரிந்தின்னேனும்
பதியறிந்திடவிருப்பான் பலனதுவுரைத்திடாயே,

இ-ள். சென்மலக்கினத்திற் கேழாமிராசியில் சூரியன் சந்திரனிருக்க இந்தச் சூரியன் சந்திரனைச் சனி பார்த்தால் உலகத்தாரிகழும்படியாக நீசகிர்த்தியங்களைச் செய்திருப்பா னென்பதாம். 23

7-வது சுலோகம் வியாதியுள்ளவன்,

சுக்கிரன்குஜனுமேழிற் றுலங்கிடுகோள்கடன்னை
பக்கரைசனியுநோக்க பாரதிலுதித்தசெல்வன்
மிக்கவுமரைநோக்குள்ளான் வினையுறுநோயுங்கொண்டு
துக்கமுற்றிடுவானென்று துலக்கமாயுரைத்திடாயே,

இ-ள். சுக்கிரனும் குஜனும் சென்மலக்கினத்துக் கேழில் இருக்கிறவர்களை ஒவ்வொரு பாபக்கிரகத்தினு லென்பது சூரியன் அல்லது சனி நோக்கப் பிறந்தான் கண் அரைப்பார்வையும் வியாதியுமுள்ளவனாக விருப்பானென்பதாம். 24

7-வது சுலோகம் மூலம் பவுத்திரம்,

சந்திரன்பாவர்தம்மை சார்ந்தொருராசிநிற்க
இந்துவுந்தேள்நண்டம்ச மிருந்திடப்பிறந்தபாலகன்
சுந்தரச்சடத்தில்குய்யந் தொடர்புளநோயுங்கொண்டு
தொந்தரைப்படுவனென்று சூட்சுமமாயுரைத்திடாயே,

இ-ள். சந்திரன் பாபக்கிரகத்துடன்கூடி எந்த ராசியிலாவது கடக விருச்சிக நவாங்கிசையி லிருக்கப் பிறந்தவன் சரீரத்தில் குய்யபிரதேசம் தனிலே மூலம் பவுத்தரமென்று சொல்லப்பட்ட வியாதி யுண்டாகி அதினால் உபத்திரவப்படுவா னென்பதாம். 25

7-வது சுலோகம் வெண்குஷ்டம்,

அம்புலிசென்மம்நிற்க வலரியுமேழிற்றங்க
கொம்பிசேயிரண்டிலல்லது கோதறுமீராறுநிற்க
தெம்புடனுதித்தசேய்க்கு தேகத்தில்வெண்குஷ்டத்தால்
வெம்பியேதிரிவானென்று வேதனுமமைத்ததாமே,

இ-ள். சந்திரன் ஜென்ம லக்கினமிருக்க சூரியன் ஏழாமிடத்திலிருக்க சனி செவ்வாய் இரண்டாமிடம் அல்லது பன்னிரண்டாமிடத்திலிருக்கப் பிறந்தவன் சரீரத்திலே வெண்மை நிறமுள்ள குஷ்டநோயுண்டாகி அதினாலே வெதும்பி மனத்துயரடைந்திருப்பானென்பதாம். 26

7-வது சுலோகம் அங்கவீனம்

பத்திலேசோமனேற பார்மகன்களத்திரத்தில்
மித்திரன்றனக்கிரண்டில் மேற்கோளுந்தானிருக்க
இத்தகைகோள்கடன்னு லிவருக்குப்பலனேதென்றால்
மெத்தவுமங்கவீனன் விளங்குசாதகனுந்தானே.

இ-ள். பத்தாமிடத்தில் சந்திரனும் ஏழாமிடம் செவ்வாயும் சூரியனுக்கிரண்டில் சனியுமிருக்கப் பிறந்தவன் அங்கவீனனாக விருப்பானென்பதாம். 27

8-வது சுலோகம் க்ஷயம் முதலிய நோய்

திங்களுக்கிருபுறத்தும் சேய்சனிமகரப்பானு
தங்கிடமகவாய்வந்தான் சயமொடுசுவாசகாசம்
அங்கத்தில்மாம்சகண்ட மடைந்திடுங்குன்மக்கட்டி
பொங்கிடுபீலிகையும் புகலுமிப்பிணியுள்ளானே.

இ-ள். சந்திரனுக்கு இருபுறத்திலும் சனி செவ்வாய் இருக்க சூரியன் மகரராசியில் இருக்கப் பிறந்தவன் சுவாசகாசம் க்ஷயரோகம் இடது பக்கத்திலுள்ள மாம்சகண்டமான ரோகம் குன்மம் வயிற்றில் கட்டிபீலிகை ரோகம் இவைகளுடையவனாக விருப்பானென்பதாம். 28

8-வது சுலோகம் க்ஷயரோகம்

பருதியில்லதிலேதிங்கள் பற்றிடக்கடகப்பானு
உருதியாயமரவல்லா லுயரமிசமுமிவ்வாறாய்
பெருமையாயிருக்கவந்தான் பிணியதுசயத்தினாலே
தரணிமீதிருந்துவாடச் சதுர்முகனமைத்ததாமே.

இ-ள். சிம்மராசியில் சந்திரனும் கடகத்தில் சூரியனுமிருக்கப் பிறந்தவன் க்ஷயம்காசமென்னும் வியாதியினால் துன்பப்பட்டிருப்பான் உதாரணம் கார்க்கி வசனம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதாம். 29

8-வது சுலோகம் க்ஷயரோகம்.

கொண்டலிலிரவிசோமன் கூடியேயிருக்கவல்ல
சண்டனும்மதியும்சிங்கம் சார்ந்திடுங்காலந்தன்னில்
விண்டலமதிலேவந்தான் வினையினால்சயரோகத்தை
கொண்டுதுற்பலனுளாய் குவலயத்திருப்பனாமே.

இ-ள். சூரியனும் சந்திரனும் கூடி சிம்மத்திலிருந்த போதிலும் அல்லது கடகத்தில் சூரியன் சந்திரன் கூடியிருக்கப் பிறந்தவன் க்ஷயரோகத்தினால் வருந்துபவனும் ஆகிலும் சரீரபலமில்லாதவனாகுமென்பதாம். 30

9-வது சுலோகம் குஷ்டநோய்

சந்திரனெவிடத்தேனும் தனுவம்சமைந்தாய்சிங்கம்
சொக்தமீன்மேடஙண்டு சுராவமிசத்திலொன்றில்
மந்தன்சேயவனைக்கூட வல்லதுவவரைநோக்க
வந்திடுங்குஷ்டநோயால் வாடுவானென்றுகூறே

இ-ள். சந்திர னெந்த ராசியிலாவது தனுசு ஐந்தாம் அமிசமான சிம்ம த்திலாவதுமீனம் மேடம் கடக மகரம் இந்த நவாங்கிசைகளி லொன்றி லிருந்தாலும் அல்லது சனி குஜனுடன் கூடியிருந்தாலும் அல்லது சனி குஜனல் பார்வை யடைந்தாலும் குஷ்டரோகம். சுபர்கள் பார்க்க தூரத ரோகமுண்டாகு மென்பதாம், 31

9-வது சுலோகம் துரதரோகம்

என்னுமிவ்விதத்தினி லிருந்திடுமதியைத்தானும்
நன்னயச்சுபரேகாண நற்சுதனுகவந்தோன்
உன்னியதுரதரோக முற்றுமேதுயரடைந்து
இந்நிலத்திருக்கவேத னிவனையேசிருஷ்டித்தானே.

இ-ள். சந்திர னெந்தராசியி லிருந்தாலும் மீனம் மேடம் கடகம் மக ரம் இந்த நவாங்கிசைகளி லொன்றிருந்து அந்த சந்திரன் சனிகுஜனுடன் கூடியிருந்தாலும் பார்க்கப்பட்டாகிலு மிருக்க சுபர்களும் சந்திரனைப்பார் க்க துரதரோகம் உடையவனுக விருப்பான். உதாரணம் யவனேஸ்வரர் சொல்லியிருக்கிறுர் என்பதாம், 32

9-வது சுலோகம் குஷ்டரோகம்

நண்டுதேள்விடையும்புல்வாய் நாடுமிவ்வோரைகோணம்
கொண்டுவொவ்வோரிடத்தும் கொடியவரிருக்கவல்ல
அண்டியேநோக்கமுற்று லவனுக்குகுஷ்டரோகம்
பண்டுசெய்வினைதன்னுலே பாலற்குவந்ததாமே,

இ-ள். கடகம் விர்ச்சிகம் ரிஷபம் மகரம் இந்த ராசிகளில் ஒன்று திரி கோணமாகிய ஐந்தாமிடம் ஒன்பதாமிடமாக வந்தால் அந்த ராசியில் ஒவ் வொரு பாபிகளிருக்கவும் பாபிகளே அந்தப் பாபியை பார்க்கப் பிறந்த வனுக்குப் பூர்வசென்ம வினையினுலே இந்தக்கொடியவியாதியானது வந்த தாகும் அதாவது குஷ்டரோக மென்பதாம். 33

10-வது சுலோகம் வியாதிக்குறிப்பு.

கதிர்மதிசெவ்வாய்மந்தன் கணக்கிலாதெங்குற்றுலும்
விதியிணிகுடும்பமீராறு மேவிடுங்கோடகடன்னில்
அதிபலனுறுங்கோட்கட் கமைந்திடும்வாதம்பித்தம்
அதுகளாலந்தியத்தி லவதிகளடைவானுமே,

இ-ள். சூரியன் சந்திரன் செவ்வாய் சனி இவர்கள் கிரமமில்லாமலெந்த விடத்திருந்தாலும் எட்டாமிடம் ஆறுமிடம் இரண்டாமிடம் பன்னிரண்டாமிடம் இந்த விடங்களி லிருப்பவர்களுக்கு அந்த நாலுகிரகங்களில் எவர்கள் பலவந்தனாக விருப்பார்களோ அந்தகிரகத்துக்குள்ள வாதபித்த சிலேஷ்மங்களி லெந்த தோஷம்சொல்லப்பட்டிருக்கிறதோ அந்ததோஷத்தின் காரணத்தால் வியாதி அந்திய காலத்தி லுண்டாகு மென்பதாம்.

11-வது சுலோகம் செவிடன் செவிநோய்.

ஒன்பதுமிலாபமைந்தும் முறைத்திடும்மூன்றிடத்தில்
தின்மையோர்நின்றபோது திகழ்சுபர்காணுபோது
தன்னதுசெவியில்ரோகம் சாற்றியசெவிடனாக
முன்னநாளயனமைத்த முறைதனையுரைத்திட்டோமே.

இ-ள். ஒன்பது பதினொன்று ஐந்து எனப்பட்ட மூன்றுவிடத்தில் கூடின பாபக்கிரகங்களைச் சுபர்கள் பார்க்காதிருக்க செவியில் நோயுண்டாகும் செவிடனுமாக விருப்பான் அந்தவிடங்களிருந்த பாபக்கிரகத்தில் பலவந்தனாக விருக்கப்பட்டவர்களுக் கேற்பட்ட வாத பித்தமென்னப் பட்ட தோஷத்தினாலே நிச்சயமாக காதில் உபத்திரவம் உண்டாகு மென்பதாம். 35

11-வது சுலோகம் பல்வலி.

இரவியுமதிசேய்சுன்று மிவரினால்கிரகித்தோர்கள்
திரமுடன்சென்மத்திற்கு செப்புமேழுறுந்தீயோரை
பரவியசுபர்நோக்குற்றால் பல்லதில்வலியுண்டென்று
தரணியில்விபரமாகச் சாற்றுவாய்ப்பபலனைத்தானே.

இ-ள். சூரியன் சந்திரன் செவ்வாய் சனியினால் கிரகிக்கப் பட்டவர்கள் லக்கினத்திற் கேழிலிருந்த பாபிகளை சுபக்கிரகங்களால் பார்க்கப் படாதிருந்தால் தந்த ரோகம் உண்டாகு மென்பதாம். 36

12-வது சுலோகம் பிசாசு உபத்திரவம்.

அரவினாற்பீடையுற்ற யம்புலியுதயந்தங்க
தரணியின்மகனும்சவுரி தங்கிடவைந்தொன்பானில்
திரமுடனுதித்தனற்ப தெய்வத்தின்பீடையாலும்
உரமுளபேய்பிசாசோ லுபத்திரப்படுவானமே.

இ-ள். கிராணம் பிடிக்கப்பட்ட சந்திரன் உதய லக்கினத்திலிருக்க செவ்வாய் சனி ஐந்து ஒன்பதி லிருக்கப் பிறந்தவன் பிசாசுகளினாலும்செய் வினை வைப்புமுதலிய தோஷத்தினால் உபத்திரவப் படுவானென்பதாம்.

12-வது சுலோகம் குருடன்

அரவினாற்பீடையுற்ற வாதவன்லக்கினத்தில்
குருதிசுன்னைந்தொன்பானிற் குணமுடனிருக்கும்போது

கருவதில்கண்ணிழந்தே காசினிவருவானென்றே
பிரமனுமமைத்தானென்று பேசுவாயுலகினோர்க்கே,

இ-ள். இராகு கிரஹணம் பிடித்திருக்கும் சூரியன் ஜென்ம லக்கினத்தி லிருக்க செவ்வாய்சனி ஐந்தாமிடம் ஒன்பதாமிட மிருக்கப்பிறந்தவன்பிற விக்குருடனாகும் அதாவது கர்ப்பத்திலிருக்கும் பொழுதே கண்ணில்லாத வனாகவிருந்து பிறப்பா னென்பதாம். 38

13-வது சுலோகம் வாதநோய்.

சன்னவனேழினிற்க சுரகுருஜென்மந்தங்க
நன்னயத்துடனேவந்தான் நாடியவாதநோயால்
தன்னுதுகைகால்சோர்ந்துத் தாரணியதனில்மிக்கத்
துன்புறுபவனுமென்று சொல்லுவாய்பலனைத்தானே

இ-ள். சனி ஏழாமிடத்திலும் குருசென்ம லக்கினத்திலுமிருக்கப்பிற ந்தவன் வாதரோகத்தினால் பீடிக்கப்படுவான் கைகால் சோர்வுண்டாகும் பக்ஷவாதமும் உண்டாகுமென்று சொல்லவேண்டியது, 39

13-வது சுலோகம் சித்தப்பிரமை

கனகனுமுதயம்நிற்க காமதானத்திற்செவ்வாய்
இனமுடனிருக்கவந்தோ னெண்ணமுநிலையில்லாது
மனமதுபேதமாகி மயங்குவன்பிரமைகொண்டு
சினமதுகொண்டன்னோனும் தேகத்திலலைவன்றானே.

இ-ள், சென்மலக்கினத்தில் குருவிருக்க சனி ஏழாமிடத்தி லிருக்கப் பிறந்தவன் புத்தி நிலையில்லாமல் மனம் கலங்கி பித்தம் பொங்கி பிரமை கொள்ளுவன் ஆனால் கோபமுள்ளவன் தேசதேசம் எல்லாம் செல்லுவான் பயித்தியங்கொண்டவ னென்று பேராகு மென்பதாம், 40

13-சுலோகம் சித்தப்பிரமை

ஒன்பதுமைந்தோடேழி லுதிரனேநிற்கநீலன்
அன்புடன்சென்மந்தங்க வவனியிலுதித்தபேர்க்கு
துன்பமுஞ்சலனமுற்று தோய்குவான்பிரமைகொண்டு
இன்பமுமற்றுநிற்பா னித்தநற்சேயன்றானே.

இ-ள், சனிசென்ம லக்கினத்தி லிருக்கசெவ்வாய் ஒன்பதாமிடம்ஏழா மிடம் ஐந்தாமிடத்திலிருக்கப் பிறந்தவன் துன்பப்பட்டு சஞ்சலத்தி லுழ ன்று புத்திகலங்கி பித்தம் ஓங்கி பிரமைகொண்டி ருப்பானென்பதாம்.

13-வது சுலோகம் சித்தப்பிரமை

தேய்மதிசனியைக்கூடி திகழுமீராறில்நிற்க
சேயெனவந்தபேர்க்குச் செப்புவதென்னவென்னில்

தூய்தருமனமயர்ந்து தூயரினுற்பிரமைகொண்டு
மாய்குவானென்றுவிந்த மகவுக்குப்பலனைக்கூறே.

இ-ள். அமரபக்ஷ சந்திரன் சனியுடன் கூடி பன்னிரண்டாமிடத்தி லிருக்கப் பிறந்தவன் மனம் கலங்கி வருத்தப்பட்டு பித்தமோங்கிஅதினுல் பிரமைகொண் டிறந்திடுவா னென்பதாம், 42

14-வது சுலோகம் கூலிவேலைக்காரன்

சந்திரவமிசத்தாதி தரணிபொன்மதியின்னோர்கள்
அந்தமில்பகைநீசத்தி லடைந்திடவுதித்தபாலன்
இந்தமானிலத்தின்மீ தியல்பரிசாரனுக
சொந்தமாய்ப்பிறந்தானென்று சொல்லுவாயுலகினோர்க்கே.

இ-ள். சந்திரனிருந்த நவாமிசை யெதுவோ அந்த இராசியினதிபதி யும் சூரியன் குரு சந்திரன் இவர்களி லொருவராகிலும் இரண்டு மூன்று நாலுபேர்களும் பகை நீசத்திலிருக்கப் பிறந்தவன் அடிமைக்காரனுகியும் கீழ்ப்படிந்து வேலை செய்பவனுகப் பிறந்தவனென்று சொல்லப்படு மென் பதாம். 43

14-வது சுலோகம் கூலிவேலைக்காரன்.

மதியுறைநவாங்கிசத்தோன் மார்த்தாண்டன்மதிபொன்னின்னோர்
கதியினுற்பார்க்கப்பட்டால் கருதிடுமொருவரற்பம்
துதியவர்பார்க்கில்மத்யம் சொல்லுவோமூன்றுநாலு
பதியதில்வேலைக்காரன் பகர்விலைதாசன்சேயே.

இ-ள். சந்திரனிருந்த நவாங்கிசாதி சூரியன் குரு சந்திரன் இவர்களி லொருத்தரால் பார்க்கப்பட்டால் அற்பம் இரண்டு கிரகம் பார்க்க மத்தி மம் மூன்றுநாலு கிரகம் பார்க்க தன் ஜீவனார்த்தமாக வேலைக்காரனும் இன்னெருவரால் அங்கீகரிக்கப் பட்டவனுகியும் விலைக்கு விற்கப்பட்ட வேலைக் காரனுகியும் வேலைக் காரனுக்கு புத்திரனுக வுற்பத்தி யானவ னென்று சொல்லப்படும் என்பதாம். 44

14-வது சுலோகம் கூலிவேலைக்காரன்

திங்களாரமிசத்தாதி தினகரள்மதியும்பொன்னன்
தங்கிடநீசராசி தன்னதிபதிநவாங்கிசம்
அங்குசத்துறுநவாம்ச மடைந்திடப்பிறந்தபாலன்
மங்கலாய்த்தனக்குத்தானே மைந்தனுஞ்சீவிப்பானே.

இ-ள். சந்திரனிருந்த நவாமிசாதிபதி சூரியன் சந்திரன் குரு இவர் கள் நீசராசியிலாவது நீசநவாமிசு ராசியிலாவது சத்துரு நவாமிசையிலாவ திருக்கப் பிறந்தவன் சிறப்பில்லாதவன் தான்தானே தன்னுடைய ஜீவ னார்த்தத்தையடைகிறவ னென்பதாம். 45

### 14-வது சுலோகம் கூலிவேலைக்காரன்.

இருவர்கள்பகைநீசத்தி லிருந்திடப்பிறந்தபாலன்
ஒருவர்க்குவிலைபட்டோனு முயர்விலாவேலைக்காரன்
குரியுடன்மூன்றும்நாலு கோளிவர்பகைநீசம்மேல்
உரியதாசன்ருசிக்கு முற்பத்தியானசேயே.

இ-ள். சந்திரனிருந்தநவாம்கிசாதிபதி குரு சந்திரன் சூரியன் இருவர்கள் பகைநீசத்திலிருக்க ஒருவருக்கு விலைபட்டவனும் மூன்றுபேர்கள் நாலுபேர்கள் பகைநீசத்தி லிருக்கில் வேலைக்காரன் வேலைக்காரிக்கும் பிறந்தவனுகு மென்பதாம், 46

### 16-வது சுலோகம், பல்லன்சென்மம்

வில்லொடுதகரும்புல்லன் விளங்கிடஜென்மமாகில்
எல்லவன்செவ்வாய்மர்த னிவர்களிலொருவர்பார்க்க
வல்லமையுடனேவிந்த மண்டலத்துதித்தவன்றன்
பல்லதுவழக்கில்லானுய் பாரதிலிருப்பானென்னே.

இ-ள். தனுசு மேஷம் ரிஷபம் இவைகளிலொன்று சென்மலக்கினமாகியிருக்க சூரியன் சனி செவ்வாய் இவர்களிலொருவர் சென்ம லக்கினத்தைப் பார்க்கப்பிறந்தவன் அழகில்லாது விகாரமான பற்களையுடையனுக விருப்பா-னென்பதாம், 47

### 15-வது சுலோகம், பெருந்தலை.

குடமரிமகரமேடம் கோடுமரமிடபத்தோடு
விடமுறுவிருச்சிகந்தான் மேவியசென்மமானுல்
சுடருடன்சனிசேய்பாம்பு முடர்புடன்னேக்குங்காலில்
திடமுடனுதித்தபேர்க்கு சிரசதுபருமனுமே

இ-ள். கும்பம் சிம்மம் மகரம் மேஷம் தனுசு ரிஷபம் விருச்சிக மிவைகளிலொன்று செனனலக்கினமாக பாபக்கிரகங்களாகிய சூரியன் செவ்வாய் சனி இராகு கேது இவர்கள் நோக்க பெருத்ததலையுடனே பிறப்பானென்பதாம், 48

### 15-வது சுலோகம், அரைப்பார்வை.

உதயலக்கினந்தனக் கொன்பதுமைந்திடத்தில்
கதிரவனிருக்குங்காலிற் காரிசேய்பாம்பிரண்டும்
கதிரவன்றனையேகாண கருவிழிபார்வைதானும்
விதிபெறவரைநோக்கென்று விபரமாயுரைத்திட்டேனே

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஐந்தாமிடம் ஒன்பதாமிடத்தில் சூரியனிருக்க அந்த சூரியனை சனி செவ்வாய் இராகு கேது என்னப்பட்ட பாபிகள் பார்க்கப் பிறந்தவன் அரைப்பார்வை யுள்ளவனுக விருப்பானென்பதாம், 49

15-சுலோகம், பல்நோயன்

ஒன்பதைந்ததிலேநீல னுற்றிடவவரைத்தீக்சோள்
அன்பொடுநோக்குங்காலி லவனியிலுதித்தசெல்வன்
இன்புறுதனுமிக்க விழிவுறும்பல்நோயாலே
துன்புறுபவனுமென்று சொல்புவியோர்க்குக்கூறே.

இ-ள். சனி ஒன்பதாமிடம் அல்லது ஐந்தாமிடமிருக்க அந்தச் சனி யை செவ்வாய் சூரியன் கண்ணுற் பார்க்கப் பிறந்தவன் அனேக வியாதி யுள்ளவனாக விருப்பா னென்பதாம், 50

15-வது சுலோகம் அங்கவீனம்,

சென்னலக்கினந்தனக்குத் திகழுமைந்தொன்பான் றன்னில்
கனமுளசெவ்வாய்த்தங்க கதிர்சனியரவிரண்டும்
இனமுளகுசனைநோக்க விவனுமேயங்கவீனத்
தனையனுமெனவேநீயுஞ் சாற்றுவாய்தரணியோர்க்கே,

இ-ள். செவ்வாய் ஐந்தாமிடம் ஒன்பதாமிடத்திலிருக்க அந்த செவ் வாயைச் சூரியன் சனி பாம்புகள்பார்க்க அங்கவீனமுள்ளவனாக விருப்பா னென்பதாம் 51

16-வது சுலோகம் பாசத்தால் அல்லது கயிற்றால் கட்டுப்படல்,

வில்லொடுவிடையுமேடம் மேவியேசெனனமாக
எல்லவன்சனியுஞ்செவ்வா யிருபாம்புக்ஷீணதிங்கள்
இலலதிற்கிரண்டைந்தொன்பா னீராறிலிருந்தபோது
வல்லமைகுன்றப்பாசம் வன்கயிறுவசமேயாவான்,

இ-ன். தனுசு ரிஷபம் மேஷம் இவைகளிலொன்று சென்மலக்கின மாகியிருக்க பாபிகளாகிய சூரியன் சனி செவ்வாய் பாம்பு இவர்கள் இரண்டு பன்னிரண்டு ஐந்து ஒன்பதில் இருக்கப்பிறந்தவன் சுபர் சம்பந்தமும் சுபர்நோக்கமும் இல்லாதிருக்கப் பிறந்தவன் கயிறு அல்லதுபாசத்தினால் கட்டுப்படுவானென்பதாம் 2

6-வது சுலோகம் விலங்குபூணல்,

கும்பம்யாழ்துலேபுங்கன்னி குழவியின்செனனவீடாய்
கொம்பியேயலரிநாகம் குடும்பமீராறுகோணம்
தெம்புடனிருக்கவந்தச் செல்வனும்விலங்குபூண்டு
அம்புவியிருப்பானென் றறிவிப்பாயுலகினோர்க்கே,

இ-ள். கும்பம் துலாம் மிதுனம் கன்னி இவைகளில் ஒன்று சென்ம லக்கினமாயிருக்க சனி செவ்வாய் சூரியன் பாம்பு இவர்களிரண்டு பன்னி ரண்டு ஐந்து ஒன்பதில்இருக்கப்பிறந்தவன் விளங்கு பூண்டிருப்பானென் பதாம் 53

16-வது சுலோகம் சிறைக்காவல்,

மகரமீன்கடகந்தன்னில் மதலையாய்வந்தபேர்க்கு
தகரவன்ரவிசுன்பாம்பு தனவியமைந்தொன்பானில்
சகமதிலிருந்தபோது சடமதில் பாதையற்று
பகர்சிறைக்காவற்கூடம் பாலகனிருப்பானுமே,

இ-ள். மகரம் மீனம் கடகம் சென்மலக்கினமாகியும் செவ்வாய் சூரியன்சனி பாம்பு இவர்களிரண்டு பன்னிரண்டு ஐந்து ஒன்பதிலிருக்கப் பிறந்தவன் சரீரபாதையில்லாமல் சிறைக்கூடத்திலிருப்பான் 54

16-வது சுலோகம் சுரங்கம் அடைதல்,

சென்மலக்கினமேதேளாய் தீயகோளிரண்டைந்தொன்பான்
தன்னிரண்டதிலேநிற்க பாரதிலுதித்தசெல்வன்
மன்னுபூமியுட்சுரங்கம் மறைந்திடுமனைகள்தன்னில்
உன்னிதபாலன்றானு முறைவனென்றுரைத்திடாயே,

இ-ள். சென்மலக்கினம் விருச்சிகமாகி சூரியன் சனி செவ்வாய்பாம்பு இவர்கள் இலக்கினத்திற் கிரண்டு பன்னிரண்டு ஐந்து ஒன்பது இந்த விடத்திலிருக்கப்பிறந்தவன் சுரங்கத்துக்குள்ளும் பூமிக்குள் மறைந்து மிருக்கப்பட்டவிடம் வேறுமனிதர் வாசஞ்செய்யாத விடத்தில் தனியாக விருப்பானென்பதாம் 55

16-வது சுலோகம் திரேக்காணம்,

மகரத்தில்முதல்திரேக்காணம் மருவியநிகளமாகும்
விருதட்டனென்றிரண்டு மீனமூன்றுந்திரேக்காணம்
பகர்கொண்டல்முதல்திரேக்காணம் பாம்பதின்கூறதாகும்
செகமதிலிதுபுஜகத் திரேக்காணமாகும்பாரே,

இ-ள். மகரத்தில் முதல்கூறு நிகள திரேக்காணம் விருச்சிகத்தில் முதல்கூறு மிரண்டாங்கூறும் மீனம் மூன்றுங்கூறும் மகரம் முதற்கூறு இவை நிகள திரேக்காணமாகு மென்பதாம், 56

17-வது சுலோகம் பந்தனப்பிராப்திவிபரம்,

சென்னம்நிகளத்திரேகாணம் செப்பிடும்புஜகமானால்
கனமுளதிரிகோணத்திற் கலந்திடுராசிதன்னில்
இனமிலாபாபர்நோக்க விவனும்பந்தனமேயாவாய்
கனமுடன்யூகங்கண்டு கழறுவாய்ப்பலனைத்தானே,

இ-ள். எந்த திரேக்காணத்தில் சிசுவு பிறக்குமோ அந்த திரேக்காணம் புஜக திரேக்காணமாவது நிகள திரேக்காணமாவ திருக்குமானால் அந்த திரேக்காணத்திற்கு ஒன்று ஐந்து ஒன்பது என்கிற கணக்கிலே எந்தராசி சம்பந்தமாகுமோ அந்தராசியானதை பலாதிக்கமான பாபக்கிர

கங்களால் பார்க்கப்படுமோனால் முன்சொல்லப்பட்ட பந்தனப் பிராப்தியை என்றுயுணர்ந்து சொல்லவேண்டியதென்பதாம், 57

17-வது சுலோகம் நிஷ்டூரன் நிகஷ்டன்,

எந்தராசிகளிலேனு மெழிற்சனிமதியைக்கூட
வந்தவன்நிட்டூரந்தான் வசனிப்பான்திண்ணமாக
மந்தனும்மதியுஞ்சேர மங்கலனவரைக்காண
சுந்தரபுவியில்வந்த சுதன்நிகஷ்டனுமாவானே,

இ-ள். எந்த இராசியிலாவது சனி சந்திரனைக்கூடி யிருக்கப்பிறந்தவன் நிஷ்டூரமான வார்த்தை வசனிப்பவனாகவிப்பான், இந்தவிதமாகவே சனி சந்திரன்கூடியிருக்க இவர்களைச் செவ்வாய் பார்க்கப் பிறந்தவன் நிகஷ்டமானவனாக விருப்பானென்பதாம், 58

17-வது சுலோகம், க்ஷயரோகி.

பரிவேடஞ்சனியுந்திங்கள் பகர்ந்தொருராசிநிற்க
குருதியுமவரைநோக்க குவலயமுதித்தசெல்வன்
தருடலதிலேமிக்க சயமதுகொள்வானென்ன
பிரமனுமமைத்தானென்று பிரபலமுடனேகூறே

இ-ள். சந்திரன் சனி பரிவேடத்துடன் கூடியிருக்க இவர்கள்செவ்வாயினால் பார்க்கப் பட்டிருக்கப் பிறந்தவன் க்ஷயரோகமுள்ளவனென்பதாம்

17-வது சுலோகம், கூலிவேலைக்காரன்

பத்திலேயிரவிநீலன் பார்மகளிருக்குங்காலில்
உத்ததோர்சுபரீரைந்தை யுயர்வொடுநோக்காராகில்
இத்தலத்துதித்தான்மிக்க விழிவுறுநீசகன்மம்
மெத்தவுங்கூலியாளாய் விளங்குமிப்பாலனுமே

இ-ள். சூரியன் செவ்வாய் சனிமூவரும் பத்திலிருக்க சுபர்கள் இந்த மூன்றையும் பார்க்காதிருக்கப் பிறந்தவன் கூலியாளாகவிருப்பான் பக்கத்தில் ஒருகோளிருக்க சாதாரணகூலியாளாம் பத்தில் இருகோளிக்க மத்திமமான கூலியாளாம் பத்தில் மூவர்யிருக்க சுபர்காணுவிட்டால் அதமமான கூலியாளாம் சுபர்கண்பட கூலியாளல்ல வென்பதாம், 60

படலச்செய்யுள் தொரை,

அரிஷ்டமாம்படலந்தன்னை யவனியிலுள்ளபேர்க்கு
சரிவரபலனுரைத்தேன் சற்குருதாள்பணிந்து
திருமலைநகரம்வாழுந் திகழ்கம்பியவர்க்கத்துள்
பெருமையாம்வயித்திலிங்கம் பேசினேனறுபதோடே,

இருபத்திமூன்றுவது

அரிஷ்டாயோகப் படல முற்றிற்று.

# மங்களேஸ்வரீயம்.

இருபத்தி நான்காவது

## ஸ்திரீஜாதகப்படலம்.

1-வது சுலோகம் வசனம்.

புருஷ ஜென்மத்துக்குச் சொல்லும் பலனெந்த வெந்தவிதமோ அது ஸ்திரீகளுக்குப் பொருந்தாதிருக்குமோ அந்தந்தப்பலனை அந்தந்த ஸ்திரீயின் பர்த்தாவுக்குப் பொருத்திச் சொல்லவேண்டியது அப்படி புருஷ ஜெனனத்திற்குச் சொல்லப்பட்ட பலன்களில் ஸ்திரீகளுக்குச் சொல்ல வேண்டியதாம், இத்யாதி பலன்கள் ஸ்திரீகளுக்குச் சொல்லவேண்டியது, ஸ்திரீகளுக்கு யோக்கிதையும் யோகத்தையும் ஸ்திரீஜாதகத்தில் இருந்தால் அந்தயோகத்தையும் ஸ்திரீயினுடைய பர்த்தாவுக்குச் சொல்லவேண்டியது சுகதுக்காதிகளாலுண்டான சுனபாதியோகப் பலன்களாம் அன்றியும் ஸ்திரீபுருஷா ளிருவருக்கும் சொல்லவேண்டியது, இந்த மூன்றுவிதமாய் ஸ்திரீ ஜாதகப்பலனைச் சொல்லும்படியாக தாற்பரியம்.

அப்படி அல்லாவிட்டாலும் சகலமான ஸ்திரீஜாதகப்பலனும் அந்த ஸ்திரீயின் பர்த்தாவுக்குச் சொல்லவேண்டியது அந்த ஸ்திரீகளின் ஜென்ம லக்கினத்திற்கு அஷ்டமஸ்தானம் பர்த்தா மரணம் முன்னாடியே தெரியும் விபரம் சொல்லத்தக்கது ஸ்திரீகள் சரீரம் லக்கினத்தினாலும் சந்திரனாலும் சாஸ்திரபிரகாரமாய்ச் சொல்லவேண்டியது சௌபாக்கியத்தை பர்த்தா எவ்விதமாகப் பட்டவரோ அதையும் எழாமிடத்தைக் கொண்டு பலன் சொல்லவும். 1

2-வது சுலோகம், யோகவிபரம்

ஆடவர்தமக்குசொன்ன வடைவதுபோலவேதான்
நாடதில்மடவாருக்கு நவிலவேண்டியதுகண்டு
தேடுமிப்பலனையானும் செகத்தினர்க்காகவென்றும்
கூடுமேழிடத்தினாலே கொழுநரின்பலன்சொல்வோமே.

இ-ள். புருஷர் ஜெனனத்திற்கு சொன்னவிதமே ஸ்திரீகளுக்குஞ் சொல்லவேண்டியபடியினால் இந்த அத்தியாயத்தில் எழாமிடமறிந்து ஸ்திரீயினுடைய பர்த்தாவுக்குச் சொல்லவேண்டியதென்பதாம், 2

ஸ்தானங்களாவன,

சேடியர்க்கெட்டாம்ராசி தெரிவிப்போமாங்கலீயம்
கூடிடும்மேழாம்ராசி குழந்தையின்தானமாகும்
நாடிடுமொன்பான்பத்தா நவில்வதுலாபமைந்தாம்
நீடுபொன்பர்த்தாவெள்ளி நேர்தனகாரனாமே.

இ-ள். ஸ்திரீகளுக்கு எட்டாமிராசியே மாங்கலிய ஸ்தானமாகும், ஏழாம்ராசி புத்திரஸ்தானமாகும், ஒன்பதாம்ராசி பத்ருஸ்தானமாகும், ஐந்தாமிராசியே லாபஸ்தானமாகும். குரு பத்ருகாரகனும், சுக்கிரன் தனகாரகன் என்றறிவதாகும் என்பதாம், 3

2-வது சுலோகம் ஸ்திரீசென்மராசிபலன்,

சென்மலக்கினமுஞ்சந்திரன் சேர்ந்திடுராசிதானும்
நன்மைசேரரிட்டைராசி நண்ணிடப்பிறந்தபெண்தான்
தன்னுசற்குணமதுள்ளாள் தூயகோள்நோக்குங்காலில்
மின்னனையூஷியாயும் மிகுசவுந்தரியமுள்ளாள்,

இ-ள். சென்மலக்கினமும் சந்திரலக்கினமும் பெண்ராசியா யிருக்கப் பிறந்தவள் ஸ்திரீ சுபாவமுள்ளவளாகவிருப்பாள, அந்த ஜென்மலக்கினத்தையாவது சந்திரனையாவது புதன் குரு சுக்கிரன் இவர்களிலொருவர் பார்க்கப்பிறந்தவள் உத்தமமான சற்குணத்தையும் ஆபரணாதிகளையு மடைந்தவள் நல்லரூபவதியாக விருப்பாளென்பதாம்,

2-வது சுலோகம் ஸ்திரீகுணம்,

சந்திரன்சென்மந்தானும் சமராசியானபோது
சந்தரமடந்தையாரின் சுபகுணம்புருஷன்போலாம்
இந்தவைப்பாபர்கூடி யிருந்திடலதுநோக்கக்
சந்ததம்பாபியாயும் சற்குணமில்லாச்சேடி,

இ-ள். சந்திரன் மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இந்த இராசிகளில் எவைகளிலாகிலும் ஒன்று லக்னமாகியிருக்கப் பிறந்த ஸ்திரீ புருஷசரீர சுபாவமுள்ளவளாகும் இந்த ஆறு இராசியி லேது சென்மலக்கினமானாலும் புருஷ சுபாவமுள்ளவளாம் சந்திரனுடனே சூரியன் செவ்வாய் சனி பாம்பு இவர்கள் கூடியிருந்தாலும் இந்தபாபிகள் சென்மலக்கினத்திலிருந்தாலும் செனமலக்கினத்தைப்பார்த்தாலும் அல்லது சந்திரனைப்பார்த்தாலும் பாபாசாரமுடையவளாகியும் குணவீனமுள்ளவளாகியுமிருப்பாளென்பதாம், 5

2-வது சுலோகம் ஸ்திரீகுணம்,

மதியுறைதலமாண்பெண்ணும் மற்றிலக்கினமவ்வாறு
பதியதாங்காலுதித்த பாவையும்புருடத்தன்மை
சதியுறுஸ்திரீகன்கங்கள் தன்மனம்போலவேதான்
விதியதுவிவளுக்கென்று வேதனும்விதித்ததாமே,

இ-ள். சென்மலக்கினமும் சந்திரலக்கினமும் ஒன்று வியராசியும் மற்றொன்று சமராசியாயுமிருக்கப் பிறந்த ஸ்திரீ கொஞ்சம் புருஷாக்கிருதி சுபாவமும் கொஞ்சம் பெண்ணாக்ருதி சுபாவமும் கூடினவளாக விருப்பாள் மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இவை வியராசியாகும் ரிஷ

பம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம் மீனம் இவைசமராசியாகு மென்ப தாம், 6

2-வது சுலோகம் பெண்கள்குணம்,

நிலவுறைநலமுற்றசென்மம் நேர்ந்திடுதலத்திலொன்றை
நலமுளசுபரோர்தானம் நலமில்மற்றோர்வோர்தானம்
பிலமுடனிருக்கநோக்கப் பேதைதுராச்சாரத்தை
சிலதிவள்செய்வாள்பின்னும் செய்வளாசாரந்தானே.

இ-ள். சென்மலக்கினம் சந்திரலக்கினம் இந்த இரண்டிலும் சுபரும் பாபரும் கூடியிருக்கிலும் அல்லது நல்லோர் ஒருதானத்தையும் பாபி ஒரு தானத்தையும் நோக்க கொஞ்சம் ஆகாரமும் கொஞ்சம் ஆசார குரைவு முள்ளவளாகு மென்பதாம், 7

3-வது சலோகம் மேஷலக்னம் ராசிபலன்,

சென்னிலக்கினமதேனும் திங்களார்தலமதேனும்
மன்னியகுசன்வீடாகில் மங்கலன்திரிம்சாம்சத்தில்
மின்னனைசென னமானால் விவாகத்தின்முன்னதன்னில்
தன்னமேதிட்டம்போலத் தழுவுவாள்புருடன்றன்னை.

இ-ள். சென்மலக்கினமாவதும் சந்திரலக்கினமாவது குஜக்ஷேத்திரமாகிய மேஷம்விருச்சிகமுமாகவிருக்க குஜன் திரிம்சாம்சையில் பிறந்தவஸ்திரீ கலியாணஞ் செய்யுமுன் [illegible] திஷ்டம்போல புருஷ சங்கமம் செய்வா ளென்பதாம். 8

3-வது சுலோகம் மேஷலக்ன ராசிபலன்

திங்களார்மனைசென்மங்கள் சேயவன்வீடதாகி
பொங்குகன்திரிம்சாம்சத்தில் பூவையுற்றுதிப்பாளானால்
சங்கையதற்றராசி தானுமேயாவாளென்று
புங்கவன்னமைத்ததாகும் பகர்ந்திடாய்கோளினாலே

இ-ள். சந்திரனிருந்தவீடும் அல்லது சென்மலக்கினம் மேஷம் விருச்சிகமாயிருக்க சனி திரிம்சாம்சையில் பிறந்த பெண் மானம்கெட்டு தாசித்தனமுஞ்செய்பவள் வேசியுமாவாளென்று யூகித்துச் சொல்லவேண்டிய தென்பதாம். 9

3-வது சுலோகம் மேஷல்க்னராசிபலன்

மங்கலன்வீடதான மறிதேளுஞ்சென்னமானால்
துங்கமாங்குருபின்சொந்த தூய்திரிம்சாம்சைதன்னில்
மங்கையாயுலகுவந்தால் மாகுணசாந்தமுள்ள
நங்கையுற்றுரைக்காப்பாள் நற்பதிவிரதையாமே

இ-ள். சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலும் மேஷம்விருச்சிகமாயிருக்க குருத்திரிம்சாம்சையில் பிறந்தபெண் சற்குணம் உள்ளவள் பந்துகள் இஷ்டமித்ரர்களை பாதுகாப்பவள் பதிவிரதையாகும் பதிவிரதையின்குணங்களாவன கற்பு-நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு-இவைகளைக் கூடியிருப்பவளாம் கற்பாவது தன்புருஷனை தவிர மற்றோரைச சகோதரனாகவும் தகப்பனாகவும் குருவாகவும் பாவித்து இருத்தல் நாணமென்பது மானம் வெட்கமாகும் மடமென்பது எல்லாம் அறிந்தும் அறியாதுபோலிருத்தல், அச்சமென்பது என்றும் காணாததைக்கண்டவிடத்து அஞ்சுதல், பயிர்ப்பென்பது கணவரல்லாதவர் கை மேற்படும்பொழுது உடம்பு அருவருத்தலாம் இந்த அஞ்சுகுணமும் உடையவளே பதிவிரதையாகும்இந்த குணமில்லாத ஸ்திரீ பதிவிரதையென்று சொல்லக்கூடா தென்பதாம். 10

3-வது சுலோகம் மேஷலக்னராசி

ஆடுதேள்சென்னராசி வலததில்சசியுற்றாலும்
பாடுமாற்றிரிம்சாம்சையில் பாரினில்வந்தபெண்ணாள்
நாடுபல்விதமும்மாய்கை நங்கையுந்தேர்ச்சியோடு
நீடுலகதனில்வாழ்வாள் நேர்மையில்லாதநாரி.

இ-ள். மேஷம் விருச்சிகம் சென்மலக்கினமானாலும் அல்லது சந்திரலக்கினமாகவிருந்தபோதில் புதன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் மாயாவித்தைமுதலிய பல வறிந்திருப்பதோடு சாமர்த்தியமும் உள்ளவள் இவள் நேர்மையில்லாதவளாக விருப்பா ளென்பதாம். 11

3-வது சுலோகம் மேஷலக்னராசிபலன்

சேயமன்வீடேசென்மம் செழுமதியதிலுற்றாலும்
ஏயநற்புகரோன்சொந்த வெழில்திரிம்சாம்சைதன்னில்
தூயவிப்புவியில்வந்தாள் சோரம்போம்வேசியின
சேயிழைதுர்க்கர்மந்தான் செய்பவளுலகோர்தூற்ற.

இ-ள். மேஷம் விருச்சிகம் சென்மலக்கினமானாலும் அல்லது சந்திரலக்கினமாகிலுமிருக்க சுக்கிரன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் வேசியாயும் திருடியாயும் துர்க்கர்மம்செய்பவள் உலகிலுள்ளோர் இகழும் குணங்களையுடையவளாக விருப்பாள் துர்க்கர்மமென்பது தன் குலத்துக்குத் தாழ்ந்த தொழில்களை செய்தவளாகுமென்பதாம். 12

4-வது சுலோகம் ரிஷபலக்னராசி திரிம்சாம்சைபலன்

தலையொடுவிடையேசென்மம தூய்மதியுற்றபோதும்
நிலமகன்திரிம்சாம்சையில் நீள்புவியதனில்வந்தாள்
புலைத்தொழில்பலவுஞ்செய்தே பூமியிற்கீர்த்தியற்றாள்
தலைவிதியிதுவாமென்று சாற்றுவாய்கோள்தன்னாலே.

இ-ள். ரிஷபம் துலாம் ஜென்மலக்கினமானாலும் சந்திர லக்கினமாகி லுமிருக்க குஜன் திரிம்சாம்சையிலே பிறந்தபெண் ஈனமான காரியங்களைச் செய்தலும் கீர்த்தியில்லாமல் அபகீர்த்தியையுடையவளாய் துர்க்கம் உள்ளவளென் றெல்லோரும் சொல்லும்படியாக விருப்பவளென்பதாம், 13

4-வது சுலோகம், ரிஷபலக்னராசி திரிம்சாம்சைபலன்

ஏறுடுகோலேஜென்ம மிந்துறைதலமானாலும்
காரிதன் திரிம்சாம்சையில் காசினியுதித்தமங்கை
சீருள மணங்கள் செய்து சிலநாளில்மறுவிவாகம்
தாரணியதிலேசெய்து தானிருப்பவளாமென்னே.

இ-ள். ரிஷபதுலாம் ஜென்மலக்கினமாக அல்லது சந்திரலக்கினமாகவும் இருக்கப் பிறந்தபெண் சிறப்புடனே கலியாணஞ்செய்து வாழ்ந்து பின்பு அந்தப்புருஷனைநீக்கி தன்னிஷ்டம்போல வேறுகணவனைநிச்சயஞ் செய்து அவனுக்கு திருமணஞ்செய்து வாழ்ந்திருப்பவளாகுமென்பதாம்.

4-வது சுலோகம் ரிஷப துலாலக்னராசி குருதிரிம்சாம்சைபலன்.

நிறைவிடசெனனமல்லால் நிலவுறைதலமானாலும்
மறையவன்திரிம்சாம்சையில் மங்கையாய்வந்தாள்மிக்க
குறைவறுசற்குணத்தாள் குவலயத்தெவரும்போற்ற
தறைதனிலிருப்பளென்று சாற்றுவாய்செகத்திேனார்க்கே.

இ-ள். ரிஷபம் துலாம் ஜென்மலக்கினமாகவாகிலும் அல்லது சந்திர லக்கினமாவாகிலுமிருக்க குருதிரிம்சாம்சையில் பிறந்த பெண் சாந்தம், பொறுமை அடக்கம்முதலிய சற்குணமுள்ளவளாக விருப்பாளென்பதாம்.

4-வது சுலோகம் ரிஷபதுலாலக்னராசி புதன் திரிம்சாம்சைபலன்,

எருதொடுநிறையேஜென்ம மிந்துறைதலமானாலும்
அறிஞனின்திரிம்சாம்சையி லவனியிலுதித்தமாது
பெருகியகீதவாத்யம் பிரபலத்துடனேதேர்ந்த
அரிவையையுலகுதன்னி லயனவனமைத்திட்டானே.

இ-ள். ரிஷபம் துலாம் ஜென்மலக்கினமாகிலு மல்லது சந்திரலக்கினமாகிலுமிருக்க புதன் திரிம்சாம்சையில் பிறந்தமாது சங்கீதவாத்தியத்தில் தேர்ச்சியடைந்து பிறர்புகழும்படியான கீர்த்திபெற்றிருப்பவ ளாகுமென்பதாம், 16

4-வது சுலோகம் ரிஷபதுலாலக்னராசி சுக்கிரதிரிம்சாம்சைபலன்,

புகரவன்வீடதான புல்லமுநிறையுஞ்ஜென்மம்
தகுமதியதிலுற்றாலும் தன்புகர்திரிம்சாம்சையில்
சகமதிலுதித்தமங்கை சவுசீலகுணமுங்கியாதி
மிகுபிரசித்தமுள்ள மெல்லியாளென்றுகூறே.

இ-ள். ரிஷபம் துலாம் சென்மலக்கினமாக வாகிலும் சந்திரலக்கின மாகவாகிலுமிருக்க சுக்ரன் திரிம்சாம்சையிற் பிறந்தபெண் ஸ்நானமுத லான சுத்தமும் ஆசாரமும் சற்குணசாந்தமுதலான குணங்களும் கீர்த்தி பிரபல முடையவளாக விருப்பாளென்பதாம், 17

4-வது சுலோகம் மிதுனகன்னி லக்னராசி செவ்வாய் சனி திரிம்சாம்சை பலன்.

தண்டுகன்னியமேதசென்மம் சந்திரனுறைவீடாகில்
கொண்டசேய்திரிம்சாம்சையில் கோதையும்வந்தாளாகில்
மண்டலமதிலேமிக்க வஞ்சனைகபடமுள்ளாள்
பண்டுசுன்திரிம்சாம்சையில் பாவையுமலியாவாளே.

இ-ள். மிதுனங்கன்னி சென்மலக்கினமாகவாகிலும் அல்லது சந்திர லக்கினமாகவாகிலுமிருக்க செவ்வாயின் திரிம்சாம்சையிலும் பிறந்தபெண் வஞ்சகம் பொய்பொறாமை கபடமுதலாகிய துற்குணமுள்ளவளாகும் மிது னங்கன்னி சென்மலக்னமாகவாகிலும் அல்லது சந்திரலக்கினமாகவிருக்க சனிதிரிம்சாம்சையில்பிறந்த ஸ்திரீ அலியாகவிருப்பாளென்பதாம், 18

4-வது சுலோகம் மிதுனகன்னிலக்னராசி குருதிரிம்சாம்சைபலன்,

வல்லகிசேடிசென்மம் மதியுறைதலமானாலும்
வில்லவன்திரிம்சாம்சையில் விளங்குமிப்பூமிதன்னில்
மெல்லியாள்வந்தாள்கற்பு மிகுபதிவிரதையாகி
நல்லவளெனவேவாழ்வள் நாரிதன்குணமிதாமே.

இ-ள். மிதுனங்கன்னி சென்மலக்கினமாகியிருக்க அல்லது சந்திரலக் கினமாயிருக்க குருதிரிம்சாம்சையில் பிறந்தபெண் கற்புநாணம் மடம் அச் சம் பயிர்ப்புமுதலிய சற்குணசாந்தமுள்ள பதிவிரதை யாவாளென்பதாம்.

4-வது சுலோகம் மிதுனம்கன்னி லக்னராசி திரிம்சாம்சைபலன்

கன்னியாய்சென்மம்ராசி கனகன்திரிம்சாம்சைதன்னில்
மின்னனைவந்தாளாகில் மிகுகுணவதியுமாவாள்
எனனுசுங்கன்திரிம்சாம்சை யிவளதிகாமத்தாலே
தன்பதிதன்னைவிட்டு தான்தகாதோரைச்சேர்வள்

இ-ள். மிதுனங்கன்னி சென்மலக்கினமாகிலு மல்லது சந்திரலக்கின மாகிலுமிருக்க புதன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் நற்குணமுடையவ ளாம் மிதுனங்கன்னி சென்மலக்கினமாகிலுமல்லது சந்திரலக்கினமாகிலு மிருக்க சுக்கிரதிரிம்சாம்சையில் மிறந்தபெண் அதிககாமமுடையவள்தன் புருஷனை லக்ஷியம்செய்யாமல் பரபுருஷர்களைச்சேர்வள் அப்படி பரபுரு ஷர்களில் ஈனகுணமுடையவனாகிலும் நோயுள்ளவனானாலும் அழகில்லாத வனானாலும் தன்குலத்துக்குக் கீழ்ப்பட்டவனானாலும் தன்வயதுக்கிளமை

யாளவனுயிருந்தாலும் அவைகளையெல்லாம் நீக்கி மனதுக்கு இஷ்டப்பட்டபுருஷர்களையும் சந்தோஷித்துடனே அவர்களைச்சேர்ந்து மகிழும் ஸ்திரீயாகுமெனபதாம். 20

5-வது சுலோகம் கடகலக்கின ராசி திரிம்சாம்சைபலன்

கடகலக்கினமேசென்மம் கலையவனதிலுற்றாலும்
திடமுளசேய்திரிம்சைச் சேடியும்வம்புக்காரி
முடவனின்திரிம்சாம்சையில் மெல்லியர்பதியைக்கொல்வாள்
துடருபொன்திரிம்சாம்சையிற் சுகுணமும்புத்திரருள்ளாள்.

இ-ள். கடகலக்கினம் சென்மலக்கினமாகியிருக்க அல்லதுகடகத்தில் சந்திரனிருக்கச்செவ்வாய் திரிம்சாம்சையில் பிறந்தவள அதிகமாகப்பேச்சப்பேசுவாள் தைரியசாலி சண்டைக்குப்பின் வாங்காதவள் வம்புக்காரியென்று சொல்லலாகும் கடகம் சென்மலக்கினமாவது அல்லது சந்திரலக்கினமாகிலுமிருக்க சனி திரிம்சாம்சையில் பிறந்தபெண் தன்புருஷனைவஞ்சத்திலே சொல்லுகின்றவளாகும் கடகம் சென்மலக்கினமாவது சந்திரலக்கினமாவதிருக்க குரு திரிம்சாம்சையில் பிறந்தபெண் நற்குணமும் சாந்தம் பொறுமை அடக்கம் பதிவிஸ்வாசமும் அனேக புத்திரருமுடையவளாகு மென்பதாம். 21

5-வது சுலோகம் கடகலக்னராசி திரிம்சாம்சைபலன்

அலவனேசென்மலக்ன மம்புலியதிலுற்றாலும்
புலவனின்திரிம்சாம்சையில் பொற்கொடிசிற்பம்தேர்ந்தாள்
நலமுறுபுகர்திரிம்சாம்சம் நாடிடப்பிறந்தசேடி
பலபுருடர்களைச்சேர்வள் பார்வையும்வேசியாமே.

இ-ள். கடகம் செனமலக்கின மாகிலுமல்லது சந்திரலக்கின மாகிலுமிருக்க புதன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் சிற்பசாஸ்திரமுணர்ந்தவள் சித்திரமெழுதுவாள் இன்னம் விசித்திரமான வேலைகள் பலவும்செய்வாள் கடகம் சென்மலக்கினமாவது அல்லது சந்திரலக்கினமாவதிருக்க சுக்கிரன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் தன்னிஷ்டம்போல பலபுருஷரைச் சேர்வாள், இவளை வேசியென்னப்படு மென்பதாம். 22

5-வது சுலோகம் சிம்மலக்னராசி திரிம்சாம்சைபலன்.

அரியதுசெனனலக்ன மல்லதுநிலவுநிற்க
குருதிரிம்சாம்சைவந்தாள் கூறுவாளதிகவார்த்தை
புருஷவாசாரமுள்ளாள் பொன்றிரிசாம்சைவந்தாள்
அரசரின்மனையாளாக வடைந்திடுபவளாய்க்கூறே.

இ-ள். சிங்கம் சென்மலக்கினமாகிலும் அல்லது சந்திரலக்கினமாகிலுமிருக்க செவ்வாயின் திரிம்சாம்சையில் பிறந்த பெண் புருஷர் சாரமும் அதிகப்பேச்சு பேசுபவளாக விருப்பாள் சிங்கம் சென்மலக்கினமாகிலும்

சந்திரலக்கினமாகவிருக்க குருதிரிம்சாம்சையில் பிறந்தவள் ராஜனுக்கு பாரியாளாவாளென்பதாம். 23

5-வது சுலோகம் சிம்மலக்னராசி திரிம்சாம்சைபலன்.

சிங்கமேசென்மலக்னம் திங்களார்தலமானாலும்
பங்குதிரிம்சாம்சைவந்தாள் பலபுருடனையேசேர்வள்
தங்கமால்திரிம்சாம்சையில் தொழிலதுபுருஷன்போல
சுங்கனின்திரிம்சாம்சையில் சுதைதகாதவனைச்சேர்வாள்.

இ-ள். சிங்கம் சென்மலக்கினமாகிலுஞ் சந்திரலக்கினமாகியிருக்க சனிதிரிம்சாம்சையில் பிறந்தபெண் வேசியாகி பலபுருஷசங்கம்செய்வாள் சிம்மமே சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்கபுதன்திரிம்சாம்சையில் பிறந்தபெண் புருஷன்சுபாவமும் புருஷர்களைப்போல தொழில்செய்பவளாகும் சிங்கம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்க சுக்கிரன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் காமமீறி தகாதபுருஷர்கள் பலபேர்களைச் சேர்வாளென்பதாம். 24

5-வது சுலோகம் தனுர்மீனலக்னராசி திரிம்சாம்சைபலன்.

மீனவில்சென்மலக்கினம் வெண்ணிலாத்தலமானாலும்
ஆனசேய்திரிம்சாம்சையி லரிவையும்வந்தாளாகில்
மானனையதிகக்காமி மகிழ்குணமிகுதியுள்ளா
ளீனசுன்திரிம்சாம்சையி லிவளற்பகாமத்தாளே.

இ-ள். தனுசுமீனம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்க செவ்வாய் திரிம்சாம்சையில் பிறந்தபெண் மிகவும் சற்குணமுள்ளவள் அனேகபுருஷர்களை யிச்சிக்கும் காமமுடையவளாகும் தனுசு மீனம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்க சனிதிரிம்சாம்சையில் பிறந்தபெண் அற்பகாமக்கிரீடை யுள்ளவளாக விருப்பாளென்பதாம். 25

5-வது சுலோகம் தனுர்மீனலக்னராசி திரிம்சாம்சைபலன்.

தாரகமீன்சென்மமல்லால் தூய்மதியதிலுற்றாலும்
சுரகுருதிரிம்சாம்சைமில் தோன்றினாள்குணத்தில்மிக்காள்
அறிஞனின்திரிம்சாம்சையி லருமறைபலவுணர்ந்தாள்
பிருகுதிரிம்சாம்சைவந்தாள் பிரபலச்சோரநாரி.

இ-ள். தனுசுமீனம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்க குருதிரிம்சாம்சையிற் பிறந்தபெண் வெகு சற்குணவதியாகும் தனுசு மீனம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்க புதன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் வேதசாஸ்திரம் காவியங் கலைக்ஞானங்கள் பலவுணர்ந்தவளாகும் தனுசு மீனம் சென்மலக்கினமாகிலுமிருக்க சுக்கிரன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் விபசாரியாகி பிரசித்தமுள்ளவளாக விருப்பாரென்பதாம். 26

5-வது சுலோகம் கும்பமகரலக்கினராசி திரிம்சாம்சைபலன்.

குடமொடுமகரஞ்சென்மம் குளிர்மதியதிலுற்றாலும்
அடருசேய்திரிம்சாம்சையி லரிவையுந்தாசியாகும்
முடவனின் திரிம்சாம்சையில் மின்னனையாகவந்தால்
திடமுடனீசன்றன்னைச் சேருவாளதிகக்காமி.

இ-ள். மகரம் கும்பம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கின மாகிலுமிருக்க செவ்வாய் திரிம்சாம்சையில் பிறந்தபெண் தாசியாகும் மகரகும்பம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்க சனி திரிம்சாம்சையில் பிறந்தபெண் நீசபுருஷனைச்சேருவள் அதிககாமமுள்ளவளாக விருப்பாளென்பதாம். 27

5-வது சுலோகம் கும்பம் மகரலக்னராசி திரிம்சாம்சைபலன்

மானொடுகுடமுஞ்சென்மம் மதியதிலிருந்தபோதும்
மீனவன்றிரிம்சாம்சையி மெல்லியர்பதிவிஸ்வாசி
ஆனமால்திரிம்சாம்சையி லதிகதுன்மார்க்ககாரி
வானுறைவெள்ளியால் மாதுதான்மலடியாமே.

இ-ள். மகரம் கும்பம் சென்மலக்கினமாகிலும் சந்திர லக்கினமாகிலுமிருக்க குருதிரிம்சாம்சையில் பிறந்தபெண் தன்புருஷனிடத்தில் அதிக அன்புள்ளவளாகும் மகரம் கும்பம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்க புதன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் துன்மார்க்கமுள்ளவளாகும் மகரம்கும்பம் சென்மலக்கினமாகிலும் சந்திரலக்கினமாகிலுமிருக்க சுக்கிரன் திரிம்சாம்சையில் பிறந்தபெண் மலடியாகி யிருப்பாளென்பதாம்.

6-வது சுலோகம். திரிம்சாம்சைபலன்.

திரிம்சாம்சைபலன்கள்தன்னை செப்பிடும்விதமேதென்னில்
மருவுமோர்ராசிதன்னில் மன்னுகோள்சம்பந்தத்தின்
திரிம்சாம்சைதனிலிருந்து சென்றதிரிம்சாம்சையாலும்
வருராசிலக்கினத்தில் வந்ததிரிம்சாம்சைகொண்டே

இ-ள். எந்தராசியில் எந்தகிரக சம்பந்தமான திரிம்சாம்சையில் சந்திரனிருப்பானோ அந்த திரிம்சாம்சையைக்கொண்டு எந்தராசி லக்கினமாகுமோ அந்தலக்கினத்தில் எந்தக்கிரக திரிம்சாம்சை உதயமாகுமோ அந்த லக்னதிரிம்சாம்சையைக்கொண்டு பலன்சொல்லவேண்டியதென்பதாம். 29

6-வது சுலோகம், திரிம்சாம்சைப்பலன்

ஓரைக்குவோர்திரிம்சாம்ச முடுபதியோர்திரிம்சாம்சம்
தேறியேயிருந்தகாலில் சீரதுவலிவறிந்து
மாறிடாவலிவினாலே வழுத்துதல்நூல்வழக்கு
பாரதிவினமானால் பலனதுகூறுதென்றே

இ-ள். லக்கினதிரிம்சாம்சைஒன்றும் சந்திரனிருந்த திரிம்சாம்சை ஒன்றுமாகவிருக்கில் சந்திரலக்கினத்திலும் ஜென்மலக்கினத்திலும் எதுபலாதிக்கமாயிருக்குமோ அது எந்த திரிமசாம்சையி லிருக்குமோ அந்த திரிம்சாம்சைக்குச் சொல்லியிருக்கிறபலனைச் சொல்லவேண்டியதாம் பலவீனமானதற்குச்சொன்ன திரிம்சாம்சைபலனைச் சொல்லப்படா தென்பதாம்,

7-வது சுலோகம், சனிநவாம்சைபலன்

சனிபுகரெவிடத்தேனும் சனிநவாங்கிசையில்வெள்ளி
இனியமாமழைகோளம்ச மெழிற்சனியிருந்தபோது
தனியதாயொருவரைத்தான் தானொருவருமேகாண்கில்
வனிதையர்மற்றோர்ஸ்திரீயை மதத்தினற்கூறுவாளே

இ-ள். தனிசுக்கிரன் வந்த ராசியிலாவது சனிநவாங்கிசையில் சுக்கிரனும் சுக்கிரநவாங்கிசையில் சனியுமிருக்க ஒருவரையொருவர்காண ஒருயோகமாகும் இதன்பலனை இந்தபெண் மற்றொருபெண்ணை சேருவாள் இதுவும் அடுத்தகவியும் ஒருதொடர் பலனாகும் பின்னாற் சொல்வோமென்பதாம், 31

7-வது சுலோகம், கும்பநவாம்சைபலன்

விடையொடுதுலையேசென்மம் மேவிடவல்லோரைக்கு
குடநவாங்கிசையுமாகக் குவலயமதிலேவந்தாள்
திடமதாற்சருமலிங்கம் செய்துஸ்திரீதம்மைச்சேரும்
மடமயிலதிகக்காமீ மருவுவாள்பலபேர்தம்மை

இ-ள். ரிஷபம் துலாமிந்த ராசியிரண்டில் ஒன்று ஜென்மலக்கினமானாலும் அந்தராசிக்கு நவாமிசை லக்னம் கும்பமாக வந்திருக்கப் பிறந்தவளுக்கு இரண்டாவது யோகமாம் இதன்பலன் காமமீறினதினாலே பல புருஷன் சங்கமம் செய்வதிலும் திருப்தியடையாமல் தான் புருஷரூபம்போல தோலினால்செய்து அரையில் கட்டிக்கொண்டு மற்றொரு பெண்ணைச்சேர்ந்து மகிழுங்குணமுள்ளபெண்ணாகும் 34-வதுகவிக்கும்பலன் இதுவேயாகுமென்பதாம், 32

8-வது சுலோகம், ஏழாமிடப்பலன்

ஜென்மத்துக்கலதுசந்திரன் சேர்விடந்தனக்குவேழில்
உன்னிதக்கோளில்லா துயர்சுபர்நோக்கமுற்றால்
மின்னனையாளின்பர்த்தா மெல்லியாள்மனதுபோல
அன்னவனிணங்கிவாழ்வா னவளதிகாரியாமே

இ-ள். ஜென்மலக்கினத்துக்காகிலும் அல்லது சந்திரலக்கினத்துக்காகிலும் ஏழாமிடம் கிரகமில்லாதிருக்க லக்கினத்தையாகிலும் ஏழாமிடத்தையாகிலும் சுபர்கள் பார்க்கப்பிறந்த பெண்ணின் பர்த்தா அவளுக்கு இணங்கி அவள் மனதுபோல நடப்பானென்பதாம். 33

7-வது சுலோகம், ஏழாமிடப்பலன்

சென்மலக்கினத்துக்கலது திங்களார்மனைக்குமேழில்
சுன்னல்லமானேநிற்க சுந்தரிதனைமணந்தோன்
நன்னெறியுளனனாலும் நபுஞ்சனாயிருப்பானென்று
பன்னகத்துயின்றோன்மைந்தன் படைத்ததுபலனீதாமே

இ-ள். சென்மலக்கினத்திற்காவது சந்திர லக்கினத்திற்காவது ஏழா மிடத்தில் சனியிருந்தாலும் அல்லது புதனிருக்கப்பிறந்தபெண் புருஷன் சற்குணவந்தனாக விருப்பான் அப்படியிருந்தாலும் அலியாகவிருப்பா னென்பதாம், 34

7-வது சுலோகம், சரராசிபலன்

மங்கையர்க்கேழாம்ராசி மருவியசரமேயாகில்
நங்கையின்கணவன்றானும் நாடதில்சஞ்சரிப்பான்
தங்கியதிரமதானால் தன்னகமிருந்துவாழ்வன்
அங்குமேவுபயமாகி லவன்சின்னாள்வெளிசெல்வானே

இ-ள். பெண்கள் சென்மலக்கினத்துக் கேழாம்ராசி சரமாகவிருக்கில் பெண்ணின் புருஷனெப்போதும் வெளியூர்கிராமங்கள் இன்னம்பலதேசம் நாடுகளில் சஞ்சரித்துக் கொண்டிருப்பான். ஸ்திரராசி யேழாமிடமாக வரில் பெண்ணின்புருஷன் சுயதேசத்தில் இருப்பான் உபயராசியாகவிரு க்கில் பெண்ணினதுபுருஷன் சிலகாலம் சுயதேசத்திலும் சிலகாலம் பர தேசங்களில் சஞ்சரித்து மிருப்பானென்பதாம், 35

8-வது சுலோகம், ஏழாமிடப்பலன்

இரவியேழதிலிருக்க வேந்திழைதனைமணந்தோன்
விரவியேவெளிசெல்லென்ன விலக்குவான்பாரிதன்னை
அரத்தனேரிருக்கப்பாப ராரலேநோக்கமுற்றால்
அரிவைபாலியத்திற்றானே மைங்கலையாவாடானே

இ-ள். பெண்கள் சென்மலக்கினத்திற்கு ஏழாமிராசியில் சூரியனிருக் கப்பிறந்தபெண்ணை மணஞ்செய்தவன் தன்பாரியை விலக்கி விடுவான், பெண்கள் ஜென்மலக்கினத்திற் கேழில் செவ்வாயிருக்க அந்த செவ்வா யைச் சனி சூரியன் பாம்பு முதலான பாபர்கள் யாராகிலும் பார்க்கப் பிற ந்த ஸ்திரீ பாலியத்தில்தானே விதவையாவாளென்பதாம், 36

8-வது சுலோகம், ஏழாமிடப்பலன்

காமனார்தலத்தினிலன் கலக்கமில்லாதிருக்க
தீமையாம்பாபரந்த தினகரன்மகனைநோக்க
பூமியிலுதித்தமாது புகழ்மணமில்லாளாகி
நேமமாங்கன்னியாகி நேர்மையாயிருப்பாளாமே

இ-ள். ஸ்திரீகள் சென்மலக்கினத்திற்கு ஏழாமிடத்தில் இருக்கிற சனியை சூரியன் செவ்வாய் பாம்பு முதலான பாபர்கள் யாராகிலுமொருவர்நோக்க பிறந்தஸ்திரீ பெருமையோடு செய்கின்ற விவாகமில்லாமல் விர்த்தாப்பியம் வரையில் கன்னியா ஸ்திரீயாகவே விருப்பாளென்பதாம், 37

8-வது சுலோகம், யோகவிவரம்

சந்திரன்சென்மமென்னும் சாற்றுமிவ்விரண்டைக்கொண்டு
வந்திடும்பலன்களெல்லாம் வழுத்துதன்முறைமையாகும்
இந்துதானேழினின்று லெழிற்பலன்கூறுதாலும்
சொந்தமாய்நிலவைக்கொண்டு சொல்வதுபலன்களாமே

இ-ள். சென்மலக்கினத்தைக்கொண்டும் சந்திர லக்கினத்தைக்கொண்டும் பலன்கள் சொல்லவேண்டியதாம் ஏழாமிடத்திலிருந்த சந்திரனுக்குப் பலன் சொல்லவேண்டியதில்லை யானதால் லக்கினத்திற்கும் சந்திரனுக்கும் ஏழாமிடப்பலனைச் சொல்லவேண்டிய தென்பதாம், 38

9-வது சுலோகம், யோகவிவரம்

சத்தமந்தனிலேகோள்கள் தங்கியபலனைச்சொன்னேம்
உத்தவேழதனினல்லோ குறைந்திடுபலனைவிட்டு
சித்தமாயேழிற்றீயர் சென்றிடக்காமியாவாள்
இத்தலமதில்மாங்கல்யம் மிழந்திருப்பவளுமாமே

இ-ள். பெண்கள் சென்மலக்கினத்திற்கு ஏழாமிடத்தில் இருந்தகிரக பலனைச் சொன்னேம் ஏழாமிடத்தில் சுக்கிரன் புதன் குருபலனை நீக்கி பாபர்களிருக்க காமியாகியும் விதவையாகியு மிருப்பாளென்பதாம், 39

9-வது சுலோகம் ஏழாமிடப்பலன்

நல்லகோள்தீயகோளும் நாடிடக்காமஸ்தானம்
மெல்லியர்தோன்றுவாரேல் விவாகம்செய்தவனைவிட்டே
வல்லமையாய்மற்றோர்பால் மனக்களிப்புடனேமாது
தொல்லையற்றனியாய்வாழ்வான் சுந்தரமடந்தைதானே

இ-ள். பெண்கள் சென்மலக்கினத்திற் கேழாமிடத்தில் சுபரும் பாபரும் கூடியிருக்கப் பிறந்தபெண் மணஞ்செய்த கணவனைவிட்டுநீங்கி தைரியத்துடனே தன்மனதுக்கேற்ற புருஷனேடுகூடி மணஞ் சந்தோஷித்திருப்பாளென்பதாம், 40

9-வது சுலோகம் ஏழாமிடப்பலன்,

பலமிலாபாபக்கோள்தான் பற்றிடக்காமத்தானம்
நலமுறுஞ்சுபரேநோக்க நலமுடனுதித்தமாதை
நிலமதில்மணம்புரிந்த நிருபனுமாதைநீக்கி
சலனமதுற்றிருப்பான் தையலாள்பிரிந்ததாலே

இ-ள். பகை நீசம்பெற்ற பாபர்கள் ஏழாமிடமிருக்க சுபர்கள் பார்வையடைந்திருந்த காலத்தில் பிறந்தபெண்ணை கலியாணஞ்செய்த புருஷன் தன்பாரியாளை விலக்கிவிட்டு விசனமும் அவமானமு மடைந்திருப்பான் அந்தபெண் புருஷனைவிட்டு விலகியிருப்பா ளென்பதாம், 41

9-வது சுலோகம் நவாம்சைபலன்.

மங்கலன்சுங்கன்றானும் மகிழ்வுடனெங்குற்றாலும்
சுங்கன்னவாம்சம்சேயும் சுக்கிரன்சேய்நவாம்சம்
தங்கிடவுதித்தமங்கை தன்னதுவிச்சைபோல
சங்கமம்செய்வாளென்று சாற்றுவாய்மடவாருக்கே

இ-ள். சுக்கிரன் செவ்வாயிவர்கள் ராசியிலே யெங்கிருந்தாலும் அமிசையில் சுக்கிரன் செவ்வாய்நவாங்கிசத்திலும் செவ்வாய் சுக்கிரன் நாவாங்கிசத்திலு மிருக்கப் பிறந்தபெண் தன்சுய இச்சையினாலே பலபேர்களை சம்போகம்செய்து சந்தோஷத்துட னிருப்பாளென்பதாம், 42

9-வது சுலோகம் ஏழாமிடப்பலன்,

திங்கள்சேய்புகரோன்காமம் சேர்ந்திடவுலகுதன்னில்
மங்கையாய்வந்தாள்சொந்த மணமகன் வார்த்தைகேட்டு
கங்குலும்பகலுமென்ற காலத்தையுணர்ந்திடாமல்
சங்கமம்செய்வாளென்று சதுர்முகன்சமைத்திட்டாரே,

இ-ள். பெண்கள் ஜென்மலக்கினத்திற் கேழாமிடத்தில் சந்திரன் செவ்வாய் சுக்கிரன் கூடியிருக்கப் பிறந்தபெண் தன் கணவனுடைய உத்திரவுகேட்டு பகலென்றும் இரவென்றும் வித்தியாசம் இல்லாமல் பொருள் சம்பாதிப்பதற்கும் மனச் சந்தோஷத்திற்காகவே பலபேர்களைச் சேர்ந்து சுகித்திருப்பா ளென்பதாம், 43

10-வது சுலோகம் ஜென்மலக்கினபலன்,

ஆடுதேள்மகரகும்ப மிவையர்செனனதானங்
கூடிடும்புகர்மதியை குணமிதாத்தீயர்நோக்க
சேடியுமவளையீன்ற செல்வமாதாவுமாக
நாடதில்வேசியாகும் நங்கையின்குணமிதாமே,

இ-ள் மேஷம் விருச்சிகம் மகரம் கும்பம் இவைகளில் ஒன்று ஜெனன லக்னமாயிருக்க அந்தஜென்மலக்னத்தில் சுக்ரனும் சந்திரனுங்கூடியிருக்க அந்த ஜென்மலக்னத்தைச் சூரியன் சனிசெவ்வாய் பாம்புமுதலான பாவர்கள் நோக்கப்பிறந்த பெண் விபசாரியாகும். அந்த பெண்ணைப்பெற்ற தாயும் விபசாரியாகுவா ளென்பதாம்' 44

10-வது சுலோகம் செவ்வாய் நவாமிசைப்பலன்

மாரனூர்தலத்திருந்த மங்கலனமிசம்பெற்று
காரியுநோக்கமுற்றால் காரிழைநோய்மிகுந்து

தேரியநிதம்பமுள்ளான் செல்வியின்விதிபிதென்று
பாரதிலுரைப்பாய்நீயும் பலனதுயிவ்வாறென்றே

இ-ள். ஏழாமிடத்திலிருந்த குஜநவாங்கிசை யடைந்த சனியினல் சென்மலக்கினத்தைப் பார்க்கப்பட்டிருக்கப் பிறந்தபெண் ரோய்களுள்ள கடி தடத்தையுள்ளவளாக விருப்பாளென்பதாம், 45

11-வது சுலோகம் சுயநவாம்சைப்பலன்

மங்கையர்சென்மத்திற்கு மாரனின்றலத்திற்றனே
தங்கியசுபக்கோள்தாமும தன்னவாங்கிசையடைந்தால்
அங்கத்தில்நோயிலாதா ளழகுளகணவனுக்கு
இங்கிதத்துடன்னடக்கு மியல்புளபெண்டீராமே

இ-ள், பெண்கள் சென்மலக்கினத்திற் கேழாமிடத்தில்சுபர்களிருக்க அமிசையில் அந்த சுபர்கள் தன் சுயநவாங்கிசையடைந்திருக்கப் பிறந்த பெண் நோயில்லாத சரீரமுடையவள் அழகுள்ளகணவனுக்குபாரியாவாள் கணவன் மனதுக்கு ஒத்தவண்ணமாக நடந்து வருபவளாகு மென்பதாம்.

11-வது சுலோகம் மகரகும்பலக்ன அமிசைப்பலன்

மகரகும்பங்கள்ரண்டும் மாரனுர்தலமானாலும்
மகரகும்பத்தினம்சம் மங்கைக்குகாமமானல்
சகமதிலிவளின்பர்த்தா தான்வயோதிகமதுற்று
அகமொடுமூர்க்கமுள்ள வாடவனருகுங்காணே

இ-ள், பெண்கள் சென்மலக்கினத்திற் கேழாமிடம் மகரமாகிலும் அல்லது கும்பமாகிலுமிருக்க அந்தபெண்ணின் கணவன் விர்த்தியாப்பிய மும் மூர்க்கமும் உள்ளவனுகவிருப்பான். நவாங்கிசையில் மகரம்கும்பமாக இருந்தாலும் இந்தபலனேயாகுமென்பதாம். 47

11-வது சுலோகம் மேஷவிருச்சிகலக்ன நவாம்சைப்பலன்

ஆடுதேளேழாம்ராசி யதிநவாங்கிசைகடாமும்
கூடுமேழோரையாகில் கோதையின்மணவாளன்றான்
சேடியர்லோலனும் தீரனுய்வலிவுள்ளோனும்
நீடியகீர்த்தியோடு நீள்புவியதில்வாழ்வானே

இ-ள், மேஷமாகிலும் விருச்சிகமாகிலும் ஸ்திரீகளுக் கேழாமிடமாக வரில் அந்தஸ்திரீயின்கணவன் கோபியாயும் கலங்காதநெஞ்சும் சரீரபல மும்பொருந்தி கீர்த்தியுடனிருப்பான் நவாமிசத்துக்கேழாமிடம் மேஷம் விருச்சிகமானலும் இந்தப்பலனேயாகு மென்பதாம். 48

11-வது சுலோகம் ரிஷபதுலாலக்ன நவாம்சைப்பலன்

புல்லமும்நிறையுமேழாய்ப் பொருந்துநவாங்கிசந்தான்
சொல்லியவிடைகோலாகத் தோன்றினுள்கணவன்மிக்க

நல்லரூபத்தான்செல்வம் நற்குணம்சௌபாக்கியங்கள்
இல்லதிற்பொருந்திவாழு மியல்பதுவுடையனாமே

இ-ள். ரிஷபமாகிலும் துலாமாகிலும் ஸ்திரீகளுக்கு ஏழாமிடமாக வரில் அந்தஸ்திரீயின் கணவன் அழகு சவுந்தரிய முள்ளவனாகியும் செல்வம் சற்குண சவுபாக்கியங்களும் பொருந்தினவனாகும். ரிஷபதுலா நவாமிசம் ஏழாயிடமாகவந்தாலும் இந்தப்பலனே யாகுமென்பதாம். 49

11-வது சுலோகம் மிதுனகன்னி லக்னநவாமிசைப்பலன்

மிதுனமுங்கன்னியேழாய் மேவிடவவ்வம்சந்தான்
பதியதுமேழதாகப் பாரினில்வந்தாள்பர்த்தா
அதிகுணவித்துவானு மறிவுளநிபுணனாக
விதிபெறவிருப்பானென்று விபரமாயுரைத்தலாமே

இ-ள். மிதுனமாவது கன்னியாவது ஏழாமிடமாக விருக்கப் பிறந்த ஸ்திரீயின்கணவன் சற்குணவந்தனும் புத்திபும் யூகமுள்ளவனாக விருப்பான் கன்னி மிதுன நவாமிசம் ஏழாமிடமாக வந்தாலும் இந்தப்பலனே யாகு மென்பதாம். 50

12-வது சுலோகம் கடகலகனக்கின நவாம்சைப்பலன்

கடகமேயேழதாகக் கருதிடவமிசங்கொண்டால்
திடமுறுமேழதாக செனித்திடுமடவார்பர்த்தா
விடயசுகத்தான்காமி மிருதுசுபாவத்தோடும்
படருமிவ்வுலகில்வாழ படைத்தனனயனார்தானே

இ-ள். கடகராசி ஏழாமிடமாகவிருக்கப் பிறந்தஸ்திரீயின் கணவன் விடயசுகமென்ன காமாதுரனாகியும் சாந்தம் தயைமுதலான சற்குணவந்தனாகியுமிருப்பான் கடக நவாமிசை ஏழாகவந்தாலும் இந்தப்பலனே யாகுமென்பதாம். 51

12-வது சுலோகம் தனுசுமீனலக்ன நவாம்சைப்பலன்

வில்லொடுகயலுமேழாய் விளங்கிடத்துரோணமீனம்
சொல்லுமேழோரையாகத் தோன்றியமடவார்பர்த்தா
நல்லமாகுணங்களுள்ள நரபதியோகத்தோடு
வல்லவனென்னவாழ்வன் வாரிசூழவனிமீதே

இ-ள். தனுசு மீனம் ஏழாமிடமாக விருக்கப்பிறந்த ஸ்திரீயின் கணவன் சமகுணவந்தனாகியும் சமர்த்துள்ளவனாகியும் ராஜயோகத்தைப்பொருந்தினவனாகியு மிருப்பான் தனுசு மீன நவாமிசம் ஏழாமிடமாக வந்தாலும் இந்தப்பலனேயாகு மென்பதாம். 52

12-வது சுலோகம் சிங்கலக்ன நவாம்சைபலன்

சிங்கராசியதேகாமம் சியுமேயமிசந்தானும்
துங்கமாமேழதாக தோன்றிடமடவார்பர்த்தா
அங்கமேமிருதுவாகு மரிவையர்மேல்விஸ்வாசந்
தங்கினன்வியாபாரத்தில் சமர்த்துளபுருடனுமே

இ-ள். சிங்கராசி ஏழாமிடமாக விருக்கப்பிறந்த ஸ்திரீயின் கணவன் மிகுந்த மிருதுசுபாவமும் ஸ்திரீகளின்மேல் அதிசப்பிரியமும் வியாபாரத்தில் சமர்த்துள்ளவனுகியு மிருப்பான் நவாங்கிசமும் சிங்கநவாமிசம் ஏழாமிடமாகவந்தால் இந்தப்பலனே யாகு மென்பதாம். 53

12-வது சுலோகம் நவாம்சை விபரம்

இவ்விதமுரைத்தராசி யெழில்நவாங்கிசையிலோர்கோள்
அவ்விதசம்பந்தத்தி லடையும்நவாங்கிசந்தான்
ஒவ்வுமற்றோர்கோள்தன்னி லுயர்நவாங்கிசையுமாகில்
செவ்வையாய்ராசியம்சம் செயல்வலிதறிந்துசெப்பே

இ-ள். இப்போது சொன்னராசி நவாமிசையில் ஒருகிரகசம்பந்தமான நவாமிசை மற்றொருகிரகம் சம்பந்தமானதாயிருந்தால் அப்போது ராசியாதிபதி நவாம்சாதிபதி இந்த விருவர்களில் பலவந்தமுள்ள கிரகத்தினுலே பலன்சொல்லவேண்டிய தென்பதாம். 54

13-வது சுலோகம் சென்மலக்கினபலன்

சந்திரன்மாலுஞ்சுங்கன் சார்ந்துலக்கினத்திருக்க
சுந்தரிஜெனனமானுற் சுகமதில்லாள்மிக்க
நிந்தையீரிஷைமார்ச்சர்யம் நேரிழையுடையாளாகி
சந்ததம்துக்கமுள்ள சாதகியிவள்தான்காணே

இ-ள். சென்மலக்கினத்தில் சந்திரன் புதன் சுக்கிரன் இவர்கள் மூவரும்கூடி நிற்க ஸ்திரீயின்குணமானது ஈரிஷை மார்ச்சர்யம் நிந்தை முதலான துர்க்குணமுள்ளவள் சுகமில்லாதவள் எப்போதும் சஞ்சலமும் துக்கமும் உடையவளாக விருப்பா ளென்பதாம், 55

14-வது சுலோகம் சென்மலக்னபலன்

நிலவுமால்செனனம்தங்க நேரிழைவந்தாளாகில்
பலகலைகீதவாத்யம் பண்புறத்தெரிந்தாள்மிக்க
நலமுறுகுணங்களுள்ளாள் நாரியுமறிவில்தேர்ந்து
நிலமிசைவாழ்வாளென்று நிகழ்த்திடுங்கணிதநூலே.

இ-ள். சந்திரனும் புதனும் சென்மலக்கினத்திலிருக்கப் பிறந்த ஸ்திரீ சாஸ்திரமுணர்ந்தவள் கீதவாத்தியமும் முதலியன தெரிந்தவள் நல்ல சற்குணமும் புத்தியும் யூகமும் உடையவளாக விருப்பா ளென்பதாம். 55

13-வது சுலோகம் ஜென்மலக்னபலன்

சுங்கனும்புலவனும்சேர்ந்து தூயலக்கினத்திருக்க
மங்கையாயுலகில்வந்தாள் வடிவதுசவுந்தரீயம்
சங்கிதவாத்தியத்தில் சமர்த்துளாள்சௌபாக்கியங்கள்
நங்கையுமிகவேபெற்று நலம்பெறவாழ்வாள்தானே.

இ - ள். ஜென்மலக்கினத்தில் சுக்கிரனும் புதனுங் கூடியிருக்கப்பிற ந்த ஸ்திரீ அழகு சவுந்தரிய முள்ளவள் சங்கீதவாத்தியத்தில் தேர்ந்தவள் சமர்த்துள்ளவள் சௌபாக்கியவதி சுகமுடனிருப்பவளாகு மென்பதாம்.

13-வது சுலோகம் ஜென்லக்னபலன்

மதிபுகர்மாலும்ஜென்மம் மால்குருவெள்ளிமூவர்
துதிபெறுலக்னந்தங்க தோன்றியமடவார்தானும்
பதியதில்சுகமுஞ்செல்வம் பாரதில்மிகவேபெற்று
விதியுடனிருப்பாளென்று வேதனும்விதித்ததாமே.

இ-ள். ஜென்மலக்கினத்தில் சந்திரன் சுக்கிரன் புதன் இருந்தபோதி லும் அல்லது ஜென்மலக்கினத்தில் புதன் குருசுக்கிரன் இருந்தபோதிலும் சுகமும் செல்வமும் சம்பத்தும் நற்குணத்துடனு மிருப்பாளென்பதாம்.

14-வது சுலோகம் ஏழாமிடப்பலன்

சேடிஜென்மத்துக்கேழிற் றீயகோளமர்ந்தபோது
நாடியவஷ்டமாதி நண்ணுங்கோளங்கிசத்தில்
கூடியகோட்களாயுள் கூர்திசைபுத்தியந்திரம்
ஆடவன்மரணமாக வமங்கலையாகுவாளே.

இ-ள். ஸ்திரீகள் ஜென்மலக்கினத்திற் கேழாமிடத்தில் பாபக்கிரக மிருக்க விதவையாவாள் அதெப்பொழுதென்றால் அஷ்டமாதிபதி எந்த கிரகத்தினுடைய நவாமிசையி லிருப்பானோ அந்தக் கிரகத்தினுடைய திசை புத்தி அந்திரங்களில் கணவன் மரணமாவான் இந்த ஸ்திரீயும் வித வையாவாளென்பதாம். 53

14-வது சுலோகம் விதவைபலன்

ஜென்மலக்கினத்துக்கெட்டில் தீயகோளமர்ந்திருக்க
தின்மையயஷ்டமாதி சென்றநவாங்கிசாதி
நன்னியதிசையும்புத்தி நன்மணமுடிந்தபின்பு
மின்னனைகொழுநன்சாக விதவையுமாவாள்தானே.

இ-ள். ஸ்திரீ ஜென்மலக்கினத்திற் கெட்டாமிடத்தில் பாபக்கிரகமா கிய சூரியன் செவ்வாய்சனி ராகுகேதுமுதலிய பாபர்களில் ஒருவரிருக்க அந்த அஷ்டமாதிபதியிருந்த நவாங்கிசையின் அதிபதியாரோ அவர்திசை

புத்திரயந்திரங்களில் விவாகம்செய்துக்கொண்ட ஸ்திரியின் கணவன்மரண மாக இருந்த ஸ்திரீ விதவையாவா ளென்பதாம். 59

14-வது சுலோகம் சுமங்கலியோகம்

மாதவன்செனனத்திற்கு மகிழிரண்டிடத்தில்நல்லோர்
தீதுறும்பாபரெட்டில் திரமுடனிருக்கும்போது
சாதகிசுமங்கலியாய்ச் சாருவள்சுவர்க்கநாடு
கோதறும்பலனீதென்று கூறுவாயவனியோர்க்கே.

இ-ள். ஸ்திரீகள் ஜென்மலக்கினத்திற் கிரண்டாமிடத்தில் சுபக்கிரகமும் எட்டாமிடத்தில் சூரியன் செவ்வாய் சனிமுதலான பாபக்கிரகமிருக்கப் பிறந்த ஸ்திரீ கணவன் உயிருடனிருக்க தான் சுமங்கலியாய் இறந்த பின்பு மோக்ஷவீடாகிய சுவர்க்கநாடு சேர்வாளென்பதாம். 60

14-வது சுலோகம், மலடியோகம்

சந்திரன்மடந்தைவிட்டன் தனிவிடைசீயந்தன்னில்
சொந்தமாயமர்ந்தபோது தோன்றியமங்கையர்க்கு
சந்ததியற்பமென்று சதுர்முகப்பிரமதேவன்
அந்தநாளமைத்ததாகு மறிவுளமடவாருக்கே.

இ-ள். கன்னி விருச்சிகம் ரிஷபம் சிம்மத்தில் சந்திரனிருக்கப்பிறந்த ஸ்திரீகளுக்கு சுவற்புத்திரருடையவளாக விருப்பாள் ஜென்மலக்கினம் எதுவானாலும் சரியென்பதாம். 61

15-வது சுலோகம் வேசிப்பெண்.

நீலனேநட்பில்நிற்க நிலவுமால்சுக்கிரன்றன்
ஞாலத்திலீனமாகில் ஞாயிறுபொன்சேயவலுத்துக்
கோலொடுவரியாழாடு கும்பம்வில்தன்னில்வந்த
சீலியும்புருஷன்போலத் திடமொடுபலரைச்சேர்வாள்.

இ-ள். துலாம் சிம்மம் மிதுனம் மேஷம் கும்பம் தனுசு இவைகளி லொன்று ஜென்மலக்கினமாகவிருக்க சனி நட்பில் மத்திமபலனுயிருக்க சந்திரன் புதன் சுக்கிரன் பலவீனமாயிருக்க சூரியன் குரு செவ்வாய் பல வந்தனுகவிருக்கப் பிறந்தஸ்திரீ புருஷ சுபாவசேஷ்டையுடையவ ளாகியும் காமமீறி பலபுருஷர்களைச் சேருவாளென்பதாம். 62

15-வது சுலோகம் பிர்மக்ஞானி

பொன்னுமால்சேயும்வெள்ளி புகுவிடமெதுவானாலும்
நன்மையாய்வலுத்துநிற்க நாடியசமராசியில்
கன்னிகையுதித்தாளாகில் காசினியதிற்கியாதி
மன்னுபல்நூலுணர்ந்த மகிழ்பிர்ம்மக்கியானியாமே.

இ-ள். இரட்டைராசியாகிய ரிஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம் மீனம் இவைகளிலொன்று ஜென்மலக்கினமாகியிருக்க குரு புதன்

செவ்வாய் சுக்கிரன் இவர்கள் எந்தராசியிலிருந்தாலும் பலவந்தனுக விருக்கப்பிறந்த ஸ்திரீ பூமியிலே இயாதி பிரசித்தம் கீர்த்தியுடனே அனேக சாஸ்திரமுணர்ந்து சமர்த்துளளவளாயும் மோக்ஷவீட்டைய வழியாகிய பிரமத்யான முணர்ந்தவளாக விருப்பாளென்பதாம். 63

16-வது சுலோகம் சன்னியாசப்பெண்.

ஏழினிலொருபாபக்கோ ளிருந்திடமற்றோர்பாபி
சூழுமொன்பதிலேநிற்க தொடருமொன்பதிலுற்றோர்க்கு
ஊழிஞனுறும்பிரவற்ஜ மொண்டொடியடைவாளென்று
வாழுமிவ்வுலகத்தோர்க்கு வழுத்தியபலனிதாமே.

இ-ள். ஏழாமிடத்தில் பாபக்கிரகமிருக்க மற்றொருபாபி ஒன்பதிலிருக்க ஒன்பதாமிடத்திலிருந்த பாபர்களுக்குச் சொல்லப்பட்ட சன்னியாசத்தை யிந்த ஸ்திரீ நிச்சயமாக அடைவாளென்பதாம். 64

விதவைப்பெண் வேறுசோதிட நூலிலிருந்த கவி.

அட்டமந்தனில்சேய்ராகு வாதவன்னீலநிற்க
திட்டமாயுலகுவந்த சேயிழையாளைத்தானே
மட்டுடன்மணங்கள்செய்த மணவாளனிறந்துபோக
கட்டளையயன்மைத்தான் கைம்பெண்ணுயிருக்கத்தானே.

இ-ள். ஸ்திரீகள் சென்மலக்கினத்திற்கு அட்டமஸ்தானத்தில் சூரியன் செவ்வாய் சனி பாம்பு இவரில் ஒருவரிருக்க நிச்சயமாக ஸ்திரீயின் கணவனிறப்பான் ஸ்திரீயும் அமங்கலையாகுவா ளென்பதாம். 65

16-வது சுலோகம் பலன்சொல்லுங்காலம்

இந்தநல்லதங்களாக வேந்திழைமார்களுக்கு
சொந்தமாய்கர்ப்பாதானம் தூயவிவாககாலம்
விந்தையாம்பிறஸ்னகாலம் விளங்கவிப்பலன்கடன்னை
சிந்தையிற்றிடபதாகச் செப்பிடும்முறையிதாமே.

இ-ள். இப்போது சொன்ன பிரகாரமாய் ஸ்திரீகளுக்குஜாதகப்பலனை கன்யாதானகாலம் விவாககாலம் பிரஸ்னை ஆரூடகாலங்களில் மனக்கலக்கமில்லாமல் திடமாகச்சொல்லவேண்டிய தென்பதாம். 66

படலச்செய்யுள் தொகை.

கன்னிகைபடலந்தானும் கருதியவருபத்தாறுப்
உன்னியசெய்யுள்தானு முறைசெய்தேன்குருவைப்போற்றி
மன்னிடுமலேயிராயன் மாநகரதனில்வாழும
நன்னயவயித்திலிங்கம் நலமுடனுரைசெய்தேனே.

இருபத்துநாலாவது
ஸ்திரீஜாதகப் படல முற்றிற்று.

---

உ

# மங்களேஸ்வரீயம்.

இருபத்தைந்தாவது

## நிரியாணப்படலம்.

1-வது சுலோகம். நிரியாணவிபரம்.

அட்டமதானந்தன்னு லாயுளைக்கணிக்கவேண்டில்
இட்டமாமத்தானத்தை யிருள்வலிமுதலேழ்பேரும்
சட்டமாய்நோக்குங்காலில் சதியுறும்நோயுண்டாகி
கட்டமேபட்டிறக்குங் கணக்கதைக்கூறுவோமே.

இ-ன். அஷ்டஸ்தான மென்னப்பட்ட எட்டாமிடத்தினுலும் எட்டாமிடமிருந்த கிரகங்களினுலும் எட்டாமிடத்தை நோக்கும் கிரகத்தினுல் கஷ்டப்பட்டு மரணமாகும் விதங்களை இந்தப்படலத்தில் சொல்லுவோமென்பதாம். 1

1-வது சுலோகம் நோய்விபரம்.

சந்திரன்வாதசிலேஷ்மம் தரணிசேய்பயித்தியமாகும்
புந்தியும்வாதபித்தம் பொருந்தியசேட்டுமந்தான்
மந்தனும்வாதரோகம் மன்னவன்சிலேஷ்மரோகம்
இந்தநல்விதம்வெள்ளிக் கியற்றினும்வாதசிலேஷ்மம்.

இ-ன். சூரியனுக்கும் செவ்வாய்க்கும் பித்தம் ஓங்கலான பயித்யரோகம் சந்திரனுக்கு வாதசிலேஷ்மம் புதனுக்கு வாதபித்தசிலேஷ்மம் குருவுக்கு கபமென்னப்பட்ட சிலேஷ்மம் சுக்கிரனுக்கு வாதசிலேஷ்மம் சனிக்கு வாதம் இவ்விதமாகவேழுகிரகத்துக்கும் சொல்லப்பட்டதென்பதாம்.

1-வது சுலோகம் நோய்விபரம்.

இந்தநல்விதமாய்க்கூறு மொழிலுறுசெனனத்திற்கும்
சொந்தமாய்யெட்டாந்தானம சூனியமாகுங்காலில்
அந்தமாய்நோக்குங்கோளி லதிபலனுள்ளபேர்க்கு
எந்தரோகந்தானுண்டோ விதுகளால்மரணமாமே.

இ-ன். இப்போது சொன்னவிதமாக சென்மலக்கினத்திற்கு அஷ்டமஸ்தானத்தில் கிரகமில்லாது சுத்தமாயிருந்தால் அந்த எட்டாமிடத்தை நோக்கின கிரகங்களில் வலிதுபெற்ற கிரகத்துக்கு சொல்லப்பட்ட நோய்களுண்டாகும் அதினுலே அந்த ஜாதகன் மரணமாவானென்பதாம். 3

1-வது சுலோகம் அஷ்டமிருந்த கிரகபலன்.

அட்டமதானராசி யங்கமெவ்விடமானும்
இட்டமாயதிதானத்தா லிருந்திட்டகிரகத்தாலும்

சட்டமாய்நோக்குங்கோளின் தாதுவால்மரணமாகும்
மட்டிலாரிருக்கப்பார்க்க வகைபலதாற்சாவே

இ-ள். அஷ்டமஸ்தானமான ராசி ஜாதகனுக்கு எந்த அவயவமாகு மோ அந்த அவயவ இடத்தில் எந்தக்கிரகமிருந்தாலும் அந்தக்கிரகத்துக் குள்ளநோயும் அந்த எட்டாமிடத்தைப்பார்த்த கிரகத்துக்குள்ள நோயு முண்டாகி மரணமாவான் அஷ்டமத்தில் பலகிரகமிருக்க பலகிரகம் பார் க்கப் பலவிதமான ரோகங்களுண்டாகி மரணமாவானென்பதாம். 4

1-வது சுலோகம். கிரகநோயின் விபரம்.

ஆயுளில்களங்கநீரா லறிஞனேசுரத்தினாலும்
நாயிறுநெருப்பினாலும் நடையிலான்பசிதன்னாலே
சேயுமாதத்தினாலே செம்பொன்னும்தீர்க்கரோகம்
தூயநற்பளிங்குவாயு தொடர்பதால்மரணமாமே.

இ-ள். அஷ்டமஸ்தானத்திலிருந்த கிரகம் சூரியனானால் அக்கினியி னாலும் மரணம் சந்திரன் சலத்தினாலும் செவ்வாய் ஆயுதங்களினாலும் புதன் சுரநோயினாலும் குரு எல்லோருக்கும் தெரியும்படியான தீர்க்க ரோகத்தினாலும் சுக்கிரனானால் வாயுவைச்சேர்ந்த ரோகத்தினாலும் சனி பசியினாலும் மரணம் இந்தவிதமாக வேழுகிரகத்துக்கும் மரணத்தைக் கூறப்பட்டதென்பதாம், 5

1-வது சுலோகம், கிரகநிலை,

இந்தகோள்வலிதாய்நிற்கி லேற்படுஞ்சுபகன்மத்தால்
அந்தமாமத்தியத்தி லடைந்திடமத்யகன்மம்
வந்தவீனமானால் வாய்த்திடுமசுபகன்மம்
இந்தவாறெழுவராலே யிவன்நிரியாணமாமே.

இ-ள். இப்போது சொல்லப்பட்ட கிரகங்கள் அஷ்டமாதிபதி அட்ட மஸ்தானத்திலிருந்தவர் பார்த்தபேர்களில் வலிதுபெற்றிருந்தால் சுபகன் மங்களினாலும் மத்திமபலனாயிருந்தால் மத்தியகருமத்தினாலும் பலவீன மாகவிருந்தால் அசுபகருமத்தினாலும் மரணமுண்டாகுமென்பதாம், 6

1-வது சுலோகம் கிரகவலிது,

வலிதுடனிருந்தாராகில் வருநிரியாணந்திண்ணம்
வலிவதுகுறைந்திருக்க வயித்தியமதினாற்றீரும்
வலிவதுவீனமானால் வரும்பிணியற்பமாகும்
வலிவதையறிந்துகூற வகையிதாமிந்நூல்தானே,

இ-ள். இந்த கிரகங்கள் வலிதாக விருந்தால் அக்கினியாதி வியாதி யால் மரணம் வரும் நிச்சயம் வலிதில்லாது மத்திமவலிதாயிருந்தால் பிணி

யுண்டாகி பரிகாரத்தினாலும் தீரும் வலிதில்லாது ஈனமாகவிருக்கில் பிணி பீடை யுண்டாகும் அதுவும் அற்பமாகும் என்பதாம், 7

1-வது சுலோகம் மரணதேசம்.

மரணமாகிடுதேசந்தான் வருவதெட்டாமிராசி
சரமெனில்பரதேசத்தில் சாவதுதிண்ணமாகும்
திரமெனிசுயதேசத்தில் செப்பிடுவுபயமாகில்
பரவியமார்க்கந்தன்னில் பலன்குன்றிமரணங்காணே,

இ-ள். சென்மலக்கினத்திற்கு எட்டாமிடம் சரராசியானால் பரதேசத்திலும் திரராசியாகில் தன்னுடைய செனன தேசத்திலும் உபயராசியாகில் வழிமார்க்கத்தில் மரணமாவானென்பதாம், 8

2-வது சுலோகம், மலையேறிவிழ மரணம்,

சென்மலக்கினந்தனக்குத் திகழ்சுகம்கருமந்தன்னில்
மன்னியசேய்மார்த்தாண்டன் மருவிடுகாலிலல்லால்
உன்னிதகதிரோன்கன்ம முதிரனும்நாலிற்றங்க
சென்மனுமலையிலேறி செயல்தப்பிவிழுந்துசாவான்,

இ-ள். சென்மலக்கினத்திற்கு நாலிலாவது பத்திலாவது சூரியன்செவ்வாய் கூடியிருக்க மலைகளிலிருந்து கீழ்விழுந்து சாவான் சூரியன் செவ்வாய் நாலிலும் பத்திலும் சரி அல்லது மாறி மாறி யிருந்தபோதிலும் மலையிலேறி விழுந்து சாவானென்பதாம், 9

2-வது சுலோகம் கிணற்றில்மரணம்,

சந்திரனேழிற்றங்கத் தரைமகனீரைந்தேற
மந்தனேசுகத்திற்றங்க மதலையாயுலகுதன்னில்
வந்தவன்கிணற்றில்வீழ்ந்து மாய்குவனென்றுபிரமன்
அந்தநாளமைத்ததாகு மானவிச்சாதகற்கே,

இ-ள். சென்மலக்கினத்திற்கு ஏழாமிடத்தில் சந்திரனும் பத்தாமிடம் செவ்வாயும் நாலாமிடம் சனியுமிருக்கப்பிறந்தவன் கிணற்றில் விழுந்து சாவானென்பதாம், 10

2-வது சுலோகம், பந்துக்களால் மரணம்,

கன்னியிலிரவிசோமன் கலந்தொன்றாய்க்கூடிநிற்க
துன்னிடுபாபர்நோக்க சுதனெனவந்தபேரை
உன்னிதசுற்றத்தார்க ளொருமித்துக்கூடிகொண்டு
சென்மனைக்கொல்வாரென்று செப்புவாய்பலனைத்தானே,

இ-ள். சூரியன் சந்திரன்கூடி கன்னிராசியிலிருக்க அந்தசூரியன் சந்திரனைப் பாபர்கள் பார்க்கப்பிறந்தவன் தன் பந்துக்களாலே கொல்லப்படுவான் என்பதாம், 11

2-வது சுலோகம் தண்ணீரில்விழுந்துமரணம்,

மீனமுந்தண்டுலையல் வில்லதுசென்மமாய்த்
தானமீதிரவிதிங்கள் தங்கிடவுலகுதித்த
தீனனுஞ்சலத்தில்மூழ்கி செல்லுவான்சுவர்க்கமென்று
தேனமர்பூவில்வாழுந் திசைமுகனமைத்தவாறே,

இ-ள். சென்மலக்கினம் மிதுனம் கன்னி தனுசு மீன மென்னப்பட்ட உபயராசியாகி அதில் சூரியன் சந்திரன் கூடி யிருக்கப்பிறந்தவன் ஜலத்தில் முழுகி உயிர்விடுவானென்பதாம், 12

3-வது சுலோகம், சலத்தினல்மரணம்,

சந்திரன்மகரந்தனில் சனியுமேகொண்டலேற
வந்தவன்சலசம்பந்த வகையினல்மரணமல்லால்
விந்தையாம்புனல்தான்சூழும் விடந்தனில்மரணமென்று
சிந்தையில்திடமதாக செப்புவாய்செகத்தினோர்க்கே.

இ-ள். சந்திரன் மகரராசியிலும் சனி கடகத்திலுமிருக்க சென்மலக்கினம் எதுவாயிருந்தாலும் ஜாதகன் ஜலசம்பந்தமான ரோகங்களினல் அல்லது ஜலசமீபத்தில் ஜலத்தினல் மரணம் ஏற்படுமென்பதாம், 13

3-வது சுலோகம் அக்கினி ஆயுதத்தால் மரணம்

திங்களுமேடந்தேளில் சென்றிடவிருபுறத்தும்
செங்கதிர்சுன்சேப்பாம்பு தீயராமிவரேறிற்கில்
அங்கியால்மரண மல்ல வாயுதமதினற்சாக
புங்கவனமைத்தானென்று புகலுவாய்ப்புவியினோர்க்கே

இ-ள். சந்திரன் மேடராசியில் அல்லது விர்ச்சிகராசியில் இருக்கசந்திரனுக்கு இருபுறத்திலும் சூரியன் செவ்வாய் சனி ராகு கேது வென்னப்பட்ட பாபரிருக்க அக்கினியினல் மரணம் அல்லது ஆயுதத்தினலேமரணமாவா னென்பதாம், 14

3-வது சுலோகம் க்ஷயம் காசத்தால் மரணம்

சேடியிலாலோன்னிற்க தினகரன்சனிசேய்பாம்பு
நாடியவிருபுறத்தும் நண்ணிடவுதித்தபேருக்
கீடிலாவுதிரகாச மிழிவுறுஞ்சயரோகத்தால்
வாடியேமரணமென்று வல்லமையுடனேகூறே

இ-ள். கன்னியில் சந்திரனிருக்க சிம்மத்திலும் துலாத்திலும் பாபக்கிரகமாகிய சூரியன் செவ்வாய் சனி ராகு கேது இவர்களிருபக்கத்திலுமிருக்கப்பிறந்தவன் இரத்தகாசம் க்ஷயரோகத்தினல் வருந்திமரணமாவானென்பதாம், 15

3-வது சுலோகம் அக்கினியாலும் கயிற்றாலும் மரணம்

சந்திரன்மகரகும்பந் தனிலுறவிருபுறத்தும்
மந்தன்சேயிரவிபாம்பு மருவிடவவனிமீதில்
வந்தவன்நெருப்பினாலும் வன்கயிறுபாசத்தாலும்
இந்தவாறுயிரியாணந்தா னிவனுக்கென்றியம்பிடாயே

இ-ள். சந்திரன் மகரராசியிலாவது கும்பராசியிலாவதிருக்க இருபுறத்திலும் பாபக்கிரகமாகிய சூரியன் செவ்வாய் சனி பாம்பு இவர்களிருக்கப் பிறந்தவன் நெருப்பு கயிறு பாசமுதலியவற்றினால் மரணமாவா னென்பதாம், 16

4-வது சுலோகம் கயிற்றால் கட்டுப்பட்டு மரணம்

பரிதியுஞ்சனியுஞ்செவ்வாய் பாம்பெனுந்தீயகோட்கள்
உருதியானைர்தொன்பானி லுற்றிடவுலகின்மீதில்
பெருமையாயுதித்தபேர்க்கு பீடைபந்தனத்தாற்சாக
கருவதுதரிக்கும்போதே கமலனுமமைத்ததாமே

இ-ள். சுபர் திருஷ்டியில்லாதிருக்க பாபக்கிரகமாகிய சூரியன் செவ்வாய் சனி பாம்பு இவர்கள் ஐந்தாமிடத்திலும் ஒன்பதாமிடத்திலு மிருக்கப்பிறந்தவன் பாசபந்தனத்தினால் மரணமாவா னென்பதாம், 17

4-வது சுலோகம் கயிற்றால் கட்டுப்பட்டு மரணம்

அட்டமதிரேக்காணந்தா னரவோடுநிகளம்பாசம்
சட்டமாய்கடகமீனம் தானுமூன்றாந்திரேக்காணம்
திட்டமாய்ச்சர்ப்பபாசம் திண்சுராநிகளமென்றும்
துட்டதிரேக்காணமாகில் குப்பந்தனத்தால்சாவே

இ-ள். அட்டமதிரேக்காணம் சர்ப்பம் நிகளப்பாசத்தால் பந்தன முதலியதுண்டாகும் சென்மதிரேக்காணமதுவானாலும் அதாவது கடகம் மூன்றாந்திரேக்காணமும் மீன மூன்றாந்திரேக்காணமும் சர்ப்பபாசதிரேக்காணம் மகரம் முதல் திரேக்காணம் நிகள திரேக்காணமாகு மென்பதாம்,

4-வது சுலோகம் ஸ்திரீயால் துன்மரணம்

மீனமேசென்மமாக வெய்யவனுதயம்நிற்க
தானவன்தீயோர்தம்மைச் சார்ந்துகன்னியிலேதங்க
ஆனசுக்கிரனேமேட மமர்ந்திடவுலகுதித்த
தீனனும்மடவார்தன்னால் சீரிலாதகத்தில்மாய்வான்

இ-ள். சென்மலக்கினம் மீனமாகி அந்த மீனத்திலே சூரியனிருக்க சந்திரன் பாபக்கிரகத்துடன்கூடி ஏழாமிடமாகிய கன்னியிலிருக்க சுக்கிரன் மேஷத்திலிருக்கப் பிறந்தவன் ஸ்திரீயினிமித்தமாய் தான் உயிரை

விடுவானென்பதாம். நீரிலாழ்வென்பது மனத்துயரத்தினால் தூக்குப்போட்டுக்கொள்ளுதல் மருந்து பாஷாணமுதலியவைகளைப் புசித்தல் ஆயுதங்களினாலுயிரைவிடுதல் ஜலத்தில் விழுந்திறந்து போகுதல் முதலானவையென்பதாம், 19

5-வது சுலோகம் சூலத்தினால் குத்தப்பட்டு மரணம்

நீலனீரைந்திலேற நிலமகனலதுசூர்யன்
நாலதிலிருந்தபோது நலமுடனுதித்தசேயன்
சூலத்தால்குத்தப்பட்டு சுதனுயிரிழப்பானென்று
சீலமாயுரைப்பாய்நீயும் செகமதிலுள்ளபேர்க்கே

இ-ள். சனி பத்தாமிடத்திலிருக்க சூரியனாவது செவ்வாயாவது நாலிலிருக்கப்பிறந்தவன் சூலத்தினால் குத்துப்பட்டு உயிர்விடுவானென்பதாம்,

5-வது சுலோகம் சூலத்தினால் குத்தப்பட்டு மரணம்

சந்திரன்பாபியாகி சதியுறுந்தீயரோடு
சொந்தமாய்க்கூடிச்சென்மம் சுதனகம்தன்மந்தன்னில்
அந்தமாயடையுங்காலி லவனியில்மகவதாக
வந்தவன்சூலந்தன்னால் வதைபட்டேவுயிரிழப்பான்

இ-ள். அமரபக்ஷத்துச் சந்திரன் பாபர்களைக்கூடி சென்ம லக்கினம் ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் இந்த விடங்களி லெவைகளிலாகிலு மிருக்க மற்ற ஸ்தானங்களில் பாபிகளில்லாதிருக்கப் பிறந்தவன் சூலத்தினால் குத்துப்பட்டு அதினால் சரீரம் உபாதிப்பட்டிறந்து போவானென்பதாம் பாபக்கிரகமாவது சூரியன் சனி செவ்வாய் பாம்புகளிந்த ஐவருமாமென்பதாம்,

5-வது சுலோகம் சூலத்தினால் குத்தப்பட்டு மரணம்

பத்தினிற்குசனிருக்கப் பார்க்கரன்நாலிற்றங்க
உத்தமேதார்மதியந்தேய்ந்து வுதிரனைக்கதிரைநோக்க
இத்தலத்துதித்தபால னேற்றிடுஞ்சூலக்குத்தால்
மெத்தவுந்துயரமுற்று விண்ணவருலகுசேர்வன்

இ-ள். பத்தாமிடத்தில் செவ்வாயிருக்க சூரியன்நாலாமிடத்திலிருக்க இவர்களை அமரபக்ஷத்து சந்திரன் பார்க்கப்பிறந்தவன் சூலத்தினால்குத்தி பிளக்கப்பட்டு இறந்துபோ வனென்பதாம். 22

5-வது சுலோகம் கட்டையினா லடிப்பட்டு மரணம்.

பகலவன்செவ்வாய்தானும் பாங்குடனிருவர்கூடி
சுகமதிலிருக்குங்காலில் சூரன்செவ்வாயைநீலன்
திகழுடன்நோக்கும்போது செல்வனுங்கட்டைதன்னால்
அகமதில்அடிகள்பட்டு-வவனுயிரகன்றுபோமே,

இ-ள். சூரியனும் செவ்வாயும்கூடி சென்மலக்கினத்திற்கு நாலாமிடத்திலிருக்க இந்தச்சூரியன் செவ்வாயை சனிபார்க்கும்போது பிறந்தவன் கட்டையினல் அடிபடுதல் மரம் விழுதல் இவைகளினலே மரணமுண்டாகு மென்பதாம், 23

6-வது சுலோகம் அடிபட்டு மரணம்

தேய்மதியாயுள்தன்னில் சென்மத்திற்சனியிருக்க
சேய்கருமத்தில்மங்க தினகரன்சுகத்தில்நிற்க
தாய்புவியதனில்வந்த சுதனுங்கோலடிகள்பட்டு
வாய்மையால்மரணமென்று மலரயனமைத்தவாறே.

இ-ள். அமரபக்ஷ சந்திரன் எட்டாமிடத்திலும் சனி சென்மத்திலும் செவ்வாய் பத்திலும் சூரியன் நாலிலுமிருக்கப் பிறந்தவன் கொம்பு கழிகோல் இவைகளில் ஒன்றினலடிப்பட்டுயிரிழப்பா னென்பதாம். 24

6-வது சுலோகம், அக்கினிபுகை ஆயுதத்தினல் மரணம்.

தேய்மதிகருமந்தன்னில் சென்மத்தில்சனியும்நிற்க
சேய்தருமத்திற்றங்க செங்கதிரைந்திலேற
வாய்மையாயுதித்தபாலன் வாள்முதலாயுதத்தால்
தீயினல்தூமத்தாலும் செப்புபந்தனத்தாற்சாவான்

இ-ள். அமரபக்ஷ சந்திரன் பத்தாமிடத்திலும் சென்மலக்கினத்தில் சனியுமிருக்க ஐந்தாமிடத்தில் சூரியன் இருக்க செவ்வாய் ஒன்பதாமிடமிருக்கப்பிறந்தவன் அக்கினியினலும் புகையினலும் பந்தனத்தினலும் அங்குசம் கத்திவாள்முதலிய ஆயுதத்தினல் மரணமுண்டாகு மென்பதாம்.

7-வது சுலோகம் ஆயுதம் அக்னி ஆக்கினையால் மரணம்

செங்கதிர்களத்ரமேற தினகரன்மைந்தன்பத்தில்
மங்கலன்சுகதானத்தில் மகிழ்வுடனிருக்கவந்தான்
அங்கியாலரசர்கோப மாயுதங்களினலின்னேன்
பொங்கமாய்மரணமென்று பூவுளோர்தமக்குக்கூறே.

இ-ள். சூரியன் ஏழாமிடத்திலும் சனிபத்தாமிடத்திலும் குஜன்நாலாமிடத்திலுமிருக்கப் பிறந்தவன் நெருப்பினலும் ராஜகோபத்தால் தெண்டனையாலும் ஆயுதங்களினலும் மரணமாவா னென்பதாம், 26

7-வது சுலோகம் புழுபுழுத்து மரணம்

மங்கலன்கருமம்நிற்க மதிசுகத்தானமேற
பங்கவன்வாக்கிற்றங்கப் பாரினிலுதித்தசெல்வன்
அங்கமீதடையும்ரோகம் அதில்ரணம்கிருமிகண்டு
சங்கையும்வாதையேற்று சாகுவான்சகத்திற்றனே.

இ-ள். செவ்வாய் பத்திலிருக்க சனி இரண்டாமிடமிருக்க சந்திரன் நாலாமிடத்திலிருக்கப் பிறந்தவன் சரீரத்தில் நோயுண்டாகி ரணம் உண்டாகி புழுக்கள்செனித்து மிக உபத்திரவப்பட்டு மரணமாவானென்பதாம்.

8-வது சுலோகம் வாகனமிருந்துவிழ மரணம்

கருமத்தில்பகலவன்றன் காசினிமகவும்நீர்கீழ்
உருதியாயிருந்தபோது வுலகதிலுதித்தபாலன்
பெருமைசேர்வாகனத்தில் பெலமுடனேறிவீழ்சு
வருவதுநிரியாணந்தான் வல்லமையுடனேகூறே.

இ-ள். பத்தாமிடத்தில் சூரியனும் நாலாமிடத்தில் செவ்வாயுமிருக்கப்பிறந்தவன் வண்டி குதிரை யானை பல்லக்கு முதலிய வாகனங்களிலேறி தவறி கீழேவிழுந்து அதினால் நிரம்பவும் சரீரவாதைப்பட் டுயிரிழப்பான் என்பதாம். 28

8-வது சுலோகம் யந்திரகருவியால் மரணம்

சந்திரனிரவிநீலன் சார்ந்திடலக்கினத்தில்
செந்தியுமேழினிற்க சீருடனுதித்தசெல்வன்
யந்திரக்கருவீதன்னா லிவனுயிர்நீங்குமென்று
அந்தநாளயனமைத்தா னனவிச்சாதகற்கே.

இ-ள். சென்மலக்கினத்தில் சூரியன் சந்திரன் சனி இந்த மூவருமிருக்க இவர்களுக்கேழாமிடத்தில் செவ்வாயிருக்கப்பிறந்தவன் யந்திரகருவிகளினாலே வெட்டுப்படல் அரைபடுதல் நசுங்கல் முதலானவைகளினலாவது மரணமாவானென்பதாம். 29

8-வது சுலோகம் மலரோகத்தால் மரணம்

கோலதிலரால்நிற்க குளிர்மதிமகரகும்பம்
நீலனும்நீசம்பெற்று நின்றிடவுதித்தபாலன்
தாளத்திலாமேத்யத்தால் தங்கியதலத்திற்சாவான்
காலத்தையறிந்துரைப்பாய் காசினியதினிற்றனே.

இ-ள். துலாத்தில் செவ்வாயிருக்க சந்திரன்மகரகும்பமாகிய இரண்டிலெதிலேயாகிலுமொன்றிலிருக்க சனிநீசமாக மேஷத்திலே யிருக்கப்பிறந்தவன் மலம் நிறைந்த விடத்திலாவது அல்லது மலசம்பந்தமான ரோகத்தினலாவது மரணமடைவா னென்பதாம், 30

8-வது சுலோகம், மலரோகத்தால் மரணம்

திங்களுங்குறைந்தீரைந்தில் தினகரனேழில்நிற்க
மங்கலன்நாலில்தங்க மானிலத்துதித்தமைந்தன்
கங்கிளவாமேத்யத்தால் சாவதுதிண்ணமென்று
இங்கிதத்துடனேகூறுவா யிப்புவியுள்ளபேர்க்கே

இ-ள். அமரபக்ஷ சந்திரன் பத்தாமிடத்திலும் ஏழாமிடத்தில் சூரியனும் நாலாமிடத்தில் செவ்வாயிருக்கப் பிறந்தவன் மலம்நிறைந்தவிடத்தில் அல்லது மலசம்பந்த ரோகத்தினுலாவது மரணமாவா னென்பதாம்,

9-வது சுலோகம், புழுபுழுத்து மரணம்

மந்தனும்மெட்டிற்றங்க மதியவன்தேய்ந்திருக்க
சந்திரன்றன்னைச்செவ்வாய் தான்வலிதுற்றுநோக்க
விந்தையாம்பகர்ந்தமூலம் மேவியங்கிருமிகாண
செந்தீபால்கட்டுச்சத்ரம் செய்திடமரணமாவாள்

இ-ள். சனி எட்டாமிடத்திலிருக்க அமரபக்ஷத்து சந்திரனைபலயுக்தமான செவ்வாய் பார்க்கப்பிறந்தவன் அவயவத்திய் குய்யஸ்தானத்தில் உண்டாகிய மூலம் பகந்தரோக மிரணமாகி அதில் புழுக்கள் செனித்து உபாதைப்பட்டு சத்திரம் வைத்தலாவது நெருப்பினுல் சுடுதலினுலாவது மரணமுண்டாகு மென்பதாம், 32

10-வது சுலோகம், நாய்நரிதின்னும் அனுதிமரணம்

சேய்ரவிசேர்ந்தேழ்நிற்க திகழ்சனியாயுள்தன்னில்
தேய்மதிநாலிற்றங்க செனித்தவனுடல்சமாதி
தீயினுல்தகனமாகா சீரற்றுபருந்துகூளு
நாய்நரிதின்னுமென்று நான்முகனமைத்தவாறே,

இ-ள். செவ்வாய் சூரியன் சேர்ந்த ஏழாமிடத்திலிருக்க சனி எட்டாமிடமிருக்க அமரபக்ஷத்து சந்திரன் நாலில் இருக்கப் பிறந்தவன் மரணமானபிறகு அந்தவுடலை அக்னிதகனம் சமாதியில்லாததுமாய் அந்தவுடலை கழுகு பருந்து நாய்நரி முதலான செந்துக்கள் புசிக்குமென்பதாம், 33

10-வது சுலோகம் மலையேறிவிழ மரணம்,

பருதியுமுதயம்நிற்க பால்மதிபாக்யந்தங்க
குருதியுமைந்திலேற கொம்பியுமாயுள்தன்னில்
மருவிடமுதித்தசெல்வன் மலையுச்சியேறிவீழ
அருமுடல்மீடையுண்டு னவனிரியாணமென்னே,

இ-ள். சூரியன் சென்மலக்கினமிருக்க சந்திரன் ஒன்பதாமிடமிருக்க செவ்வாய் ஐந்தாமிடமிருக்க சனி எட்டாமிட மிருக்கப்பிறந்தவன் உயரமானமலைகளில் அல்லது மேடுகளிலேரி விழுந்து அதினுலே பிணி பீடையுண்டாகி மரணமாவா னென்பதாம், 34

11-வது சுலோகம் திரேக்காணநிலையால் மரணம்,

இந்தநல்யோகந்தானு மிலையெனிலட்டமத்தில்
சொந்தமாயமர்ந்தோராலும் தூய்விழிபார்வைதன்னுல்

அந்தசென்மத்திரேக்காண மதற்கிருபத்திரண்டாய்
வந்திரேக்காணமெட்டில் வருபவரால்நிர்யாணம்,

இ-ள், இப்போது சொல்லப்பட்ட யோகங்களில்லாமலிருந்தால் அஷ்டமஸ்தானத்திலிருந்தோர் அஷ்டமஸ்தானத்தை பார்த்தபேரால் சொல்லப்படும் அப்படி அஷ்டமத்தில் கிரகமில்லாமலும் அஷ்டமஸ்தானத்தை ஒருவரும் பார்க்காமலிருக்கப் பிறந்தவர்களுக்கு சென்மலக்கினத்திரேக்காணத்திற்கு இருபத்திரண்டாந் திரேக்காணத்தால் மரணநிமித்தம் சொல்லப்படும் அஷ்டமாதிபதியைக் கொண்டும் சொல்லப்படும் அதெப்படியென்றால் ஆறுவதுகவியில் சொன்னபடி ரோகங்களைக் கொண்டு நிரியாணம் சொல்லப்படும் 22-வது திரேக்காணுதிபதியினாலும் அந்த திரேக்காண மெந்தராசி சம்பந்தமோ அந்த அதிபதியினாலும் அக்கினியாதி முதலான 7-விதத்தாலும் நிரியாண மென்பதாம், 35

11-வது சுலோகம் மரணநிலை,

செனனதிரேக்காணத்திற்கு செப்பிடுமிருபானிரண்டு
இனமுளதிரிகோணத்தா லெட்டிடந்தனிலேயுள்ள
கனமுறுவெழுகோளாலே கணக்கொடுநிரியாணத்தை
புனிதமர்யுரைப்பாருநீயும் பூதலத்துள்ளபேர்க்கே,

இ-ள், சென்மமான திரேக்காணத்திற்கு இருபத்திரண்டாவது திரேக்காணத்தைக்கொண்டும் எட்டாமிடத்தில் உள்ள கிரகத்தைக்கொண்டும் நிரியாணம் சொல்லப்படும் அட்டமஸ்தானமிருந்த கிரகத்துக்கு ஒன்பதாவது கவியில் சொன்னபடி இருபத்திரண்டாந் திரேக்காணுதிபதியைக் கொண்டும் நிரியாணம் சொல்லப்படும் மென்பதாம், 36

11-வது சுலோகம் திரேக்காணநிலை,

எந்ததிரேக்காணந்தன்னி லிவனுமேசெனனமானுன்
அந்தசென்மத்தின்ராசி யதில்முதலானுலெட்டில்
வந்திடுமுதல்திரேக்காணம் வருமிரண்டானுலெட்டில்
தந்திடுமிரண்டாமூன்றேல் சாற்றுமெட்டில்மூன்றுமே,

இ-ள் திரேக்காணமெடுக்கும்விதமெப்படிஎன்றால் சென்மலக்னத்தில் முதல் திரேக்காணத்தில்செனனமானுல் அஷ்டமஸ்தானத்தில்முதல்திரேக்காணமே இருபத்திரண்டாவது திரேக்காணமாம் சென்மலக்கினத்தில் இரண்டாவது திரேக்காணம் செனனமானுல் அஷ்டமஸ்தானத்திரண்டாந் திரேக்காணமே இருபத்திரண்டாந்திரேக்காணமாம் சென்மலக்கினத்தில் மூன்றாந்திரேக்காணம் செனனமானுல் அஷ்டமராசியில் மூன்றாந் திரேக்காணமே இருபத்திரண்டாந் திரேக்காணமாம் இந்த விதமாகவே பன்னிரண்டுராசிகளுக்கும் யூகித்துக்கொள்ளவேண்டியதென்பதாம். 37

11-வது சுலோகம் மரணதிரேக்காணம்

எட்டினிற்கோளில்லா தெட்டையுங்கோள்காணாது
சட்டமாயுதித்தபேர்க்கு சாற்றுவாயெட்டாமாதி
திட்டமாயிருபானிரண்டு திரேக்காணபதியைக்கொண்டும்
மட்டிடுவேலுத்தோருக்கு வாய்த்திடுவிதத்தால்மாய்வே

இ-ள். முன்சொல்லியிருக்கிற விதமில்லாது பிறந்தவர்களுக்குஎட்டாமிடம்கோள்களில்லாது கோள்களும்நோக்காதிருக்கில் இருபத்திரண்டாவது திரேக்காணுதிபதி அஷ்டமாதிபதி இருவர்களில் பலவந்தனுகவிருக்கப்பட்ட கிரகத்துக்கு உள்ளதோஷத்தால் நிரியாணமாவா னென்பதாம்,

12-வது சுலோகம் மரணதேசம்

சென்மகாலத்தில்தோன்றும் சீருளவோரைதன்னில்
இன்னியநவாங்கிசாதி யுடன்கூடும்ராசிக்கேற்ற
நன்னயபூமிதன்னில் நற்சுதன்நிரியாணத்தை
பின்னமில்லாதுகூறுவாய் பெரும்புவியுறையும்பேர்க்கே

இ-ள். செனனகாலத்தில் உதயமானராசி நவாங்கிசாதிபதியுடன்கூடினராசிக்கு சஞ்சாரபூமியில் மரணமுண்டாகு மென்பதாம். 39

12-வது சுலோகம் இராசிகள் சேருமிடம்

ஆடுவில்லிரண்டும்டவியில்வாழு மாங்குடம்பாழதுவீடாம்
நாடியதலையும்கடைத்தெருவாகும் நண்டுமீன்மகரந்தேள்கன்னி
ஓடுநீர்வாவிகிணறுசலக்கரைபா முயர்சிங்கம்வனமலைக்குகையாம்
தேடியவிடபங்கழனியுங்காடு செப்புமீராறிதன்குறியே

இ-ள். மேஷத்திற்கும் தனுசிற்கும்காடுவனமாகும் ரிஷபத்திற்குவயல்கரைகாடுமாகும், மிதுனம்கும்பம் வீடாகும், கடகம்வாய்க்கால் சலக்கரையாகும், சிம்மத்திற்கு மிருகஞ்சஞ்சரிக்கும் காடுமலை குகையாகும் கன்னிக்கு சலக்கரையாகும், துலாத்திற்கு கடைத்தெருவாகும் விருச்சிகத்திற்கு கிணறு பாழானவிடமுமாகும், மகரத்திற்கு சமுத்திரம் சலசமீபமாகும், மீனத்திற்கு சலசம்பந்தமான விடமாகும், இந்தவிதமாக பன்னிரண்டு ராசிகளுக்கும் சேர்விடம் சொல்லப்பட்ட தென்பதாம். 40

12-வது சுலோகம் மரணதேசம்

இத்தகைபன்னிரண் டிராசியால்மரணதேசம்
சுத்தமோர்விதமேயாகும் தூயநல்கோளின்கூறு
உத்ததோர்லக்கினுதி யுரைந்திடுநவாங்கிசாதி
சித்தமாய்தங்கும்ராசி சேர்விடமரணமென்னே.

இ-ள். இப்போது சொன்னவிதமே ராசிகளைக்கொண்டு மரணதேசமும் சொன்னது தவிரகிரகத்தினுலும் கிரகப்பார்வையினுலும்லக்னநவாமிசாதி இருந்தராசி சேர்விடத்தில் மரணமாகு மென்பதாம். 41

12-வது சுலோகம் மரணபூமி.

சேருங்கோளுடையதேசம் திகழ்நவாங்கிசனேயுற்ற
ஒரையைநோக்குங்கோட்கு வுறைத்திடுதலமுமாகும்
தேரியநிரியாணத்தோன் சென்றிடவமிசையோர்க்கு
நேரிடும்பூமிதன்னில் நிரியாணமாகுந்தானே

இ-ள். அஷ்டமாதிபதி சேருந்தேசமும் நவாங்கிசாதி சேருந் தேசமும் அந்தராசியை நோக்குங் கோள்களில் தேசமும் நிரியாணமாவானென்பதாம். 42

12-வது சுலோகம் மரணபூமி

சாதகன்றன்நிர்யாணம் சாற்றுபல்விதமேயாகில்
ஓதிஞேமதனில்மிக்க வுயர்வலிவுற்றபேர்தன்
தீதிலாதிரண்டுவீட்டின் திரிகோணராசிதேசம்
போதவேமரணமென்று புகன்றிடுயூகமாக

இ-ள். யாதாகினுமொரு ஜாதகனுக்கு மரணப்பிரதேசம் பலவிதங்களாக வேற்பட்டால் இந்தக்கிரகத்தில் பலவந்தனான பேர்களுக்கு உள்ளவிரண்டு வீட்டின் திரிகோண ராசியாகிய 1-5-9-என்று சொல்லப்பட்ட தேசமே மரணதேசமென்னப்படு மென்பதாம், 43

12-வது சுலோகம் மரணமூர்ச்சை

சென்னகாலத்திலக்னம் சேஷநவாம்சைகூடும்
இனமுறுகாலந்தானு மிவனயர்ந்திருப்பானுகும்
சென்னலக்னேசனும் சென்மத்தைப்பார்த்தால்ரண்டு
கனமுறுகாலமட்டும் காலையுமறிவிழப்பான்

இ-ள். சென்னலக்கினத்தில் சென்றதுபோக மிச்சம் நவாங்கிசையில் கூடினல் எவ்வளவு நாழிகை விஞடியாகுமோ அவ்வளவுகாலம் தன் ஸ்மரணைதப்பி மூர்ச்சையாகி யிருந்திறந்து விடுவானென்பதாம். 44

12-வது சுலோகம் மரணமூர்ச்சை

அறிவதிழந்திருக்கு மடைவதுசென்மந்தன்னை
நெரியுளசுபரேபார்க்கில் நேருமூன்றந்தகாலம்
பெருமையாம்சுபர்லக்னேசன் புகழிலக்கினத்தைப்பார்க்க
வருமமிசத்தில்மிச்சம் வருநேரமறிவிழப்பான்

இ-ள். மரணகாலத்தில் அறிவிழந்து மூர்ச்சையாகிநின்ற நேரம் முன்கவியில் சொன்னவிதமாக சென்மலக்னத்தைச் சுபர்கள் பார்க்க மூன்று பங்குநேரம் தன்னறிவிழந்திருப்பன் சுபர்களும் லக்கினேசனும் இருவரும் லக்னத்தைப்பார்க்க நவாமிசையில் சென்றதுபோகச் செல்லவேண்டிய நாழிகை விஞடிவரையில்ஸ்மரணைதப்பி இருந்துமரணமாவானென்பதாம்.

13-வது சுலோகம் சரீரம் தகனம்

உதயலக்னந்தனக்கு வுரைக்குமெட்டாமிராசி
பதியிருபத்திரண்டால் பற்றிடுந்திரேக்காணந்தான்
விதிபெறுஞ்சுடரேயாகில் வேகுமேசடலந்தானும்
நதியுறுசலமேயானல் நதிசலமடையுந்தேகம்

இ-ள். சென்மலக்னந் தனக்கு எட்டாமிராசியிலுள்ள இருபத்திரண்டாந் திரேக்காணங்களைக்கொண்டு சரீரபரிமாணம் சொல்லவேண்டியது அதெப்படியென்றால் இருபத்திரண்டாந் திரேக்காணம் அக்கினி திரேக்காணமானல் இறந்தவன் சரீரம் அக்கினியினலேதகனமாகும் ஜலதிரேக்காணமானல் சலத்திலேயே போடப்படும் என்பதாம். 46

13-வது சுலோகம் உடல் காய்ந்துபோகிறது

சுடர்திரேக்காணமில்லை தூய்ஜலதிரேக்காணந்தான்
திடமொடுமில்லையாகில் செப்புமிஸ்சிரமதாகில்
இடரொடுமரணமான னிவனுடலதனைத்தானும்
சுடரவனுலறவைப்பான் சுகமில்லநரகுபோவான்

இ-ள். அக்கினி திரேக்காணமில்லாமலும் ஜலதிரேக்காணமு மில்லாத மிஸ்ரம்திரேக்காணமாயிருக்குங்கால் மரணமானவனுடலம் அக்கினியினல் தகனமாகாமலும் ஜலத்திலேபோடாமலும் சூரியனுடையவெப்பத்தினலே காய்ந்துப்போகு மென்பதாம். 47

13-வது சுலோகம் உடலடையும் விதம்

நல்லகோளிருந்தவோரை நலமிலாதிரேக்காணங்கள்
அல்லலாருற்றதான மறிவுளசுபக்கோடன்னின்
எல்லையாந்திரேக்காணந்தா னிதுசர்வதிரேக்காணத்தில்
வல்லமையாமின்னேனை மறுசீவனுண்ணுமென்னே

இ-ள். சுபர்களிருந்த திரேக்காணம் பாபருடைய திரேக்காணமானல் மிஸ்ர திரேக்காணமாகும் பாபர்களிருந்த திரேக்காணம் சுபத்திரேக்காணமானலும் மிஸ்ரதிரேக்காணமாம் மிஸ்ரதிரேக்காணமென்பதே சர்வதிரேக்காணம் அஷ்டமராசியில் இருந்த இருபத்திரண்டாவது திரேக்காணம் சர்வதிரேக்காணமானல் அந்தச்சாதகன் இறந்தபிறகு அவன்சரீரத்தை நாய் நரி பருந்து கழுகுமுதலான செந்துக்களும் புலிசெந்நாய் முதலிய மிருகங்களும் புசிக்கு மென்பதாம். 48

14-வது சுலோகம் முன்செனனம்

சந்திரனிரவிதம்மில் தான்பலமுற்றபேர்கள்
சொந்தமாயவரைக்கூடும் தூயநற்றிரேக்காணத்தின்
அந்தமாமதிபனுக்கு வரைந்திடுமுலகிருந்து
வந்தவனென்றுகூறும் வழியிந்தநூலாம்பாரே

இ-ள். சூரியர் சந்திரர் இருவர்களில் வலிதுபெற்றிருப்பவ ரிருந்த திரேக்காணாதிபதிக்குச் சொல்லப்பட்ட வுலகத்திலிருந்து வந்து இந்த பூலோகத்திலே பிறந்தாரென்று சொல்லப்படு மென்பதாம், 48

14-வது சுலோகம் முன்செனனம்

பொன்னெனிலமரர்லோகம் புகர்மதிபிதுருலோகம்
மன்னுசேய்மார்த்தாண்டன்றன் மகிழ்திரிலோகமாகும்
சுன்புதன்நரகலோகம் சுகமுடன்கோள்களுக்கு
நன்மொழியாகக்கூறு நாடதிலுறையும்பேர்க்கே

இ-ள். முன்கவியில் சொன்னபடி சூரியசந்திரர் இருவரில்வலிதுபெற்றிருந்தோரிருந்த திரேக்காணாதிபதி குருவானால் தேவலோகம் சந்திரன் சுக்கிரனுக்குபிதுர்லோகமும் சூரியன்செவ்வாய்க்குதிரிலோகமும் சனிபுதனுக்கு நரகலோக மீதிலிருந்துவந்து பூமியில் பிறந்தா னென்பதாம், 49

14-வது சுலோகம் முன்செனனம்

பலமுளகோள்களுக்கு பயின்றிடும்விதமேயந்த
வுலகதிலிருந்துவந்தா னுச்சனேல்சிரேஷ்டனாகும்
நலமொடுநட்போடாக்ஷி நவில்வதுசமன்முன்சென்மம்
தலமதிபகைநீசங்கள் சார்ந்திடவீனமென்னே

இ-ள். முன்கவியில் சொன்னபடி கிரகங்கள் வலிதுபெற்றிருப்பதாம் அதாவது உச்சம்பெற்றிருக்கில் அந்தலோகத்தில் சிரேஷ்டனாக விருந்தவன் நட்பு ஆக்ஷியாயிருக்கில் மத்தியமாகவிருந்து வந்தவன்பகை நீசம்பெற்றிருக்கில் ஈனகெதியாகவிருந்து பூமியில்வந்து பிறந்தா னென்பதாம், 50

14-வது சுலோகம் அமைப்பு

முன்செனனத்தின்கூற்றை மொழிந்தனம்ராசிகோளால்
கன்மத்தையனுபவித்து காசினியிலிருந்தபோது
நன்மையாய்வாழ்ந்துபின்பு நமனிடஞ்சென்றபோது
அன்னவனிவர்கேற்றும்போ லமைத்திடுவிதமுறைப்பாம்

(இ-ள்.) முன்னமிவனிருந்த உலகத்தைச் சொன்னோம் பின்பு இவர்கள் இறந்துப் போனபின்பு எமன் இவர் செய்த பாபபுண்ணியத்திற்குத் தக்கபடி சுவர்க்கம் நரகங்களை அமைப்பான் அந்த விபரத்தைப்பின்வருங் கவியில் சொல்லுவோ மென்பதாம், 51

15-வது சுலோகம் ஜீவன் சேர்விடம்

ஆறுவேழெட்டுடன்னி லடைபவர்பலகோளாகில்
சீருடனவர்கள்தம்மில் திகழ்வலிவுற்றகோளின்
பேருறுமுலகுதன்னில் பிரபலமுடனேசீவன்
சேருவதென்றுநீயுஞ் செப்புவாய்திரமாக

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஆறாமிடம் ஏழாமிடம் எட்டாமிடம் இவைகளில் இருந்த கிரகங்களில் பலவானான கிரகத்திற்கு சொன்ன உலகத்துக்கு இறந்தபின்புபோய்ச் சேர்வாமென்பதாம், 52

15-வது சுலோகம் ஜீவன் சேர்விடம்

ஆறினில்கோள்கள்நின்று லவர்லோகமீதுசீவன்
சேருமேழினிலிருந்தோர் தேயத்தில்சீவன்செல்லும்
கூறுமாயுளில்நின்றலக் கோட்குறுலோகந்தனில்
சீருடன்சீவன்செல்லும் திரமூடனுரைத்திடாயே.

இ-ள். ஆறுமிடத்தில் மாத்திரம் கிரகமிருக்கிலந்த லோகமும் ஏழாமிடத்தில் மாத்திரமிருக்கில் அவர்க்குடைய லோகமும் எட்டாமிடத்தில் மாத்திரமிருக்கில் துவர் லோகமுமென்று பிருகஜ்ஜாதக முறைமைசொல்லப்பட்ட தென்பதாம், 53

15-வது சுலோகம் ஜீவன் சேர்விடம்

சென்மலக்னந்தனக்கு செப்புமாறெட்டுவேழு
என்னுமிவ்விடத்தில்யாரு மில்லாதுசூன்யமானல்
உன்னுமவ்விடத்திரேக் காணத்துடையவர்களிலேமிக்க
நன்னிடுவலியோர்லோகம் நாடிடுஞ்சீவன்தானே

இ-ள். சென்ம லக்கினத்திற்கு ஏழாமிடம் ஆறுமிடம் எட்டாமிடங்களில் கிரகமில்லாதிருக்குமாகில் ஆறுமிடத் திரேக்காணம் எட்டாமிடத் திரேக்காணம் இந்தவிரண்டு திரேக்காணதிபதியில் பலவந்தனாக விருப்பானே அந்த வுலகத்திற்கு இறந்தபின் போய்சேர்வான் ஏழாமிடத்தை நீக்கப்பட்டதா மென்பதாம், 54

15-வது சுலோகம் ஜீவன்முத்தி கலிவிருத்தம்

மகரகும்பலில் மன்னனுஞ்செனனமாய்
பகரும்நண்டிற்பசும் பொன்னிருந்திட
சகமுதித்தவன் சாயுச்யமோக்ஷமும்
சுகமாய்ப்பெற்றவன் தூயனுஞ்சீவனே

இ-ள். மகரமாவது கும்பமாவது தனுசாவது சென்ம லக்கினமாக விருக்க குரு உச்சம்பெற்று கடகராசியிலிருக்கப்பிறந்தவன் இறந்து பிறகு அந்தச்சீவன் பிறவாமுத்தி யென்னும் சாயுச்சியமென்னும் மோக்ஷ வீடடைவா னென்பதாம், 55

15-வது சுலோகம் ஜீவன்முத்தி

மீன்ராசியே மேவுஞ்செனனமாய்
ஆனபொன்னவ னுருஞ்சபருட

தானமங்கிசந் தன்னிலிருந்திட
தீனன்தன் னுயிர் சேர்ந்திடும்மோக்ஷமே

இ-ள். மீனராசியே ஜென்மலக்கினமாகியிருக்க அந்த லக்கினாதிபதியான பிரகஸ்பதி சுபக்கிரக நவாங்கிசையிலிருக்க மற்றக் கிரகங்கள் பலமில்லாதிருக்கப் பிறந்தவன் மோக்ஷவீடடைவான் குருதவிர மற்றவர் பலமில்லாதிருந்தாலென்று சவியில் சொல்லாமல் உரையில் சொல்லப்பட்டதென்பதாம், 56

15-வது சுலோகம் முடிவு

சென்மகாலத்தில் செப்பும்விதப்படி
மன்னுநிர்யாண மரணகாலத்தினல்
உன்னுசீவன்க ளுற்றவிடமதை
நன்னயத்துடன் நானுமுரைத்ததே

இ-ள் ஜென்ம காலத்தைக்கொண்டு எந்த விதமாய் கெதி சொல்லப்பட்டதோ அந்த விதமாய் மரணகாலத்தைக்கொண்டு இறந்தச் சீவன் அடையும் விதங்களை விபரமாக இதுவரையில் சொன்னேமென்பதாம், 57

படலச்செய்யுள் தொகை

மாரகப்படலந்தன்னை மகிழ்வொடுவுலகினோர்க்கு
தீரமாயன்பத்தேழும் செய்யுளுங்குருவைப்போற்றி
பாரதில்மலையிராயன் பட்டணமதனில்வாழும்
சீருளவைத்தியலிங்கம் செப்பியதமிழிதாமே

இருபத்தைந்தாவது
நிரியாணப் படல முற்றிற்று.

---

# மங்களேஸ்வரீயம்.

இருபத்தாறுவது

## நஷ்டஜாதகப் படலம்.

1-வது சுலோகம் நாழியறிய

சென்னகாலமேயறியா செல்வ்ருக்கிரங்கியே
இனிமையாகக்கூறுதற் கினக்கினவிதிப்படி
தனியதாகவந்தபேர்க்கு தன்னிழலையெண்ணியே
கனமுடனேநாழியீக்கி கண்டறிவாய்லக்கினம்

இ-ள். சென்மகாலந்தெரியாதவனுக்கு பிரஸ்ன காலத்தைக்கொண்டு அடியளந்து நாழிகை இவ்வளவென்று தெரிந்து அந்த நாழிகைக்குள்ள இலக்கினமறிந்துக்கொள்ளுவ தென்பதாம், 1

1-வது சுலோகம் சொல்லும்விதி

உதயமோடாரூடத்தை யூக்கமோடுணர்ந்துபின்
உதயமானலக்கினத்தி லுள்ளநாழிதன்னிலே
விதியதாகசென்றநாழி மிச்சமாம்வினடியே
துதிபெறவரைந்துகொண்டு சொல்லும்நட்டசாதகம்

இ-ள். உதயத்தையும் ஆரூடத்தையும் யூகித்துணர்ந்து லக்கினத்திற்கு உள்ளநாழிகையில்சென்றது இவ்வளவென்றும் செல்லவேண்டிய திவ்வளவென்றும் நாழிவினடிகளை எழுதிவைத்துக்கொண்டு நட்டசாதகம் சொல்லுவதாகு மென்பதாம், 2

1-2-வது சுலோகம் அயனமறிய

உதயராசிதனில்முற்கூறு வுத்தராயணங்களாம்
பதியிற்பிறகூறுனபோது பகருதெட்சணாயனம்
உதயமூன்றுகூறதாசி லொன்றுவைந்தொன்பதாம்
பதியிலேகுருவிருக்கும் பான்மையாலேவாண்டறி

இ-ள். உதயலக்கினத்தை இரண்டுகூறுசெய்து முதற்கூறு உத்தராயணமான தை-மாசி-பங்குனி-சித்திரை-வைகாசி-ஆனி-இந்த ஆறுமாதத்திற்குள்செனனமாம் பிற்கூறான தக்ஷணாயணமானால் ஆடி-ஆவணி-புரட்டாசி-ஐப்பசி-கார்த்திகை-மார்கழி-இந்த ஆறுமாதத்திற்குள் செனனமாம் உதயலக்கினத்தை மூன்றுகூறுசெய்ய ஒன்று ஐந்து ஒன்பதென்று சொல்லப்பட்ட இடத்தையறிந்து அதில் குருவிருப்பதாகத்தெரிந்து வருஷமறிந்துகொள்வ தென்பதாம், 3

2-வது சுலோகம் வருஷமறிய

அரியுமுதயலக்கினத்தி லாமுதற்திரேக்காணமேல்
குரியினேடிலக்னராசி கொண்டுவெண்ணும்ராசியில்
குருவிருப்பதாயறிந்து கூறுமாமிரண்டதேல்
நெரியிரண்டுதிரேக்காணத்தில் நேரும்ராசியைந்ததே

2-வது சுலோகம் இதுவுமது

ராசியதனில்மூன்றதாய் நடக்குமித்திரிகோணமே
நேசமோடுவுதயத்திற்கு நிருபனென்பதாகிய
பேசுராசியாமதில் பிலம்முடனிருப்பனும்
காசினியில்மானிடர்க்கு கண்டவயதுகூர்விதி

இ-ள். உதயலக்கினத்தில் முதல் திரேக்காணமானால் உதயத்திலே தானே குருவிருப்பன் இரண்டாவது திரேக்காணமானால் உதயத்திற்கு ஐந்தாமிராசியில் குருவிருப்பன் மூன்றாவது திரேக்காணமானால் உதயத்திற்கு ஒன்பதாம் ராசியில் குருவிருப்பா னென்பதாம், 4

2-வது சுலோகம் குருநிலை

என்னுசென்மலக்கினத்தை யீரிரண்டாமங்கிசம்
பன்னவேயதின்முதல் பகரும்லக்கினத்திலே
துன்னிரண்டேவிரண்டிராசி சொல்லுமூன்றுமூன்றிலும்
மன்னுநாலேயவ்விதம் மற்றுமைந்துவைந்ததே

2-வது சுலோகம் குருநிலை

ஆறதாகிலாறதாகு மமையுமேழேயம்முறை
கூறுமெட்டுவெட்டதாகும் கொள்ளுமொன்பானென்பதே
தேறும்பத்துலாபம்வீயம் செப்பினார்குருநிலை
கூறினார்முனிசிரேட்டர் குவலயத்தோர்க்காகவே

இ-ள். லக்கினத்தை துவாத சாங்கிசம்செய்து முதலாவதானால் லக்கினத்திலும் இரண்டுக்கிரண்டிலும் மூன்று நாலு ஐந்து ஆறு எழு எட்டு ஒன்பது பத்து பதினொன்று பன்னிரண்டு பாவத்திலும் துவாதாங்கிசம் போல குருவிருப்பானென்று யூகித்துச்சொல்வதாகு மென்பதாம், 5

2-வது சுலோகம் வயதறிய

இந்தநல்விதங்களாக விரணியனின்றன்னிலை
சிந்தைதீரமாயுணர்ந்து திகழ்முகத்தைநோக்கியே
வந்தவன்வயதறிந்து மன்னநின்றவாய்மையும்
சொந்தமாகவொன்றுசேர்த்து சொல்வதாண்டினின்றுகை

இ-ள். இப்போது சொன்ன அடைவுபோலக் குருநிலைமை புணர்ந்து நஷ்டஜாதகங் கேழ்க்கவந்தவன் ஆகாரத்தையும் முகத்தையும் பார்த்து இத்தனை வயதுள்ளவனாக விருப்பானென்று நிதானித்துகுருவட்டத்தைக் கூட்டி வருஷநிலைமை யறியவேண்டிய தென்பதாம், 6

1-வது சுலோகம் குருவட்டமறிய

ஓரையொன்றுதன்னிலு மேயும்பர்கோனோராண்டுதான்
தீரமாகவீராறுண்டு செல்லவட்டம்மொன்றதாம்
பாரதனில்பாதந்தன்னை பற்றக்காலினின்குதி
சீரதாகவேதொடினுஞ் சென்றவட்டமொன்றதே

இ-ள். ராசி ஒன்றிலே குரு ஒருவருஷ மிருப்பான் இப்படி பன்னிரண்டு வருஷமானால் ஒருவட்ட மாகுமாம் வந்தவன் பாதம் குதிக்காலைத் தொட்டால் ஒருவட்டம் பன்னிரண்டு வருஷம் சென்றதென்று குருநிலையையறியவேண்டிய தென்பதாம், 7

2-வது சுலோகம் இதுவுமது

காலினிற்கணுமுழங்கால் கனகன்வட்டமிரண்டதே
கோலமானதுடையும்லிங்கங் கொள்விருஷ்ணம்மூன்றதே
மேலுமுந்திநாபிநாலு மெய்வயிறுவைந்ததே
சீலமார்புவாறுபுஜங்கள் செப்பும்பார்சமேழதே

2-வது சுலோகம் இதுவுமது

கன்னந்தாவாயுங்கழுத்து காணுமெட்டதாகுமே
மின்னுவிழிகளொன்பதாகும் மேலதாம்சிரந்தனே
மன்னவட்டம்பத்துமென்று மானிடர்க்குக்கூறுதல்
இன்னம்வேறிருதுநிலை யேயறிந்துகொள்ளவே

இ-ள். வந்தவன் கணுக்கால் முழங்காலைத் தொட 2-வட்டம், துடை லிங்கம் விருஷணம் இதைத்தொட 3-வட்டம், உந்திகடிப்பிறதேசத்தைத் தொட 4-வட்டம், வயிறு 5-வட்டம், மார்பு 6-வட்டம், புஜம்புஜ சிரம் கழுகட்டு 7-வட்டம், கன்னம் தாவாய் கழுத்து 8-வட்டம், நேத்திரங்கள் 9-வட்டம் நெற்றி சிரசு 10-வட்டமாகும், இதுகூடியது நூற்றிருபது வயதாகும் இதற்கு மேற்பட்டால் வருஷம் கணிதத்திலில்லை இந்த விதமாக குருவின் வட்டத்தைத்தெரிந்து வருஷம் நிச்சயித்துக் கொள்ளவும் இனிமேல் ருதுவின் நிலைகள் சொல்லப்படு மென்பதாம், 8

2-வது சுலோகம் ருதுவு அறிய

உதயலக்கினந்தனிலே வுசினநின்றபோதிலும்
சிதனவன்றிரேக்காணமானு சித்திரைவைகாசியாம்
உதயலக்கினத்திலே யுதிரநிற்கவல்லது
உதிரனின்றிரேக்காணமானு லோதுமானியாடியே

இ-ள். உதயமான பிரஸ்ன லக்கினத்தில் செவ்வாயிருந்தாலும் அல்லது செவ்வாயின் திரேக்காணமானாலும் ஆனி ஆடிமாதங்களாம் உதயலக்கினத்தில் சுக்கிரனிருந்தாலுமல்லது சுக்கிரன் திரேக்காண மானாலும் சித்திரை வைகாசிமாத மென்றறிவதாம், 9

2-வது சுகோகம் ருதுவு அறிய

சந்திரனுதயம்நிற்க சசிதிரேக்காணங்களேல்
சொந்தமானஆவணியும் தோகைகன்னிமாதமாம்
புந்தியுதயம்நிற்கவல்ல புலவனின்றிரேக்காணமேல்
விந்தையானவைப்பசியும் விருச்சிகத்தின்மாதமே.

இ-ள். சந்திரன் உதயத்திலிருந்தாலும் அல்லது சந்திரன்திரேக்காணமானாலும் ஆவணி புரட்டாசி மாதமாம் புதன் உதயத்திலிருந்தாலும் அல்லது புதன் திரேக்காணமானாலும் ஐப்பசி கார்த்திகை மாதங்களாகுமென்பதாம், 10

2-வது சுலோகம் இதுவுமது

பொன்னுதயம்நிற்கவல்ல பொன்றிரேக்காணங்களேல்
துன்னுமார்கழியுடன் தோன்றுமகரமாதமாம்
சுன்னுதயம்நிற்கவல்ல சுன்றிரேக்காணங்களேல்
என்னுமாசிபங்குனியா மிருதுதன்னிலைமையே

இ-ள் குரு உதயலக்கினத்தி லிருந்தாலும் அல்லது குருவின் திரேக்காணமானாலும் மார்கழி தைமாதமாகவும் சனியுதயத்திலிருந்தாலும் அல்லது சனியின் திரேக்காணமானாலும் மாசிபங்குனி மாதங்களென்பதாம்,

2-வது சுலோகம் ருதுமாறுதலறிய

பலகிரகம்லக்கினத்தில் பற்றிநின்றகாலத்தில்
வலிதுபெற்றகோளுக்குற்ற மாதருதுவுசென்மமாம்
இலகுமுதயமீதினிற்கோ ளில்லையதுவுஞ்சூன்யமேல்
நலமதாகுந்திரேக்காணத்தின் நாதனார்தன்மாதமே

இ-ள். உதயலக்கினத்தில் பலகிரகமிருந்தால் அதிலே பலவானானகிரகத்துக்குசொன்னமாதங்களே செனனமாதமாம், உதயலக்கினத்தில் கிரகமில்லாது சூனியமாகவிருந்தால் எந்தக்கிரகசம்பந்ததிரேக்காணமாகுமோ அந்த கிரகத்திற்கு சொன்னமாதங்களே செனனமாதமாகு மென்பதாம்,

2-வது சுலோகம் ருது பரிவர்த்தனே

ஒருவயனந்தன்னிலேமற் றோரிருதுவந்திடில்
வருகும்சௌரமானத்தாலே வந்தகாலம்சசிருது
பெருமகரகும்பராசி புக்கினுறென்றேரவி
தெரியும்வாறுதன்னையே செப்பிடுவேன்யானுமே

இ-ள். ஒரு அயனத்தில் மற்றொரு ருதுவுவருமானால் சௌரமானத்தினால் ருதுவைச்சொல்ல வேண்டியது எப்படி என்றால் சசிருதுவெனத்தெரிந்தால் சூரியன் மகரம் கும்பத்தி லிருக்கும்போது ஜெனனமானதென்றறியவு மென்பதாம். 13

3-வது சுலோகம், இதுவுமது,

சந்திரன்புதன்குருவும் சனிசேய்கவிக்குவர்த்தனே
மந்தனுக்குபொன்னாகும் மழையவற்குதிங்களாம்
செந்திவண்ணனுக்குமாலாம் திகழிருதுமாறுமாம்
வந்தவிரவிசேய்கிரீஷ்ம மாகில்மாலும்வர்த்தனே

இ-ள். சந்திரன் புதன் குரு இவர்களுக்கு சனிசெவ்வாய் சுக்கிரன் வர்த்தனையாவார்கள் அதெப்படி யென்றால் சனிக்கு குருவர்த்தனே செவ்வாய்க்கு புதன் வர்த்தனே சுக்ரனுக்கு சந்திரன் வர்த்தனே சூரியன் செவ்வாய்க்கு கிரீஷ்மருதுவேயானால் புதனே இருவருக்கும் பரிவர்த்தனையாவார்களென்பதாம், 14

3-வது சுலோகம் இதுவுமது,

உத்தராயணத்திலே வருஷருதுவாகினால்
சித்தமாம்வசந்தருது செப்புவோஞ்செனனமே
சுத்தமாய்வசந்தமாகில் தோன்றும்வருஷருதுவே
உத்திடுமேயந்தமாகி லோங்கிடும்சசிருது

இ-ள். உத்தராயணத்திலே வருஷ ருதுவென்று தெரிந்தால் வசந்த ருதுவு செனனமென்றும் தெக்ஷிணாயனத்தில் வசந்த ருதுவானால் வருஷ ருதுசெனனம் ஏமந்தருதுவென்று தெரிந்தால் சசிருதுவில் செனன னென்று சொல்வதாகு மென்பதாம், 15

3-வது சுலோகம் இதுவுமது,

சசிருதுவாகவந்தால் சாற்றிடுமேமந்தமாம்
உசிதமாஞ்சரருதுவே லுற்றிடுங்கிரீஷ்மமாம்
விசிதமானகிரீஷ்மமாகில் விளங்கிடுஞ்சரருது
நிசமதாகவர்த்தனைகள் நேருமிவ்வடைவதே,

இ-ள். சசிருதுவென தெரிந்தாலந்த ருதுசெனனம் சரருதுவென தெரிந்தால் கிரீஷ்மருது செனனமாம் கிரீஷ்மருதுவென தெரிந்தால் சரருது செனனமாம் இந்தவிதமாகவே பரிவர்த்தனைகள் என்றறியவும் என்பதாம், 16

3-வது சுலோகம் மாதமறிய.

ஆதியிலுதயமான ராசியின்றிரேக்காணத்தில்
நீதியானபாகைபத்தில் நேருமுன்னமாகினால்
தீதிலாதமுதலாமாதம் சென்மமென்றறிந்திடு
பாதியானபின்னுமாகில் பகருமாதம்பின்னதே,

இ-ள். பிரஸ்னலக்ன திரேக்காணபாகை முதல் ஐந்தாயிருந்தால் ருதுவாகியது இரண்டுமாதத்தில் முதல்மாதமாம் இரண்டாவது ஐந்தாயிருந்தால் பின்மாதமென்றறிய வென்பதாம், 17

3-வது சுலோகம் திதியறிய,

ஒருதிரேகாணத்தினுக் குற்றகலையறுநூறதே
வருமதிலேபாதிகொண்டு மாதமானதேற்படும்
தெரிவதானதிதியொன்றிற்கு செல்லுகலையீரைந்தா
யுரியகலைகள்சென்றதனை யுற்றதிதிகள்செல்லுமே,

இ-ள். ஒரு திரேக்காணத்திற்கு கலைகள் அறுநூறு ஆகும் அதின்பாதியான முந்நூறு கலைகளால் மாசமேற்படும் ஆனால் திதி ஒன்றுக்கு பத்துக் கலைகளாக வெத்தனைகலைகள் சென்றதோ அத்தனை திதிகள் சென்றதாக அறியவும் என்பதாம், 18

4-வது சுலோகம் சாந்திரமான திதி,

சூரியன்புடத்தின்ராசி சொல்லும்பாகைசென்றதின்
தேருமத்தனை திதிகள் செல்லுஞ்சுக்லமாதியாய்
கூறுமகரமானபோது கும்பமாதமாகுமாம்
நேருகும்பமானபோது நிச்சயிப்பாய்மீனமே,

இ-ள். சூரியன் புடத்தின் ராசியில் யெத்தனைபாகை செல்லாகி யிருக்கிறதோ அத்தனை திதிகள் சுக்கில பக்ஷமாதியாய் சென்றதென்று சொல்லவும் மகரமாசமென்று தெரிந்தால் மாசிமாசமென்றும் கும்பமாதமென்று தெரிந்தால் பங்குனிமாசமென்றும் இப்படியே மற்றமாசங்களையும் சொல்லவுமென்பதாம், 19

4-வது சுலோகம் பகலிரவறிய

ஆடுவிடையுவில்லும்பாழு மலவன்மகரராசியும்
நாடுபிரஸ்னமானபோது நற்பகலேசென்மமாம்
தேடுகோலும்கன்னிசிம்மம் தேளுங்கும்பமீனமும்
நீடுபிரஸ்னமானபோது நிசியிலேசெனனமாம்,

இ-ள். மேஷம்ரிஷபம் மிதுனம்தனுசுகடகம்மகரம் இவைகளிலொன்று பிரஸ்னமானால் பகல் செனனம் சிம்மம் கன்னிதுலாம் விர்ச்சிக மீனம் கும்பம் இவைகளிலொன்று பிரஸ்னமானால் இரவில் ஜெனனமென்று சொல்லப்படு மென்பதாம், 20

4-வது சுலோகம் நாழியறிய,

வினவுபோதிரவி சென்றமெய்யதாங்கலைகளை
நினவதாயறிந்துகொண்டு நிசிஜெனனமாகிடில்
இனிமையாய்பகலகசு வேற்றபிரமாணத்தினால்
தினகரனார்செல்கலையை தீவிரமாயேற்றியே.

நிசியிலுள்ளநாழிதன்னால் நேராய்பாகம்செய்திட
உசிதமாகவந்தவீவு வுற்பவித்தநாழியாம்
விகிதமாகபகல்ஜெனன மென்றிடிலிராத்திரி
பிசகிடாப்பிரமாணத்தின் பேசுநாமியாலுமே

கதிரவனார்சென்றிருந்த கலைபெருக்குந்தொகைதனை
பதியதாய்ப்பகலகசு பற்றுநாழிபங்கிட
அதினுடையவீவுதன்னை யறைவாய்பகலில்சென்மமாய்
சதியிலாவினடிநாழி தர்ப்பலரகளெண்ணிடே

இ-ள். பிரஸ்ன காலத்தில் சூரியன் சென்ற கலைகளைத் தெரிந்துகொண்டு ராத்திரி ஜெனனமொன்று வந்தால் பகலகசு பிரமாணத்தால் சூரியன் சென்ற கலைகளைப்பெருக்கி ராத்திரிக்குள்ளே நாழியால் பாகித்தல்

கொடுக்கவந்த வீவுராத்திரி ஜெனன நாழிகையாம் பகல் ஜெனனமாய்த் தெரிந்தால் ராத்திரிபிரமண நாழியால் சூரியன் சென்ற கலைகளை பெருக்கிய தொகையை பகல்அகசுநாழியால் வகுத்தவீரு பகல்ஜெனன நாழிகை விஞடி தற்பரைகளேற்படு மென்பதாம். 21

4-வது சுலோகம் செனனநாழி

இன்னுமோரடைவுரைப்பே னெழிலாம்பிரசினையதின்
உன்னுங்கடிகைசென்றதெனவே வுண்மையாயறிந்திடாய்
சொன்னதந்தநாழிதானும் சுதன்செனனநாழியாம்
முன்னநாளில்வல்லவர் முனிசிரேஷ்டர்கூறினர்

இ-ள். சில ஆசாரிகள் சொன்னது பகலிலாவது இரவிலாவது பிரஸ்னகாலத்தில் எத்தனை நாழிகை சென்றிருக்குமோ அத்தனை நாழிகைக்கு ஜென்மமென்று முனிவர்களில் சிரேஷ்டமானவர் சொன்னார்களென்றறிவதென்பதாம்- 22

5-வது சுலோகம் மாதமறிய

வினவுபோதுதிங்கள்நோக்கு மேம்படுநவாங்கிசம்
நினவதாகமூன்றுசெய்ய நிலவடைந்தவுடுதனை
தனியதாகபவுரணையில் சாருமாதமதுதனில்
ஜெனனமானதென்றுநீயும் செப்பிடுவாய்தீரமே

இ-ள். சந்திரனால் பார்வையடைந்த நவாங்கிசத்தினால் மூன்று கூறு செய்து சந்திரனடைந்த நட்சத்திரம் தெரிந்துக்கொண்டு அந்த நக்ஷத்திரம் எந்தமாசம் பௌரணையில் வருமோ அந்தமாதமே ஜெனனமாதமென்றறிவது என்பதாம் 23

5-வது சுலோகம் இதுவுமது

சுக்கிலாந்ததொகைகடன்னை தூயமாதமல்லது
மிக்கநட்சத்திரமதில் வேதியன்சாரோத்தமாய்
முக்கியநிதானத்திலும் மெழியும்சுக்கிலாந்தவெண்
தங்கவந்ததிங்களென்று சாற்றிடும்கணிதமே

இ-ள். சுக்கிலாந்த எண்ணிக்கையான மாசமல்லாத நட்சத்திரங்களுக்கு குரு சாரோத்த நிதானத்தினால் சுக்கிலாந்த எண்ணிக்கைமாசத்தைக் கற்பிக்கக் கடவதாமென்பதாம். 24

5-வது சுலோகம் இதுவுமது

பிரசனைகாலந்தனிலே பிறைரிஷபவங்கிசை
திரமேபேழாங்கிசையினுள்ளே சென்றிருந்தபோதிலும்
வுரவுதன்னைவாம்சைசென்ற வெண்ணுமாரால்ரோகினி
தாணியிற்கார்த்திகையின் மாதம்தானேசென்மமென்னலாம்

இ-ள். பிரஸ்னகாலத்திலே சந்திரன் ரிஷபராசி நவாமிசையில் ஏழு நவாமிசைக்குள்ளே யிருப்பானானால் தன்னவாங்கிசை யென்ற நட்சத்திரங்கள் கார்த்திகை ரோகிணி பாகையால் கார்த்திகைமாதம் செனனமென்பதாம், 25

5-வது சுலோகம் இதுவுமது

இடபராசியங்கிசத்தி லேழுக்கதிகமாகினால்
திடமாமிதுனராசிதனிலும் செப்புமாறுக்குள்ளுற
துடருதன்னவாம்சையான தூயமான்முன்னரையினால்
படருமார்கழியின்மாதம் பாலன்ஜென்மமென்றிடே.

இ-ள். ரிஷபராசி நவாங்கிசம் ஏழுக்கதிகமானாலும் மிதுன நவாமிசம் ஆறுக்குட்பட்டிருக்க தன்னவாம்சமான நக்ஷத்திரங்கள் மிருகசிரம் முன்னரையானதால் மார்கழிமாதம் செனனமாதமென்பதாம். 26

5-வது சுலோகம் இதுவுமது

மிதுனநவாங்கிசைதனிலே மேலுமாறுக்கதிகமாய்
மதியின்வீட்டிலைந்திலைந்திலுள்ளும் மகிழ்நவாங்கிசைதனில்
கதியாம்புனர்பூசத்திலோடும் கருதுபூசமாகினால்
துதிபெருகுமதையும்மாசி தோன்றினனென்றேயறி

இ-ள். மிதுனராசி நவாம்சையில் ஆறுநவாமிசைக்குமேற்பட்டு கடக நவாங்கிசம் ஐந்துக்குள்ளாகவும் இருந்தால் தன்னவாம்சை நக்ஷத்திரம் புனர்பூசம் ஆகையால் தைமாதம் செனனமென்றறியவும் என்பதாம், 27

5-வது சுலோகம் இதுவுமது

மகமாயில்யமாசிமாதம் மற்றுபூரமுத்திரம்
சுகமாயஸ்தமானபோது சொல்லுமாதம்பங்குனி
பகரும்சித்திரைசுவாதி மற்றுமாதஞ்சித்திரை
திகழனுடமும்விசாகம் செப்பினோம்வைகாசியே

இ-ள். ஆயில்ய மகமானால் மாசிமாதத்திலும் பூரம் உத்திரம் அஸ்தமானால் பங்குனிமாதத்திலும் சித்திரை சுவாதியானால் சித்திரைமாதத்திலும் விசாகம் அனுஷம் வைகாசி மாதமென்பதாம், 28

5-வது சுலோகம் இதுவுமது,

மூலங்கேட்டையானிமாதம் முக்குளம்முடியாடியே
சீலவோணம்காக்கைபிரண்டும் திகழுமாவணியென
சாலசதயம்நாழிமுரசு சாற்றுங்கன்னிமாதமாம்
நாலம்பரியும்பரணிமூன்று நல்குநிறையாம்பூர்வமே

இ-ள். மூலம் கேட்டை ஆனி மாதம் பூராட வுத்திராடம் ஆடிமாதம் திருவோணம் அவிட்டம் ஆவணிமாதம் சதயம் பூரட்டாதி வுத்திரட்டாதி

புரட்டாசிமாதம் ரேவதி அசுவதி பரணி ஐப்பசி மாதம் இந்த விதமாக செனனமாத மறியவேண்டியது என்பதாம், 29

5-வது சுலோகம் இதுவுமது,

சிரபினவிலக்கினத்தும் பேசுமைந்தொன்பதில்
திரமதாகவதுபெற்று திகழும்ராசிதன்னிலே
பரவுவெண்ணிலாவிருக்க பாலகனும்வாய்மையாய்
தரணிமீதுவந்ததாக சாற்றிடுவாயூகமாய்

இ-ள். பிரஸ்னலக்னம் ஐந்து ஒன்பதாகிய உத்தமபலாதிக்கமான ராசியில் சந்திரனிருக்கப் பிறந்தவ னென்பதாம், 30

6-வது சுலோகம் இராசியறிய,

வினவுபோதெழுந்தராசி யாதிவெண்மதிதனை
நினைவுமாறிடாமலெண்ண நேருமத்தொகையதற்
கினிமையாகவிந்ததாதி யென்னுராசியேயவன்
நவிலிலாதுதித்தவோரை யாய்நவிலலாகுமே.

இ-ள். சந்திரனவன் பிரஸ்னலக்ன முதல்கொண்டு எத்தனையாவது ராசியில் இருப்பானே அதுபோல சந்திரனிருந்த ராசிமுத லெண்ணவரும் ராசியே செனனராசியென்று சொல்லப்படு மென்பதாம், 31

6-வது சுலோகம் இதுவுமது

மீனராசிதானுதிக்க வினவுவாரேயாகிடில்
தானவன்சலசரத்தில் தங்கிநிற்கபூவினில்
ஆனவிச்சுதன்பிறந்த தாகவேமுன்னுளிலே
ஞானமுள்ளமுனிசிரேஷ்டர் நவிலுவாய்மையீதறி.

இ-ள். பிரஸ்னலக்னம் மீனராசியாகி யிருக்க சந்திரன் மீனராசியிலே யிருக்கப் பிறந்தவனென்று சொல்வதென்பதாம், 32

6-வது சுலோகம். இதுவுமது.

ராசிகள்பலவிதமாய் நாட்களாலேவந்திடில்
நேசமோடுநிச்சயிக்க நேரில்காணும்வஸ்துபோல்
வீசுசீவர்தங்கள்போலும் வினவுகின்றதொனியதும்
பேசுரூபமானராசி பிறையிருக்கவந்தவன்.

இ-ள். இப்போது சொன்னவிதமாய் ராசிகள் வெவ்வேருக ஏற்படுமானல் அப்போது இன்னராசியென்று நிச்சயிக்கும் விதி சொல்லப்படுகின்றது. அதெப்படியென்றல் எந்தராசி சம்பந்த ஆகாரவஸ்து கொண்டு வருவானே அந்த ராசியில் சந்திரனிருக்க செனனம் எந்த வுருவமுள்ள செந்து பிரஸ்னகாலத்தில் காணப்படுமோ அந்த வுருவமுள்ள ராசியில் சந்

திரனிருப்பானென்றும் எந்த செந்துவுடைய சத்தம் காதில் கேட்குமோ அந்த செந்துவுடைய ரூபமான ராசியெதுவோ அதில் சந்திரனிருக்கப் பிறந்தவனென்று சொல்லப்படு மென்பதாம், 33

7-வது சுலோகம் லக்கினமறிய,

உதயலக்கினத்திலெந்த வோரைசேர்நவாங்கிசம்
உதயமாகவந்தபோது வோங்குமந்தராசியே
உதயலக்கினங்களென் றுலகிலுள்ளபேருக்கு
உதயத்தாலேநட்டசாதக மோதிடும்விதங்களே

இ-ள். பிரஸ்னலக்கினத்தில் எந்தராசி சம்பந்தமான நவாங்கிசம் உதிக்குமோ அந்தராசியே சென்மலக்கின மென்றறியவு மென்பதாம், 34

7-வது சுலோகம் இதுவுமது,

ஆதிபிரஸ்னலக்கனத்தி லானதிரேக்காணம்முதல்
ஆதவனுர்சென்றிருந்த வத்திரேக்காணம்வரை
ஆதியாந்தொகையைப்போல வாகுஞ்சென்மலக்கினம்
ஆதியதிகமாகினு லாறிரண்டிலேகழி.

இ-ள். பிரஸ்னலக்கினமுதல்கொண்டு சூரியனெத்தனையாவது திரேக்காணத்தி லிருப்பானே அந்தப்படி பிரஸ்னலக்னமுதல்கொண்டு அத்தனையாவது ராசியே சென்னலக்கினம் அதாவது பிரஸ்னலக்கினதிரேக்காணம் முதல்கொண்டு சூரியனிருந்த திரேக்காணம்வரையி லெண்ணி யெத்தனையாகுமோ பிரஸ்னலக்ன முதல்கொண்டு அத்தனையாவது ராசி சென்மலக்கினமாகு மென்பதாம், 35

8-வது சுலோகம் கணக்குமுறையாம் லக்கினம்

காணும்விதம் சொல்லப்பட்டது.

உதயமீதிருந்தகோளை யுற்றகலைகளாக்கியே
பசிதனிலேதுவாதசாந்தம் பற்றுசாயலெண்ணியே
உதயகோளின்கலைகடன்னை யுண்மையாய்ப்பெருக்கியே
விதியதாயீராறிலீய மேஷமாதிலக்னமே.

இ-ள். பிரஸ்ன லக்கினத்திலிருந்த கிரகத்தை தற்காலக் கிரகமாக வைத்துக்கொண்டு கலையாக்கி சமமான பூமியில் துவாதசாங்குல சங்கையில் தெரியவந்த தாத்காலிகசாயாங்குல எண்ணிக்கையால் கிரககலைகளைப்பெருக்கிப் பன்னிரண்டில் கழித்தமீதி எத்தனையோ அத்தனையாவது ராசிமேடமுத லெண்ணவருவது சென்மலக்கின மென்பதாம், 36

8-வது சுலோகம் இதுவுமது

பலகிரகமுதயமிற்கில் பலவானனகோள்தனை
நலமதாய்க்கலைகளாக்கி நாட்டுமுன்முறைப்படி

குலவுமீராறுத்தன்னிலீப கொரிமுதலாய்சென்மமே
பிலமுடனேகணிதம்பண்ண பெற்றிடும்விதங்களே.

இ-ள். பிரஸ்ன லக்கினத்தில் அனேக கிரகங்கள் இருந்தால் அந்த கிரகத்தில் எதுபலாதிக்கமா யிருக்குமோ அதைத் தற்காலக் கிரகமாய் வைத்துக்கொண்டு கலையாக்கி அந்தக் கலையை துவாத சாங்குளசங்கில் தெரியவந்த சாயாங்குள வெண்ணிக்கையாய் பெருக்கி பன்னீரண்டில் வகுக்க எத்தனை மீறுமோ மேஷமுதல்கொண்டு அத்தனையாவது ராசியே சென்மலக்கினமென்று சொல்லப்படு மென்பதாம், 37

8-வது சுலோகம் இதுவுமது

வந்தவனிருந்துகேட்க மாரன்தானம்லக்கினம்
சொந்தமாய்ப்படுத்துகேட்க சொல்லுவாய்சுகமதை
சிந்தையாநடந்துகேட்டால் செப்பலாகும்சென்மமே
விந்தையாகநின்றுகேட்டால் வினவுராசிலக்கினம்

இ-ள். பிரஸ்னகேழ்க்கவந்தவன் உட்கார்ந்துகேட்டால் பிரஸ்னைக்கு ஏழாம்ராசி படுத்துகேட்க நாலாம்ராசி நடந்துகேட்க பத்தாம்ராசிநின்று கேட்க பிரஸ்னராசியே சென்மலக்கினமாகச் சொல்லப்படும் என்பதாம்,

9-வது சுலோகம் நஷ்டஜாதகத்தை கணிதமுறையால்

சொல்லப்படுகின்றது.

வினவுபோதித்தவோரை வெய்யோனுதிகோள்தனை
நினைவதாய்க்குணகரிக்கு நிலமையோடுசெய்முறை
தனைவிவரமாகச்செய்யும் தன்மைதன்னையானுமே
முனிவர்சொன்னவாறுபோல மொழிகிறேன்கேண்மினே.

இ-ள். பிரஸ்னகாலத்தில் உதயலக்கினத்தையும் சூரியன் முதலாகிய கிரகத்தையும் குணகாரம் செய்யும் விபரத்தை சொல்லப்படுகின்றது என்பதாம், 39

9-வது சுலோகம் இதுவுமது.

அரிவிடைக்குபத்தினுலு மரிவைமகரமைந்திலும்
மரிதலைக்குவேழ்துடர் மணியும்யாழுமெட்டிலே
துரகமொன்பான்கடகநாலு தூயகும்பம்லாபமாம்
பரவுமீனமாறிரண்டும் பகர்குணகாரங்களே.

இ-ள். ராசிகளுக்கு குணகாரம் மேலும் எழிலும் ரிஷபம் பத்திலு மிதுனம் எட்டிலும் கடகம்நாலிலும் சிம்பம்பத்திலும் கன்னிஐந்திலும் துலாம் எழிலும் விர்ச்சிகம் எட்டிலும் தனுசு ஒன்பதிலும் மகரம் ஐந்திலும் கும்பம் பதினொன்றிலும் மீனம் பன்னிரண்டிலும் இப்படியே ராசி குணகாரம்செய்வது என்பதாம், 40

9-வது சுலோகம் கிரககுணகாரம்

செங்கதிரோன்மால்சனியும் திங்களுக்குமைந்திலே
மங்கலனெட்டதாகும் மன்னவற்குபத்திலும்
சுங்கனுக்கேழினாலும் சுகமதாய்ப்பெருக்கிட
துங்கமாகுணகாரமாம் சொல்லிடுங்கணிதமே

இ-ள். சூரியன் சந்திரன் சனி புதன் இவர்கள் நாலுபேர்களுக்கும் ஐந்தில் பெருக்கவேண்டியது செவ்வாய்க்கு எட்டிலும் குருவுக்குப் பத்தினாலும் சுக்கிரனுக்கு ஏழிலும் பெருக்குவது கிரககுணகாரமாம் என்பதாம்,

9-வது சுலோகம் இதுவுமது

உதயமீதிலுள்ளகோளுக் குற்றகுணிதம்செய்வது
உதயலக்கினங்களையே வோங்குகலையாய்ச்செய்முறை
உதயதொருகோள்நிற்க வுரைப்பதொருகோள்குணகாரம்
உதயமீதுபலரிருக்கி லோதுமவர்குணகாரம்

இ-ள். உதய லக்கினத்தில் கிரகயுக்தமா யிருந்தால் அந்த கிரககுணகாரம் செய்யவேண்டியது பிரஸ்ன லக்னத்தையும் கலையாகக் இப்போது சொல்லப்பட்ட கிரகத்தில் ராசிகுணகாரத்தால் பெருக்கவேண்டியது அந்தப்பிரஸ்ன லக்கினத்தில் ஒரு கிரகமிருந்தால் அந்த கிரககுணகாரமும் பெருக்கல் செய்யவேண்டியது அனேககிரகமிருந்தால் அத்தனைப்பெருக்கும் கிரககுணகாரம் செய்யவேண்டிய தென்பதாம், 42

10-வது சுலோகம் இதுவுமது.

ராசிகிரககுணகலையை நன்றாயேழில்தாக்கிட
பேசுதொகையைசரமதற்கு பெருகுமொன்பான்சேர்ப்பது
வீசுவுபயம்தள்ளுவொன்பான் மேலுந்திரமதாகிடில்
நேசமாய்க்கழித்தல்கூட்டல நெறியிதற்கில்லையே

இ-ள். ராசிகுணகாரம் கிரககுணகாரந்தால் பெருக்கப்பட்டகலைகளை ஏழாற்பெருக்கி அந்த எண்ணிக்கையின் தொகையை சரராசிக்கு ஒன்பது சேர்க்கவேண்டியது உபயராசிக்கு ஒன்பது தள்ளவும் திரராசிக்குக் கூட்டலும் கழித்தலுமில்லை யென்பதாம், 43

10-வது சுலோகம், இதுவுமது.

ஆதிதிரேக்காணம்முதிக்கி லத்துடன்சேரொன்பது
தீதிலாதிரண்டதாகில் சேர்த்தல்நீக்கலில்லையே
நீதியோடுமூன்றதானல் நிகழுமொன்பதைக்கழி
சோதினைநவகதானம் சூக்ஷ்மமாகச்செய்திடே.

இ-ள். பிரஸ்ன லக்கினத்தில் முதல்திரேக்காணம் உதிக்கில்ஏழினால் பெருக்கின தொகையுடன் ஒன்பது சேர்க்கவும்இரண்டாவது திரேக்காண

முதிக்கே சேர்க்க வேண்டியதும் நீக்கவேண்டியது மில்லை மூன்றுவது திரேக்காண முதயமானுல் ஒன்பது தள்ளவேண்டியது இவ்விதமாக நவக தானசோதனை செய்வதாமென்பதாம் 44

10-வது சுலோகம் களத்திரநக்ஷத்திரம்

அந்தவோரையோடுகூட வாறுராசிசேர்ந்திட
சொந்தராசியுங்கிரகம் சுகமதாய்ப்பெருக்கியே
வந்ததொகையையேழிற்ருக்க மகிழ்நவம்செய்துபின்
அந்தமிச்சம்நாளிலீய வாகுமனையாளுடுவதே

இ-ள். நவகதான சோதனைசெய்து 27-ல்வகுத்தசேடம் அஸ்வதியாதியான நக்ஷத்திரங்களை இந்தப் பிரகாரமாய் களத்ர புத்ர மித்ராகும் அந்தந்தப் பாவத்தைக்கொண்டே அவரவர்கள் நக்ஷத்திரம் சொல்லப்படும் அதாவது லக்கினத்தில் இருந்த கிரகத்தைக்கொண்டே கேட்பவனுடைய நக்ஷத்திரமும் அந்த ராசியோடு ஆறுராசிகூட்டி கலையாக்கி லக்கினராசி பெருக்கலும் லக்கினத்திலிருந்த கிரகப்பெருக்காலும் பெருக்கிபிறகு ஏழிற்பெருக்கி முன்போல நவகதான சோதனை செய்துவிட வேண்டியது செய்தபின்பு 27-ல் வகுத்தமீதி அஸ்வனி ஆதியாய் அத்தனையாவது நட்சத்திரமே கேட்பவனுடைய களத்திரத்தின் நட்சத்திரமென்பதாம், 45

10-வது சுலோகம் சகோதரநக்ஷத்திரம்

உதயமோடிரண்டுகூட்டி யுற்றகலைகளாக்கியே
மதியினுலேமுன்போல்செய்ய வருகுநாளேசோதிரன்
உதயமோடுநாலுகூடு முடுவேதனதுபுத்திரன்
பதியிஞேடுவைந்துகூட்டி பார்க்கப்பகைவனுளதே

இ-ள். உதயராசியோடு இரண்டுகூட்டி கலையாக்கிப்பெருக்க முன்போலசெய்யவருவது தனதுசகோதரன் நக்ஷத்திரங்களாம் உதயமோடு நாலுராசிகூட்டி கலையாக்கி முன்போல செய்யவருவது தனது புத்திரன் நக்ஷத்திரங்களாகும் உதயமோடு ஆறுராசிகூட்டி முன் முறைப்படி செய்யவரும் நாள் தனதுபகைவனுடைய நக்ஷத்திரமென்றறிய வேண்டியதென்பதாம்

10-வது சுலோகம் இதுவுமது,

செய்யுமுதயந்தன்னைக்கொண்டு செல்வன்செனனவாண்டதும்
துய்யலக்கினங்கள்மாதம் சுக்கிலம்முமமரமும்
மெய்யதானவிருதுவோடு விளங்குகரணநோகமும்
வையகத்தில்நட்சத்திரங்கள் வல்லமையாய்க்கூறிடே

இ-ள். உதய லக்கினத்தைக் கொண்டே ஜெனன வருஷம் லக்கினம் மாதம் பக்ஷம் ருதுவு கரணம் யோகம் நட்சத்திரங்களைச் சொல்லுவதாகுமென்பதாம் 47

10-வது சுலோகம் சினேகர் நக்ஷத்திரம்.

உதயமோடுமூன்றுகூட்டி யோங்குமுன்முறைப்படி
சதியிலாதுசெய்துபார்க்க தனதுநேசர்நாளதாம்
மதியுணர்வால்வினவுவோர்க்கு வல்லமைகளோடுமே
துதிகொளவேசாதகங்கள் சொல்லிடுவாய்யூகமே

இ-ள். உதயராசியோடு மூன்றுமூன்று ராசிகூட்டி கலைகளாக்கி பின்பு முன்செய்த விதமாக பெருக்கிக்கண்ட தன்னுடைய சினேகருடைய நட்சத்திரமாம் இவைகளைநன்குயுணர்ந்து யூகித்துச் சொல்லவேண்டியதாம்.

11-வது சுலோகம் வருஷம் மாதம் திதி பகலிரவு அறிய.

வருஷமிருதுமாதம்திங்கள் மற்றும்பகலோடிரவது
பரிமுதலாய்நட்சத்திரமும் பகரும்நாழிலக்கினம்
கரியதாகவொன்பதையும் தத்தம்பாகையாலுமே
அரியுமுறையாம்பிருகு சாதவடைவிதாகுமென்றிடே

இ-ள், வருஷம் ருதுவுமாதம் திதிகள் பகலிரவு அஸ்வினியாதிநட்சத்திரமும் சென்மநாழிகையும் லக்கினமும் இந்த ஒன்பதையும் தத்தம் பாகைகளினால் ஏற்படும் விதங்கள் பிருகு ஜாதகமென்ற நூலில் சொல்லியபடியே சொல்லுவோ மென்பதாம். 49

11-வது சுகோகம் குணகாரம்

இலக்கினத்தைக்கலைகளாக்கி யிருந்தகோளையவ்விதம்
துலக்கமாய்குணகரித்த தொகையைநாலுகூறிடு
கலக்கமின்றிவைத்ததனை கருதும்பத்துஎட்டுடன்
இலக்கமாகவேழைநதா லேற்றிவைத்தபின்பதை.

இ-ள். பிரஸ்னலக்கினத்தை கலையாக்கி ராசிகுணகாரம் முன்சொன்ன விதமாய் செய்து அந்தத் தொகையை நாலாகப்பிரித்து நாலிடத்தில் வைத்துக்கொண்டு ஒருபங்கைபத்திலும் மற்றொருபங்கை எட்டிலும்மற்றொரு பங்கை ஏழிலும் மற்றொருபங்கை ஐந்திலுமாகப் பெருக்கி தனித்தனி யாக அதை வைத்துக்கொள்ள வேண்டிய தென்பதாம், 50

12-வது சுலோகம் பிரபவாதி வருஷமறிய

பத்தினாற்பெருக்கினதை பாகம்நாற்றிருபது
சுத்தமாகவீந்தசேடம் தொடருமாயுள்சென்றதாம்.
பத்தினாற்பெருக்கிக்கண்ட பங்கையறுபதாக்கிட
வுத்தசேடம்பிரபவாதி யுண்மையாயுரைத்திடே.

இ-ள். பத்தினால் பெருக்கிக்கண்ட தொகையை நூற்றிருபதினாலே வகுத்தமிச்சம் சாதகனுக்கு சென்றிருக்கிற ஆயுளாம் அந்த தொகையை





அறுபதினால் வகுத்த மிச்சம் பிரபவாதிசென்ற வருஷங்களென்று சொல்லப்படுமென்பதாம், 51

12-வது சுலோகம் ருதுமாதமறிய

மின்தொகையையாறிலீய மிச்சம்சசியின்ருதுவது
தன்னையாதியாகவெண்ண சாருஞ்சென்மமிருதுவே
என்னுமந்தவெண்ணதனை யிரண்டினால்வகுத்திட
ஒன்னுமுதலேழுதலாமாதம் சொல்லுமிரண்டுபின்னதே.

இ-ள். முன்பத்தினாலே பெருக்கிய தொகையை ஆறினால் வகுத்தால் என்ன மீதியாகுமோ அது சசிருதுவாதியாகிய அத்தனையாவது ருதுவில் செனனம் அந்த தொகையை இரண்டினால் வகுத்தால் ஒன்று மிச்சமாக வரில் முதலாவதுமாசமும் இரண்டுமிச்சமானால் பின்பாதிய இரண்டாவது மாதமும் செனனமாத மென்னப்படு மென்பதாம். 52

12-வது சுலோகம். திதியறிய.

எட்டினாற்பெருக்கவந் திரண்டிலீயமிச்சமும்
திட்டமாகவொன்றுபூர்வம் திகழிரண்டுமமரமே
சட்டமோடுவத்தொகையை தானேழுவைந்தீயவும்
மட்டிடன்திதிகளென்று மாறிடாதுகூறுவாய்.

இ-ள். எட்டினாலே பெருக்கினதொகையை இரண்டால்வகுக்க ஒன்று மிச்சமானால் பூருவபட்சம் இரண்டு மிச்சமானால் அமரபட்சம் அந்த தொகையை பதினைந்தில் வகுத்து மிச்சமெதுவோ அத்தனையாவது திதியாகுமென்பதாம். 53

13-வது சுலோகம். பகலிரவு நக்ஷத்திரம்.

எழினால்பெருக்கினதை யெண்ணுநவக்தானமும்
பாழிலாதுசெய்திரண்டால் பாகம்செய்தமிச்சமும்
சூழமிரவிகாலமாகும் சொல்லிரண்டுமிராவெனல்
வாழுமிருபத்தேழிலீய வருகுமிச்சம்மசுவனி.

இ-ள். எழிற்பெருக்கவந்ததை நவகதானசோதனைகள்செய்ததொகையை இரண்டில் வகுக்க ஒன்று மிச்சமானால் பகலும் இரண்டு மிச்சமானால் ராத்திரியுமாகும் மேற்றொகையை இருபத்தேழில் வகுத்த மிச்சம் அசுவனி ஆதிநட்சத்திரம் சென்ம நட்சத்திர மென்பதாம். 54

14-வது சுலோகம். நாழிலக்கின மறிய

ஐந்தினால்பெருக்கவந் ததனைநவகசோதனை
சொந்தமாகச்செய்துபகலில் தோன்றுமகசில்பங்கிட
அந்தகாரம்வந்ததாகி லதைக்கழித்தமிச்சமும்
வந்தவர்க்குசென்மநாழி யாய்வகுத்தல்நீதியே,

இ-ள். அஞ்சியிலே பெருக்கிய தொகையை நவகதான சோதனைகள் செய்து அந்ததொகையை எந்த தினத்தில் பகலில் செனனமோ அந்ததின த்தின் அகசுப் பிரமாணத்தால் வகுக்க எத்தனை மீதியாகுமோ அத்தனை நாழிகைக்குப்பகலில் செனனமென்று சொல்லவும் இரவுசெனனமாக ஏற்பட்டால் ராத்திரிபிரமாணநாழியால் வகுக்க என்னமீதியோ இரவில் அத்தனை நாழிகைக்குச் செனனமென்று சொல்லவு மென்பதாம். 55

14-வது சுலோகம். லக்கினமறிய

இத்தொகைபெருக்கவந்த தேவிகற்பமாகிடில்
உதித்திடுமீராறுதன்னி லுண்மையாய்வகுத்திட
சுத்தமானசேடமெண்ணி தொகையைமேடமாதியா
யத்தனையிராசிசென்ம மாகிடுமிலக்கினமே.

இ-ள். அந்த தொகையை ராசிவிகற்பமானல் பன்னிரண்டில் கழித்த மிச்சமெத்தனை யாகுமோ அத்தனை மேஷாதியாக வெண்ண சென்மலக்கினமாகு மென்பதாம். 6

14-வது சுலோகம். ஷட்வர்க்கம்.

இந்தநல்விதமதா யியற்றிநஷ்டசாதகம்
அந்தவோரைதிரேக்காணங்க ளாகியநவாங்கிசம்
சொந்தமாந்துவாதசாம்சம் தொடுத்திடுந்திரிம்சாம்சம்
வந்தகோளைகொண்டுமே வகுத்திடல்வழியதே.

இ-ள். இப்போது சொல்லிவந்த விதமாகவே ஜாதகமமைத்து ஓரையும் திரேக்காணமும் நவாங்கிசமும் துவாத சாங்கிசமும் திரிசாம்சமும் தற்கால கிரகத்தைக்கொண்டே விதானஞ்செய்து தசாந்தர்த்தசா அஷ்டவர்க்கம் நிரணயித்து இப்படியே நஷ்ட ஜாதக முண்டாக்க வேண்டியதென்பதாம். 57

15-வது சுலோகம். நக்ஷத்திரம்.

ஊழ்வினைபோலன்னைதந்தை யோதுநாமமதனை
தாழ்விலாதுயிருமெய்யுந் தானேவென்றுரையுமாய்
பாழ்படாதிரட்டிப்பாக்கி பன்னிரண்டங்குலசங்கில்
வீழ்குசாயல்கூட்டியெண்ண விட்டமாதிநாளதே.

இ-ள். தாய் தகப்பனல் அமைக்கப்பட்ட செனனகால நாமதேயத்தினை அக்ஷரத்தை வரிசையாக எழுதி அதிலுள்ள மெய் யெழுத்துக்கு அரைமாத்திரையும் உயிரெழுத்துக்கும் உயிர்மெய் யெழுத்துக்கும் ஒரு மாத்திரையாக எண்ணி எத்தனை மாத்திரையாகுமோ அதை யிரட்டித்து சாயாங்குள சங்கினிடமாக எத்தனை அங்குலம் கூடியிருக்குமோ அந்த தொகையும் சேர்த்து மொத்தமாக்கி 27-ல் வகுத்தசேடம் அவிட்டமாதியாக அத்தனையாவது நக்ஷத்திரம் சென்மலக்கின மென்பதாம். 58

16-வது சுலோகம். வேறுவிதமாக நக்ஷத்திரமெடுக்கும் விதம்.

வந்தவன்கிழக்கிலிரண்டு வன்னிமூன்றேமன்னீரேழ்
இந்தநிருதிபத்துமேற்கு மேற்றிடுமூவைந்தது
அந்தமானவாய்மூவொன்பா னுமவடக்குமொன்பது
சுந்தரமாயீசனெட்டு தொகையைசேர்த்துகூட்டிடே.

இ-ள். பிரஸ்னே கேட்கவந்தவன் கிழக்கு முகமாயிருந்து கேட்டால் இரண்டும் அக்கினி முகமாகயிருந்து கேட்டால் மூன்றும் யமன் திசைமுகமாயிருந்துக் கேட்டால் பதினாலும், நிருதிமுகமா யிருந்துக்கேட்டால் பத்தும், வருணன் முகமாயிருந்துக் கேட்டால்பதினைந்தும், வாயுமுகமாயிருந்துக்கேட்டால் இருபத்தேழும், குபேரன்முகமாயிருந்துக்கேட்டால் எட்டும் ஆகுமென்பதாம். 59

17-வது சுலோகம் நக்ஷத்திரமறிய

இத்தொகையைமூவைந்தாலே யேற்றிபின்பவ்விடத்
துத்தமானிடர்த்தொகையு முண்மையாகக்கூட்டியே
சுத்தமாமூவைந்தாலேற்றிதொகையையொன்றுய்ச்சேர்த்திரு
பத்தியேழிலீந்தசேடம் பாரும்சென்மநாளதே.

இ-ள். இந்தவிதமாக இருந்து கேட்ட திக்குக்கு எத்தனை கூடியதோ அதை 15-ல் பெருக்கி கேட்கவந்தவன் எந்த முகமாயிருந்து கேட்டானோ அதேமுகமா யப்போது எத்தனைபே ரிருந்தார்களோ அத்தனையும் 15-ல் பெருக்கி எல்லாம் மொத்தப்படுத்தி இருபத்தேழில் வகுத்த சேஷமெதுவோ அவிட்டமாதியாகிய நக்ஷத்திரம் சென்மநட்சத்திர மென்றறிவதாம்.

17-வது சுலோகம் நிச்சயமபண்ணும் விதம்.

பலவிதமாய்ச்சாதகத்தை பகர்விதங்கடன்னிலே
பிலமதாகவந்ததைநீ பிரபலமாய்ப்பேசிடும்
நலமதாய்முனிசிரேஷ்டர் நவின்றபிருகஜ்ஜாதகம்
உலகுதன்னில்சொன்னதையா னோதினேன்றமிழிலே

இ-ள். மேலே அனேகவிதமாய் நஷ்ட ஜாதகத்தைச்சொல்ல யிருப்பதினால் எவரெவருக்கு எதுவெது அனுபவத்துக்கு வரக்கூடியதோ அதே விதமாக நிச்சயித்துக் கொள்ளுகிற தென்பதாம். 61

படலச்செய்யுள் தொகை.

நஷ்டஜாதகப்படலம் நன்மையோடுலகத்திற்
சட்டமாகயானுரைத்தேன் சற்குருதாள்போற்றியே
மட்டடனேசெய்யுள்யானும் மகிழ்வாயறுபத்தொன்றுக
இட்டமாய்ப்படித்துணர்ந்தோ ரெண்வலர்களாவரே.

இருபத்தாறுவது
நஷ்டஜாதகப் படல முற்றிற்று.

---

உ

# மங்களேஸ்வரீயம்.

இருபத்தேழாவது

## திரேக்காணப்படலம்.



## இரட்டை மணிமாலை.

1-வது சுலோகம். மேஷமுதல் திரேக்காணம்.

வெண்பா.

மேடமதில்மூன்றாய் விளங்குதிரேக் காணமதில்
தேடவதி லேமுதலாந் திரேக்காணம்-நாடதனில்
உருமா யுதசகித வுதிரனுக் கேசொந்தப்
புருஷத் திரேக்காணம் புகல்.

அறுசீர்க்கழில் நெடில் ஆசிரிய விருத்தம்.

புகலருவிழிசிவப்பு பொருமுடல்நீலவர்ணம்
சுகமுளவெளுத்தவாடை சுதனுமேதரித்திருப்பன்
பகரருபயமதுள்ளான் பகையவர்தமையுங்காப்பான்
சகமதிற்சுமைசுமந்து தரிப்பன்பல்லாயுதங்கள்.

இ-ள். மேஷத்திலே முதற்கூறானது ஆயுதசகிதமான செவ்வாயினது புருஷத்திரேக்காணமாம் இதில் பிறந்தவர் குணங்களாவது சிவந்த கண்ணும் கருப்பு நிறச்சடலமும் வெளுத்த வஸ்திரம் தரிப்பவன் பயமுள்ளவனும் பகையாளியானவரையும் ரக்ஷிக்கும் தன்மையும் சுமை சுமந்து திரிதலோடு பல ஆயுதங்களை வைத்துக்கொண்டிருப்பவனுமா மென்பதாம்.

2-வது சுலோகம். மேஷம் இரண்டாந்திரேக்காணம்.

தங்கிடுமேடந்தனிலே சாற்றுதிரேக்காணமதில்
இங்கிதமாகும்நடுவாந் திரேக்காணம்சங்கையற
சூரியன்சகிதமுள சுகநாரிதிரேக்காணம்
கூரியசதுஷ்பதமாய்க் கொள்.

பாதமாதிகளிலூனம் பரிமுகமடவார்தானும்
ஓதுநற்சிவந்தவாடை யுணவாதியலங்காரத்தும்
மாதவளிச்சைகொள்வாள் மற்றுமேகடம்தரிப்பள்
கோதையுந்தாகந்தன்னை குணமொடுபொறுத்திடாளே.

இ-ள். மேஷத்திலே இரண்டாவது கூறானது சூரியன் சம்பந்தமுள்ளது சதுஷ்பதமாகிய ஸ்திரீ திரேக்காணமாம் இதில் பிறந்தவர் குணமாவது கால் ஊனம் அதாவது நொண்டியாயும் குதிரைப்போலமுகமும் உள்

ளவன் சிவந்த வஸ்திரம் ஆபரணம் சாப்பாடு முதலானவைகளிலும் அலங்காரத்திலு மிச்சையுடையவள் குடம் தரித்திருப்பவள்தாகம் பொறுக்காத ஸ்திரீயாகும் என்பதாம். 2

3-வது சுலோகம். மேஷ மூன்ருந்திரேக்காணம்.

பொருந்தியமேடந்தனிலே புகலுதிரேக்காணமதி
லுருமூன்ருந்திரேக்காணமேயுரைக்க-வருபலனை
பொன்சகிதமாயுதமாய் புருஷத்திரேக்காணமதை
நன்மையுடன் கூறிடுவேஞன்.

கூறியகலைஞானங்கள் கோதறவுணர்ந்தான்மிக்க
தேறியேநோன்பியற்றுந்தங்க தேகஞந்துன்மார்க்கன்ருன்
காரியமதிலேபிரியன் கையிலாயுதமேபூண்டோன்
சீரிடுமிகுகோபத்தன் சிவந்தவாடையைத்தரித்தோன்.

இ-ள். மேஷராசியிலே கடைக்கூறு குருவினது சம்பந்தமுள்ள ஆயுத சகிதமான புருஷதிரேக்காணம் இதில் பிறந்தவர் குணங்களாவது கலைஞானங்கள் முதலானவைகளைநன்ருயுணர்ந்து விரதம்நோன்புமுதலியவையின் நியமத்தை அநுஷ்டிப்பவன் தங்கம்போல நிறமுடைய தேகமுள்ளவன் துன்மார்க்கமுள்ளவன் காரியங்களிலே மிக்கபிரியமும் கவனமு முள்ளவஞகியும் ஆயுதங்களைத் தரிப்பவஞகியும் கோபமுள்ளவஞகியும் சிவந்த வஸ்திரம் தரிப்பவஞகியு மிருப்பான் என்பதாம். 3

4-வது சுலோகம். ரிஷபமுதல் திரேக்காணபலன்.

தரித்தவிடையதனில் தங்குந்திரேக்காணமதில்
அரியமுதலானதிரேக் காணமது-நெறியாகும்
சுக்கிரன்சகிதமுள தோகையராம்ஸ்திரீயினது
அக்கினிதிரேக்காண மாம்.

மேவியசுருண்டரோமம் விளங்கியவயிறுந்தொந்தி
பூவையுந்தீயால்வெந்த பொற்பிலாவாடையுற்ருள்
தேவிவிடாய்பொறுக்காள் திரவியம்போசனத்தில்
ஆவலமாபரணங்க ளணிந்திடபெருக்கத்தாளே.

இ-ள். ரிஷபராசியிலே முதல்கூறு சுக்கிரன் சம்பந்தமுள்ள அக்கினி சகிதமான ஸ்திரீ திரேக்காணம் இதில் பிறந்தவர் குணங்களாவது தலைமயிர் சுருண்டும் அறுபட்டதாயும் தொந்திவயிறு தீப்பட்டசேலை தரிப்பவளாயும் திரவியம்போசனம் ஆபரணம்அணிவதற்கும் ஆசையுள்ளவள்தாகத்திஞல் பீடிக்கப்பட்டவள் என்பதாம். 4

5-வது சுலோகம். ரிஷபம் இரண்டாந்திரேக்காணபலன்.

பெருக்கும்விடையதனிற் பெற்றதிரேக்காணமதில்
இருக்குநடுக்கூறுதனி லேற்றபலன்-வருமிக்க

புந்தியதிபதியாம் புருஷன்சதுஷ்பதமா
மிந்தத்திரேக்காணமியல்பாம்.

இயம்புமெட்டெட்டுணர்ந்தா னெழில்மறிமுகனேர்கண்டன்
நயந்தருவீடும்பூமி நற்பசுதானியங்கள்
செயவண்டிகப்பலோட்டத் தீரனும்பசிபொறுக்கான்
தியங்கியவழுக்குவாடை செய்யணிவெள்ளிபூண்பன்

இ-ள். ரிஷபராசியிலே நடுக்கூறு புதன் சம்பந்த சதுஷ்பதமான புருஷதிரேக்காணம் இதில் பிறந்தவர் குணமாவது 64-கலைஞான முணர்ந்தவன் ஆட்டைப்போல முகமும் ரிஷபத்தைப்போல பிடரி கழுத்துகளில் மடிப்பு விழுந்திருக்கும் வீடு நிலம் பூமி பசு கன்றுகாலி தானியவர்க்கங்களுள்ளவன் கப்பல் ஒட்டவும் வண்டி ஒட்டவும் தைரியம் உள்ளவன் பசி பொறுக்காதவன் அழுக்கு வஸ்திரமும் கையில் வெள்ளிஆபரணமும் பூண்டிருப்பவனுகு மென்பதாம். 5

6-வது சுலோகம். ரிஷபம் மூன்றாந்திரேக்காணபலன்.

வெள்ளைநிறமிடபம் விளங்குதிரேக்காணமதில்
உள்ளகடைத்திரேக்காணமோதிடவே-தெள்ளுபலன்
சனியேயதிபதியாம் சதுஷ்பாதமாம்புருஷ
னினியதிரேக்காணமெனவெண்,

என்னும்பல்துலக்கம்வெள்ளை யினியகுஞ்சரமாம்தேகம்
மன்னியசரபக்கால்கள்மறி யெனத்தும்மல்மிக்க
உன்னிதவனமிருகத்தை யோட்டுவானுடுமாடும்
நன்னும்வியாகூலத்தை நாடியமனத்துள்ளானே.

இ-ள். ரிஷபராசியில் கடைக்கூறானது சனி சம்பந்தமுள்ள சதுஷ்பாதம் புருஷ திரேக்காணமாம் இதில் பிறந்தவர் குணங்களாவது-யானையைப்போல பெருத்ததேகம் வெள்ளையாக விருக்கும் பல்லும் அதிகமான வெண்மையாம் சரபத்தின் காலைப்போல விரல்கள் அதிகமாயிருக்கும் ஆட்டைப்போல தும்முதலும் காட்டிலிருந்து விலங்குகளையும் ஆடுமாடு முதலானவைகளை கர்ச்சனையினுலே ஓட்டுவான் எப்போதும் வியாகூலமான மனதுடையவனும் என்பதாம், 6

7-வது சுலோகம் மிதுனம் முதல்திரேக்காணபலன்,

உள்ளமிதுனந்தனிலே வுயருந்திரேக்காணமதில்
கொள்ளுமுதல்திரேக்காணம்கூறிடவே தெள்ளறிவு
பண்டிதற்குசொந்தமுள பாவையெனும்மாது
கொண்டதிரேக்காணமெனக்கூறு,

கூறியசவுந்தரியாம் குலவுமாபரணந்தன்னில்
காரிழையிச்சையுள்ளாள் கருதியபுத்ரதோஷி

தேரியதையல்வேலை செப்பவளுயர்ந்ததோளாள்
நாரிநற்குணமதுள்ள நற்பதிவிரதையாமே,

இ-ள். மிதுனராசியில் முதற்கூருனது புதன் சம்பந்தமுள்ள ஸ்திரீ திரேக்காணமாம் இதில் பிறந்தவர் குணங்களாவது நல்ல லக்ஷணம் பொருந்தியவள் ஆபரணத்திலே யிச்சையுள்ளவள் புத்திரதோஷத்தை யுடையவளாயும் உயர்ந்த பாகுபுஜத்தை யுள்ளவள் தையல் வேலையில் பயிர்ச்சி யுள்ளவள் நல்ல குணமுள்ளவள் பதிவிரதையாகும் என்பதாம் 7

8-வது சுலோகம் மிதுனம் இரண்டாந் திரேக்காணப்பலன்,

பதியானவீணையதில் பகருந்திரேக்காணமதில்
துதியாகுநடுவானகூறுதனை யிதமாகும்
புகரோனதிபதியாம் புருஷபக்ஷிதிரேக்காணம்
சகமீதுரைத்திடுவன் சார்பு,

சாருமுத்யானவனத்தில் தங்குவன்தலைகருடன்
சீருறுவில்லோடாய்தம் சிறப்பொடுகவசம்பூண்டான்
தேருமாயுதமீதும் திரவியமணிகளாடை
பேருறுமகவிடத்தும் பிரியமதுடையானாகும்.

இ-ள். மிதுனராசியில் நடுக்கூருனது சுக்கிரன் சம்பந்தமுள்ள பக்ஷியென்றும் ஆயுதசகித புருஷத்திரேக்காணம் இதில் பிறந்தவர் குணங்களாவது நந்தவனத்திலிருக்கப்பட்டவன் வில்லு அம்பு ஆயுதம் கவசம் தரித்து யுத்தம் செய்யப் பிரியமுள்ளவன் கருடப்பக்ஷி முகமுள்ளவன் புணர்ச்சியிலும் புத்திரரிடத்திலும் ஆபரணங்கள் தனம் சம்பத்து இவைகளில் ஆசையுள்ளவனாக விருப்பவனு மென்பதாம். 8

9-வது சுலோகம் மிதுனம் மூன்ருந்திரேக்காணப்பலன்,

ஆகியதுயாழ்தனிலே வமருந்திரேக்காணம்
வாகானகடைக்கூறை வசனிக்க-ஆகுமதில்
மந்தனுக்குசொந்தம் வருமாயுதசகித
மிந்ததிரேக்காண மியம்பு.

அம்புவியில்கவசம்பூண்போ னலங்காரன்சமர்த்தனாகும்
தெம்புடனறுபான்நாலு செய்யநற்கலையுணர்ந்து
அம்புவிபுகழ்வித்வான யாடல்வாத்தியத்தில்தேர்ச்சி
நம்புபல்மணியதுள்ளான் நாற்கவிசுயஞ்சொல்வானே.

இ-ள். மிதுனராசியில் கடைகூறு சனிசம்பந்தமான ஆயுதசகித புருஷத் திரேக்காணமாம். இதில் பிறந்தார் குணங்களாவன வில்லு அம்புறாத்தூணி கவசம்தரித்து யுத்தம்செய்ய சமர்த்தனும் 64 கலைக்ஞானம்தெரிந்து நாட்டியம் ஆடல்பாடல் ஆசமதூரம் சித்திரவித்தாரக்கவி சுபஞ்சொல்ல

வும் சமுத்திரத்தைப்போல அனேக நக்ஷத்திரங்களுக்கு இருப்பிடமானவ
னாகியும் இருப்பானென்பதாம். 9

10-வது சுலோகம். கடகம் முதல் திரேக்காணப் பலன்.

வானுறையுமாமதியின் வருமானகொண்டலதில்
ஆனமுதற்கூறுதனை யம்புவியில்-யானுரைப்பேன்
நிலவுக்குசொந்தமுள்ள நீள்புருஷசதுஷ்பாதம்
குலவுதிரேக்காணங்குறி.

குரித்திடுமுகமோபன்றி குதிரைபோல்பிடரிநீண்டு
கறுமெனப்பருத்ததேகம் காலதுசரபம்போலும்
நறுமணசந்தணத்தின் நல்வனமதிலேவாழ்ந்து
சருகிலைகனிகிழங்கு தானிவன்புசிப்பானென்னே.

(இ-ள்.) கடகராசியின் முதற்கூறு சந்திரன் சம்பந்தமான சதுஷ்பத புருஷதிரேக்காணமாம் இதில் பிறந்தவர்குணங்களாவன ஆனையைப்போல சரீரமும் பன்றியைப்போல முகமும் குதிரையைப்போல பிடரியும் சரபத்தைப்போல அதிக விரலுள்ள காலும் உள்ளவன் காட்டில் சந்தணமுதலிய வாசனையுள்ளமரங்களிடத்தில் இருந்து சருகு இலை பழம் கிழங்கு இவைகளை யெப்போதும் ஆகாரமாக சாப்பிட்டிருப்பானென்பதாம். 10

11-வது சுலோகம். கடகம் இரண்டாந் திரேக்காணப்பலன்.

எண்ணியநற்கொண்டதிலேற்றதிரேக்காணமதில்
துன்னுநடுக்கூறுதனைச்சொல்ல-மன்னுபுகழ்
சேயனவர்க்கேசொந்தம் திகழுமடந்தையினது
ஆயுந்திரேக்காண மதுவாம்.

அதிபன்பலனீசன்போ லம்புயம்மலரும்சர்ப்பம்
துதிபெறசிரசணிந்தே சுகமுடன்மடந்தையோடு
கதியினல்வனத்திலத்தி கருதியமரத்திநீழல்
விதியுடனிருப்பனென்று மேன்படுபலனேச்செப்பே.

இ-ள். கடகராசியிலே நடுக்கூறுசெவ்வாய் சம்பந்தமான ஸ்திரீதிரேக்காணமாம் இதில்பிறந்தார் குணங்களாவன-பரமசிவனைப்போல சிரசில் தாமரைப்புஷ்பம் இன்னும்பலவித புஷ்பங்களும் பாம்பையும் தரித்துக்கொண்டு காட்டில் அத்திமரத்தினருகில் சந்துஷ்டியுடனே ஸ்திரீயோடு கூடி சுகமாக விருப்பவ னென்பதாம். 11

12-வது சுலோகம் கடகம் மூன்றாந்திரேக்காணப் பலன்.

செப்புங்கடகமதிற் றிரேக்காணமூன்றதனுள்
ஒப்புங்கடைகூறிதனையோதவே இப்புவியில்

பொன்னவனுர்க்கு சொந்தம்புருஷசர்ப்பத்திரேக்காணம்
தன்பலனைசாற்றிடவேதான்.

சாற்றுபொன்னணியிலாதான் சர்ப்பத்தையணியதாக
ஏற்றுமேபக்ஷிவாய னிவன் தலைமயிர்சுருண்டு
போற்றிடுமனையாளுக்கு பூஷணமணியாடைக்கு
தேற்றியகடலைத்தாண்டி திரவியந்தேடிமீள்வான்.

இ-ள். கடகராசியில் கடைக்கூறுனது குரு சம்பந்தமுள்ள சர்ப்பம் புருஷதிரேக்காணமாம் இதில் பிறந்தவர் குணங்களாவன-தங்க ஆபரண மில்லாது சர்ப்பத்தை ஆபரணம்போல தரிப்பவன் பக்ஷிகளைப்போல் சிவந்தவாயும் தலைமயிர் சுருண்டு வளைந்துள்ளவன் மனையாட்டிக்கு ஆபரணம் வஸ்திரத்துக்கு ஆகவே பொருள் வேண்டியதற்காக சமுத்திரயாத்திரை செய்து திரவியம் தேடிவருபவன் வேஷதாரியாவனு மென்பதாம். 12

13-வது சுலோகம் சிங்கம் முதல் திரேக்காணப்பலன்.

தேடியசிங்கந்தனிலே திரேக்காணமூன்றதனுள்
நாடியமுதற்கூறைநானுரைப்பேன் நீடுபலன்
நரரூபமாம்பறவை நாடுதுஷ்பதபுருஷன்
இரவிதிரேக்காணமெனவெண்ணு.

எண்ணருந்தந்தைதாயா லிவனுமேவிலக்கப்பட்டு
திண்புயமுள்ளதீரன் செப்புநாய்கூளிபோல
மண்மிசைகம்பமேறுவான் வஸ்திரம்மழுக்கதாகும்
நண்ணியபுருடனென்று நலமுடனுரைசெய்வாயே.

இ-ள். சிங்கராசியில் முதற்கூறு சூரியன் சம்பந்தமுள்ள நரரூபம் சதுஷ்பாதம் பக்ஷிதிரேக்காணம் புருஷதிரேக்காணமிதில்பிறந்தான் குணங்களாவன-தாய் தகப்பனல் விலக்கப்பட்டவன் வலியுள்ளதேகன் கழுகுநாய் போலும் குணத்தன் கம்பமேறி கழைக்கூத்து முதலான வேடிக்கைகளைச் செய்பவன் அழுக்கு வஸ்திரம் தரித்த புருஷனுகு தென்பதாம் 13

14-வது சுலோகம் சிங்கம் இரண்டாந் திரேக்காணப்பலன்

செய்யகொடும்புலியின் றிரேக்காணமூன்றுக்குள்
துய்யநடுக்கூறுதனைசொல்லவே-வையகத்தில்
தேவகுருவின்சொந்தம் திகழாயுதப்புருஷன்
மேவுதிரேக்காணமென விள்ளு.

காணவேசிங்கம்போல கடுங்குணன்வளைந்தமூக்கும்
ஆணவமிகுத்ததீரனசுவமேறுபவனும்புஷ்பம்

பூணுவானம்பும்வில்லும் போர்வைகம்பளிகருப்பு
வேணவாயுதங்கள் தன்னை விரும்பியசுதனுக்கூறே.

இ-ள். சிங்கராசியில் நடுக்கூறானது குருசம்பந்தமான ஆயுத சகித மான புருஷத்திரேக்காணம் இதில்பிறந்தார்க் குணங்களாவன-சிங்கத்தை போல கொடுமையான குணமும் தூர்ச்சனுகவும் வளைந்த மூக்குள்ளவனு கும் குதிரை ஏறி சவாரி செய்பவன் புஷ்பத்தைத்தரிப்பவன் வில்லுஅம்பு அம்பறாத்தூணி கருப்பு கம்பளம் பல ஆயுதங்களைத் தரித்திருப்பவனாகு மென்பதாம், 14

15-வது சுலோகம் சிங்கம் மூன்றாந்திரேக்காணப் பலன்

சுதனுகசிங்கமதிற் மூன்றியபேர்தங்களுக்கு
இதமானமூன்றாந்திரேக்காணம் விதியாகும்
பூமகனார்க்குச்சொந்தம் புருஷனுயுதசகித
நாமசதுர்பாதம் நவில்

நவின்றிடுசிங்கநேத்ரம் நரிமுகமேவாய்நீண்டு
கவியெனசேட்டையோடு கருமயிர்சுருண்டுமிக்க
இவனுக்குநீண்டமீசை ஈட்டிபல்லாயுதங்கள்
சுவைதருகனிகாய்மாம்சம் சுதனுமேதரிப்பான்பாரே

இ-ள். சிங்கராசியில் கடைக்கூறானது செவ்வாய் சம்பந்தமான சது ஷ்பாத புருஷ திரேக்காணம் இதில் பிறந்தார் குணங்களாவன-சிங்கத் தைபோல நேத்திரமும் நரியைப்போலமுகம் மேவாய்நீண்டும் கருமயிர் சுருண்டும் வளர்ந்திருக்கு நீண்டுவளர்ந்த மீசையும் குரங்கைப்போல சேஷ்டையும் உள்ளவன் கனிகாய் கிழங்கு மாமிசம் இவைகளை வைத்திருப்பவ னாகு மென்பதாம். 15

16-வது சுலோகம் முதல்திரேக்காணப்பலன்

பாரதனில்கன்னியிலே பாலனுய்வந்தவர்க்கு
சீருடையவாதிமுதற்கூறுதனை-நேராகும்
தூதவனார்க்குச்சொந்தம் தூயஸ்திரீதிரேக்காணம்
பூதலத்திற் சொல்லும்புகழ்.

புகழ்ந்திடுங்குருவகத்தில் பொருந்துவிஸ்வாசத்தோடு
மகிழ்ந்திடுபுஷ்பமார்ந்த மன்னியகுடலையேற்று
இகழ்ந்திடுகிழிந்தவஸ்திரம் மேந்திமையணிந்துகொண்டு
திகழ்தனவாடைமீதும் சேடிதானிச்சையுள்ளாள்,

இ-ள். கன்னிராசியிலே முதற்கூறு புதன் சம்பந்தமான ஸ்திரீதிரேக் காணம் இதில் பிறந்தார் குணங்களாவன குருவிடத்திலும் அவான் வீட்

டில் அதிக விஸ்வாசம் உள்ளவள் புஷ்பக்குடலை வைத்திருப்பவள் வேலைக்காரியாம் கிழிந்த வஸ்திரம் தரித்தவள் தனம் ஆடை ஆபரணம் சம்பத்துகளில் அபேட்சையுடையவளா மென்பதாம், 16

17-வது சுலோகம் கன்னிஇரண்டாந்திரேக்காணபலன்,

உள்ளகன்னிராசியிலே வுதித்தபேர்தங்களுக்கு
தெள்ளுமிரண்டாங்கூறு செப்பிடவே உள்ளபலன்
நீலனவற்கேசொந்தம் நிகழும்புருஷனது
சாலத்திரேக்காணமதாய்ச் சாற்று

சாற்றுதன்தேகம்நீலம் தன்னுடல்மிகுத்தரோமம்
போற்றுவன்சிரத்தில்வஸ்திரம் புகழ்சித்திரம்வரைவன்வீட்டி
லேற்றவாதாயம்வியம் வெழுதியாயும்பல்செய்வான்
மாற்றிடாவில்லம்பாய்தம் மகிழ்தாடுவணிவனின்னோன்.

இ-ள். கன்னிராசியிலே நடுக்கூறு சனிசம்பந்தமான புருஷதிரேக்காணம் இதில் பிறந்தார் குணங்களாவன சரீரம் நீலவர்ணமாயும் ரோமங்கள் மிகுதியாயும் இருக்கும் சிரசில் வஸ்திரம் தரித்திருப்பவன் அக்ஷரங்களும் சித்திரங்களுமெழுதுவன் வீட்டில் உள்ள வரவு செலவு கணக்கெழுதுவன் ஆயுதங்கள் பலவற்றையும் செய்பவன் யூகமாக வில்லு அம்பு கத்திமுதலான யுத்தத்துக்கு தகுந்த ஆயுதங்களை அணிந்திருப்பவனுகு மென்பதாம்

18-வது சுலோகம் கன்னி மூன்றாந் திரேக்காணப்பலன்

இன்னிலத்தில்கன்னிதனி லேந்திழையாய்வந்தவளுக்
குன்னுங்கடைக்கூறுதனையேயுரைக்க நின்னயமாம்
பார்க்கவனார்க்குச்சொந்தம் பாவையெனும்ஸ்திரீயினது
தீர்க்கதிரேக்காணமாய்ச் செப்பு,

செப்பியகுடந்தரிக்கும் சீருறுமடந்தையாளும்
துப்பறபலவாம்வர்ண தூயபட்டாடையோடு
ஒப்புமாபரணம்பூண்டு வும்பர்வாழாலயத்தில்
தப்பறபோகும்பெண்ணும் சாற்றியமுறையாம்பாரே,

இ-ள். கன்னியா ராசியிலே கடைக்கூறானது சுக்கிரன் சம்பந்தமுள்ள ஸ்திரீ திரேக்காணம் இதில் பிறந்தார் குணங்களாவன குடந்தரிப்பவள் கோமேதகம் தவிட்டு நிறம் முதலாகிய பலவித வர்ணமுடைய பட்டுவஸ்திரங்களும் ஆபரணம் தரித்துக்கொள்பவள் தெய்வபக்தி யுள்ளவள் கோவிலுக்கு போய்வருபவளாகு மென்பதாம். 18

11-வது சுலோகம் துலாம் முதற்திரேக்காணப்பலன்,

பாரில்நிறைகோலதிலே பாலகனாய்வந்தவர்க்கு
தேருமுதற்கூறுதனைச்செப்பிடவே சீருடைய

சுக்கிரனதிபதியாம் தோன்றும்புருஷனது
மிக்கதிரேக்காணம் விளம்பு,

விளங்கிடுங்கடையிற்சுங்கி வியாபாரஞ்செய்யயூகி
வளம்பெருதாதுவர்க்கம் மணிதனைப்பரிட்சைசெய்வன்
களங்கமில்முன்னோர்வைத்த கனதனமதனைக்கொண்டு
அளவிலாவகையாம்சம்பத் தறிவினூற்றேடுவானே,

இ-ள். துலாராசியில் முதற்கூறு சுக்கிரன்சம்பந்தமான புருஷதிரேக்காணம் இதில்பிறந்தார் குணங்களாவன கடைத்தெருவுகளில் இருந்து வியாபாரம்செய்யயூகமுள்ளவன் தாதுவர்க்கமாவது மண்பொன்கல்செம்பு இரும்பு யீயம் பித்தளை வெண்கலம் சிகப்பு நீலம் வயிரம் புஷ்பராகம் வயிடூரியம் கோமேதகம் பச்சை இன்னம் பலவிதமான ரத்தினங்களைப் பரிக்ஷைசெய்பவன் முன்னோர்களால் வைக்கப்பட்டதிரவியத்தை முதலாக வைத்து வியாபாரம்செய்து கணக்கில்லாத் திரவியம் தேடவல்லவனாகு மென்பதாம். 19

20-வது சுலோகம் துலாம் இரண்டாந்திரேக்காணப்பலன்,

தேடுந்துலைதனிற்செனித்தபேர் தங்களுக்கு
நாடும்நடுக்கூறுதனை நாடுரைக்கநீடுலகில்
சனியேசகிதமுள சாற்றுபுருஷன்பறவை
இனியதிரேக்காணமிதுவாம்,

இதமறுப்பருந்துகூளி யிதுநிகர்முகத்தன்பெண்ணுஞ்
சுதயதுசெனிக்கவிச்சை தோன்றிடுநெஞ்சனும்
மதியதில்பழுதடைந்த பாத்திரம்பலவுள்ளோனும்
மதியுளன்விடாய்கள்தன்னை மைந்தனும்பொறுத்திடானே

இ-ள். துலா ராசியில் நடுக்கூறு சனி சம்பந்தமான புருஷதிரேக்காணம் பக்ஷி திரேக்காணமாம் இதில் பிறந்தார் குணங்களாவன பருந்துகழுகுபோல முகமுள்ளவன் பெண் குழந்தை பிறக்க ஆவலுள்ளவன் பழுதுள்ள பாத்திரங்களை வைத்திருப்பவன் புத்தியுள்ளவனும் தாகத்தைப் பொறுக்காதவனாகு மென்பதாம், 20

21-வது சுலோகம் மூன்றாந்திரேக்காணப்பலன்,

பொருந்தும்நிறைதனிலே பூவிலுதித்தவர்க்கு
வருபலனுமூன்றாந்திரேக்காணம் நெறிதானும்
பண்டிதனார்க்குச்சொந்தம் பகரும்சதுஷ்ப்பாதம்
கொண்டபுருஷனென்றேகொள்

என்னும்ரத்தினங்களோடு மேற்றபொற்கவசம்வில்லும்
துன்னிடவலங்கரிப்பன் சுதனுங்கின்னரர்குரங்கு
நன்னியவேட்டைகோலன் நற்கனிமாம்சமுண்பான்
உன்னிடுமிருகந்தன்னை யோட்டியேதுணிக்குஞ்சூரன்

இ-ள். துலாராசியில் கடைக்கூறு புதன் சம்பந்தமான புருஷத்திரேக்காணம் சதுஷ்பதமாம் இதில் பிறந்தார் குணங்களாவன நல்ல நல்ல ரத்தினங்களுடனே தங்க கவசமும் அம்பு வில்லும் பலவிதமாக அலங்கரித்துக் கொள்பவன் குரங்குரூபம் தரிப்பவன் வேட்டை ரூபமும் தரிப்பவன் தனவந்தன் வனத்திலிருந்த மிருகங்களை ஓட்டுவன் துணிவுள்ளவன் வேட்டையாடுவன் காய்கனி மாம்சமுண்ண பிரியமுள்ளவனுரு மென்பதாம். 21

22-வது சுலோகம், விருச்சிகம் முதல் திரேக்காணப்பலன்.

சூரனெனுந்தேளதிலே தோன்றிடுவோர்தங்களுக்கு
தீருடனுதிமுதற்கூறுதனி-தேற்றுபலன்
தரைமகனுக்கேவுரிய சர்ப்பமாம் ஸ்திரீசகித
முறைசெயுந் திரேக்காணமா யொப்பு

ஒப்புமாபரணமாடை யுலகதிற்றரிக்காநாரி
செப்பியஞாதிநீத்தாள் சேயிழையழகுள்ளாளாம்
கப்பலாங்கடலைத்தாண்டி கட்செவிகாலில்பூண்பாள்
இப்புவியதனிலின்னு ளிழிகுலத்துதித்தமாதே.

இ-ள். விர்ச்சிக ராசியில் முதற்கூறு செவ்வாய் சம்பந்தமான சர்ப்ப சகித ஸ்திரீ திரேக்காணமாம் இதில் பிறந்தார் குணங்களாவன ஆபரணங்களும் நல்ல வஸ்திரமும் தரிப்பவன் பந்து சனங்களை விலக்கினவள் அழகுள்ளவள் சர்ப்பத்தைக் காலிலும் கையிலும் கழுத்திலும் ஆபரணம்போலத் தரிப்பவள் இழிகுலத்தில் பிறந்தவள் கப்பல் ஏறி தாண்டிப்போய் வரப்பட்டவளாகு மென்பதாம். 22

23-வது சுலோகம், விருச்சிகம் இரண்டாந் திரேக்காணப்பலன்.

உதிக்கும்விருச்சிகத்தி லுலகதனில்வந்தோர்கரு
துதிக்குநடுக்கூறதனைச் சொல்லவே-மதிக்கும்
கனகனவற்கேசொந்தம் காரிழைபராஞ்சர்ப்ப
மினியதிரேக்காணமென வெண்ணு.

எண்ணுந்தேகத்திற்பாம்பை யெழிலொடுசுற்றப்பட்ட
பெண்ணுமேபருத்ததேகம் பேணுவள்கணவனுக்கே
பண்ணுவாள்ஸ்தானமதி பலவிதசுகங்கள்செய்து
கண்ணெனப்பாதுகாப்பாள் கணவனைக்கருத்திேனாடு.

Digitized By Roja Muthiah Research Library

இ-ள். விருச்சிகராசியில் நடுக்கூறுனது குருசம்பந்தமான சர்ப்பசகித மான ஸ்திரீ திரேக்காணமாம் இதில் பிறந்தார் குணங்களாவன சரீரத்தில் பாம்பை ஆபரணம்போலச் சுற்றப்பட்டவள் பெருத்த கேழுடையவள் தன்னுடைய கணவனுக்குச் சாப்பாடு ஸ்தானமாதி சுகம்செய்து கண்மணி போலக் கருத்துடனே காப்பாற்றப்பட்டவ ளென்பதாம். 23

24-சுலோகம், விருச்சிகம் மூன்றாந் திரேக்காணம்.

ஓடியதேளாமதனி லுதித்தபேர் தங்களுக்கு
நாடியகடைக்கூறு நானுரைக்க-தேடுபலன்
சந்திரன்சகிதமுள சார்மகரகாரகமாம்.
சொந்தப்புருஷனெனவே சொல்.

சொல்லுவோம்பருத்தகாதும் தன்முகமாமைபோலும்
செல்வனும்வனத்திருந்து சீறியநரிநாய்பன்றி
வல்லமைகுன்றியோட வாக்கினல்கர்ச்சிப்போனும்
நல்லசந்தனத்தின்காட்டை நலம்பெறக்காப்பானுமே.

இ-ள். விருச்சிகராசியில் கடைக்கூறுனது சந்திரன் சம்பந்தமுள்ள மகர காரகமாகிய புருஷ திரேக்காணமாம் இதில் பிறந்தார்க் குணங்களா வன ஆமைபோல வட்டமாகியமுகமும் ஆனையைப்போல பருத்தகாதுமுள் ளவன் வனத்தில்சஞ்சரிப்பவன் நரிநாய் புலி பன்றி மற்றமிருகங்களைவாயி னல்கர்ச்சித்துவிரட்டுவன் சந்தனவிருக்ஷங்களைக்காப்பவனுகுமென்பதாம்.

25-வது சுலோகம், தனுசு முதல் திரேக்காணப்பலன்.

கார்மூகமேசெனனமதாய்க் காசினியில்வந்தவர்க்கு
சீர்தருமாதிக்கூறை செப்பவே-நேர்பலன்கள்
கனகன்சகிதமாய்க் காணுஞ்சதுஷ்பாதம்
இனியதிரேக்காணமிதா மெண்.

இதமுளன்தபசிதம்மை யிரக்ஷிப்பவன்வனமிருப்பன்
மதியுளன்பரிபோல்தேகம் வல்லமையுடையான்வில்லு
துதிபெறுவாய்தமம்பு சுதன்தரித்திருப்பானென்றும்
கதிதனையிவர்க்குக்கூறுய் கார்மூகமுதற்கூறுமே.

இ-ள். தனுசு ராசியில் முதல் கூறு குரு சம்பந்தமான சதுஷ்பாத மென்னும் புருஷதிரேக்காணமாம் இதில்பிறந்தார் குணங்களாவன வனத் தில் சஞ்சரிப்பவன் இதமான குணமுடையவன் தபசிகளை ரக்ஷிப்பவன்யூக முள்ளவன் குதிரைப்போல் தேகமுள்ளவன் வல்லமையும் தைரியமுள்ள வன் அம்பு வில்லும் ஆயுதங்களைத் தரிப்பவனுகு மென்பதாம். 25

26-வது சுலோகம், தனுசு இரண்டாந்திரேக்காணப்பலன்.

கூறுந்துரோணமதில் குவலயத்துதித்தவர்க்கு
தேறுநடுவானதிரேக்காணமதைப்-பாரதனில்
மங்கலனுர்க்குச்சொந்தம் மடந்தையரின்திரேக்காணம்
சங்கையறக்கூறும் விதம் தான்.

கூறுசெண்பகம்பொன்போலுங் கோதையாள்தேகமாகும்
தேருமொழியிலுதித்ததிரவியம் மணிகளுள்ளாள்
காரிசிம்மாசனத்தில் நலமுடன்வீற்றிருக்குஞ்
சீடனிருப்பாளென்று செப்புவாய்விபரந்தானே

இ-ள். தனுசுராசியில் நடுக்கூறு செவ்வாய் சம்பந்த ஸ்திரீ திரேக்காணமாம் அதில் பிறந்தார் குணங்களாவன-செண்பகமலர் தங்கம்போலசரீரமுடையவள் சமுத்திரத்தி லுற்பவிக்கும் சங்கு முத்து பவளம் இன்னம்பல வஸ்துக்களைச் சேகரித்து வைத்திருப்பவள் சிம்மாசனத்தி லிருக்கப்பட்டவளாம் இவள் இராஜஸ்திரீயாகுமா மென்பதாம். 26

27-வது சுலோகம் தனுசு மூன்றாந்திரேக்காணப்பலன்

பரவுங்கொடுமரத்திற் பாலகனுய்வந்தவர்க்கு
திரமாங்கடையானதிரேக்காணம் வருபலனை
ஆதவனுர்க்கேசொந்த மாயுதசகிதமுள்ள
நீதிபுருஷன்னெனவும் நேர்

நேர்தருசெண்பகம்போல் நிகருளதேகமாகும்
பேர்தருபட்டினுடை பிரபலசருமவஸ்த்ரம்
சீர்தருதெண்டம்பூண்டு சிங்கவாகனத்தின்மீது
பார்தனிலிருப்பனென்று பகருவாய்மானிலத்தே

இ-ள். தனுசுராசியில் கடைக்கூறானது சூரியன் சம்பந்தமான ஆயுதசகிதமான புருஷதிரேக்காணமாம் இதில் பிறந்தார்குணங்களாவன செண்பகபுஷ்பம் பொன்போலுள்ள தேகமாம் பட்டுவஸ்திரம் தரிப்பவனுயும்கம்பளம் தரிப்பவனுயும் தெண்டாயுதம் தரித்து சிம்மாசனத்தி லிருப்பவனும் இராசனென்றும் சொல்லப்படும் என்பதாம். 27

28-வது சுலோகம் மகரம் முதல் திரேக்காணப்பலன்

மான்றலையேசென்மமென மகவாகவந்தவர்க்கு
தோன்றுநடுக்கூறுதனைச்சொல்ல தோன்றும்
சனிசகிதமாம்நிகள சதுஷ்பாதமாம்புருஷ
தனியாந்திரேக்காணந்தான்

தானதுதேகம்பன்றி சடமெலாமிருத்தரோம
மீனமாம்விகாரதந்த மிவனுமுன்கோபமுள்ளான்
ஆனமாடாடுகட்ட வருங்கயிற்சங்கிலியும்
வானுறைபுள்பிடிக்க வலையதுவுடையனுமே

இ-ள். மகரராசியிலே முதற்கூறு சனிசம்பந்தமான நிகளம் சதுஷ்ப்பத புருஷத்திரேக்காணமாம் இதில் பிறந்தார் குணங்களாவன-பன்றிப் போலதேகமும்தேகத்தில்மயிர்மிருத்திருத்தலும்அழகில்லாதவிகாரமுள்ள பல்லும் முன்கோபமுள்ளவன் ஆடுமாடு மிருகங்களைக் கட்டுவதற்கு கயிறு சங்கிலியும் பக்ஷிகள் பிடிக்ககண்ணிகள்வலைகளுடையவனாகு மென்பதாம்.

29-வது சுலோகம் மகரம் இரண்டாந்திரேக்காணப்பலன்.

ஆமென்றபுல்வாயி லவதரித்தோர்தங்களுக்கு
நாமென்றநடுவானகூறுதனை பூமிதனில்
சுங்கனுர்தன்சகிததூய ஸ்திரீதிரேக்காணம்
சங்கையறச்சாற்றுவதாங் தான்

சாற்றுசங்கீதவாத்யம் தானறிசிரேஷ்டன்நேத்ரம்
ஏற்றதாமரைபத்ரம்போ லெழிலுடல்நீலவர்ணம்
போற்றுபல்விதமாம்வஸ்தை பூவையுஞ்சேர்த்துரைப்பாள்
மாற்றிடாவலங்கரித்த மாசெவியுடையபெண்ணே.

இ-ள். மகரராசியில் நடுக்கூறு சுக்கிரன் சம்பந்தமான ஸ்திரீ திரேக்காணமாமிதில் பிறந்தார் குணங்களாவன-சங்கீத வாத்திய வல்லவனும் தாமரையிலைப்போல வட்டமாய்ப்பருத்தகண்ணும் நீலவர்ணமுடையவளாம் பலவிதமான வஸ்துக்களைச்சேகரித்து வைப்பவளாயும் உலகத்தார் மகிழும்படியாக ஆபரணச் செவியி லணியப்பட்டவளாகு மென்பதாம். 29

30-வது சுலோகம் மகரம் மூன்றுந்திரேக்காணப்பலன்

பெண்ராசிமான்றலையில் பிரபலமாய்வந்தவற்கு
நண்ணுங்கடைக்கூறுதனை நானுரைக்க-எண்ணரிய
புலவனுர்தன்சகிதம் பூவையராமாயுதங்க
ளிலகுதிரேக்காணமென வெண்ணு.

எண்ணுதன்முகமேவாகி யிவனுமேவேட்டைக்காரன்
விண்ணவர்சொரூபனுவன் வில்லம்புவசமாய்தம்
நண்ணுகம்பளந்தரித்த நவரத்னகசிதமான
பண்ணுநற்குடந்தரித்தாள் பலனதுவுரைத்திட்டேனே,

இ-ள். மகரராசியில் கடைக்கூறு புதன் சம்பந்தமான ஆயுதசகித ஸ்திரீ திரேக்காணமாம் இதில் பிறந்தார் குணங்களாவன-குதிரையைப் போல நீண்டமுகமும் வேட்டைக்காரனும் தேவசுரூபமுள்ளவனுகியும் வில்லம்பு கவசம் ஆயுதம் கம்பள வஸ்திரம் தரித்தவன் நவரத்ன கசித மான குடந்தரிப்பவனாகு மென்பதாம். 30

31-வது சுலோகம் கும்பம் முதல்திரேக்காணப்பலன்

திட்டமுளகும்பமதில் சேயாகவந்தவற்கு
இட்டமுடனுதிமுதற் கூறுதனை-சட்டமாய்
சவுரிதனக்கேசொந்த சாற்றும்புருஷனெனும்
கவருந்திரேக்காணமிதாங் காண்,

காணுநேசர்களினேடுங் களிப்புடன்தைலங்கொள்ளல்
தோணவேபானமுண்டி சுகித்துப்பின்பகைத்துக்கொள்வோ
வீணனும்விசித்திரவாடை விளங்குகம்பளமான்றேலும் [ன்
பூணுவான்முகமோகூளி புருஷனின்செயலிதாமே.

இ-ள். கும்பராசியில் முதற்கூறு சனி சம்பந்தமான புருஷ திரேக்காணம் இதில் பிறந்தார் குணங்களாவன நேசர்களினேடு விருந்துண்ணல் தைலங்கொள்ளல் தாகசாந்தி பண்ணுதல் முதலான மிகவும் சந்தோஷமாகச் செய்பவன் பிறகு பகைத்துக்கொள்பவன் அறிவில்லாதவன் பல விதமான விசித்ர வஸ்திரம் கம்பளம் மான்றேல் முதலியது தரிப்பவன் கழுகுபோல முகமுள்ளவனுகு மென்பதாம், 31

32-வது சுலோகம் கும்பம் இரண்டாந்திரேக்காணப்பலன்,

செயலதுகும்பந்தனிலே சேயாகவந்தவற்கு
நயமாகுநடுவானகூறதனை பயனறிய
புந்திதனக்கேவுரிய புகலக்கினிசகித
சொந்தமங்கைத் திரேக்காணஞ்சொல்,

சொல்லுவோம்பழையவாடை சுகமொடுசிரசணிந்து
வல்லவன்வனத்திருப்பன் மண்பாண்டமெடுத்துக்கொண்டு
செல்லுவன்பலவாந்தேயம் சீரிலாநாரிமிக்க
அல்லலேபடுவானென்று வறைந்திட்டேனவனியோர்க்கே,

இ-ள். கும்பராசியில் நடுக்கூறு புதன் சம்பந்தமான அக்கினி சகித ஸ்திரீ திரேக்காணமாம் இதில் பிறந்தார் குணங்களாவன பழைய வஸ்திரம் சிரசில் தரிப்பவன் மிகுந்த பராக்கிரமசாலி வனங்களி லிருப்பவன்மண்

பாண்டங்களைச் சிரசில் தூக்கிக்கொண்டு பலதேசங்களிலும் செல்லுவான் சிறப்பில்லாத ஸ்திரீ நிரம்பவும் கஷ்டப்படுவா னென்பதாம், 32

33-வது சுலோகம் கும்பம் மூன்றாந்திரேக்காணப்பலன்,

திட்டமுளகும்பமதில் செல்லுறுய்வந்தவற்கு
இட்டமுளமூன்றான கூறதனைசட்டமாய்
சுக்கிரனார்தன்சகித தடர்பாம்புருஷனது
மிக்கதிரேக்காண மிதுவெனல்,

என்னியதாம்பச்சை யிருசெவியிர்மிகுத்தநன்
துன்னுமாடையைசிரத்தில் சுற்றியேபாண்டத்தோடு
மன்னிடுமிலைகாய்வர்க்கம் மற்றுமேகனிகிழங்கு
சென்னியில்வைத்துக்கொண்டு தேசங்கள்பலசெல்வானே,

இ-ள். கும்பராசியில் கடைக்கூறு சுக்கிரன் சம்பந்தமானபுருஷதிரேக்காணமாம் இதில் பிறந்தார் குணங்களாவன கருப்புபச்சை நிறமுள்ள தேகமும் காதுகளில் மயிர் முளைத்திருப்பவன் சிரசில் வஸ்திரத்தைச்சுற்றி மண்பாண்டங்களையும் இலைகாய்கள்கனிகிழங்குகளை சிரசில்வைத்துக்கொண்டு பலபல தேசங்களில் திரிபவனுகு மென்பதாம், 33

34-வது சுலோகம் மீனம் முதல் திரேக்காணப்பலன்.

மீனமெனுராசியதில் விளங்குதிரேக்காணமதில்
ஆனமுதல்திரேக்காணமம்புவியில் நானுரைக்க
பொன்னவனுற்குச்சொந்தம் புருஷத்திரேக்காணமது
நன்மையுடன்கூறிடுவே னன்,

கூறியமகத்துக்காக குலவுபாத்திரதிரவியங்கள்
தேறியமுத்துமாலை திகழிரத்தினங்கள்சங்கம்
நாரியரணியவேண்டி நகைபலபொருளுக்காக
பாரியகடலைத்தாண்டி பாலன்பொன்றேடிமீள்வான்,

இ-ள். மீனராசி முதற்கூறு குரு சம்பந்தமான புருஷ திரேக்காணம் இதில் பிறந்தார் குணங்களாவன யாகத்துக்கு வேண்டிய பதார்த்தங்களும் முத்துமாலை சங்கு ரத்தினங்களும் ஸ்திரீகள் அணிவதற்கும் நகையும் பல பொருளும்தேட கடல்மீது கப்பலேறி பொன்தேடிவருபவனாகு மென்பதாம், 34

35-வது சுலோகம் மீனம் இரண்டாந்திரேக்காணப்பலன்,

தேடியமீனந்தனிலே சேயாகவந்தவற்கு
நாடியநடுக்கூறைநான்புகல நீடுலகில்
சந்திரன்சகிதமுள்ள தையலெனும்ஸ்திரீதனது
விந்தைதிரேக்காணமென மேவு,

மேவியசனங்கள்கூட்டம் மெல்லியர்பரிவாரங்கள்
தேவியுமுடையாளாகும் தேகமோசண்பகம்போல்
பாவிரித்ததிலேசேர்த்த பகர்மரக்கலத்தின்மீது
தீவிரமாகச்செல்வள் திருமகளனையமாது.

இ-ள். மீனராசியில் நடுக்கூறு சந்திரன் சம்பந்தமான ஸ்திரீயினது திரேக்காணமாம் இதில்பிறந்தார் குணங்களாவன சுகமுள்ளவள் சனக்கூட்டமுள்ளவள் சரீரம் சண்பகப்பூ நிகருள்ளவள் கொடிகட்டி அலங்கரிக்கப்பட்ட ஓடம்கப்பல்முதலானவைகளிலேறி போகக்கூடியவளாகுமென்பதாம், 35

36-வது சுலோகம் மீனம் மூன்றாந்திரேக்காணப்பலன்,

திருமாலின்மைந்தனது செய்யதுவசந்தனிலே
வருமூன்றாந்திரேக்காணமானபலன் சரியாக
சேய்சகிதசர்ப்பமெனும் திகழ்புருஷனுமிதுவும்
தூய்தருதிரேக்காணமதாய்ச்சொல்

சொல்லுவிக்ஷேபமுள்ளான் சுற்றுவன்சர்ப்பந்தன்னை
நல்லமாவனத்திருப்பன் நற்றிகம்பரன்போலின்னோன்
தொல்லைவியாகூலத்தான் சோரராற்சுடரினாலும்
அல்லலேபடுவான்மிக்க வழுபவன்விசனத்தாலே.

இ-ள். மீனராசியில் கடைக்கூறானது செவ்வாய் சம்பந்தமான சர்ப்பசகித புருஷ திரேக்காணம் இதில் பிறந்தார் குணங்களாவன-புதைபொருளுள்ளவன் சர்ப்பம் தன்னை தரிப்பவன் வனத்திலிருப்பவன்-நிர்வாணிஎப்போதும் வியாக்கூலப்படுவோன் அக்கினியினாலும் திருடரினாலும் பீடிக்கப்படுவோன் விசனத்தோடு அழுதுகொண்டிருப்பவனாகு மென்பதாம். 36

படலச்செய்யுள் தொகை

பன்னிருராசிகட்கும் பகர்வதுமுப்பத்தாறு
நன்னயத்திரேக்காணத்தை நவின்றனன்முப்பத்தாறுப்
இன்னிலம்புகழிரட்டை இனியநன்மாலையாக
சொன்னதுவயித்திலிங்கம் தூயநல்லுலகோருக்கே.

திரேகாணப்படலம்

## மங்களேஸ்வரீயம்

முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

# படல அட்டவணை.



படல அட்டவணை

முற்றிற்று.



